# பர்டோலிக் கதை

# காந்தி

மகாதேவ தேசாய்

(எழுதியது.)

வ. ரா.

(மொழி பெயர்த்தது.)

விலை ரூபா 1.

T. விஸ்வநாதன் வெளியிட்டது

சென்னை.

# ர்டோலிக் கதை



மகாதேவ தேசாய்

(எழுதியது)



வ. ரா.

(மொழி பெயர்த்தது.)



T. விஸ்வநாதன்,
வெளியிட்டது.
சென்னை.

விலை
ரூபா. 1

பர்டோலிப் போராட்ட வீரர்

ஸ்ரீ மோகன்லால் பாண்டியாவுக்கும்

ஏழை பங்காளர்

ஸ்ரீ புலாபாய் தேசாயுக்கும்

அர்ப்பணம் செய்யப்பட்டது.

# பர்டோலிக் கதை வரலாறு

பக்கம்

முன்னுரை .... 1

பர்டோலிக்கதை எழுதியவர் யார்?—அவருடைய குண விசேஷங்கள்—முதல் சத்தியாக்கிரகி காந்தி—தைரியத்தை ஊட்டும் "இஞ்செக்ஷன்" மருந்து—கனம் சீனிவாஸ சாஸ்திரியார் தென்னாப்பிரிக்காவிலிருந்து எழுதிய கடிதம்—பம்பாய் கவர்னருக்குப் பாராட்டு—வல்லபாயின் தீரத்தனம்—விட்டல்பாயின் பெரும் போக்கு—காந்தியின் தனிப் பெருமை.

அத்தியாயம் 1. .... 7

பர்டோலியின் சரித்திரப்புகழ்—பர்டோலிப் போராட்டம் நடந்தது 1928ஆ—சேனாதிபதி யார்?—போராட்டத்தின் தனித்தன்மை என்ன?—சூத்ரதாரி காந்தி.

அத்தியாயம் 2. .... 9

போராட்டம் துவக்கின கதை—தாங்கமுடியாத வரிச்சுமை—ஸெட்டில்மெண்டின் அக்கிரமம்—முன்ஷியின் கடிதம்—மேதகு பம்பாய் கவர்னரின் பதில்—ப்ரச்னை என்ன?—காந்திஜியின் விளக்கம்—சத்தியாக்கிரகம், வைஸிராய்களும் கவர்னர்களும் ஏற்றுக்கொண்ட, சட்டத்தைத் தழுவிய ஆயுதம்—கமிட்டி நியமனம் முடியாதாம்—வல்லபாயின் முதல் பேச்சு.

அத்தியாயம் 3. .... 15

பர்டோலித் தாலூகாவைப்பற்றிச் சிலவிவரங்கள்—எத்தனை கிராமங்கள்?—பிழைப்புக்கு இடமுண்டா? தென்னாப்பிரிக்காவுக்குச் சென்றவர்கள்—காலிபராஜ் ரானிபராஜ் ஆனது—விட்டது தொட்டுக்கொண்டது—தர்ம யுத்தத்துக்கு, கடவுள் சேனாபதி—கதையாரம்பம்.

பக்கம்

அத்தியாயம் 4. .... 20

விபசாரத் தொழிலில் மீந்ததுகூட விவசாயத் தொழிலில் கிடையாது—உழுதவன் கணக்கை ஆகாயத்தில் எழுதிப் பார்க்கவேண்டும்—கிராமங்கள் சீரழிந்து வருவதேன்?—இது பணயுகம்—ஸெட்டில்மெண்டின் தவறைத் திருத்துவது எப்படி?—கோர்ட்டுக்கு அதிகாரம் கிடையாது—சட்டம் இல்லை, திட்டம் இல்லை—முப்பது வருஷக் கொலு—ஸெட்டில்மெண்டு ஆபீசர் சொன்னகாரணங்கள்—1924ஆம் வருஷத்திய பம்பாய்ச் சட்டசபைத் தீர்மானம்—1927ஆம் வருஷத்திய தீர்மானம்—குப்பைத்தொட்டி—ப்ரேஸர் டைலர் அவர்களின் காருண்யம்.

அத்தியாயம் 5. .... 28

$1\frac{1}{2}$ லட்ச ரூபாய்க்குமேல் வரி உயர்வு—நொண்டிக் காரணங்கள்—நரகரிபாரிக் "தவிடு பொடி" ஆக்குகிறார்—பர்டோலியின் முதல் நிலவரி மகாநாடு—ரிவினியூ மெம்பரின் உதாசீனம்—சட்டசபைப் பிரதிநிதிகள் கையை விரித்துவிட்டார்கள்—வல்லபாயிடம் அடைக்கலம்.

அத்தியாயம் 6. .... 37

வல்லபாயின் அழுத்தம்—ரௌலட் சத்தியாக்கிரக இயக்கத்தின் விளைவுகள்—வம்பன் 'கொம்பனானது'—சகோதரர்கள் விஜயம்—சத்தியாக்கிரகம் கிள்ளுக் கீரையல்ல—போய் வாருங்கள்—சகோதரர்களின் பிடிவாதம்—தலைவர்களின் வேண்டுகோள்—வல்லபாயின் மன நிலைமை—காந்தி தரிசனம்—கட்சி சரியா?—குஜராத்துக்கு ஜே.

அத்தியாயம் 7. .... 43

ஸர்தார் வெருட்டுகிறார்—குறுக்கு விசாரணையின் பயன்—இப்படியா, அப்படியா?—அப்பொழுது நின்

பக்கம்

றது இப்பொழுது—“நீங்கள் தலைமை வகித்து நடத்துவதில், எங்களுக்கு ரொம்பவும் சந்தோஷம்”—பம்பாய் கவர்னருக்கு ஸர்தார் எழுதிய கடிதம்—நேர் முகமாகப் பதில் இல்லை—வாக்குறுதி—1928ஸ் பிப்ரவரி ௴ 12உ

அத்தியாயம் 8. .... 55

சாகத் துணிந்தவனுக்குச் சமுத்திரம் முழங்கால்—மதில்மேல் பூனைகள்—பர்டோலியின் நிலைமை—சண்டைப் பிரதிக்கினை — பாண்டியாவின் கடிதம்—தொண்டர்களின் தொண்டு—விளம்பர சபையின் இணையற்ற வேலை—சத்தியாக்கிரக தினசரி 15,000த்துக்கு அதிகம் விற்றது—என் சகோதரிகளைக் காணோம்?—அதற்கு இடம் கொடுக்காதேயுங்கள்—சீமைக்குத் தூக்கிக்கொண்டு போய்விட முடியாது—குஜராத் முழுதும் பின்னுதவியாக இருக்கும்—“நமக்கோ ஒவ்வொரு மேஜரும் ஒரு தொண்டர்”.

அத்தியாயம் 9. .... 64

சண்டைக்காரர்கள் யார்?—சர்தாரின் வினயம்—அதிகாரிகளின் சமாதானம்—ஒரு பைசாக்கூட வஜா செய்யத் தயாராயில்லை—‘பயமுறுத்துவதற்கு வந்தனம்’—“வெளியூர்ப் பேர்வழிகள்”—வாழ்த்து ஒருபுறம், அவதூறு மற்றொருபுறம்—சர்க்கார் ருசுப்படுத்தட்டுமே!

அத்தியாயம் 10. .... 68

பத்திரிகைகளின் அட்டஹாசம்—அதிகாரிகளுக்குள் கட்டுப்பாடு—காந்திஜியின் விளக்கம்—செருக்கின் முடிவு சீரழிவுதான்.

அத்தியாயம் 11. .... 74

ஆசிரமங்களின் வேலை—ஜப்தி நடவடிக்கைகள்—முதற் குண்டு பிரயோகம்—உல்லாச டெபுடி கலெக்டர்—“ஜெயிலில் தள்ளுகிறேன் பார்”—பூல்சந்த் ஷாவின்

பக்கம்

அபூர்வமான பாட்டுகள்—சொன்னது பலிச்சுப்போச்சு—சத்தியாக்கிரகப் போராட்ட நிதிக்கு 800 ரூபா காணிக்கை—கர்ணம், மணியக்காரர்களின் ராஜினமா—வெட்டியார்களின் விநோதத் தீர்மானம்.

அத்தியாயம் 12. .... 83

கொண்டைமேலே கிஸ்தி—ஸ்ரீ ஜயகாரின் யதாஸ்து—"மிராசுதார் என் நிலத்தை விட்டுவிடவில்லை?"—ரெவினியூ செக்ரடரி ஸ்மித் அவர்களின் வாக்குமூலம்—ஆண்டர்ஸன் துரையின் கவலை.

அத்தியாயம் 13. .... 87

ஜப்தி சிப்பந்திகளின் 'வேலைமானங்கள்'—"அது தான் பயமின்மை—'வெட்டி கிட்டி' கிடையாது—இரண்டாவது பிராயச்சித்தமாக 651 ரூபா காணிக்கை—கடேர்ட். கிராமத்தை பஹிஷ்கரிக்க ஏற்பாடு—"யாரும் ஏலத்தில் எடுப்பதில்லை"—"எங்கசோறெ, கஞ்சியாக் காச்சி நாங்க குடிக்கிறேங்க"—கற்றுக்குட்டிப் போர் நிபுணர்கள்—மணியக்காரர்களுக்கு உபதேசம்.

அத்தியாயம் 14. .... 96

கிஸ்தி வசூலாகவில்லை—'டைம்ஸ் ஆப் இந்தியா' பத்திரிகையின் கூற்று பர்டோலிக்கு அனுதாப நிதி—கிராமங்களின் உற்சாகம்—சந்தடி கிடையாது—சல்லி, பானையை உடைத்துவிட முடியும்—"வெட்டியான்களுக்கு நாங்கள் சளைத்தவர்களா?"—கதர்ப்பிரசார வேலை—"நான் ஒரு சட்டாம்பிள்ளை."

அத்தியாயம் 15. .... 107

முதலில் கண்டது 1917 இல்—குடியானவர் வீட்டுக் குழந்தை—அரசியல் நிபுணர்கள் புதிதாகக் கண்டுபிடித்தது — விவசாயிகள்தான் நல்லவர்கள்—நிலமா, அதற்கென்ன பஞ்சம்?

பக்கம்

அத்தியாயம் 16. .... 111

பறிமுதல் நோட்டீஸ்கள்—சிவதாஸனியின் வாழ்த்து—" சர்வமானிய நிலங்களுக்கு வரிகொடுத்து விடுங்கள் "—" நான் வெளியூர்ப் பேர்வழியாம் !"—கமிஷனருக்குக் கடல் காற்று—கலெக்டருக்கு மலைக் காற்று—வாடகைக்கு வண்டிவிட முடியாது—கலெக்டர் அயர்ந்து போனார்—உள்ளூரில் ஆள் கிடைக்க வில்லை—பம்பாயிலிருந்து பட்டாணிகளின் வருகை—துராக்கிரகம் கூடாது—" அவர்கள் பூட்டை உடைத்து உங்கள் வீட்டில் நுழையட்டும் ".

அத்தியாயம் 17. .... 120

அதிகாரிகளின் சட்ட மீறிய காரியங்கள்—எப்படியும் கிஸ்திவசூல் செய்யலாம்—ஸேட் டொராப்ஜியின் தைரியமான கடிதம்—டெபுடி கலெக்டரின் ஆட்களுடைய நடுநிசிப் பிரயாணம்—ஓநாய் ஆட்டுக்குட்டிக் கதை—இழுத்துக்கொண்டு போவதற்கு ப்யூன்கள், பட்டாணிகள் அல்லது போலீஸ்காரர்கள்—" நீங்கள்தான் பாக்கியசாலி "—கொம்பு அல்லது சங்கு ஊதக்கூடாது—" உங்களுக்கு அது லேசான கௌரவமா ?"—ஸர்தாரின் நகைச்சுவை.

அத்தியாயம் 18. .... 131

தாலூகா முழுதும் ஜப்தி மயம்—நிலத்துக்கு விலைகாரர்கள்—காந்தி குல்லாய்க்கு ஜே !—" இங்கே எதற்காகத் தங்கள் தரிசனம் ?"—பிரேமியின் நெஞ்சழுத்தம்—" நானும் அப்படியே "—ஷண்முகலாலின் தியாகம்.

அத்தியாயம் 19. .... 138

4 ரூபா கிஸ்திக்கு 100 ரூபா எருமைமாடு—அதிகாரிகளின் யுக்தி—தாசில்தார் தீர்ப்பு—பட்டாணியின் பலாத்காரம்—ஏலம் எடுக்க ஆளில்லை—வங்கனேரில்

பக்கம்

கெடுபிடி—ஸ்திரீகளின் எழுச்சி—" திகில் அடைய வேண்டாம் "—" ரிபோர்ட்டார்களே! தயை செய்து இதைக் குறித்துக்கொள்ளுங்கள் "—பலாத்காரம் நேருமாகில், என் தலைதான் முதலிலே போகும் ".

அத்தியாயம் 20. .... 146

விவசாய இலாகாவின் விநோதச் செயல்—பஞ்சு விற்ற பணத்தைக் கிஸ்திக்கு வைத்துக் கொள்ளலாமா? —துப்பாக்கி லைசென்சு ரத்து—எடெலாபெராம் எழுதிய கடிதம்—சூரட் கமிஷனரின் பதில்—சர்தார் என்ன சொன்னார்?—பறிமுதல் நோட்டீஸ் பலிக்கவில்லை—கிளர்ச்சிக்காரர்களா?

அத்தியாயம் 21. .... 156

டெபுடி கலெக்டரின் ஆரூடம் பலிக்கவில்லை—ரெயில் வண்டியில் பேச்சு, டீக் கடைகளில் பேச்சு, எங்கும் பேச்சு—நீங்கள் வரவேண்டாம் "—சட்டசபை அங்கத்தினர்களின் ராஜினமா—ஷவுகத் அலியின் ஆச்சரியம்—" பரிகசிக்க வந்தோம், பரவசத்துடன் திரும்புகிறோம் "—யுவதிச் சங்கத்தின் அபாரவேலை—சர்தாரின் யுத்தமுஸ்தீப்புகள்—"காப்பாற்றுவதற்கு நானல்ல, ஸ்ரீராமன்."

அத்தியாயம் 22. .... 169

அற்புதத்தால் விளைந்ததல்ல — சாயந்திரம் 5 மணிக்கு ஆரம்பித்து, ராத்திரி 2 மணிக்கு முடியும்—கொள்ளிவாய்ப் பிசாசைக் கண்டு எதற்காகப் பயம்?—பாலும் தண்ணீரும்—ஜாதிவிலக்குச் செய்வது சட்டப்படி குற்றமல்லவே—" உங்கள் ஒத்தாசையை நாடும் பொழுது, அதை மறுப்பது உங்கள்பேரில் பிசகு "—பட்டாளமும் போலீசும் நிலத்தைச் சாகுபடி செய்ய முடியுமா?

பக்கம்

அத்தியாயம் 23. .... 175

'போராட்டம் ஒழிந்துபோச்சு' என்று அதிகாரிகளுக்குள் பேச்சு—ராஜி முயற்சி—போயர் யுத்த விநோதம்—லாயிட் ஜார்ஜின் கேலிப் பிரேரணை—என் வீணுக்,—பலப்பரிட்சைப் பூச்சாண்டி காண்பிக்கவேண்டும்?—அசெம்பிளித் தலைவர் விட்டல்பாய் படேலின் அபூர்வ்மான கடிதம் ஜூலை மாத மத்தியில் பர்டோலி நிதிக்கு மூன்று லட்சம் ரூபாய் வசூல்—முஸ்லிம்களைப் பிரிக்க முடியவில்லை—டீ கொடுத்தால் ஆபத்து—எவ்வளவு காலம் தாக்குப் பிடிக்க முடியும்?.

அத்தியாயம் 24. .... 194

பம்பாய் கவர்னரின் நியாய புத்தி—"சுபவசனங்கள்"—முன்ஷியின் அரிய தொண்டு.

அத்தியாயம் 25. .... 198

பர்டோலி பிரெஸிடெண்ட் மாஜிஸ்டிரேட்டின், விநோதத் தீர்ப்புகள்—மோட்டா கான்ஸ்டேபிள்—வங்கனேர் வழக்கு—ஒரு கேஸ் வாபஸ்.

அத்தியாயம் 26. .... 204

வெற்றிக்குக் காரணங்கள்—கட்டுப்பாடு—தலைவரின் தன்மை—பெண்களின் உற்சாகம்—பஜனை ஊர்வலங்கள்—போர் வ்யூகங்கள்—காந்தி பக்தி.

அத்தியாயம் 27. .... 209

ராஜி முயற்சி—முன்ஷியின் கடிதம்—ஸர் புருஷோத்தமதாஸ் கவர்னரைப் பார்க்கிறார்—வர்த்தக சங்கத்தின் வேண்டுகோள்—கனிந்து வராத காரியம்.

அத்தியாயம் 28. .... 218

இந்திய ஊழிய சங்கத்தாரின் யாதாஸ்து—நியாயமில்லாத ஸெட்டில்மெண்ட்—மணிலால் கொத்தாரி—தலைவர்களின் அபிப்பிராயங்கள் — பத்திரிகைகளின் ஆதரவு.

பக்கம்

அத்தியாயம் 29. .... 224

பட்டாணிகளின் வெளியேற்றம்—சாகுபடி செய்வதைமட்டும் நிறுத்தவேண்டியதில்லை—அரசாங்கத்தாரின் விநோத அறிவிப்பு—நாடு முழுதும் ஒரே எழுச்சி—மகா ருத்ர யக்ஞம்—கேல்காரின் கருத்து—ஒரு சீதை யல்ல—இந்த மனிதனை அலட்சியம் செய்ய முடியாது—ராய்ட்டரின் தந்தி—வைஸிராயுடன் பேட்டி.

அத்தியாயம் 30. .... 233

சர்தார், கவர்னரைச் சந்திக்கிறார்—ராஜிக்குத் தீவிரமான முயற்சி—சர்தாரின் நிபந்தனைகள்—கவர்னரின் பிடிவாதம்—ப்ரச்னை சட்ட மறுப்பல்ல.

அத்தியாயம் 31. .... 242

50 சட்டசபை அங்கத்தினர்களின் அறிவிப்பு—சீக்கியத் தலைவரின் யோசனைக்கு வல்லபாய் இணங்கவில்லை—முன்ஷி, கவர்னரைப் பேட்டி காணுதல்—“ஸர்தாரின் உத்தரவுக்கு நான் பணிந்து நடக்க வேண்டும்.”

அத்தியாயம் 32. .... 249

காந்திஜியின் பர்டோலி விஜயம்—வல்லபாய் புனவுக்குப் போகிறார்—சிலேட்டை ஒப்பந்தம்—சத்தியத்துக்குப் பங்கமாயிற்றே—சூரட்டு மெம்பர்களின் கடிதம்—ஒருமாதத்துக்குள் பைசாக்கூடப் பாக்கியில்லை— முடிந்தது போராட்டம்.

அத்தியாயம் 33. .... 258

தலைவர்களின் வாழ்த்து—பத்திரிகைகளின் உற்சாகம்.

முடிவுரை .... 263

நிருபரின் சரடு—சிப்பந்திகளின் மனக்குறை—புலாபாய் தேசாயின் தொண்டு—மனக்கசப்பு இல்லை.

# முன்னுரை

தமிழ் நாட்டில் பத்திரிகை படித்து வருபவர்களுக்கு ஸ்ரீ மகாதேவ தேசாய் இன்னார் என்று நன்றாய்த் தெரிந்திருக்கும். பத்திரிகைச் செய்தியை வெட்டியோ, ஒட்டியோ, வீட்டுத் திண்ணையில் 'வம்பு அளக்கிற' பெரியார்களுக்கும் தெரிந்திருக்கும். தெரியாதவர்கள், தெரிந்தவர்களிடமிருந்து தெரிந்து கொள்ளுங்கள் என்பது விகடம். அதுவும் மிகப் பழைய, புளித்துப்போன விகடம்; 'அது விஷயமல்ல.'

காந்தி என்ற பெயர், இந்த உலகத்தில் கீர்த்தியுடன் விளங்கும் வரையில், மகாதேவ தேசாயின் பெயரும் மறந்து போகாது. காந்தியை, கல்பனை மகிழ்ச்சியைத் தரும் கற்பக விருட்சத்துக்கு ஒப்பிட்டால், அந்தக் கருணை மூர்த்தியான விருட்சத்தை (மரத்தை), கேட்டவரம் தரும் அந்த விருட்சத்தை, வெயில் படாமல், பனிவாடை வீசாமல், மழையும் அதிகமாக நனைக்காமல் காத்து தவழ்ந்து தவழ்ந்து, ஊறி ஊறிப் படர்ந்து, அடிமரம் தெரியாமல் மூடிச் சுற்றிக் கொண்டு, மலர், காய், தளிர், இலையுடன், பின்னல்போல மரத்தோடு இணைந்து ஒட்டிக்கொண்டிருக்கும் கொடி, மகாதேவ தேசாய் என்று சொல்லலாம்.

கொடி, நிலத்தில் அதிகமாக நீளுவதில்லை; வானத்தில் முளைப்பதில்லை. நிலத்திலே முளைத்து, மரத்திலே இணைந்து நீண்டு, வானை நோக்க ஆசைப்படுகின்றது. அத்தகைய கொடி தேசாய். கவிதை உள்ளமும், கற்பனைப் பெருக்கும், கதை சொல்லும் திறனும், அமர்ந்த சிரிப்பை இடைவிடாமல் தந்து மனிதனைப் பூரிக்கச் செய்யும் (எவரையும் தாக்காத) நகைச் சுவையும், சத்திய புத்தியும் ஆர்வமும் கொண்ட பக்தர் தேசாய். எல்லோருக்கும் இங்கிதத் தோழன் அவர். எவ

ரும் அலுக்காமல், விடாமல் தொடர்ந்து படித்து இன்புறக் கூடிய ஆசிரியர் அவர். "யங் இந்தியா" வையும் அவர் எழுதிய பல நூல்களையும் படித்த நண்பர்கள், நான் சொல்லுவதே குறைவோ என்றுகூடச் சந்தேகப்படலாம். காந்தி பக்தர்களுக்குள் முன்னணியில் நிற்கும் குழாத்தில், ஒருவீர் தேசாய். காந்தி சகாப்தத்தில், மகாதேவ தேசாயின் எழுத்துக்கள், ஜொலிக்கும் வைரங்கள், காலத்தை எதிர்த்துப் போராடி, அழிவின்றி நிற்கும் பத்தரை மாற்றுத் தங்கப் பாளங்கள்.

மகாதேவ தேசாய் எழுதியிருக்கும் பல நூல்களிலே, "பர் டோலிக் கதை" என்பது ஒன்று. "வீரர்களும் சூரர்களும் பண்டைக்காலத்துச் சங்கதிகள்; இப்பொழுது நமதுநாட்டில் காணக்கூடிய தல்ல" என்று பெருமூச்சுடன் பேசுபவர்கள் இந்தப் புஸ்தகத்தைப் படிக்க வேண்டும். வீரத்தனமும் சூரத்தனமும் அரசர்களின் உள்ளத்திலும் அரண்மனையிலும் போர்க்களத்திலும் கத்தி முனையிலும் பீரங்கி ஒலியிலும் தான் உண்டு என்று பிடிவாத முட்டாள்தனத்துடன் புலம்புகிறவர் கள். பர்டோலிக் குடியானவர்கள், வெள்ளைத்தன முள்ள குடியானவர்கள் காட்டிய தீரத்தைப்படித்து, கண்விழிப்புக் கொள்ள வேண்டும். இந்தியர்கள் நெல்லிக்காய் மூட்டைகள் என்று சதா ஜபித்துச் சாபம் கொடுத்துக் கொண்டிருக்கும் திண்ணை வம்பர்கள்கூட, 'பர்டோலிக் கதை'யைப் படித்தால், பரவச மடைவார்கள் என்பதில் சந்தேகமில்லை. பர்டோலிக் கதையிலே, அவ்வளவு இனிப்பு, அவ்வளவு கவர்ச்சி, அவ் வளவு ஸ்வாரஸ்யம், அவ்வளவு சத்தியம், அவ்வளவு சாதுத் தனம், அவ்வளவு சவுரியம், அவ்வளவு சாந்தம் குடி கொண் டிருக்கிறது.

கையாலாகாத கபோதிகளும் பேச்சுச் சத்தமொன்றையே வாழ்க்கையின் லட்சியமாகக் கொண்டு, பிறர் காதுகளைப் பிளந்து எறியும் வம்பர்களும், சோம்பலை அமிர்தபானமாகக் கொண்டு, எப்பொழுதும் அதையே பருகிக்கொண்டிருக்கும் பெரியார்களும், "சொன்னதைச் சொல்லும் கிளிப் பிள்ளைப்'

பக்தர்களும், சாத்தியப்படாத ஒரு உபாயத்தையே சுட்டிக் காட்டிக்கொண்டு, அதனால் தான் கதிமோட்சம் ஏற்படப் போகிறது, மற்றதெல்லாம் வெறும் குப்பைகள் என்று வீண் வாதம் செய்து காலத்தைக் கழிப்பது ஒருவித இயற்கை. சோர்வும் அடிமைத்தனமும் பொறுப்பற்ற தன்மையும் ரத்தத்தில் கலந்து, உடம்பில் ஊறிப்போனால், வேறு எவ்விதமாகத் தான் அவர்கள் பேசுவார்கள்? பலாத்காரப் புரட்சி தான் விடுதலைக்கு வழி என்று பிதற்றிக் கொண்டிருப்பவர்கள், பர்டோலிக் கதையைப் படித்துச் சித்தம் தெளியவேண்டும்.

"சர்வரோக நிவாரணி" என்று ஒரு மருந்தை யாரேனும் விளம்பரப்படுத்தினால், நமக்கு எல்லோருக்கும் சிரிப்பு வருமா வராதா? இந்த மருந்துக்குப் பின், வைத்திய சாஸ்திர ஆராய்ச்சியே தேவையில்லை போலிருக்கிறதே என்று கூட ஏளனம் செய்யத் துவக்கிவிடுவோம். ஆனால், உண்மையிலேயே, சத்தியாக்கிரகம் "சர்வரோக நிவாரணி" என்பதில் சந்தேகமில்லை. ஜன சமூகத்தைப் பீடித்து நிற்கும் மனோ தத்துவ, பொருளாதார, அரசியல், ஜன நிர்மாண, ஆசாரத் திருத்த, இலக்கிய, சிந்தனை சக்தியைத் தழுவிய எல்லா நோய்களுக்கும் சத்தியாக்கிரகம் இணையற்ற மருந்து என்பதில் சந்தேகமில்லை. எங்கு சத்தியாக்கிரக இயக்கம் நடைபெறுகிறதோ, அங்கு மேற்கூறியவியாதிகளுக்கெல்லாம் தானாகவே பரிகாரம் ஏற்பட்டு, குணமுண்டாகி விடுகிறது. இது நிஜமா, பொய்யா என்பதை, பர்டோலிக் கதையைப் படித்துத் தெரிந்து கொள்ளலாம்.

சத்தியாக்கிரகம் இகபர சாதனமான உபாயம். நாஸ்திக விதண்டாவாதம் பேசி, மனிதனுக்கு இயல்பாயுள்ள, சொந்த சக்தியையே குறைத்துக்கொண்டு, சீர்குலைந்து வாழும் மாந்தர்கள்கூட, சத்தியாக்கிரகத்தின் மூலமாய் இயற்கைத்தாயின், கருணைக்கடலாம் கடவுளின் பெருமித வெள்ளப் பேராற்றிலே, ஒரு துளியாவது அடையப் பெறுகிறார்கள் என்பது திண்ணம். தம்முடைய வல்லபரை (கடவுளை) வல்லபாய்

பர்டோலியிலே கண்டு கொண்டார் என்று காந்தி எழுதியது அழகமைந்த, அருள் நிறைந்த, சத்திய வாக்கியமாகும். கிராமத்தார்கள் சொல்லுவது போல, பர்டோலிமகாஜனங்களிடம் என்ன இருந்தது, "கத்தியா கப்டாவா"? வல்லபரைக் கண்ட வல்லபாய், பர்டோலி வாசிகளுக்கு வல்லபத்தை ஊட்டினார். சத்தியாக்கிரகம் தாயின் தன்மை கொண்ட தல்லவா?

பர்டோலிப் போராட்டத்தைப் பற்றி, மிதவாதத்திலும் ரொம்ப நிதானஸ்தரான கனம் சீனிவாச சாஸ்திரியார்—அவர் தென்னுப்பிரிக்காவில் ஏஜண்ட் ஜெனரலா யிருக்கையில்—ஜொகான்ஸ்பர்க்கிலிருந்து, 1928-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 7-ந் தேதி காந்திஜிக்கு ஒரு கடிதம் எழுதியிருக்கிறார்:—"பர்டோலி விஷயத்தின் முடிவைக் கேட்டு நான் எவ்வளவு சந்தோஷமடைந்தேன்! இது எல்லாத் தரப்பாருக்கும் கௌரவமே. வல்லபாய் படேல், முன்னணியில் முதல் வகுப்புக்கு ஏறி விட்டார். மரியாதையோடு, அவருக்கு நான் தலை வணங்குகிறேன். அவருடைய தமையனுர் விட்டல்பாயும் ரொம்பவும் பெருந்தன்மையுடன் நடந்து கொண்டார். ஆனுல் நாம் (பம்பாய்) கவர்னரை மறந்து விடவேண்டாம். அவருடைய கஷ்டங்களைக் கற்பனை செய்து பார்க்கவேண்டும். இத்தகைய பெரிய பதவிகளில் இருப்பவர்கள் என்னென்ன கட்டுப்பாடுகளுக்குள், என்னென்ன விலங்குகளுக்குள் அகப்பட்டுக் கொண்டு, விழி பிதுங்கிப்போய், வேலை செய்யவேண்டி யிருக்கிறது என்பது நம்மில் எத்தனை பேருக்குத் தெரியும்? அதிகார தோரணை வலையில் அவர்கள் பூராவும் சிக்குண்டு கிடப்பதால், தங்களுடைய மனித இதயத்தைக் காண்பிப்பதற்கே, அவர்களுக்குச் சாத்தியமில்லாமற் போய்விடுகிறது. உத்தியோக உலகத்திலே பேர்பாதி "தர்ம நியாயம்" என்று சொன்னுல் பயப்படுகிறது; இன்னொருபாதி, அதற்கு வெறும் வாய் வணக்கம் செய்கிறது.

"அதிலே (பர்டோலிப் போராட்டத்திலே) தங்கள் பங்கைப்பற்றி நான் பேசப் போவதில்லை. பார்வைக்குத் தாங்கள்

ஒதுங்கி நிற்கச் சித்தங் கொண்டீர்கள். கீர்த்தியிலே ஒரு பங்கு தங்களுக்குக் கொடுக்கவேண்டும் என்று எவரேனும் கருதினால், அது தங்களுக்கு இன்பத்தைத் தராது. தத்துவ சாஸ்திரிகள் சொல்லுவதுபோல, சம்சார சக்கரத்தை ஏவி விட்ட கடவுள் மாதிரி—ஏவிவிட்டபின் கடவுள் தேவையில்லை என்று தோன்றியபோதிலும், அவர்தான் உயிரின் ஜீவநாடி என்பது உண்மை—தாங்கள் சத்தியாக்கிரக சக்கரத்தை ஏவி விட்டபின், ஒதுங்கி நின்று, சத்தியாக்கிரகிகளுக்கு மறை விலே நின்று வழிகாட்டி, அவர்களுக்கு உயிரும் ஊட்டி, அவர்களை நேர்ப்பாதையிலும் நிற்கச் செய்தீர்கள். நிச்சய மாய் அவர்களுடைய கீர்த்தியிலே தங்களுக்குப் பங்கு எதற் காக? தங்களுடைய கீர்த்தி வேறு தன்மை கொண்ட தாகும். அந்தக் கீர்த்தியை யாரும் பங்கிட்டுக் கொள்ளவும் முடியாது, அதைத் தள்ளிவிடவும் முடியாது."

கனம் சாஸ்திரியார் எவ்வளவு அழகாகவும், உண்மை யாகவும், பொருத்தமாகவும் எழுதியிருக்கிறார்! பர்டோலிக் கதைதான் என்ன? காந்தி ஏவிவிட்ட சத்தியாக்கிரக சக்கரத் தின் பிரயாணப் போக்குத்தானே? இந்தியர்கள் அமரத் தன்மை அடையும் வரையில், அந்தச் சக்கரத்தின் பிரயாணம் நிற்கப்போவதில்லை. சத்தியாக்கிரகம் ஸாத்தியமில்லாத வறட் டுத் தத்துவமல்ல என்பதை, பர்டோலிக் கதையிலிருந்து தெரிந்து கொள்ளலாம். வழக்கத்தி லிருந்துவரும் தற்போ தைய போர்களிலே, சிப்பாய்களுக்கு மட்டும் இடமுண்டு. சத்தியாக்கிரகப் போராட்டத்தில், ஆண், பெண், குழந்தை எல்லோருக்கும் இடமுண்டு. ஏன்? சத்தியாக்கிரகம் உயிர் சம்பந்தமான தாரக தத்துவ மானதால்.

மகாதேவ தேசாய் இங்கிலீஷில் எழுதியிருக்கும் இந்தக் கதையை அனுசரித்து, தமிழில் இது எழுதப்பட்டிருக்கிறது. மொழி பெயர்ப்பு என்று சொன்னாலும் தகும். தேசாயின் நூலில் இல்லாத எதையும் தமிழ்க் கதையில் கொண்டு புகுத்திவிட வில்லை. குஜராத்துக்குப் பிரத்தியேகமான, தமிழ் நாட்டுக்குத் தேவையில்லாத சில குறிப்புகளும் மற்றும் சில

சங்கதிகளும் புள்ளி விவரங்களும் தமிழ் நூலில் ஏறவில்லை. தேசாயின் பார்டோலிக்கதையின் இனிப்பும் கவர்ச்சியும் சத்தியமும் குறையாமல், தமிழில் எழுதவேண்டும் என்பது என் ஆசை. அது எவ்வளவு வரையில் நிறைவேறி இருக்கிறது என்பது, நீங்கள் புஸ்தகத்தைப் படித்துப் பார்த்தால் தான் தெரியும்.

வ. ரா.

---

# பர்டோலிக் கதை

## அத்தியாயம் 1.

காந்தி என்ற சொல், காந்தி என்ற பெயர் எவ்வளவு உலகப் பிரசித்தமோ, அதிலே பேர்பாதி பிரசித்தமாவது பர்டோலி என்ற பெயருக்கும் உண்டு. பர்டோலி என்ற பெயர், இந்தியர்களுக்கு உற்சாகத்தைத் தருகின்றது. அந்தப் பெயரைக் கேட்டாலே, இந்திய அரசாங்கத்தார் நடுநடுங்கிப் போன காலமுண்டு. 1921ஸ்ஷ ஆமதாபாத் காங்கிரஸ் முடிந்த பின்னர், பர்டோலியில் சத்தியாக்கிரகச் சட்டமறுப் புச் செய்து காண்பிக்கப் போவதாக, காந்திஜி உலகத்துக்கு அறிவித்தார். அன்று முதலும் அதற்குச் சிறிதுகால முன் னிருந்தும், பர்டோலி, பர்டோலி என்று இந்தியர்கள் வாழ்த்துக் கூறி, மகிழ்ந்து கொண்டிருந்தார்கள்.

பேயை ஓட்ட, மந்திரம் உண்டென்று சொல்லுகிறார் கள். அடிமைத்தனப் பேயை ஓட்ட, "பர்டோலி" என்ற நாமத்தை, இந்தியர்கள் அனவரதமும் ஜபித்துக்கொண் டிருந் தார்கள் என்று சொல்லலாம். காந்திஜி பர்டோலியில் கூட்டச்சட்டமறுப்புச்செய்து, சத்தியாக்கிரகத்தின்உயர்வை உலகத்துக்கு எடுத்துக் காண்பித்து, அதுவே விடுதலைக்கு வழி என்பதை ருசுப்படுத்தப் போகிறார் என்ற ஆவலுடனே, இந்தியர்களும் ஏனையோரும் காத்துக்கொண் டிருந்தார்கள். ஆனால் "சௌரி சௌரா" சம்பவம் குறுக்கிட்டதனால், காந்திஜி தமது சங்கற்பத்தை மாற்றிக் கொண்டார்.

இருந்தாலும், இறந்தாலும் யானை ஆயிரம் பொன் னல்லவா? அதுபோலவே, பர்டோலி என்ற பெயரும், பர்டோலியில் சத்தியாக்கிரகப் போராட்டம் நடைபெறு வதாக இருந்தாலும், அந்தப் பேருக்குக் கீர்த்தி; "சத்தியாக்

கிரகப் போரை நிறுத்திவிட்டேன்" என்று காந்திஜி பர்டோலியில் தீர்மானம் செய்து கொண்டாலும், பர்டோலிக்குத் தானே, தனிக் கீர்த்தி?

இது என்ன? பர்டோலி ராட்டை. அது என்ன? பர்டோலி நெசவு. இன்னொன்று என்ன? பர்டோலிச் சாயம்; பர்டோலி சத்தியாக்கிரகம் பர்டோலி என்ற முத்திரை ஏறின சாமான்களும் சம்பவங்களும் ரொம்ப ஜாஸ்தி. பண்டைக்காலமா யிருந்திருந்தால், பலர் "பர்டோலி புராணம்" "பர்டோலி மாகான்மியம்", "பர்டோலித் திருவிளையாடல்" என என்னென்லாமோ நாமம் சூட்டி நூல்கள்எழுதியிருப்பார்கள். ராமாயணத்துக்குப்பிறகு அயோத்தி என்ற பெயர் நாட்டில் முழக்கம். சத்தியாக்கிரக இயக்கத்துக்குப் பிறகு, பர்டோலிக்குத் தனிப் பெருமை.

பர்டோலி என்பது எதன் பெயர்? பர்டோலி என்பது ஒரு ஊரின் பெயர்; ஒரு தாலூகாவின் பெயரும் கூட. பர்டோலித் தாலூகா, "சூரட்" ஜில்லாவி லிருக்கிறது. குஜராத் (கூர்ஜரம்) என்ற பிரதேசத்தி லிருக்கும் ஜில்லாக்களில் "சூரட்" ஜில்லா ஒன்றாகும். இந்த பர்டோலியில், நிலவரி சம்பந்தமாக, 1928ஆ சத்தியாக்கிரகப் போராட்டம் நடைபெற்றது; தாலூகா முழுதும் ஒன்று சேர்ந்து, கட்டுப்பாடாக நின்று, இந்தப் போராட்டத்தை, ஊக்கமும் உள்வலிமையும் கொண்டு நடத்திய காட்சி, பார்த்து அதிசயப்படவேண்டிய காட்சியாகும். பார்க்க முடியாததைக் கேட்டோ படித்தோ, அனுபவித்து ஆனந்தப்பட்டு உள்ளம் பூரிப்படைந்து, சக்திப் பெருக்கடைவது நாட்டாரின் கடமை யாகும்.

பர்டோலிச் சண்டை, ரத்தம் சிந்தாத சண்டை. ரத்தம் வெள்ளமாக ஓடும் சண்டைகளை—அவைகளை நேரே பார்த்து, அவைகளின் கொடுமையை உணராமல், அவைகளில் தோன்றும் தைரியத்தையும் தியாகத்தையுமே கல்பனை செய்து, பரவசமடைந்து, வெறிபிடித்து, அந்தக் கதைகளை உலகம் படிக்கின்றது. ஆனால் பர்டோலிச் சண்டை, மிக

வும் அற்புதமான சண்டை; குண்டு, துப்பாக்கி, ஜனங்களுக்குக் கிடையாது. குண்டு, துப்பாக்கியோ அரசாங்கத்தாருக்கு ஏராளமாக உண்டு. இவ்வளவு குண்டு துப்பாக்கிகளுக்கும் வேலையில்லாமற்போன வேடிக்கை, அதிசயம், அந்த பர்டோலிச் சண்டையிலே, விஸ்தாரமாய்க் காணப்பட்டது. சத்தியாக்கிரகப் போர் உருவாக நடந்து, உயிருடன் வெற்றி பெற்றது இரண்டு தனியிடங்களில். ஒன்று "குருக்காபாக் போர்." இதை நடத்தியவர்கள் ஆகாலி சீக்கியர்கள். இது பாஞ்சால தேசத்தில், லாகூர் நகரில் நடந்தது. இரண்டாவது போர் பர்டோலியில். இதை பர்டோலிக் குடியானவர்கள் திறம்பட நடத்தினர்கள். யுத்தப் பழக்கமும் போர்ப் பயிற்சியுமுள்ள சீக்கியர்கள் அமைதிப் போராட்டத்தைக் கைக்கொண்டது ஆச்சரியம். ஆனல் திக்கற்ற ஏழை பர்டோலிக் குடியானவர்கள், மனந் தளராமல் தைரியத்துடன் போராட்டத்தை நடத்தியது, மூக்கின்மேல் விரல் வைத்து ஆச்சரியப்படவேண்டிய சங்கதி.

இந்தப் போராட்டத்துக்குச் சேனபதி வல்ல பாய் படேல். பண்டைக்காலத்துப் பாரதப் போரில் இணையற்ற வீரனாக விளங்கியவன் அர்ஜுனன் (பார்த்தன்). அவனுக்கு ரதம் ஓட்டியவர் கண்ணன் (பார்த்தசாரதி). படேலுக்குப் பின் நின்று, அவரையும் ஏனையோரையும் சூத்திரப்பாவைகளாக ஆட்டிவைத்த 'சூத்ரதார்' மகாத்மா காந்தி. இந்தக் கதைதான் பர்டோலிக் கதை. இந்தப் போர் 1928 வருஷம் நடந்தது.

## அத்தியாயம் 2.

பர்டோலி மிராசுதார்களும் மற்றும் குடியானவர்களும் அரசாங்கத்தாரோடு எதற்காகச் சத்தியாக்கிரகச் சண்டை போட்டார்கள்? மிராசுதார்களின்பேரில், அரசாங்கத்தார் தங்கள் எதேச்சாதிகாரத்தைக்கொண்டு, தாங்க முடியாத படிக்கு வரிச் சுமையை ஏற்றி வைத்துவிட்டார்கள். ஆகையால், இதைப்பற்றி விசாரணை செய்ய, பட்சபாதமில்லாத

ஒரு கமிட்டியை, அரசாங்கத்தார் நியமனம்செய்யவேண்டும்; இதுதான், பர்டோலி தாலூகாவாசிகளின் வேண்டுகோள். ஜனங்களின் இந்தப் பிரார்த்தனையை, அரசாங்கத்தார் மதிக்க வில்லை. "எப்படியாவது ராஜாங்கத்தை நடத்தவேண்டும்" என்பது. அரசாங்கத்தாரின் கவலை. குடிமக்களின் க்ஷேம லாபங்களைக் கவனித்து, அவைகளிலே அக்கரை கொண்டு, அதற்குத் தக்கவாறு, ராஜாங்கத்தை நடத்த வேண்டும் என்ற எண்ணமும் நியாயமும்தான் அதிகாரிகளின் மனதில் சதாக் குடிகொண் டிருக்கவேண்டும். ஜனங்களின் மனமும் அர சாங்கத்தாரின் மனப்பான்மையும் வெவ்வேறு பாதைகளில் சென்றுகொண்டே போனால், சொல்லமுடியாத தீமைதான் நாட்டுக்கு விளையும். இதைத்தான் ஸ்ரீ கே. எம். முன்ஷி அவர்கள், பம்பாய் கவர்னர் அவர்களுக்குத் தெளிவாக எடுத் துக் காண்பித்தார் மேதகு கவர்னர் அவர்கள், ஜனங்களின் விருப்பத்தை நிராகரிப்பாரானால், "பர்டோலியில், விவசாயி கள் என்ற பூண்டே இல்லாமல் போய்விடும் அல்லது ரத்தம் ஆறாக ஓடும். எது நேர்ந்தாலும், ஜனங்களுக்கும் அரசாங்கத் தாருக்கு யிடையே இருக்கும் மனஸ்தாபம் ஆழமாய்ப் பதிந்து போவதோடுகூட, அது எப்பொழுதும் தலை தூக்கிக் கொண்டே நிற்கும் புண் ஒருநாளும் ஆறாது" என்று முன்ஷி அவர்கள் பம்பாய் கவர்னர் அவர்களுக்குக் கடித மூலமாகத் தெரிவித்துக் கொண்டார்.

இதற்கு, கவர்னர் அவர்கள் அனுப்பிய பதில் பின்வரு மாறு :—

"அரசாங்கத்தார் தங்களுடைய, அசைக்கமுடியாத ஆளும் பாத்தியத்தை அடியோடு விட்டுக் கொடுத்துவிட்டு, நீங்கள் சொல்லுவதுபோல, ஏதோ ஒரு சுயேச்சையான கமிட்டியின் தீர்ப்பை ஏன் எதிர்பார்த்துக்கொண்டு நிற்க வேண்டும்? இந்தச் சிக்கலான பிரச்னையை எவ்விதத்தாலும் தீர்க்க, நான் கவலையோடுஇருக்கிறேன். ஆனால், அரசாங்கத்தி னுடைய ஆளும் பாத்தியத்தை எந்தத் தனி நபரும் தனக் குச் சொந்தமாகப் பறிமுதல் செய்துகொள்ள வேண்டும்

என்ற கட்சிக்கு, எந்த அரசாங்கமும் இடங்கொடுக்க முடியாது. இடங் கொடுத்தால், எந்த அரசாங்கமும், அரசாங்கம் என்ற பெயருக்கு தகுதி பெற்றதல்ல". கவர்னர் இவ்வாறு எழுதி விட்டார்.

"நிலவரிச்சுமை தாங்கக்கூடியதாக இருக்கவில்லை; இது பொய்யா, உண்மையா என்பதை விசாரிப்பதற்கு, பட்சபாத மில்லாத ஒரு கமிட்டியை, அரசாங்கத்தாரே நியமிக்க வேண்டும்" என்று ஜனங்கள் கேட்டுக் கொண்டதில், 'அரசாங்கத்தாரின் ஆளும் பாத்தியப் பறிமுதல் ஆசை எப்படி வந்து குதிக்கும் என்பது புலனாகவில்லை.

இதற்கு மகாத்மாகாந்தி தமது "யங் இந்தியா"ப் பத்திரிகையில், ஆணித்தரமாகப் பதில் சொல்லி யிருக்கிறார்.

"ஆளும் பாத்தியமா? அது என்ன தெரியுமா? இந்தியர்கள் பட்டினிகிடந்து சாகும்படிக்கு, இந்தியர்களின் செல்வத்தை உறிஞ்சிவிடவேண்டும் என்ற கட்டுக்கடங்காதஆசை தான் அது. அதிகாரிகளின் கட்டுக்கடங்காத ஆசையைக் குறைக்க வேண்டுமானால், பட்சபாதமில்லாத கமிட்டியொன்றை நியமிக்கத் தான் வேண்டும். ஜனங்களுக்கும் அரசியல் நிர்வாகிகளுக்கு மிடையே இருக்கும் தகராறுகள் அப்பொழுதுதான் தீரும்.

"சுயேச்சையான கமிட்டி என்றால் அரசாங்கத்தாருக்கு மீறிய கமிட்டியல்ல என்பது குறிப்பிடத்தக்கது. கமிட்டி அரசாங்கத்தாராலேயே நியமிக்கப் படவேண்டியது. ஆனால், அதிகாரிகளைக் கண்டு மருளாதவர்கள், அந்தக் கமிட்டியில் இடம் பெறவேண்டும். விசாரணை பகிரங்கமாக நடைபெற வேண்டும். ஜனங்களுக்கு, தங்கள் குறைகளைத் தங்கள் பிரதிநிதிகளின் மூலமாய்த் தாராளமாய்ச் சொல்லிக் கொள்ளும் பாத்தியம் இருக்கவேண்டும்.

"பகிரங்க விசாரணை யிருந்தாலே போதுமே! அரசாங்கத்தாரின், எதேச்சாதிகார, ரகசியமான ரிவினியூ நிர்வாகத்துக்குச் 'சீட்டுக் கிழித்தாகிவிடுமே' ஜனங்களின் இந்தப்

பிரார்த்தனையில், 'அரசாங்கத்தாரின் ஆளும் பாத்தியப் பறிமுதல்' எப்படி வந்து சம்பவிக்கிறது?

"எதேச்சாதி காரம் படைத்த அரசியல் நிர்வாகிகளின் சுயேச்சையில், சிறிது குறுக்கே வழிமறித்தாலும், அவர்களுக்குக் கோபவெறி உண்டாகிறது. பிரிட்டிஷ் இந்தியாவில், ஆங்கில சிம்மத்துக்குக் கோபம் வருமாகில், சாதுஹிந்துக்களைக் கடவுள்தான் காப்பாற்ற வேண்டும். நல்லது! திக்கற்றவர்களைக் கடவுள் காப்பாற்றுகிறார். மனிதன் நிச்சயமாய்த் திக்கற்று (கபோதியாக)ப் போனால்தான், கடவுள் காப்பாற்றுகிறார். ஆத்மத்தியாகம் என்ற சத்தியாக்கிரக ராமபாணமே, கடவுள் இந்தியர்களுக்குக் கொடுத்த ஆயுதமாகும். யுகாந்தரமாக உழன்று கொண்டிருந்த இந்தியர்கள் உறக்கத்திலிருந்து, சத்தியாக்கிரகத்தின் உயிர்ப்பெருக்குத் தாக்குதல் மூலமாக, நிதானமாக விழிப்புப் பெற்று வருகிறார்கள்.

"தாங்கள் பலவீனர்களா யிருந்தபோதிலும், தங்கள் மனச்சாட்சிக்காக எத்தகைய துன்பத்தையும் தாங்க, தங்களுக்குத் தைரியம் உண்டு என்று பர்டோலிக் குடியானவர்கள் இந்தியாவுக்கு காண்பித்து வருகிறார்கள்."

"சத்தியாக்கிரகம் சட்டத்துக்கு மீறியதாகும் என்று இனியும் சொல்லிக் கொண்டிருப்பதில் பொருள் இல்லை. உண்மையும் ஆத்மத்தியாகமும் சட்டத்துக்கு மீறியவை என்று எப்பொழுது கருதப்படுகின்றனவோ அப்பொழுது தான், சத்தியாக்கிரகம் சட்டத்துக்கு மீறியதாகும்.

"தென்னாப்பிரிக்கா சத்தியாக்கிரகத்தை ஹார்டிஞ்ச் பிரபு (இந்திய வைஸிராய்) வாழ்த்தினார். எல்லாய்வல்ல தென்னாப்பிரிக்கா அரசாங்கமும் நேர்த்தியுற சத்தியாக்கிரகத்தின் முன் தலைவணங்கிற்று.

"பீகாரில் (சம்பரான் சம்பந்தமாக) சத்தியாக்கிரகத்தின் நேர்மையையும் உபயோகத்தையும் வைஸிராய் செம்ஸ்போர்ட் பிரபுவும், பீகார் கவர்னர் ஸர் எட்வர்ட் கேயிட் அவர்களும் ஒப்புக்கொண்டு, பட்சபாத மற்ற கமிட்டி

யொன்றை நியமனம் செய்து, அரசாங்கத்தாரின் கீர்த்தியை வளர்த்துக்கொண்டு, நீண்டகால அநியாயத்தை ஒழித்துத் தீர்த்தார்கள்.

"நாகபுரிக் கொடிப் போராட்டத்தை நடத்தியவர்களோடு, மத்திய மாகாண அரசாங்கத்தார் சமாதானம் செய்துகொண்டு, சத்தியாக்கிரகக் கைதிகளை விடுதலை செய்து சத்தியாக்கிரகிகள் கொண்டாடிய உரிமையை ஒப்புக்கொண்டார்கள்.

"இவை மட்டுமா; ஐ, ஸி. எஸ். கூட்டத்தாரின் காற்று வாடை வீசாத காலத்தில் (அதாவது தற்போதைய பம்பாய் கவர்னர் புதிதாக இந்தியாவுக்கு வந்த காலத்தில்) ஸர். லெஸ்லி வில்ஸன் அவர்கள் சத்தியாக்கிரகத்தின் நேர்மையை, போர்ஸாதில் ஏற்றுக்கொண்டு, போர்ஸாத் வாசிகளின் குறைபாடுகளுக்குப் பரிகாரம் செய்து கொடுத்தார்.

"சென்ற பதினன்கு வருஷ காலத்துக்குள் (1928-க்கு முன்) நடந்த சம்பவங்களை கவர்னர் அவர்களும் ஸ்ரீ முன்ஷி அவர்களும் நினைவுக்குக் கொண்டுவரவேண்டுமென்பது என் இச்சை.

"பர்டோலி சத்தியாக்கிரகம் மட்டும் சட்டம் மீறியது என்று திடீரென்று சொல்லுவது முடியாது. உண்மை என்னவெனில், கவர்ன்மெண்டுக்குக் கேஸே (கட்சியே) கிடையாது. அவர்களுடைய ரிவினியூ திட்ட நிர்வாகம் பகிரங்க விசாரணையில் அம்பலத்துக்கு வருவது அவர்களுக்குப் பிடிக்கவில்லை.

"கடைசி வரையில், பர்டோலி வாசிகள் தளராமல் இருப்பார்களானல், அவர்கள் கோரும் பகிரங்க விசாரணை கிடைக்கும்; அல்லது உயர்த்தப்பட்டிருக்கும் வரி, வஜாச் செய்து வாபஸ் வாங்கிக்கொள்ளப்படும்.

"அவர்களுடைய குறையைப் பகிரங்க விசாரணையில் அரசாங்கத்தார் கேட்கவேண்டியது, பர்டோலி வாசிகளின் அசைக்கமுடியாத பாத்தியமாகும்"

இது, மகாத்மா காந்தி "யங் இந்தியா" ப்பத்திரிகையில் எழுதிய பதில். அரசாங்கத்தாரின் "அசைக்க முடியாத ஆளும் பாத்தியத்தை," கவர்னர் வற்புறுத்தினர். குடிமக்களின் "அசைக்க முடியாத பகிரங்க விசாரணைப் பாத்தியத்தை," காந்திஜி வற்புறுத்தி விட்டார்.

அரசாங்கத்தாரின் பாத்தியத்தை ஸ்தாபித்துக் கொள்ளுவதற்கு, அவர்கள் கையாண்ட அடக்கு முறைகள் பின்னர் சொல்லப்படும். அரசாங்கத்தாரின் கடுங்கோபத்தைத் தாங்குவதற்கு, சேனபதி வல்லபாய் படேல் பர்டோலி வாசிகளை எப்படிப் பழக்கினர்? எத்தனையோ உலக அதிசயங்களில் அது ஒன்று. வல்லபாய் படேலின் அற்புத வேலையைப் பாருங்கள். சத்தியாக்கிரகம் தொடங்கிய பதினைந்து நாட்களுக்குள் அவர் செய்த பிரசங்கங்களில் ஒன்றில், நவரத்னங்கள் காணப்படுகின்றன. வல்லபாய் சொல்லுகிறார்.—

"சப்பாஷ்! சென்ற பதினைந்து தினங்களாக, நீங்கள் உங்கள் உள்ளங்களிலிருந்து அச்சத்தை வெருட்டிக் கொண்டு வருகிறீர்கள். ஆனல் பயம் பூரவும் இன்னும் ஒழிந்தபாடில்லையே! ரூபாயிலே அரைக்கால் ரூபாய்ப் பயம் இன்னும் உங்கள் மனதில் ஒளிந்து கொண்டிருக்கிறது. அதை உதறித் தள்ளுங்கள். நீங்கள் எதற்காகப் பயப்பட வேண்டும் என்று கேட்கிறேன். யாராவது பயப்படவேண்டு மென்றிருந்தால், அப்படிப் பயப்பட வேண்டியவர்கள் அரசாங்கத்தார்.

"ஆளப்படுகிறவர்களுடைய சம்மதத்தைப் பெருமல், எந்த நாகரீக அரசாங்கமும் அரசாள முடியாது.

"நீங்கள் குருடர்களா யிருக்கிறீர்கள்; அவர்கள் உங்களை ஆளுகிறார்கள். இந்த அரசாட்சியினல் செழிப்பும் சமாதானமும் இருந்து வருவதாக நீங்கள் எண்ணி, ஏமாந்து வருகிறீர்கள்.

"இது சமாதான ஆட்சி அல்ல; இது பயங்கர ஆட்சி.

" அநீதியைக் கண்டால், உள்ளம் பொங்குவது மனிதன் இயற்கை. அந்தத் தன்மையை நீங்கள் இழந்து வருகிறீர்கள். எப்போது உங்கள் உள்ளம் பொங்கவில்லையோ, அதற்குக் கோழைத்தனம் என்று பெயர்.

" நடுநிசியில் நான் உங்கள் கிராமங்களில் செல்லும் பொழுது, 'யார் அங்கே போகிறது? நில்' என்று கேட்பாரையே காணேமே. இந்தக் கிராமங்களில், நாய்கூடக் குலைப்பதில்லையாம். அன்னியனைக் கண்டால்கூட, எந்த எருமைமாடும் கொம்பையும் ஆட்டுவதில்லையாம். இந்த மாதிரி ரவிசங்கர் சொல்லுகிறார். இந்தச் சாதுத்தனம்' இருக்கிறதே, இதுதான் உங்கள் சீரழிவுக்குக் காரணம். அச்சமின்மையை உங்களுக்கு 'இஞ்செக்ஷன்' செய்ய வேண்டும் என்பது என் விருப்பம். உயிர்த் துடிப்பை உங்களுக்கு ஊட்டவேண்டும்.

" அநீதியைக் கண்டால் பொங்குகிற அந்தக்கோபத்தை, உங்கள் கண்களில் நான் பார்க்க முடியவில்லையே!"

அணைத்தும் அதட்டியும், ஊட்டியும் உதறியும் பேசும் வல்ல பாயின் பெருமித சக்தி வெள்ளத்தில் குதித்தும் நீந்தியும் பருகியும், பர்டோலி வாசிகள் — கோழைகளாயிருந்தவர்கள்—வீரர்களானார்கள். அதுதான் பர்டோலிக் கதை.

## அத்தியாயம் 3.

பர்டோலித் தாலூகா, சூரட் ஜில்லாவில் இருக்கிறது. சூரட், கூர்ஜர மாகாணத்தில் இருக்கிறது என்பது உங்களுக்குத் தெரியும். பர்டோலித் தாலூகாவில், எத்தனை கிராமங்கள்? 137 கிராமங்கள். தாலுகாவின் விஸ்தீரணம் 222 சதுர மைல்கள். பர்டோலித் தாலூகாவின் கிழக்கு, மேற்கு எல்லைகளில், பரோடா சமஸ்தானம் பரந்து கிடக்கிறது.

பர்டோலித் தாலூகாவின் முக்கியமான நதி தப்தி, இரண்டு, மூன்று சில்லறை ஆறுகளும் தாலூகா வழியாக

ஓடி, அராபிக் கடலில் போய் கலந்து விடுகின்றன. இவைகளுக்கு, அநேகமாய்ப் பாலங்கள் கிடையாது. மழைக் காலத்தில், இவைகளைத் தாண்டுவதென்றால், மிகவும் திண்டாட்டம் தான். தாலூகாவின் மேல் பகுதி, மண் கலப்பு; ஆனால் செழிப்பு. பருத்தி, நெல் முதலிய தானியங்கள் விளையும். தாலூகாவின் கீழ்ப்பகுதிப் பூமி கரடு முரடு பாறை. ஜல வ்சதி ரொம்பக் கம்மி. சீதோஷ்ணமும் மட்ட ரகம்.

தாலூகாவின் ஜனத் தொகை 87000-க்கு அதிகம். அநேகமாய் எல்லோரும் விவசாயிகள் என்று சொல்லலாம். ஸென் ஸஸ் கணக்கில், ஜனத்தொகையைப் பற்றி, நிச்சயமான புள்ளி விபரம் கிடைக்கவில்லை. பல வகுப்பு ஜனங்கள் வாழ்ந்து வருகிறார்கள். கன்பி, அனவ்லா, பனியா, காலிபராஜ்—இந்த நான்கு வகுப்பார்கள் தாலூகாவில் அதிகமாக வாழ்ந்து வருகிறார்கள். முஸ்லீம்களும் பார்ஸிக்காரர்களும் சிலர் உண்டு.

அனவ்லா என்பவர் பிராமணர். கன்பி—ஜாதி ஹிந்து. இந்த வகுப்பார் நல்ல உழைப்பாளிகள், நிலத்தில் பாடுபடுபவர்கள். தென்னாப்பிரிக்கா முதலிய தூர தேசங்களுக்குச் சென்று, தொழில் நடத்தி, பொருள் சம்பாதிக்க வேண்டும் என்ற ஆவல் கொண்டார்கள். தென்னாப்பிரிக்கா சத்தியாக்கிரகத்தில், இந்தக் கன்பிமார்கள், ரொம்பவும் கலந்து கொண்டார்கள். பனியா—இவர்கள் பண லேவாதேவி செய்பவர்கள். இவர்களும் அனவ்லர்களும் நிலத்தை நேரே உழுது பயிர் செய்வதில்லை. கடைசியாக காலிபராஜ்—இவர்கள் கூலி வேலை செய்து பிழைப்பவர்கள். காலிபராஜ் வகுப்புக்குள் பல பிரிவுகள் உண்டு. சோத்ரா, தூதியா, காமித், துப்லா—என்ற பிரிவுகள். பர்டோலி ஜனத்தொகையில், பேர்பாதிக்கு மேல் காலிபராஜ் வகுப்பார் என்று சொல்லலாம்.*

---

* கிராம மணியகார்களுக்குப் படேல் என்று பெயர். அவர்கள் கன்பி வகுப்பைச் சேர்ந்தவர்கள். கணக்கர்களுக்குத் தலாதி என்று பெயர்.

[பிராமணர்கள், குடியானவர்கள், பள்ளர்கள், பறையர்கள் சக்கிலிகள் என்று (பழைய ஏற்பாட்டின்படிக்கு), தமிழ் நாட்டில்பெயர் சொல்லி யழைப்பது போல-குஜராத்திலும் வகுப்புகள்- குஜராத் பெயர்களைக் கண்டு பயப்படவேண்டாம். தமிழ் நாட்டு வகுப்புப் பிரிவினைகளைப் போலத்தான்.] முஸ்லீம்களும் விவசாயம் செய்கிறார்கள். ஆனால் அவர்களில் சிலர் சில்லறைவியாபாரமும் செய்து வருகிறார்கள். பர்டோலித் தாலூகாவில், ஒருசில பார்ஸிக்காரர்கள்தான் இருக்கிறார்கள். அவர்கள் எல்லோரும் சாராயக் கடைக்காரர்கள். இவர்களுக்குப் பூமி ஜாஸ்தி.

பர்டோலித் தாலூகாவிலுள்ள கிராமங்கள் மிகச் சின்னவை. மேல்வகுப்பார்களுக்கு நல்ல "ஓட்டு வீடுகள்". மாடு கன்றுகளை வீட்டுக்குள்ளாகவே கட்டிக்கொள்ளுகிற வழக்கம் இந்தத் தாலூகாவில் அதிகம்.

பர்டோலியின் பெயர் இந்தியாவில் ஏன் அதிகமாக முழங்கவேண்டுமெனின், பர்டோலி வாசிகளில் பலர் காந்திஜியின் தென்னாப்பிரிக்கா சத்தியாக்கிரகத்தில் கலந்து கொண்டவர்கள். கன்பிகள், அனவ்லர்கள், முஸ்லீம்கள் இவர்கள் தங்கள் சௌரியத்தை அந்தப் போராட்டத்தில் நன்கு காண்பித்திருக்கிறார்கள். இந்தப் பழைய 'பக்தர்களை' உத்தேசித்தே, காந்தி 1921-1922-ல் பர்டோலியில் சட்டமறுப்புத் துவக்கப்போவதாக அறிவித்தது.

அந்தக் காலத்தில், எத்தனையோ மணியகாரர்களும் கணக்கர்களும் தங்கள் வேலைகளை ராஜிநாமாச் செய்த கடிதங்களை மகாத்மாவிடம் கொடுத்து, உசிதம்போல் செய்யுமாறு காந்திஜியை வேண்டிக்கொண்டார்கள். அப்பொழுது சட்டமறுப்பு நடைபெற முடியவில்லை. ஆனால் அதை யாரும் மறந்து விடவும் இல்லை.

காலிபராஜ் வகுப்பார் குடியில் முழுகியவர்கள். அவர்களில் பெரும் பகுதியார் குடியை ஒழிப்பதாகச் சத்தியம் செய்து, அதன்படி நடந்து, தங்களையும் தங்கள் இனத்தார்

களையும் சீர்திருத்தம் செய்துகொண்டு வந்தார்கள். எனவே அவர்களுக்கு வழக்கமாயிருந்த காலிபராஜ் என்ற பெயர் போய் ராணிபராஜ் (காட்டில் வசிப்பவர்கள்) என்ற பெயர் கிடைத்தது. காலிபராஜ் என்றால் கறுப்பர்கள் என்று அர்த்தம்.

1921-1922 இல் காந்திஜியை அரசாங்கத்தார் கைது செய்ததும், பர்டோலித் தாலூகாவில் உழைத்து, அதைச் செப்பனிடும் வேலையைக் காங்கிரஸ் தொண்டர்கள் ஏற்றுக் கொண்டார்கள். காந்திஜி வாக்குக் கொடுத்த பர்டோலி அல்லவா? அந்தத் தாலூகாவில் காங்கிரஸ் நிர்மாணத் திட்டத்தை விரைவில் அமுலுக்குக் கொண்டுவர வேண்டாமா? வல்லபாய்க்குச் சும்மாயிருக்க முடியவில்லை. அதுவும் காந்திஜி சிறைப்பட்ட பின்னர், சும்மாக் கை கட்டிக்கொண் டிருக்க முடியுமா?

பர்டோலித் தாலுகாவில் நான்கு இடங்களை, வேலை செய்வதற்காக, வல்லபாய் பொறுக்கி யெடுத்தார். (1) பர்டோலி (2) ஸர்போன் (3) வரட் (4) வங்கனேர். (சூனிலால்) மேதா தம்பதிகள் (புருஷனும் மனைவியும்) லட்சுமிதாஸ் புருஷோத்தமர், ஜுகத்ராம் தவே, ஜாவேரிபாய் படேல், நரஹரி பரிக், தர்பார் கோபால்தாஸ், ரவிசங்கர், டாக்டர் சுமந்த் மேதா—முதலிய உத்தமத் தலைவர்களும் தொண்டர்களும் நிர்மாண வேலையில் ஈடுபட்டு இறங்கினர்கள். இவர்களில் சிலர், வல்லபாய் அவர்களைப்போலவே, வாழ்வில் பெரிய மனிதர்கள். அவருடன் சம அந்தஸ்துப் படைத்தவர்கள். என்றாலும் வல்லபாய் கீறின கோட்டைக் கடக்காமல், அரிய தியாகத்தையும் தளராத விடாமுயற்சியையும் கைக்கொண்டு, தங்களால் இயன்ற அளவு கூர்ஜர நாட்டைச் செவ்வைப் படுத்த முயன்றார்கள். இவர்களில் சிலர் பர்டோலித் தாலுகாவில் ஆசிரமங்களை ஸ்தாபித்துக்கொண்டு, முக்கியமாகக் காலிபராஜ் வகுப்பார்களை நல்வழிப்படுத்தி வந்தார்கள்.

தச்சு வேலை, நூல் நூற்றல், நெசவு, தேசீயப் பள்ளி ஸ்தாபனம்,மிதுவிலக்குப் பிரசாரம், இன்னும் எந்தெந்த வகை

களில் வேலை செய்தால், பொது ஜனங்கள் ஒற்றுமைப்பட்டு, கட்டுப்பாட்டுடனும் செல்வச் செழிப்புடனும் வாழமுடியுமோ, அந்த வேலைகளை யெல்லாம் தொண்டர்கள் செய்யத் துவக்கினார்கள். இதுவே,கிராமப்புனருத்தாரணவேலையாகும்.

பர்டோலி, தாலுகாத் தலைநகரா யிருப்பினும், அங்கே முன்சீபுக் கச்சேரி இல்லை என்று சொன்னால் போதாதா? வம்பு வியாஜ்ஜியங்களில் ஜனங்கள் ஈடுபடுவதில்லை. வம்பு நேர்ந்தாலும், அதைத் தங்களுக்குள்ளாகவே தீர்த்துக்கொள்ளுகிறது. கூடுமானவரையில்,அன்னியநாட்டுச் சாமான்களை வாங்குவதில்லை. அநேகமாய்க் கதர் உடுத்துவது. படாடோப நாகரீகத்தில் ஈடுபட்டுப் பணத்தை விரயப்படுத்த மனங்கொள்ளுவதில்லை. ஏழைக் கூலிகள் மீளாத வகையில் அடிக்கொரு கள்ளுக்கடையை ஸ்தாபித்திருக்கும் அரசாங்கத்தாரின் மனப்பான்மை எங்கே? இந்த ஏழைகளைக் கைதூக்கிவிட முயலும் தொண்டர்களின் கனிவுற்ற தொண்டு எங்கே! தொண்டர்கள் மௌனமாய்த் தங்கள் வேலையைச் செய்து வந்தார்கள்.

பர்டோலி ஜனங்கள் சாதுக்கள் என்று பெயர் வாங்கும் படியாக, அவர்கள் வாழத் துவக்கினார்கள். கன்பிமார்கள், ரானிபராஜ்கள்—இவர்கள் ரொம்ப சாதுக்கள். சதா உழைப்பிலேயே இவர்களுக்கு எண்ணம். வஞ்சனை யறியாத மனதைத் தெளிவாகக் காண்பிக்கும் முகப்பொலிவுடன் வாழும்இந்த ஜனங்களுக்குக் கடவுளின் சகாயம் எப்பொழுதுமிருக்கும் என்பதில் சந்தேகம் துளிக்கூட இல்லை.

"தர்ம யுத்தத்திலே கடவுள்தான் சேனாதிபதி. தர்ம யுத்தத்திலே ரகசியம் கிடையாது; தந்திரத்துக்கு (சூதுக்கு) வேலையில்லை; பொய்க்கு இடமேயில்லை. இப்பேர்ப்பட்ட தர்மயுத்தம் தானாகவே வரும்; அதை நடத்த ஆஸ்திகன் ஒருவன் எப்பொழுதும் தயாராகக் காத்துக்கொண்டிருக்கிறான்" என்று காந்திஜி தர்ம யுத்தத்தை வர்ணிக்கிறார்.

பர்டோலித் தர்ம யுத்தத்தை நடத்தத் தயாராய்க் காத்துக்கொண்டிருந்தவர் ஸர்தார் வல்லபாய் படேல். இந்தத் தர்ம யுத்தத்துக்குத்தான் பர்டோலிக் கதை என்று பெயர்.

## அத்தியாயம் 4.

இந்தியாவிலே, ஏழு லட்சத்திச் சொச்சம் கிராமங்கள் இருக்கின்றன. இந்தக் கிராமங்கள் சீரழிந்துகொண்டு வருகிற சங்கதி எல்லாருக்கும் தெரியும். கிராமத்திலே, பிழைப்புக்குப் பல வழியும் வசதியும் இல்லை. கிராமத்திலே, விவசாயம் தான் முக்கியமான தொழில். இந்தத் தொழிலுக்கு அனுசரணையாகவே "கொல்லு, தச்சு" முதலிய தொழில்கள் நடந்து வருகின்றன. முன்காலங்களில் நெசவுத் தொழில் நடந்து வந்தது. நெசவுத்தொழில், அநேகமாய்த் தொலைந்துபோய் விட்டது என்று சொல்லலாம்.

கிராமத்திலிருக்கும் ஜனங்களெல்லோருக்கும் விவசாயம் ஒரு தொழில் மட்டும் இருந்தால், ஜீவனத்துக்குக் கட்டவில்லை. வேறு தொழில்களோ கிராமத்தில் கிடையாது. மேலும் கிராமங்களில் 'பணப்புழக்கம்' அதிகமாக இருப்பதில்லை. . விவசாயத்திலிருந்து உற்பத்தியாகும் தானியங்களைக் காட்டிலும் கைத்தொழில் சாமான்கள், மெஷின் சாமான்கள் அதிகமான லாபம் கிடைக்கக்கூடிய விலைக்கு விற்கின்றன. "உழுதவன் கணக்குப்பார்த்தால் உழக்குத் தானியம் மிஞ்சாது" என்று சொல்லுவது உண்மைதான்போலத் தோன்றுகிறது. உழுது பயிர்செய்யும் விவசாயிகளும் இதுவரையில் லட்சப் பிரபுவாக ஆனதில்லை. வேறு தொழில்களிலோ, வியாபாரத்திலோ ஈடுபட்டவர்கள் பெருத்த மிச்சம் அடைந்து, விவசாயிகளைக்காட்டிலும் சுகமாக வாழ்வது கண்கூடு; விவசாயிகளின் நிலங்களையும் வாங்கிவிடுகிறார்கள்.

விவசாயத் தொழிலுக்கு, கௌரவம் ஒன்றே மிச்சம். பண மிச்ச சங்கதியை அதன் கிட்டக் காதவழி தூரத்தில் கூடப் பேசப்படாது. லாபமில்லாத பொருளின் மதிப்பும் வர வரக் குறைந்துவரும் என்பது உலக அனுபவம். எனவே, கிராமவாசிகள் கிராமங்களிலேயே 'தரித்துக்' குடியிருப்பதற்கு இப்பொழுது சாத்தியப்படுவதில்லை. கிராமங்களிலே, குடியிருப்பு வீடுகளைக் காட்டிலும் பாழ் மனைகள்தான் அதிகம். இந்தக் கிராமவாசிகளின் வாழ்வு எப்படி யிருக்கும்?

இவர்கள் பாரதியார் நெஞ்சு பொறுக்காமல் கூறியது போல, 'அஞ்சி யஞ்சிச் சாவார்; இவர்கள் அஞ்சாத பொருளில்லை அவனியிலே (பூலோகத்திலே)'.

பர்டோலித் தாலூகாவி லிருக்கும் கிராமங்களெல்லாம் மேற்சொன்ன நிலைமையிலேதான் இருந்தன. மிராசுதார்களுக்குக் குடித்தனம் கட்டவில்லை; வேலையாட்களுக்குக்கூலி கட்டவில்லை. ஸர்க்கார் அதிகாரிகளின் அமுலுக்குக் குறைவில்லை. ஆனால் ஒருவருக்கும் சந்தோஷம் மட்டும் கிடையாது. உயர்ந்த வாழ்வைப்பற்றி யோசிப்பதற்குச் சந்தர்ப்பம் கிடையாது; சாவகாசம் இல்லை; தூண்டுதலோ, கொஞ்சங் கூடக் கிடையாது. நட்சத்தரகனிடம் அரிச்சந்திரன் பட்ட கடன் தீரும் வரையில், அவனுக்கு, "தன் பிள்ளையை விற்கலாமா, தன் பெண்சாதியை விற்கலாமா, அல்லது தன்னையே விற்கலாமா" என்ற யோசனையைத் தவிர, வேறு என்ன யோசனை யிருந்தது? பணத்துக்காகப் புலம்பல்; பணம் கிடைக்காவிட்டால் புலம்பல்; பணம் கிடைத்தது போதாவிட்டாலும் புலம்பல். எப்பொழுதும் இந்தப் புலம்பல்தான் கிராமங்களில். என்ன செய்கிறது? இந்தக் காலம் 'பணயுக' மாக, அநியாயமாக மாறறப்பட்டது. யாரால் இந்த வேலை நடந்தது என்பதை ஏன் விசாரிக்கவேண்டும்?

பண்டைக் காலங்களில், ராஜாக்கள் வரியை ஆறில் ஒரு கடமையாக, சாசுவதமாகச் செய்து, வரியைத் தானியமாக வசூல் செய்தார்கள்; பணமாக வசூல் செய்யவில்லை. இப்பொழுது நம்மை யாளும் (பிரிட்டிஷ்) அரசாங்கத்தார், "தானியம் தேவையில்லை, ரொக்கம் வேண்டும்" என்கிறார்கள், கிராமங்களிலே, சில வீடுகளிலே—அதுவும் சில சமயங்களில் மட்டும் தான்—முழு ரூபாய்களைக் கண்ணால் பார்க்கலாம். தபால்கார அய்யாவிடம், முக்காலணாக் கார்டுக்கு, கிராமத்தில் கடன் சொல்லி, நாளை என்று தவணை போடுவது சாதாரண சம்பவம்; மேலே கூறப்பட்டது வர்ணனையல்ல. கிராமத்தில் வறுமை அவ்வளவு ஆழமாகப் பதிந்தும், அவ்வளவு விஸ்தாரமாகப் பரவியும் கிடக்கின்றது. மரியாதைப் பதப் பிரயோகத்

திலே, இதற்குக் கிராம வாழ்க்கை என்று பெயர். இது வாழ்க்கையா, சித்திரவதையா என்பது கிராம வாழ்க்கை அனுபவ முள்ளவர்களுக்குத் தான் தெரியும்.

கிராமங்களிலே மிராசு பாத்தியமுள்ள பட்டாதார்கள் சிறு பான்மையோ ராவர், மிராசு பாத்திய மில்லாதவர்கள் பெரும் பான்மையோர். சட்டம் எப்படியோ, அதை விசாரிக்கவேண்டாம்; மாமூல் என்னவென்றால் பூமிக்குச் சொந்தக்காரர்கள் அரசாங்கத்தார்கள். அரசாங்கத்தாரிடமிருந்து, சாசுவதக் குத்தகைக்கு; பூமியைஒப்புக்கொண்டிருப்பவர்கள் மிராசுதார்கள். ஆகவே, "நில சம்பந்தமாக வசூலிக்கப்படும் பணம் வரியல்ல; அது வாடகை" என்பது அரசாங்கத்தாரின் கட்சி. அதாவது இந்திய அரசாங்கம் என்பது ஒரு பெரிய பண்ணை; அந்தப் பண்ணையிலே, குத்தகைகாரர்களாயும் வேலைக்காரர்களாயும் இருப்பவர்கள் இந்தியக் குடிமக்கள். பண்ணை வருமானத்திலிருந்து, பண்ணை (அரசாங்கம்) நடைபெறுகிறது. பண்ணையை (அரசாங்க நிர்வாகத்தை) எப்படி நடத்துவது என்பது பண்ணை எஜமானர்களின், பண்ணைச் சொந்தக்காரர்களின்பொறுப்பேயொழிய, இந்தியர்களுடையதல்ல. இதுதான் அரைகுறையாகச் சொல்லியும் சொல்லாமலும் வார்த்தைகளை விழுங்கியும் அரசாங்கத்தார் அமுலில் வைத்துக்கொண்டிருக்கும் தற்போதைய கட்சி. இந்தக் கட்சியின் விபரீத விளைவுகள் யாவை என்பது எல்லோருக்கும் தெரியும். எனக்கு ஒரு வீடு சொந்தம் என்று வைத்துக் கொள்ளுவோம். அந்த வீட்டில் வேறொருவர் வாடகை கொடுத்துக்கொண்டு குடியிருக்கிறார். அந்த வீட்டின் வாடகையைக் கூட்டவோ, குறைக்கவோ—இது சம்பந்தமாக வாதாட, குடியிருப்பவருக்கு என்ன பாத்தியம்? கூட்டுவதும் குறைப்பதும் என் பாத்தியம். குடியிருப்பவர்கள், கோர்ட்டுக்குப் போய், பரிகாரம் தேடிக்கொள்ள முடியுமா? எது சட்டம்? இதுபோலவே தான் மிராசுதார்களுக்கும் அரசாங்கத்தாருக்கும் உள்ள பாத்தியாபாத்தியம்.

அரசாங்கத்தார் கொண்டாடும் பாத்தியத்துக்கு ருசுப்

பத்திரம் உண்டா என்று கேட்கலாம். அரசாங்கத்தாரின் கட்சியே, அவர்களுடைய பாத்திய பத்திரம். அந்தப் பாத்தியம் தவறு என்று கேஸ் போட்டு, விசாரித்து, ருசுப்படுத்த, கோர்ட்டு எது?

முப்பது வருஷத்துக்கு ஒரு தடவை, ஒவ்வொரு ஜில்லா வாரியாக, ஸர்வே நடக்கும்; ஸெட்டில்மெண்டு ஏற்படும். நில சம்பந்தமாக. கிஸ்தியைக் கூட்டுவதோ, குறைப்பதோ, எல்லாவிதமான அதிகாரங்களும் ஸெட்டில்மெண்டு உத்தியோகஸ்தருக்கு உண்டு. அவர்தான், கிஸ்திப் பைசல் சம்பந்தமாக, சர்வாதிகாரி. அவர் சொல்லுவது வெறும் சட்டமுமல்ல; தீர்ப்பு மட்டுமல்ல. அவர் எழுதின எழுத்துக்கு எந்தக் கோர்ட்டிலும் அப்பீல் கிடையாது. 1873-ம் வருஷம் ஒரு மிராசுதார், ஸெட்டில்மெண்டு ஆபீசர் தீர்ப்பை ஆட்சேபித்து, பம்பாய் ஹைகோர்ட்டில் வழக்குக் கொடுத்தார். வழக்கு, ஆபீசருக்கு விரோதமாயும் மிராசுதாருக்குச் சாதகமாயும் தீர்ப்பு ஆயிற்று. அன்றையத் தேதிமுதல், வரி சம்பந்தமாக எதையும் விசாரிக்க, எந்தக் கோர்ட்டுக்கும் அதிகாரம் கிடையாது என்று, உடனே அரசாங்கத்தார் சட்டம் செய்து விட்டார்கள். ஆகவே, வரிச்சுமை நிவர்த்திக்குப் பரிகாரம் தேடிக்கொள்ளும், தேடிக்கொடுக்கும் மார்க்கமே மிராசுதாருக்குக் கிடையாது.

ஸெட்டில்மெண்டு ஆபீசருக்கு நல்ல மனது இருந்தால் தான், மிராசுதார் பிழைத்தான். இல்லாவிட்டால், 'ஜேஜே' என்று மிராசுதார் தலைகீழாய் நின்று வித்தை பண்ணினாலும், அவனுக்குப் பரிகாரமே கிடையாது.

முப்பதுவருஷ ஸெட்டில்மெண்டு, பர்டோலிக்குமட்டும் கிடையாதோ? நிச்சயமாய் உண்டு. 1896-ம் வருஷத்தில் ஒரு ஸெட்டில்மெண்டு. பிறகு 1926-இல் ஒன்று. 1926-ம் வருஷத்து ஸெட்டில்மெண்டிலேதான் வந்தது அனர்த்தம். அந்த அனர்த்தம்தான் பர்டோலிக் கதை. 1866—67-இல், பர்டோலியின் கிஸ்தி ரூ. 400939; 1897 — 1898-இல் ரூ. 458317; 1923—1924-இல் 514762. இந்தக் கடைசி

1923—1924-திய தீர்வையிலே, ஐந்திலே ஒரு பங்கு கூட உயர்த்தி, ஸெட்டில்மெண்டு ஆபீஸர் 1927—1928 ஸெட்டில்மெண்டு செய்தார்.

ஏற்கனவே இருந்த கிஸ்தியை உயர்த்துவதற்கு என்ன காரணங்கள் என்று ஸெட்டில்மெண்டு ஆபீசரைக் கேட்க வேண்டியதில்லை. அவர்களே விநோதமான காரணங்களைக் குறிப்பிடுவார்கள் தங்கள் யாதாஸ்தில். (1) தானியங்களின் விலை வாசி தூக்கி விற்கிறது; (2) பொதுவாக, கிராமவாசிகள் சுகமாக வாழ்கிறார்கள்; (3) சாஸனங்களில், நிலங்களின் விலை ஏறிக்கொண்டே வருகிறது; (4) மிராசுதார்கள், விவசாயிகளிடமிருந்து வாங்கும் பகுதியோ குத்தகைத் தானியமோ, அதிகரித்து வருகின்றது. இந்த மாதிரி ஒரு காரணத்தைச் சொல்லி, ஸெட்டில்மெண்டு ஆபீஸர் வரியை உயர்த்திவிட்டுச் சமாதானம் பேசுவார். வரிவஜாச் செய்ய வேண்டும் என்று சட்டசபையில் தீர்மானம் நிறைவேறினாலும், அந்தத் தீர்மானம் குப்பைத்தொட்டிக் காகிதம் என்று சொல்லத் துணியும் ரெவினியூ மெம்பர்களும் உண்டு.

1919-ம் வருஷத்தில் மாண்டேகு செம்ஸ்போர்டு சீர்திருத்தம் வருகிற சமயத்திலேயும், நிலவரி சம்பந்தமான பரிகார ஏற்பாடுகளைப்பற்றி, இந்தியர்கள் கூப்பாடு போட்டார்கள். அப்பொழுது ஏற்பட்ட பார்லிமெண்டுக் கூட்டுக் கமிட்டியின் முன்னே, சாட்சியமும் விடப்பட்டது. "ஏதேச்சாதிகாரத்தின் மூலமாய் வரி விதித்து வசூலிக்கும் வழக்கத்தை மாற்றி, வரிவசூல் ஏற்பாட்டைச் சட்டதிட்டத்துக்குள் கொண்டு வரவேண்டும்" என்று கூட்டுக் கமிட்டியார் தீர்ப்புச் சொன்னார்கள். இந்தத் தீர்ப்பை, அரசாங்கத்தார் நிறைவேற்றி வைக்கவில்லை.

1924ஹ்ஸ்த்தில், பம்பாய்ச் சட்ட சபையில் கீழ்க்கண்ட தீர்மானம் நிறைவேற்று:—

"1919ஹ்ஸ்த்திய சீர் திருத்தத்தைச் சோதனை செய்ய நியமிக்கப்பட்ட கூட்டுக் கமிட்டியின் சிபார்சுப்

> படிக்கு நில வரியை (கிஸ்தியை) மாற்றும் ப்ரச்னை சட்ட திட்டத்துக்குள் வருவதற்காக, சட்டசபையால் தேர்ந்தெடுக்கப்பட்ட, பெரும்பான்மையாக உத்தியோகப்பற்றில்லாத அங்கத்தினர்கள் கொண்ட ஒரு கமிட்டியை அரசாங்கத்தார் நியமிக்க வேண்டும் என்றும் மேலே குறிப்பிடப்பட்ட சட்டம் அமுலுக்குக் கொண்டு வரப்படும் வரையில் புதிய ஸெட்டில்மெண்டு ஏற்படப்படாது, புதிய வரி யொன்றும் விதிக்கப்படாது என்றும் இந்தச் சட்ட சபை சிபார்சு செய்கிறது."

கூட்டுக் கமிட்டியின் தீர்ப்பையே, அரசாங்கத்தார் கவனிக்காதபொழுது, இந்த (நொண்டி) சட்டசபைத் தீர்மானத்தைத் தான் மதிக்கப்போகிறார்கள்! "குப்பைத்தொட்டித் தீர்மானம்" என்று பரிகசிக்கப்பட வில்லையா? ஸர்வேயும் ஸெட்டில்மெண்டும் தாலூகா வரியாக 'மஜாவாக' நடந்து கொண்டே வந்தது. ஸெட்டில்மெண்டு உத்தியோகஸ்தரின் மனப்போக்கில் தோன்றிய வரி தாட்சிண்யமின்றி வசூல் செய்யப்பட்டும் வந்தது.

என்ன இருந்தாலும், சட்டசபைக்கு ரோஷம் வராதா? மீண்டும் ஒரு தீர்மானத்தை 1927ஆம் வருஷத்தில் பம்பாய்ச் சட்டசபையில் நிறைவேற்றி வைத்தார்கள். சட்டசபைத் தீர்மானத்தின் சாரம் இது தான்:—

> "1924-ம் வருஷத்தில் நிறைவேறிய தீர்மானத்தின் கொள்கையை நாங்கள் விட்டுக் கொடுத்துவிடவில்லை. அந்தத் தீர்மானத்தைத் தயை செய்து சபையோடு கூடிய கவர்னர் அவர்கள், உடனே அமுலுக்குக் கொண்டு வந்து, நிலவரி நிர்மாணக் கமிட்டியாரின் சிபார்சுகளை வைத்துக்கொண்டு, ஒரு சட்டத்தை இயற்றி வைக்கவேண்டும். 1924ஆம் மார்ச்சுமீ 15உக்குப் பின், எந்த இடத்தில் புதிய ஸெட்டில்மெண்டு செய்யப்பட்டிருந்தாலும், இந்தப் புதிய சட்டத்தின் மூலமாய், அவைகளுக்கும் பரிகாரம் ஏற்படுதல் வேண்டும். இந்

தப் புதிய சட்டம் நிறுவும் வரையில், புதிய ஸெட்டில் மெண்டுப் புதிய ரேட்டு உயர்வை வசூல் செய்யாமல் இருக்கும்படி, ரிவினியூ அதிகாரிகளுக்கும் அரசாங்கத் தார் தாக்கீது அனுப்பவேணும்.''

சட்டசபையின் இந்த இரண்டாவது தீர்மானத்துக்குப் பிறகு, ஒரு வருஷம் ஆயிற்று. யாதொரு சட்டத்தையும் நிலவரி சம்பந்தமாகக் காணேம். சட்ட சபையிலே, இரண்டு தீர்மானங்கள் நிறைவேறினவே, அவைகளின் கதி என்ன ஆயிற்று? 'குப்பைத் தொட்டியா? பூராவும் இல்லை. நில வரி சம்பந்தமாகக் கமிட்டி நியமித்துச் சட்டம் தயாரிக்க வேண்டுமென்ற தீர்மானப்பகுதி அமுலுக்குக் கொண்டுவரப் பட்டது.

கமிட்டியிலே இருபத்திரண்டு மெம்பர்கள். இந்த இரு பத்திரண்டு பேர்களில், ஏழுபேர்கள் ஸர்க்கார் உத்தியோகத் தரப்பு ''மெம்பர்கள். இவர்கள் ஏழுபேரும் சேர்ந்து 'கண்டு பிடித்த தீர்ப்புகளைத்தான், அரசாங்கத்தார் ஏற்றுக் கொண்டார்கள். இந்த ஏழு 'பிரகஸ்பதிகளும் என்ன சிபார்சு செய்தார்கள்?

(1) கிஸ்தியைப் பகுதியாகப் பாவிக்கவேண்டும்; வரியா கப் பாவிக்கலாகாது. அதாவது வாடகை என்ற ஹோதாவி லேதான், நிலத்தின் கிஸ்தியைக் கருதவேண்டும்.

(2) சாகுபடிச் செலவுபோக மீந்ததில் பேர்பாதிக்குச் சர்க்கார் பாத்தியமுள்ளவர்கள்.

(3) கசிவு தண்ணீருக்குத் தண்ணீர்த் தீர்வை விதிக்க லாகாது என்பது ஏற்றுக்கொள்ளப் படமாட்டாது.

(4) ரிவிஷன் ஸெட்டில்மெண்டு ஒவ்வொன்றையும் சோதித்துப்பார்க்க நிரந்தரக்கமிட்டி நியமிக்கப்படவேண்டும் என்பதை அரசாங்கத்தார் ஒப்புக்கொள்ளலாகாது.

கமிட்டியின் பெரும்பான்மை அங்கத்தினர்கள்யாவரும் சேர்ந்து செய்த சிபார்சுகள் யாவும் காற்று வாக்கில் விடப்

பட்டன. "ஸர்க்கார் மெம்பர்கள் பிடித்த முயலுக்கு மூன்றே காலோ, கொம்போ", அதுதான் ஊர்ஜிதமாயிற்று. நிலவரி சம்பந்தமாக, ஜனங்களுக்கும் சிறிது பாத்தியம் (முறையிட்டுக்கொள்ள) சட்ட மூலமாக இருக்கட்டுமே என்று பார்லிமெண்டுக் கூட்டுக் கமிட்டியார் எண்ணின நல்லெண்ணம் வீணாய்ப் போய்விட்டது. மாமூல் எதேச்சாதிகாரத்தைச் சட்டமாகச் செய்துவிடவேண்டும் என்பது அதிகாரிகளின் ஆசை.

> "புதிய செட்டில்மெண்டின் மூலமாக, 25 தாலூக்காக்களிலிருந்தும் 10½லட்சம் ரூ. அதிக வருமானம் ஸர்க்காருக்கு வருகிறது. இப்பேர்ப்பட்ட பண மந்தக் காலத்தில், இவ்வளவு பெரிய தொகையை, ஸர்க்கார் (வஜாச்செய்து) தியாகம் செய்யவேண்டுமென்று எந்தச் சட்டசபை மெம்பராவது சொல்லுவாரானால், அதைக் கண்டு நான் ஆச்சரியப்படுவேன்" ...

என்று ரிவினியூ மெம்பர் பம்பாய்ச் சட்டசபையில் பேசினார். இந்த ரிவினியூ மெம்பருக்கு முன் இந்திய அரசியல் நிர்வாகம் செய்தவர்கள், இந்தமாதிரி பேராசைபிடித்து அலையவில்லை.

1841ல் ப்ரேஸர் டைலர் என்பவர் சொன்னார்:—"வரி விதிப்பதில், விவசாயிகளின் நன்மையைத்தான் நாம் (அரசாங்கத்தார்) கருத்தில் கொண்டிருக்க வேண்டும். ஆகவே, எவ்வளவு அதிகமாக அரசாங்கத்தார் விவசாயிகளிடமிருந்து பணம்பறிக்க வேண்டும் என்பது நமது நோக்கமா யிருக்கப்படாது. விவசாயிகளிடம் எவ்வளவு அதிகமாகப் பணத்தை மிச்சப்படுத்தி வைக்கலாம் என்பதுதான் நமது நோக்கமா யிருக்கவேண்டும்."

1864-ம் பம்பாய் கவர்னராயிருந்த ஸர் பார்டில் ப்ரேர் சொன்னதாவது:—"அரசாங்கத்தாருக்குப் பண நோக்கம் அவ்வளவு பெரிய நோக்கமல்ல. சாசுவத வரித் திட்டம், மிதமான வரி—இவைகளினால் விவசாயிகளுக்கு

ஏற்படும் நன்மைகளே பெரிதாக அரசாங்கத்தாரின் பார்வை யிலே படவேண்டுமேயல்லாது, நிலவரியை உயர்த்துவதில் ஸர்க்கார் அதிக கவனம் செலுத்தலாகாது.''

'நல்லவர்கள் ஒரு சிலர்; மற்றவர்கள்தான் பாக்கிப்பேர் கள்' என்ற பழமொழியுண்டு. நல்லவர்களாகிய ஒரு சிலரின் வார்த்தை, அரசாங்க நிர்வாக முறையில் ஏறவில்லை. மற்றவர்க ளின் வார்த்தைக்குத்தான் செல்வாக்கு உண்டாயிற்று. எனவே, விவசாயிகளின் செல்வம், ரத்தக் குழாயிலிருந்து ரத் தம் உறிஞ்சப்படுவதுபோல, சிறிது சிறிதாக உறிஞ்சப்பட்டு, அவர்கள் 'பித்த பாண்டுக்களாக' ஆகிவிட்டார்கள். அவர்க ளுடைய வரலாறு சகிக்கமுடியாத துக்கத்தைக் கொண்ட தாகும்.

## அத்தியாயம் 5.

ஸெட்டில்மெண்டு ஆபீஸர் செய்யும் வேடிக்கைகளை விவரமாகச் சொல்ல முடியாது. "மண்ணை ருசி பார்த்து, அவர்கள் வரி போட்டு விடுவார்களே! அவர்கள் அவ்வளவு சாமர்த்திய சாலிகள்'' என்று கிராமத்திலிருக்கும் சில தொண்டு கிழவனுர்கள் பாதி கேலியாகவும் பாதி உண்மை யாகவும் பேசுவதுண்டு. "ஸெட்டில்மெண்டு உத்தியோகஸ் தர்களுக்கு, தரம் பைசல், தீர்வைப் பைசல், வரி விகிதம் முதலியவைகளின் சூட்சுமங்கள் தெரியும். நாற்காலிகளில் சாய்ந்துகொண்டு வீண் குதர்க்கம் செய்பவர்களுக்குத் தெரி யாது'' என்று அரசாங்கத்தார் கட்சி சொல்லுகிறுர்கள். ஸெட்டில்மெண்டு ஆபீசர் ஏதோ கிராமம் கிராமமாய்ப் போய், பூமியைத் தராதரம் பார்த்துப் பைசல் பண்ணுகிறுர்கள்போல அரசாங்கத்தார் கட்சி பேசுகிறுர்கள். தாலூகாக் கச்சேரி யையே கதியாகக் கொண்டு, தங்கள் வேலையை அந்த ஆபீசுக் குள்ளாகவே முடித்துவிடுவது தான், அநேகமாக ஸெட்டில் மெண்டு ஆபீசர்களுடைய வழக்கம். இவர்களுக்கும் 'நாற் காலி வம்பர்களுக்கும்' அதிக வித்தியாசம் இல்லையெனவே சொல்லிவிடலாம்.

1926-ம் ஞு பர்டோலி ஸெட்டில்மெண்டுக்காக நியமிக்கப்பட்ட உத்தியோகஸ்தர் ஸ்ரீ எம். எஸ். ஜயகார் அவர்கள். இவர் டெபுடி கலெக்டராக இருந்தவர். புதிதாக நியமிக்கப்பட்ட அலுவலுக்கு, அவருக்கு அதிக அனுபவம் கிடையாது. இவர் தயார் செய்த யாதாஸ்தை ஸெட்டில்மெண்டுக் கமிஷனர் ஏற்றுக்கொள்ள வில்லையாயினும், ஸ்ரீ ஜயகார் அவர்கள் செய்த சிபார்சுகளைக் கவனிப்போம்.

(1) பர்டோலித் தாலூகாவில் இருபத்து மூன்று கிராமங்களைத் தரத்தில் உயர்த்திவிட்டார். [பாசன, வடிகால் வசதிகள் நன்ருய் இருக்கும் கிராமங்கள், மண் செழிப்பாயிருக்கும் கிராமங்கள் இவைகள் முதல் தரமாய்ப் பாவிக்கப்படும். சில கிராமங்களில் மண் திருந்தி, விளைவு விருத்தியடைந்தாலும் சரி, அல்லது பாசன வடிகால்களுக்கு மட்டமான வசதிகளை அரசாங்கத்தார் ஏற்படுத்திக் கொடுத்தாலும் சரி, ஸெட்டில்மெண்டில் அந்தக் கிராமங்களின் தரத்தை உயர்த்துவது வழக்கம். மேற்சொன்ன திருத்தங்க ளில்லாமலே, ஜயகார் அவர்கள் 23 கிராமங்களின் பதவியை உயர்த்தி, அதிக வசூலுக்கு ஏற்பாடு செய்துவிட்டார்.]

(2) பொதுவாக, முன்னிருந்த வரியை நாலில் ஒரு பங்கு உயர்த்தவேண்டும்.

இந்த இரண்டு சிபார்சுகளின் மூலமாய், பர்டோலித் தாலூகாவின் கிஸ்தி ரூ. 514, 762 ஆக இருந்தது ரூ. 672273 ஆக உயர்ந்து விட்டது. அதாவது ஒரு சிறிய தாலூகாவுக்கு $1\frac{1}{2}$ லட்சத்துக்கு மேல், வரி உயர்த்தப்பட்டது. தாம் செய்த சிபார்சுகளுக்கு ஸ்ரீ ஜயகார், பின் கண்டவைகளைக் காரணங்களாகக் கூறினர்.

1. தப்திப் பள்ளத்தாக்கு ரயில்வேப் போட்டு விட்டபடியால், தாலூகாவின் போக்கு வரவுச் சாதனங்கள் அபிவிருத்தியடைந்துவிட்டன.

2. போன ஸெட்டில்மெண்டுக் காலத்தில் இருந்ததைக் காட்டிலும் ஜனத்தொகை 3800 அதிகரித்திருக்கிறது.

3. கால்நடைகள், முக்கியமாக, பசுமாடுகள் விருத்தி யடைந்திருக்கின்றன. வண்டிகள் ஜாஸ்தியாகி விட்டன.

4. புதிது புதிதாகக் கிராமங்களில் வீடுகள் கட்டுவதைப் பார்த்தால், செல்வச் செழிப்புத் தோற்றம் காணப்படுகிறது.

5. காலிபராஜ் வகுப்பார் குடியை ஒழித்துவிட்டு, படிப்பிலே ஊக்கம்காட்டி, தங்கள் வாழ்க்கையை உயர்த்திக் கொண்டு வருகிறார்கள்.

6. தானியங்களின் விலை, பருத்தியின்விலை அபாரமாய் ஏறிவிட்டது.

7. விவசாயக் கூலி இரட்டிப்பு மடங்காகிவிட்டது.

8. நிலவிலை உயர்ந்துவிட்டது.

வேடிக்கை என்னவெனில், போன ஸெட்டில்மெண்டுக்கும் இந்த ஸெட்டில்மெண்டுக் காலத்துக்கும் விளைவிலே தாலுக்கா அபிவிருத்தி யடைந்ததாக ஸ்ரீஜயகாரும் குறிப்பிட வில்லை; வேறு எந்த உத்தியோகஸ்தரும் குறிப்பிடவில்லை. விளைவு வருஷத்துக்கு வருஷம் குறைந்துகொண்டு வருகிறது என்று விவசாயிகள் சொல்லுகிறார்கள். பூமியின் சாரம் குறைந்து வருகிறது என்று பயிர் செய்யும் குடியானவர்கள் உறுதியாய்க் கூறுகிறார்கள். இருந்தாலும் மேற்சொன்ன காரணங்களைக்கொண்டு, வரியை உயர்த்தலாம் என்று ஸ்ரீ ஜய கார் சிபார்சு செய்தார்.

ஸ்ரீ ஜயகார் அவர்கள் காண்பித்த காரணங்கள் குஜராத்துக்குமட்டும் சிறப்பானவை என்று எவரும் எண்ணவேண்டாம். இந்தியாவில், எந்த ஜில்லாவில் புதிய ஸெட்டில் மெண்டில் தீர்வை, வரிஉயர்வு ஏற்பட்டாலும், மேற்சொன்ன காரணங்களை அநேகமாய்த் தவறாமல் காணலாம். எனவே, அவைகளை ஆராயவேண்டியது அவசியம். காரணங்களை ஒவ்வொன்றாக எடுத்துக் கொள்ளுவோம்.

(1) ரயில்வே வசதியினால் வியாபாரம் பெருகும் என்பதில் சந்தேகமில்லை. 1932, 1933, 1934, 1935 வருஷங்

களில் அந்நிய நாட்டு அரிசிகளும் நெல்லும் இந்தியாவின் மூலை முடுக்குகளில் நுழைந்து வியாபாரம் ஆவதற்கும், பொதுவாக எல்லா அந்நிய நாட்டுச் சாமான்களும் செழிப்பாக வியாபாரம் நடைபெறுவதற்கும், ரயில்வே உபயோகப் பட்டு வருகின்றது. கிராமத்து விவசாயிகளுக்கு, ரயிலினுல் அதிக லாபமோ, க்ஷேமமோ வந்து விட்டதாகச் செல்லுவ தற்கில்லை. பட்டினத்துத் தரகர், வியாபாரிகள்—இவர்களுக்கு லாபம் ஏற்படலாம். மேலும், மோகத்தாலும் மதியீனத்தா லும் நாகரீக வெறியினுலும் அந்நிய நாட்டுச் சாமான்களை ஏழை விவசாயிகள் ஏமாந்து வாங்கி முடிவில் ஓட்டாண்டி களாகப் போவதற்கு ரயில்வே வசதி சாதகமா யிருந்து வரு வதை, அனுபவத்தில் பார்க்கலாம். விவசாயிகளுக்கு—வரிப் பளு நிர்ப்பந்தத்தினுல், தங்கள் தானியங்களை நல்லவிலைக்கு விற்கும் சாமர்த்தியமும் சந்தர்ப்பமும் இல்லாமல் போய் விடுகின்றன. எனவே, இவர்களுக்கு ரயில் வசதி முதல் வேறு எந்த வசதி இருந்தால் என்ன? அவசர அவசரமாய்த் தானியங்களை அறுவடை செய்து, சீக்கிரமாக விற்ருல் தான், அவர்கள் ஸர்க்காருக்குக் கிஸ்தி கட்ட முடியும். கையில் ரொக்கத்தைக் கனவிலும் காணுத விவசாயிகளின் முடை, தரகர்களுக்கும் தானிய வியாபாரிகளுக்கும் தெரியாதா? ரயில் வசதி, தரகர்களுக்கும், உள்ளூர் வெளியூர் வியாபாரி களுக்கும், அந்நியநாட்டு வியாபாரிகளுக்கும் லாபமா யிருக்க லாம். விவசாயிகளுக்கு அவ்வளவாக லாபமில்லை.

(2) ஜனத்தொகை உயர்ந்ததனுல் வரியை உயர்த்தலாம் என்று சொல்லுவது குழந்தைப் பிள்ளை கட்சி. இரண்டுக் கும் வெகு சூட்சும மாகத்தான் சம்பந்தம் இருக்க முடியும். வெளிப்படையாக ஒன்றும் தெரிய வில்லை. ஜனத்தொகை விருத்தி சுபிட்ச வாழ்வுக்கு அறிகுறி போலும்!

(3) பசுமாடுகள், எருமை மாடுகள் (கறவை மாடுகள்), வண்டிகள் மலிந்து போதல், கிராமத்தின் செழிப்பையும் காண்பிக்கலாம்; அல்லது விவசாயத் தொழிலில் லாபமில்லை என்றும், விவசாயத்தை மட்டும் நம்பி ஜீவனம் செய்ய முடி

யாது என்பதையும் அது குறிப்பிடலாம். காபி டீ ஹோட்டல் களுக்குப் பால் ஸப்ளை செய்வதால், பல குடித்தனங்கள் கிராமங்களில்நடைபெறுகின்றன. விவசாயத்தொழில்எல்லோருக்கும் போதாமையால் தான், வேறு சில்லரைத் தொழில்களைப் பலர் கைக்கொள்ள வேண்டியிருக்கிறது. ரயிலடியில் பாரம் ஏற்றும் கட்டை வண்டிக்காரர்களுக்குத்தான் நல்ல பிழைப்பு இருக்கிறது. கிராமத்து வண்டிக்காரர்களில் பெரும்பான்மையோர் தங்கள் வண்டிகளுக்கு வேலை அகப்படாமல், தாங்களும் பட்டினிகிடந்து, தங்கள் மாடுகளுக்கும் தீனியின்றி, அவைகளைப் பட்டினிபோட்டுக் கொல்லுகிறார்கள். இந்தச் சங்கதி நேரில் கண்டவர்களுக்குத் தான் தெரியும்.

(4) புதிதாக நல்ல வீடுகள் தோன்றுவதைச் சிறப்பாகக் கூறி, அது செழிப்புக்குக் காரணம் என்று சொல்லப் படுகிறது. ஒரு வீடு புதிதாகக் கிராமத்தில் தோன்றுவது அதிகாரிகளின் கண்களில் படுகின்றது. எத்தனை வீடுகள் இடிந்து பாழாய்க் கிடக்கின்றன என்பது கண்ணில் படுவதில்லை. புதிய வீடுகள் கட்டுபவர்கள் யார்? பெரும்பாலும் விவசாயிகள் அல்ல. அவர்கள் கலால் ஏலம் எடுத்தவர்கள், கண்டிராக்ட் எடுத்தவர்கள், காபி, டீகிளப்காரர்கள், ஸர்க்கார் உத்தியோகத்திலிருந்து விலகிப் பென்ஷன் வாங்குபவர்கள், அல்லது கடன் வாங்கிப் புது வீடு கட்டும் 'மைனர்கள்.' இவர்களைத் தவிர, ஸிலோன், மோரிசு, சிங்கப்பூர் முதலிய இடங்களுக்குச் சில்லரைத் தொழில் நிமித்தம் அல்லது வியாபார நிமித்தம் சென்றவர்களில் ஒரு சிலர், சம்பாத்தியத்தில் மிச்சப்படுத்தி, பிறந்த ஊர் அல்லது கிராம வாழ்வு என்ற வாஞ்சையால் புது வீடு கட்டுகிறார்கள். மிராசுதார்கள் தங்கள் நிலங்களிலிருந்து லாபம் கண்டுபிடித்துச் சௌகரியமாக வீடு கட்டிக்கொண்டு வாழ்கிறார்கள் என்றால், சொல்லுகிற நாக்கு அப்படியே அழுகிக் கீழே விழுந்துவிடும். லேவாதேவி செய்பவர்களுக்கு அநேகமாய்ப் புதுக்கட்டிடப்பைத்தியம் பிடிப்பதில்லை. கல்லிலும் சுண்ணாம்பிலும் போட்டுக் கரியாக்காமல் வட்டிக்கு விடலாமே என்பதுதான் அவர்களுக்கு எண்ணம்.

(5) கீழ்ப்பட்ட ஜாதியார்கள் குடி முதலிய கெட்ட பழக்கங்களை விட்டுவிட்டு, படிப்பில் சிரத்தை கொண்டு, நல்ல வாழ்வில் பிரியம் கொண்டால், அதற்காக வரியை உயர்த்த வேண்டு மென்ப துண்டா? செட்டு வாழ்க்கைக்கு, உயர்ந்த வரி விதித்து அபராதம் போட வேண்டுமா? கூலி வேலை செய்பவர்கள். குடித்துக் கெட்டுப் போகக்கூடாது என் பதைப்பற்றி அரசாங்கத்தார் கவலை கொண்டிருப்பின், எல் லாக் கள், சாராயக் கடைகளையும் எடுத்துவிடலாம். அப் பொழுது அதிக வரி போட்டாலும் பாதகப்படாது கள்ளுக் கடைமறியல் செய்த (காங்கிரஸ்) சீர்திருத்தக்காரர்களின் நன்முயற்சியால், குடி ஒழியவாவது என்று கோபம் கொண்டு, அரசாங்கத்தார் வரியை உயர்த்துவது போலல்லவா இது காணப்படுகின்றது.

(6) விலை வாசி தூக்கி விற்பதால், வரியை உயர்த்த லாம் என்கிறார். உண்மைதான். ஸெட்டில்மெண்டுக்கு ஸெட்டில்மெண்டு முப்பது வருஷம். இதில், நான்கு வரு ஷம் விலை தூக்கிவிற்றால், பத்து வருஷம் விலை ஒரே மோச மாய்ப் படுத்துவிடுகிறது. (1929லிருந்து 1935-ம் வரு ஷம் வரையில் விலை படுமோசமாய்ப் போனதைப் பார்க்க லாம்.) சென்ற முப்பது வருஷச் சராசரி விலையை வைத்துக் கொண்டு, வருகிற முப்பது வருஷத்துக்கு ஒரு சராசரியை நிலைநாட்டப் பார்ப்பது ரொம்பவும் தவறான காரியம். பண்டைக் காலத்து ஆறிலொரு கடமையைப்போல, கிஸ் திக்காகத் தானியத்தை அரசாங்கத்தார் வாங்கிக்கொள்ளும் ஏற்பாடுதான் உத்தமமானதாகும்.

(7) விவசாயிகளுக்குக் கூலி இரட்டித்து விட்டதனால், செழிப்பாம்! பண்ணையில் வேலை செய்பவர்களும் மற்றும் கூலிவேலை செய்பவர்களும் நயங்காண்பித்தும் பயமுறுத்தி யும் மிராசுதார்களிடமிருந்து அதிகமாகக் கூலி வாங்க முடி யும். இதிலிருந்து, மிராசுதார்கள் தாங்கள் செழிப்படைந்தா லொழிய, பண்ணையாட்களுக்கும் மற்றவர்களுக்கும் அதிக மான கூலி கொடுக்கமாட்டார்கள் என்று முடிவு கட்டுவது

தவறு. (முணு முணுக்கும் உத்தியோக இலாக்காக்களுக்கும் சிறப்பாகப் போலீஸ் இலாகாவுக்கும் அரசாங்கத்தார் பண நெருக்கடி ஏற்பட்ட காலத்திலும்கூடச் சம்பள உயர்வுச் சலுகை காண்பித்தார்கள். இது, அரசாங்கத்தின் வரவு செலவு செழிப்பை காண்பிப்பதாகச் சொல்ல முடியுமா?)

(8) நில விலை கூடி விற்கிறது; அதனால் வரியை உயர்த்தலாம் என்கிறார்கள். நிலத்திலிருந்து வருமானம் அதிகரிக்காம லிருக்கையில், நிலம் விலை கூடி விற்பது எதனாலே? பண வரவு செலவு செய்யும் பாங்குகள் பல முறிந்து போகின்றன. லேவாதேவிக் கடையில் பணம் போட்டால் அந்தக் கடை 'திவாலாக'ப்போனால், ஒருவன் போட்ட பணம் போய் விடுகிறது. நிலத்திலிருந்து போட்ட முதலுக்கு அதிகமான வட்டி கிடைக்காவிட்டாலும் போட்ட பணம் போகாது என்ற நம்பிக்கை இருப்பதனால், பலர் தாங்கள் சேமித்து வைத்திருக்கும் பணத்தை நிலத்தில் போடத் துணிந்தார்கள். இதனாலே நிலத்தின் விலையில் கிராக்கி ஏற்பட்டது; நிலத்திலிருந்து வரக்கூடிய வருமானத்தால் அல்ல. இதை, மிராசுதார்களின் செழிப்புக்கு அடையாளமாகச் சொல்ல முடியுமா? பழைய மிராசுதார்கள் எவரும் புதிதாக நிலம் வாங்கிவிடவில்லை. கள், சாராய, காபிகடை முதலாளிகள் 'கந்திராட்டுப்' பேர்வழிகள், ஸர்க்கார் உத்தியோகஸ்தர்கள், வக்கீல்கள், டாக்டர்கள், வியாபாரிகள் அயல் நாடுகளுக்குப் போய்ப் பொருள் சம்பாதித்துத் திரும்பியவர்கள்-இவர்களும் இவர்களைப்போல விவசாயமில்லாத வேறு தொழில்களில் அமர்ந்த பிறரும் தான் புதிதாக நிலம் வாங்குகிறார்கள். நிலம் வாங்கிய நாலைந்து வருஷங்களுக்குப் பின்னர், இவர்கள் மிராசுதார் என்ற கௌரவம் பெற்றவுடனே படுத்துப் போய் விடுகிறார்கள்; விவசாயத்திலிருந்து 'செட்டு உண்டாவதே இல்லை.

இந்த மாதிரியும் ஏனைய காரணங்களையும் காண்பித்து, பாரிக் என்பவர் புதிய ஸெட்டில்மெண்டைக் கண்டித்து, "நவஜீவன்" என்ற குஜராத்திப் பத்திரிகையில் தொடர்ந்து பல கட்டுரைகள் எழுதினர். நரஹரிபரிக் என்பவர் யார்?

1926-ம் வருஷத்திய புதிய ஸெட்டில்மெண்டைத் தீவிரமாக அலசிப் பார்த்துச் சோதனை செய்து, உண்மையாகத் தீர்ப்பு செய்வதற்காக, பர்டோலித் தாலூகாக் காங்கிரஸ் கமிட்டியார் ஒரு சிறிய கமிட்டியை நியமித்தார்கள். அந்தக் கமிட்டிக்குத் தலைவர் பாரிக். புதிய ஸெட்டில்மெண்டின் அபத்தத்தை ஸ்ரீ நரஹரி பாரிக் அவர்கள் தெளிவாக எடுத்துக் காண்பித்தும், யாதொரு பயனும் ஏற்படவில்லை. சர்க்கார் தாங்கள் பிடித்த கட்சியையே ஜபித்துக் கொண்டிருந்தார்கள். இதற்குள் ஒரு வேடிக்கை. ஸெட்டில்மெண்டு ஆபீசருக்கும் அவருடைய மேலதிகாரியான கமிஷனருக்கும் அபிப்பிராய பேதம். நூற்றுக்கு முப்பது வரியை உயர்த்தலாம் என்றார் ஆபீஸர். 29 உயர்த்தலாம் என்றார் கமிஷனர். இரண்டும் வேண்டாமென்று 22 உயர்த்தினார்கள் அரசாங்கத்தார். 23ஐத் தள்ளிவிட்டு, 32 கிராமங்களின் தரத்தை உயர்த்திவிட்டார்கள் அரசாங்கத்தார்.

இப்பொழுது என்ன செய்வது? பர்டோலி மிராசுதார்கள் 1927-ஜனவரியில் ஒரு மகாநாடு கூடினார்கள். பர்டோலித் தாலூகாவின் சட்டசபைப் பிரதிநிதிகளான ஸ்ரீ பீம்பாய் நாயக், ஸ்ரீ சிவதாஸனி இவர்களைத் தலைமையாகக் கொண்டு, தாலூகாப் பிரமுகர்களிற் சிலர், ரிவினியூ மெம்பர் அவர்களைப் பேட்டி காணுவது என்று தீர்மானித்தார்கள். 1927 மார்ச்சு மாதத்தில் பேட்டி கண்டார்கள். ரிவினியூ மெம்பர், அவர்களைச் சரியான முறையில் வரவேற்க வில்லை. சால்ஜாப்புச் சொல்லி அனுப்பிவிட்டார். ஸ்ரீ ராவ் பகதூர் பீம்பாய் நாயக், ரிவினியூ மெம்பருக்கு நீண்டதொரு மனு, விரிவாகவும், தெளிவாகவும், ஸெட்டில்மெண்டு ஆபீஸரின் யாதாஸ்தைக் கண்டித்தும் செய்து கொண்டார். அதற்கும் பயன் ஒன்றும் ஏற்படவில்லை.

ஸெட்டில்மெண்டு ஆபீஸர் ஸ்ரீ ஜயகாரைக் கண்டித்து, ஸெட்டில்மெண்டுக் கமிஷனர் ஆண்டர்ஸன் அவர்கள் எழுதியிருக்கிறார். அதிலே பொதுவாக சில குறிப்புகள் காணப்படுகின்றன. (1) "முப்பது வருஷ ஸெட்டில்மெண்டு என்

படதே ஒரு அபத்தமான காரியம் (2) ஸெட்டில்மெண்டு சங்கதி இன்னதென்று தெரியாத காலத்தில், அதைப்பற்றித் தெளிவான அறிவும் அனுபவமும் இல்லாத காலத்தில், ஸெட்டில்மெண்டு சம்பந்தமாக யாதொரு 'சட்டமும் சாஸ்திரமும்' இல்லாத காலத்தில், முப்பது வருஷத்துக்கு ஒருதரம் என்று ஏற்பாடு செய்ததே யொழிய, ரொம்ப யோசித்துச் செய்த ஏற்பாடு அல்ல. (3) செலவைக் கழிக்காமல் மொத்த வருமானத்தைக் கொண்டு, வரி நிர்மாணம் செய்வது தவறு. (4) அகவிலை ஏற்வும் இறங்கவும் செய்யுமாதலால், அகவிலையைக் கொண்டும், வரியை நிதானம் செய்யலாகாது.

இவ்வளவு 'ராமாயணம்' பொதுவாகப் படித்துவிட்டு, ஆண்டர்ஸன் அவர்களும் வரி உயர்வுக்குச் சிபார்சு செய்துவிட்டார். இவருக்கும் ஜயகாருக்கும் பஞ்சாயத்துச் செய்வதைப் போல, அரசாங்கத்தார் நூற்றுக்கு இருபத்திரண்டாக வரியை உயர்த்தினர்கள்.

...

இன்னொரு 'கொசமுசாவும்' நடந்தது. புதிய வரியை ஸெட்டில்மெண்டு ஏற்பாடு செய்த வருஷத்திலேயே சட்டத்துக்கு விரோதமாக அமுலுக்குக் கொண்டு வந்துவிட்டார்கள். 1927—28-ல் ஸெட்டில்மெண்டு பூர்த்தியானல், புதிய சட்டத்தை 1928—29 பிப்ரவரி மாதத்தில்தான் அமுலுக்குக் கொண்டுவருவது வழக்கம். அந்த வழக்கமும் மாறிப்போய்விட்டது.

கிராமத்து விவசாயிகளின் கடன் சுமையைக் கவனிக்காமல், அரசாங்கத்தார் கைகொண்டவரையில் வரியை ஏற்றிவிட்டார்கள். அரசியல் நிர்வாகிகளில் ஒருவர், "1896-ம் வருஷ ஸெட்டில்மெண்டிலேயே, வரி யானையேற்றம் குதிரையேற்றமாய்ப் போய்விட்டது" என்று அபிப்பிராயப் பட்டார். ஸாலிஸ்பெரி பிரபு, பார்லிமெண்டு சபையில் சொன்னதுபோல, "இந்தியர்களின் செல்வத்தையும் ஜீவ சக்தியையும் எப்படியேனும் வடிக்கட்டியாகிவிட வேண்டுமே."

நிலைமை என்ன? வரி உயர்வுக்குக் கோர்ட்டிலே சட்ட மூலமாய்ப் பரிகாரம் கிடையாது. மனுச்செய்து கொண்டார்

கள் மிராசுதார்கள். சரியான ஜவாப்பு இல்லை. பிரமுகர்களும் சட்டசபை அங்கத்தினர்களும் ரிவினியூ மெம்பரைப் பேட்டி கண்டார்கள். அவர்கள் உதாசீனமாய் நடத்தப்பட்டதைத் தவிர, வேறு பயனில்லை. சமூக ஊழியர்கள் பத்திரிகைகளில் எழுதிப் பார்த்தார்கள்; மகாநாடு கூட்டினூர்கள்; உயர்த்தப்பட்ட வரியைக் கொடுப்பதில்லை என்று தீர்மானம் செய்தார்கள். அசையாப் பிள்ளையார்! அப்பொழுதும் அரசாங்கத்தார் அசைந்து கொடுப்பதாயில்லை. "அசலே உறுதி" என்று கீழதிகாரிகள், மேலதிகாரிகள் எல்லோரும் சேர்ந்து, ஒக்கப் பாடிவிட்டார்கள். மிராசுதார்கள் பார்த்தார்கள். வேறு வழியில்லை. அவர்கள் வல்லபாய் படேலிடம் சென்று முறையிட்டுக் கொண்டார்கள். ஸர்தார் என்ன சொன்னூர்?

## அத்தியாயம் 6.

1919 ஸ்ரீ காந்தியின் 'ரௌலட்' சத்தியாக்கிரக இயக்கத்தின் மூலமாகத் திட நெஞ்சு படைத்த புதிய தொண்டர்களும் தலைவர்களும் ஆயிரக் கணக்கில் தோன்றினூர்கள். நெஞ்சுக் கனம் கொண்ட புதிய தலைவர்களில், ஸ்ரீ வல்லபாய் படேல் அவர்கள் ரொம்பவும் அழுத்தமானவர். சாதாரணமாகப் படத்திலே பார்த்தால்கூட, அந்த அழுத்தம் அவருடைய முகத்திலே தெரியும். பூட்டுப் போட்டுப் பூட்டி வைத்ததுபோல வாயைத் திறப்பதில்லை. திறந்தாலோ, பேச்சிலே உணர்ச்சி; பேச்சிலே ஹாஸ்யம்; பேச்சிலே மதுரம்; பேச்சிலே மேதை; பேச்சிலே கிராமக் குடியானவர்களுடைய பசை நிறைந்த அனுபவம்; பேச்சிலே "வெட்டு ஒன்று துண்டு நிச்சயமாய் இரண்டு" உண்டு. அதற்கு அதிகப்பட்டால் பாதகமில்லையே! வீண் தர்க்கம் செய்வதற்கு அவர் ஆளில்லை.

"கோர்ட்டுக்குப் போய் 'ஜோராய்'ப் பேசித் திரும்பி, கிளப்புக்கு வந்து காசு வைத்துச் 'சௌலாக'ச் சீட்டாடிவிட்டு, நண்பர்களுடன் 'மஜாவாக'க் காலம் கழித்து வந்த

என்னை, காந்தி இந்தப் பாடு படுத்திவிட்டார்" என்று வல்லபாய் விழுந்து விழுந்து சிரிப்பாராம். வல்லபாய் கூர்மையான பாரிஸ்டர். கூர்மை யிருந்தாலென்ன, பாரிஸ்டரா யிருந்தாலென்ன, எல்லாவற்றையும் 1919-ம் வருஷத்தோடு வல்லபாய் மூட்டை கட்டி வைத்துவிட்டார். நாட்டுத் தொண்டு ஒன்றே அவருடைய நோக்கமாக ஆகிவிட்டது. காங்கிரஸ் இயக்கத்தைக், குஜராத்தில் பரப்பி, அதை வலுப் படுத்தினர். போர்ஸாத் கிளர்ச்சியையும் நாகபுரிக் கொடிப் போரையும் வெற்றி வருமாறு நடத்தினர். பின்னர் ஆமதாபாத் நகர பரிபாலன சபைக்குத் தலைவராகி, பார்த்தவர் திகைக்கும் படிக்கு நிர்வாகம் நடத்தி, நகரத்தைப் பலவழிகளில் சீர்திருத்தம் செய்து, நகரவாசிகளுக்குப் பலப் பல சௌகரியங்கள் செய்தார். இதைக் கண்டு பம்பாய் அரசாங்கத்தாரும் ஆச்சரியமடைந்தனர். "வெறும் கூச்சல் போடும் காங்கிரஸ்காரர் அல்ல வல்லபாய்; அவர் காரியத்திலே குறியாக இருப்பார்" என்று அரசாங்கத்தாருக்கு நன்ருய்த் தெரியும். மேலும், குஜராத் வெள்ளக்காலத்தில் வல்லபாயும் அவரது தொண்டர் படையாளரும் செய்த மெச்சத்தக்க ஊழியத்தை, அரசாங்கத்தார் கவனிக்காமலு மில்லை. இவர்களுடைய ஊழியத்தை அரசியலார் மிகவும் பாராட்டிக் கொண்டாடினர்கள்.

இப்பேர்ப்பட்ட வல்லபாயிடம்—இனி இவரை ஸர்தார் என்று அழைப்போம்—பர்டோலி விவசாயிகள் முறையிட்டுக்கொண்டார்கள். தாலுகா வாசிகளுக்குப் பிரதிநிதிகளாகப் போய் ஸர்தாரைப் பார்த்தார்கள் கலியாண், குன்வார் என்ற இரு சகோதரர்கள்.

சகோதரர்கள்:—ஸர்தார் சாகேப்! நமஸ்காரம்.

வல்லபாய்:—நமஸ்காரம்! வாருங்கள். எல்லோரும் சௌக்கியமா?

கலியாண்:—நாங்கள் க்ஷேமமா யிருக்கிறோம் என்று எப்படிச் சொல்லுவது? எங்களால் புதிய ஸெட்டில்மெண்டு

வரியைத் தாங்க முடியவில்லை. இப்படியே எங்கள் வாழ்வு போய்க்கொண்டிருந்தால், நாங்கள் எல்லோரும் மண்ணோடு மண்ணாகக் கலந்துபோக வேண்டியதுதான்.

குண்வார்:—ஆம்! சகோதரர் சொல்லுவது கல்பனை அல்லது வர்ணனை என்று தாங்கள் எண்ணப்படாது..

குஷால்பாய்(பர்டோலித் தாலூகாக் காங்கிரஸ் கமிட்டிக் காரியதரிசி):—அவர்கள் சொல்லுவதில் அட்சரம்கூடப் பொய்யாவது, தவறுவது கிடையாது. பர்டோலித் தாலூகா விவசாயிகள் எல்லோரும் வரிச் சுமையால் விழிபிதுங்கித் தத்தளிக்கிறார்கள்.

ஸர்தார்:—நான் என்ன செய்யணும்? அதைச் சொல்லுங்கள்.

சகோதரர்கள்:—தாங்கள் பர்டோலிக்கு வந்து சத்தியாக்கிரகப் போராட்டத்தை நடத்தவேண்டும். நாங்கள் தங்கள் தலைமைக்காகக் காத்துக்கொண்டிருக்கிறோம்.

ஸர்தார்:—ஸ்ரீ பீம்பாய் நாயக், தாதுபாய் தேசாய் முதலிய பிரமுகர்கள் இருக்கிறார்கள். அவர்கள் சட்டசபை மெம்பர்கள். அவர்கள்தான் இந்த விஷயத்துக்கு ஏற்றவர்கள். சத்தியாக்கிரகம் என்றால் கிள்ளுக்கீரை மாதிரி நீங்கள் நினைத்துக்கொண் டிருக்கிறீர்களா?

கலியாண்:—தாங்கள் குறிப்பிட்ட பிரமுகர்களும் ஏனையோர்களும் எவ்வளவு சிரமப்பட வேண்டுமோ, அவ்வளவு முயற்சியும் செய்து பார்த்தாகிவிட்டது. இனிமேல் தங்களால் முடியாது என்றும் வேறு உபாயங்களை நாடவேண்டும் என்றும் அவர்கள் சொல்லிவிட்டார்கள். நாங்கள் அவர்களை அலட்சியம் செய்யவில்லை, அவர்களால் முடிந்ததைச் செய்து பார்த்துவிட்டார்கள். அவர்களே, எங்களை தங்களிடம் போகவேணும் என்று அனுப்பி யிருக்கிறார்கள்.

ஸர்தார்:—சத்தியாக்கிரகமா! ரொம்பக் கஷ்டமான காரியமாயிற்றே! நாயக் அவர்களும் மற்றும் சட்டசபை

அங்கத்தினர்களும் பிரமுகர்களும் நீங்கள் சொன்னதுபோல் சொல்லிவிட்டார்களா?

குண்வார்:—ஆமாம்!

ஸர்தார்:—சரி! அப்படியானல், பர்டோலிக்குத் திரும்பிப்போய், தாலூகாவில் மற்றுமுள்ள நாட்டாண்மைக்காரர் களைக் கலந்துகொள்ளுங்கள். சத்தியாக்கிரகம் என்ன என்பதை யோசித்துப் பாருங்கள். நன்ருக யோசித்துப் பாருங்கள். பிறகு என்னிடம் வாருங்கள். பார்த்துக்கொள்ளுவோம்.

மூன்று பேரும் விடைபெற்றுக்கொண்டு, பர்டோலிக்குத் திரும்பிப்போனுர்கள். பல கிராமங்கள் சுற்றினுர்கள். நூற்றுக்கணக்கான செல்வாக்குள்ள மிராசுதார்களைக் கண்டு கலந்தார்கள். கலியாண் சகோதரர்கள் கருதியதுபோலவே, பெரும்பான்மையோர்கள் சத்தியாக்கிரக யோசனையை ஆதரித்தார்கள். சகோதரர்களுக்கு ரொம்ப சந்தோஷம். ஆமதாபாத்துக்கு ஸர்தாரைப் பேட்டிகாண அவர்கள் திரும்பவும் வந்தார்கள். பழைய மூன்றுபேர்கள் மட்டுமல்ல. இப்பொழுது தர்பார் சாகேப் கோபால்தாஸ், மோஹன்லால் பாண்டியா, ரவிசங்கர் வியாஸ் இந்த மூன்று பழுத்த தேசாபிமானிகளும்கூடச் சென்ருர்கள். இவர்கள் மூன்றுபேர்களும் மூன்று ரத்னங்கள். தியாகமும் திடமும் சத்தியமும் ஒன்று சேர்ந்து ரூபமாக அமைந்தால் எப்படியிருக்கும்? இந்த மூன்றுபேர்களைப் போல இருக்கும் என்று சொன்னல், பொருத்தமாகத்தான் இருக்கும்.

ஸர்தார், எல்லோருக்கும் நமஸ்காரத்தைத் தெரிவித்துக் கொண்டு வரவேற்ருர்.

சகோதரர்கள்:—இந்தத் தடவை, தாங்கள் எங்களைத் தட்டிக் கழித்துவிட முடியாது. சிரித்துக்கொண்டு எங்கே ஒருவேளை ஏமாந்துபோய்விடுவோமோ என்று தர்பார் சாகேப், மற்றும் தலைவர்களையும் கூடவே கூட்டிக்கொண்டு வந்திருக்கிருேம்.

ஸர்தார்:—நீங்கள் திரும்பிப் போனீர்களே, அதைப் பற்றி விவரமாகச் சொல்லுங்கள்.

கலியாண்:—எல்லோரும் சத்தியாக்கிரகம் செய்யத் தயாரா யிருக்கிறார்கள். இந்த ஸெட்டில்மெண்டில் உயர்த்தப் பட்டதே அந்த வரி உயர்வை மட்டும் கொடுக்காமல் நிறுத்திக் கொள்ளுகிறது என்று சிலர் யோசனை சொல்லுகிறார்கள். அவ்வளவுதான்.

ரவிசங்கர் :—தாங்கள் பர்டோலிக்குப் . போய்ப் போராட்டத்தை நடத்துவதாக இருந்தால், நாங்களும் அங்கு வரத் தயாரா யிருக்கிறோம்.

ஸர்தார்:—சரி! அப்படியானால், பாபுஜியை (காந்திஜியை)ப் போய்ப் பாருங்கள். நான் கொஞ்சம் பின்னால் வருகிறேன்.

ஸர்தார் நீங்கலாக, மற்றவர்கள் காந்திஜியைத் தரிசனம் கண்டு பேசச் சென்றார்கள். காந்திஜி, குஜராத் வித்யாபீடத்துக்கு, தமது வழக்கமான வாரப் பிரசங்கம் செய்வதற்காகப் புறப்படுகிற சமயம். நல்லவேளை! நீண்டநேரம் பேசலாம்.

கலியாண்ஜி பேச்சை ஆரம்பித்தார்.

கலியாண்:—தாலூகா பூராவும் சத்தியாக்கிரகத்துக்குத் தயாரா யிருக்கிறது. ஸர்க்கார் புதிதாக வரியை உயர்த்தி யிருக்கிறார்களே, உயர்த்தின அந்த வித்தியாசத்தை மட்டும் கொடுக்காமல் நிறுத்தி வைத்துக்கொள்ளலாம் என்பது எங்கள் கருத்து.

காந்திஜி:—எனக்கு அது புரியவில்லை.

கலியாண்:—பழைய வரியை, நூற்றுக்கு 22 உயர்த்தி யிருக்கிறார்கள். பழைய வரியைக் கொடுத்துவிட்டு, இந்த 22 உயர்த்தி யிருக்கிறார்களே அதை நிறுத்திக்கொள்ளலாம் என்று ஜனங்கள் சொல்லுகிறார்கள்.

காந்திஜி:—அப்படிச் செய்வது ரொம்ப மோசம். நீங்கள் செலுத்துகிற பணத்தைக் கொண்டு ஸர்க்கார் உங்க

ளோடு சண்டைபோட்டு, பாக்கிப் பணத்தை (உயர்வை) வசூல் செய்து விடுவார்கள். புதிய வரி ஏற்றத்தை ரத்துச் செய்துவிட்டோம் என்று ஸர்க்கார் சொல்லிவிட்டால், நீங் கள் பழைய வரியை உடனே கொடுத்துவிடலாம். இந்த மாதிரி செய்வதற்கு, ஜனங்கள் தயாரா யிருக்கிறார்களா?

கலியாண்:—பர்டோலி, வாலோடி முதலிய பெரிய இடங்களைப்பற்றி நம்பிக்கையாக நான் சொல்ல முடியாது. இந்த இடங்களில் பனியாமார்கள் அதிகம். தங்கள் நிலங்களை ஸர்க்கார் பிடுங்கி, பழங்குடி மக்களான ராணி பராஜ் வகுப் பார்களுக்குக் கொடுத்துவிடுவார்களோ என்று பனியாமார் கள் இயற்கையாகப் பயப்படுகிறார்கள். ஆனால் மற்றக் கிரா மங்கள் யாவும் திடமாய் நிற்கும்.

காந்திஜி:—மிராசுதார்களின் கட்சி சரியா, அது நியா யமா? அல்லது அசைக்க முடியாததா?

கலியாண்:—நியாயம் என்று நரஹரிபாய் அவர்கள் "நவ ஜீவன்" பத்திரிகையில் தெளிவாக எடுத்துக் காண் பித்திருக்கிறாரே.

காந்திஜி:—எனக்குத் தெரியாது, அந்தக் கட்டுரைகளை நான் ஊன்றிப் படிக்கவில்லை. உங்கள் கட்சி சரியென்று தேசமுழுதும் நம்ப வேண்டும். உங்கள் கட்சி நியாயமா யிருந்தால்தான், தேசம் நம்பும். இன்னொன்று; ஜனங்கள் போராடத் தயாரா யிருக்கலாம். ஆனால் சத்தியாக்கிரகப் போராட்டத்தில் என்னென்ன நேரும் என்று அவர்களுக் குத் தெரியுமா? போராட்டத்தின் தன்மை தெரியுமா? மற்றவர்களோடு வல்லபாயும் கைது செய்யப்பட்டார் என்று வைத்துக் கொள்ளுவோம். அப்பொழுதும் ஜனங் கள் கலங்காமல் கட்டுப்பாடாக இருப்பார்களா?

கலியாண்:—அது என்னால் சொல்ல முடியாது.

காந்திஜி:—அதை நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டும். சரி! ஆனால், வல்லபாய் என்ன சொல்லுகிறார்?

வல்லபாய் அப்பொழுது தான், அந்தக் கூட்டத்திலே வந்து சேர்ந்தார். அவர்கள் சொல்லுகிற கட்சி நியாயம் தான் என்றார் ஸர்தார்.

காந்திஜி:—அப்படி யானால், பிறகு யோசனை செய்வதற்கு ஒன்றுமே யில்லை. (குஜராத்திக்கு ஜே!)

"யோசனை செய்வதற்கு ஒன்றுமே யில்லை"; உண்மை தான். செய்து தான் ஆகவேண்டும் என்று சில காரியங்கள் இருந்தாலும், அவைகளைச் செய்யத் துவக்கு. முன் எவ்வளவோ சஞ்சலம் உள்ளத்தில் உண்டாகின்றது. அதே மாதிரி சஞ்சலம் ஸர்தாருக்கு இப்பொழுது உண்டாயிற்று. பர்டோலியில் சத்தியாக்கிரகம் நடத்த வேண்டுமென்று எத்தனையோ தடவைகள், பர்டோலி வாசிகள் இதற்கு முன் ஸர்தாரை வேண்டிக் கொண்டிருக்கிறார்கள். அப்பொழுது, ஒவ்வொரு தடவையிலும், வந்து கேட்டவர்களைப் புரளி செய்து, ஸர்தார் அனுப்பிவிடுவது வழக்கம்.

கிஸ்திக்கு முதல் "இரிசால்" பிப்ரவரி[^] 5உ "நல்லது! பர்டோலி மிராசுதார்கள் மகாநாடு ஒன்றை 4உ கூட்டுங்கள். பிறகு சொல்லுகிறேன்" என்றார் ஸர்தார். மகாநாட்டில் தலைமை வகிக்க இசைந்தார். முடிவுக்கு வரு முன் விவசாயிகளைத் தாம் நேரில் ஒரு தரம் பார்த்து விட வேண்டும் என்பது ஸர்தாரின் நோக்கம்.

## அத்தியாயம் 7.

மகாநாடு கூடுவதற்கு முன், தொண்டர்கள் கூட்டமொன்று தயாராயிற்று. "ஆத்திரப்பட்டு எதையும் செய்து விடப்படாது" என்பது எல்லோருடைய கருத்தும். கிராம வாரியாக, 79 கிராமப் பிரதிநிதிகள் வந்து சேர்ந்தார்கள். எல்லா வகுப்பார்களும் இருந்தார்கள்; கன்பி, அனவ்லர், காலிபராஜ், பார்ஸி எல்லா வகுப்பார்களும். எல்லோரும் சொத்து உடையவர்கள். சத்தியாக்கிரகப் போராட்டத்தினால் தங்களுக்கு இன்னது வரையில் நேரும் என்று நன்றாய் அவர்களுக்குத் தெரியும். வருஷத்துக்கு 300 முதல் 700-ரூ.

வரையில் கிஸ்தி செலுத்தும் பிரமுகர்கள் பலர் அந்தக் கூட்டத்துக்கு வந்திருந்தார்கள். விஷயங்களை ஒளித்தோ, குறைத்தோ அவர்கள் பேசவில்லை. எல்லாவற்றையும் 'அறுத்து'ப் பேசினார்கள்.

"தீர்வை உயர்வை எதிர்க்க வேண்டியது அவசியந் தான். ஆனால் பழைய ரேட்டைக் கொடுத்துவிட்டு, புதிதாய் உயர்த்தப் பட்டதைக் கொடுக்காமல் நிறுத்திகொண்டால் ஸர்க்கார் என்ன வேண்டுமானாலும் செய்யட்டும். நாங்கள் தயார்" என்று ஐந்தாறு கிராமப் பிரதிநிதிகள் சொன்னார்கள். "நியாயமான ராஜிக்கு அரசாங்கத்தார் வரும் வரையில், 'புதிசு பழசு' ஒரு வரியையும் கொடுக்கக் கூடாது" என்பது மற்றவர்களின் பிடிவாதக் கட்சி.

இரண்டு கிராமத்துப் பிரதிநிதிகள் 'ஒளிவுமறைவு' இல்லாமல் எல்லாவற்றையும் பேசினார்கள்.

ஸர்தார்:—நீங்கள் உங்களுக்காகப் பேசுகிறீர்களா? உங்கள் கிராமத்தார்களுக்கும் சேர்த்துப் பேசுகிறீர்களா?

ஒருவர்:—எல்லாருக்குமாகத் தான். கொஞ்சம் (பிடிவாதக்குரலுடனே தான் இவர் பேசினார்).

ஸர்தார்:—மற்றவர்களெல்லோரும் சளைத்துத் தளர்ந்து 'பின்னடி'ப் போய்விட்டால், நீர் என்ன செய்வீர்?

அவர்:—நான் தனியே நின்று போராடுவேன்.

இன்னொருவர்:—தாலூகா கட்டுப்பாட்டுடன் இருக்கிற வரையிலும், என் கிராமத்தைப்பற்றிக் கவலைவேண்டியதில்லை. தாலூகா முழுதும் சளைத்துப்போய் விட்டதானால், என் கிராமம் மட்டும் தனியாக நின்று போராடும் என்று சொல்லுவதற் கில்லை.

மூன்றும் மனிதர்:—நாங்கள் எல்லோரும், (ஹிந்துக்கள் முஸ்லீம்கள் எல்லோரும்) திடமாகத்தான் இருக்கிறோம். ஆனால் முஸ்லீம்களில் நாலில் ஒரு பங்கு ஆடிப் போவார்கள் என்று தோன்றுகிறது.

நாலாமவர்:—சரியான பேர்வழிகள் நான்கு பேர்கள் மட்டும் உறுதியாக நின்றால்போதும். என்ன நேர்ந்தாலும் ஜயம் நமக்குத்தான்.

கேள்வி:—நான்கு என்றால் என்ன யார்?

பதில்:—தலையாய் நிற்கும் நான்கு பேர்கள்.

கேள்வி:—அந்த நான்கு பேர்களில் நீங்கள் ஒருவர் என்று நீங்கள் கருதுகிறீர்களா?

பதில்:—இல்லை; நான் ஐந்தாவது பேர்வழி. நாலு பேர் போன வழி போக, நான் தயார்.

ஸர்தார்.—என்ன கஷ்ட நஷ்டம் நேர்ந்தாலும் இந்த வரி உயர்வை எதிர்த்துத் தீருவோம் என்று திடமாக நிற்கக் கூடிய நான்கு பேர்கள் உண்டா?

உடனே, "நாங்கள் கடைசி வரையில் தளராமல் நிற்கிறோம்" என்று நான்கு பேர்கள் எழுந்து நின்றார்கள்.

இதற்கு இடையில், ஜாஸ்தி வரியை மட்டும் கொடுக்காமல் நிறுத்திக்கொள்ளுவது என்று யோசித்தார்களே, அந்த ஐந்து கிராமத்தார்களும், "தாலூகா முழுதுக்கும் ஆகிறது, எங்களுக்கு ஆகட்டும்; நாங்களும் தாலூகாவோடு சேர்ந்து நிற்கிறோம்,' என்று தங்கள் யோசனையை மாற்றிக்கொண்டதாகத் தெரிவித்தார்கள்.

இவர்களுடைய இந்தத் தீர்மானத்தைக் கேட்டதும் ஸர்தார் பின்வருமாறு பேசினார்:—

"ஸர்க்கார் சொல்லும் கட்சி வாதம் தவறு. மேலும், ஸர்க்கார் தற்போது கையாளும் வரி முறை எவ்விதக் கட்டுத்திட்டத்தையும் கொள்கையையும் தழுவியதல்ல. மனம்போனவாறு ஸெட்டில்மெண்டு மிராசுதார்களாகிய நீங்கள் சொல்லுகிற கட்சி நியாயமானது என்பதில் துளிக்கூடச் சந்தேகமில்லை. உங்கள் கட்சியை, நான் ஏற்றுக்கொள்ளுகிறேன். புதிய ஸெட்டில்மெண்டு சுத்தத் தவறு என்று எனக்கு நிச்சயமாகத் தெரிகிறது. ஆனால், உங்கள் சக்

தியோ அவ்வளவு நிச்சயமாக, என் கண்களில் படவில்லை. பர்டோலியில் போராட்டம் (வேறு காரணத்துக்காக) 1921-ம் வருஷத்திலேயே ஆரம்பித்திருக்க வேண்டும்; ஆனல் எதிர்பாராத சம்பவங்களால், அப்பொழுது நின்று போயிற்று. எனவே, உங்கள் பலப் பரீட்சையைப் பார்ப் பதற்கும் காண்பிப்பதற்கும் சந்தர்ப்பம் வாய்க்காமல் போய் விட்டது.

"இப்பொழுது சந்தர்ப்பம் வந்திருக்கிறது. ஆனல் நீங்கள் உண்மையிலேயே தயாரா யிருக்கிறீர்களா? உங்கள் உள்ளங்களைச் சோதித்துப் பார்த்துச் சொல்லுங்கள். ஆத் திரப்பட வேண்டாம். ஸர்க்காரின் சக்தி உங்களுக்குத் தெரி யுமா? இது இந்தத் தாலூகாவைப் பொறுத்த மட்டிலும் தனி யான போராட்டம் என்று எண்ணுதீர்கள். இந்த ஸெட்டில் மெண்டுப் பிரச்னைஇந்தியா முழுதுக்கும் பொதுவான ப்ரச்னை யாகும். ஆகையால், அரசாங்கத்தார் இந்தப் போராட்டத் தில் தங்கள் முழுச் சக்தியையும் திரட்டி உங்கள் பேரில் பிர யோகம் செய்வார்கள். உங்களுக்கு அதைத் தாங்குவதற்குச் சக்தி உண்டா? சத்தியத்துடனும் சாத்வீகமாகவும் இந்தப் போராட்டத்தை நடத்த உங்களுக்கு தென்பு உண்டா? பதருமல், அவசரப்படாமல், நன்ருக யோசித்து முடிவுக்கு வாருங்கள். உங்களுக்கு ஏழு நாள் வாயிதாக் கொடுக்கிறேன். யோசித்து முடிவுக்கு வாருங்கள். இதற்கு மத்தியில், நான் ஸர்க்காருக்கு எழுதுகிறேன். ஸெட்டில்மெண்டைப் பற்றி நடு நிலைமை கொண்ட கமிட்டி ஒன்று விசாரணை செய்ய வேணும் என்று, அவர்களைக் கேட்டுப் பார்க்கிறேன். பலிக்கிறதா, பார்ப்போம்."

இவ்வாறு ஸர்தார் பேசிய பின்னர், கூட்டத்தில் பிர ஸன்னமாயிருந்த ஸ்ரீ பீம்பாய் நாய்க், ஸ்ரீ ததுபாய் தேசாய், டாக்டர் தீட்சித்—மூவரும் பம்பாய்ச் சட்டசபை மெம்பர் கள்—பின் வருமாறு சொன்னர்கள்:—

"நாங்கள், எங்களால் கூடியவரையில், சட்ட வரம்புக் குட்பட்ட முறைகளை யெல்லாம் கையாண்டு, இதற்குப் பரி

காரம் தேட முயன்று பார்த்தாகி விட்டது. நாங்கள் அலுத்துப்போய் விட்டோம்; தோற்றும் போய் விட்டோம். இனி, எங்களால் ஒன்றுமே செய்யமுடியாது. எனவே, ஸர்தார் தான், இந்த ப்ரசனை சம்பந்தமாக, சாத்விகப் போராட்ட முயற்சிகளைக் கைக்கொள்ள வேண்டும். நீங்கள் தலைமை வகித்து நடத்துவதில், எங்களுக்கு ரொம்பவும் சந்தோஷம்.''

கூட்டம் முடிவடைந்தது. ஸ்ரீ வல்லபாய் படேல் ஆமதாபாத்துக்குத் திரும்பிப் போனார். 1928 ஹு பிப்ரவரி மீ 6வ. பம்பாய் கவர்னர் அவர்களுக்கு, ஸர்தார் ஒரு கடிதம் வணக்கமாக எழுதினார். கடிதத்தின் சில பகுதிகளைக் கீழே தருகிறோம்——

"புதிய ஸெட்டில் மெண்டினால் ஏற்பட்ட நிலைமையை கவர்னர் அவர்கள் கூர்ந்து கவனிப்பாராக! ஸெட்டில் மெண்டு ரிவிஷன் முறை, பகுத்தறிவுக்கும் நியாயத்துக்கும் நாகரிகத்துக்கும் ரொம்ப விரோதமானதாகும். ஸெட்டில் மெண்டுக் கமிஷனர் கையாண்டிருக்கும் விநோதமான முறையை அரசாங்கத்தார் ஏற்றுக்கொண்டது ஆட்சேபிக்கத் தக்கது.

"புதிதாக, தரம்வாரி பிரிக்கப்பட்டு, கிராமங்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. மட்ட விளைவுள்ள கிராமங்களையும் உயர்ந்த தரத்தில் சேர்த்துவிட்டால், தர உயர்வு வரி உயர்வு இரண்டும் சேர்ந்து, புதிதாகப் பதவி உயர்வுபெற்ற கிராமங்களுக்கு எத்தகைய நஷ்டம்! இரட்டிப்பு நஷ்டம். இந்தக் கிராமங்களுக்கு இதனால் நூற்றுக்கு ஐம்பது அறுபது வரையில் வரி உயர்வு ஏற்பட்டிருக்கிறது. இது மகத்தான அநியாயம். கடைசியாக உத்தரவு பிறப்பிக்குமுன், இதைப்பற்றி ஜனங்களுக்கு ஸர்க்கார் நோட்டீஸ் கொடுக்கவுமில்லை.

"ரிவினியூ சட்டத்தை சரியானபடி வியாக்கியானம் செய்து அமுலுக்குக் கொண்டுவந்தால், 1927-1928 இல் புதிய ஸெட்டில்மெண்டை அமுலுக்குக் கொண்டு வருவது

சட்டத்துக்கு விரோதமாகும். ஜனங்களின் ஆட்சேபங்களைப் பங்கிடுசெய்துவிட்டு ஆறுமாதகாலம் கழிந்தாலொழிய, புதிய ஸெட்டில்மெண்டு எதுவும் அமுலுக்கு வரப்படாது என்பது சட்டம்.

“ஸெட்டில்மெண்டு சம்பந்தமாகப் பல ஒழுகீனங்களும் முறைத் தவறுகளும் அநீதிகளும் ஏற்பட்டிருப்பதால், ஜனங்கள் எல்லோரும் தங்கள் கட்சியைத் தயங்காமலும் தாராளமாயும் சொல்லிக்கொள்ளுமாறு, தக்க அதிகாரம் படைத்த, நடு நிலைமை தாங்கக்கூடிய கமிட்டி ஒன்றை அரசாங்கத்தார் நியமிக்கும்படி வேண்டிக்கொள்ளுகிறேன்.

“எனக்கு ஸர்க்காரோடு மல்யுத்தம் செய்ய, தனமேயில்லை. போராட்டமே கூடாது என்ற மனக் கவலையுடன் தான் நான் இருக்கிறேன். ஆனால் ஜனங்களுடைய இந்த மிதமான வேண்டுகோளைக்கூட அரசாங்கத்தார் மதித்துத் தக்க பரிகாரம் தேடாவிட்டால், வரிகொடுக்காமலிருந்து அதனாலேற்படும் துன்பங்களை அமைதியுடன் பொறுத்துக் கொள்ளுங்கள் என்று நான் மிராசுதார்களுக்கு யோசனை சொல்லுவதைத் தவிர வேறு வழியில்லை எனக்கு.

“இது சம்பந்தமாக நாம் இருவரும் சந்தித்துப் பேச வேண்டும் என்று கவர்னர் அவர்கள் கருதுவார்களாகில், நான் கவர்னர் அவர்களைப் பேட்டி காணத் தயாரா யிருக்கிறேன்”.

இந்தக் கடிதத்துக்கு நேர்முகமாக, விவரமாக, ஸர்தார் அவர்களுக்கு கவர்னர் துரையிடமிருந்து பதில் வரவில்லை. “யோசனை செய்து பைசல் செய்யும் பொருட்டு, உங்கள் கடிதம் ரிவினியூ இலாகாவுக்கு அனுப்பப்பட்டிருக்கிறது” என்று சிறு குறிப்பு ஒன்று கவர்னரின் அந்தரங்கக் காரியதரிசியிடமிருந்து வல்லபாய்க்குக் கிடைத்தது.

இதற்குள் அரசாங்கத்தார் என்ன செய்தார்கள் என்றால் பல கிராமங்களின் தரத்தை உயர்த்தினார்களே, அவைகளிலே 22 கிராமங்களைப் பழைய தரத்துக்குக் கொண்டுவந்து விட்ட

தாக, அறிவித்துவிட்டார்கள். வல்லபாய் அவர்கள் சொல்லுவதைக்கேட்டு நடந்துவிட்டதாக இருக்கப்படாதல்லவா? இது ஒரு அரசியல் தோரணை. ஸர்தாருக்கு நேரே கடிதம் கிடையாது. கவர்னர் துரைக்கு ஸர்தாரை நன்ருகத் தெரியும். ஸர்தாரிடத்தில் கவர்னருக்கு மதிப்புக்கூட, ஆனால் பிரஸ்தாப ப்ரச்னை சம்பந்தமாக, வல்லபாய் அவர்களுக்கு யாதொரு மரியாதையும் கொடுக்கலாகாது என்பது பம்பாய் கவர்னருடைய நிர்வாக சபையாரின் பிடிவாதமான கருத்து.

கவர்னர் அவர்கள் ஸர்தாருடைய வேண்டுகோளுக்கிணங்கிப் பேட்டி கொடுத்துக் கலந்து பேசியிருந்தால், பர்டோலியில் போராட்டம் நடைபெற்றிருக்காது என்றே சொல்லிவிடலாம். நல்ல காரியம் எளிதிலே நேருமா?

முதல் இரிசாலின் கடைசி நாளாகிய பிப்ரவரி மீ 15உ நெருங்கிவிட்டது. கவர்னரின் அந்தரங்கக் காரியதரிசியிடமிருந்து வந்த சிறு குறிப்பைத் தவிர, வேறு ஒரு கடிதமும் ஸர்தாருக்கு வரவில்லை. வரலாம் என்று வல்லபாய் காத்துக் காத்துப் பார்த்தார். 11உ வரையில் காத்துப் பார்த்தார்.— முன்னுலேயே ஏற்பாடு செய்திருந்தபடி, பர்டோலியில் தாலூகாவாசிகளை மீண்டு மொருமுறை 12உ ஸர்தார் அவர்கள் சந்தித்துக் கலந்துகொண்டார்.

வழக்கம்போல, முதலில் தொண்டர்கள் கூட்டம் நடைபெற்றது. இந்தத்தடவை, கூட்டத்தில்அதிகம்பேர்கள்கலந்து கொண்டார்கள். "வரி கொடுப்ப தில்லை" என்ற வாக்குறுதிப் பத்திரங்களில் கை யெழுத்திட்டு, அவைகளை ஏராளமாகத் தங்கள் பிரதிநிதிகளின் மூலமாக அனுப்பி வைத்திருந்தார்கள் தாலூகா மிராசுதார்கள். ஒவ்வொரு கிராமத்துப் பிரதிநிதியும் எழுந்து நின்று, தமது கிராமத்தைப்பற்றி விவரங்கள் சொல்லும்பொழுது, அவர்களுடைய குரலிலே அமைதி குலவும் நிதானமும் 'கொண்டு செலுத்தும்' பிடிவாதமும் குடி கொண்டிருந்தன. வரிகொடாமையைப்பற்றி இளிப்

பிள்ளையைப்போல அவர்கள் பேசியிருந்தால், அவர்களுடைய பேச்சுக்கு மதிப்பு இருக்காது.

"எங்கள் கிராமத்திலே, 58 பேர்கள் கையெழுத்திட்டிருக்கிறார்கள். 12 பேர்கள் கையெழுத்துப் போடவில்லை. அதனாலே, பாதகமில்லை" என்று ஒருவர் சொன்னார். இன்னொருவர் சொன்னார்: "எங்கள் கிராமத்திலே, மணியக்காரரைத் தவிர எல்லோரும் வாக்குக் கொடுத்துவிட்டார்கள். ஆனால் மணியக்காரர் எங்களுக்கு விரோதம் இல்லை" என்று. "எங்கள் மணியக்காரர் ஏற்கனவே பணத்தைச் செலுத்தி விட்டார். பக்கத்துக் கிராமத்துப் பனியா ஒருவரும் கொடுத்து விட்டார். ஆனால், அவர்களை எங்கள் கணக்கில் எப்பொழுதுமே சேர்த்துக்கொண்டதில்லை" என்றார் இன்னொருவர். நாலாவது பேர்வழி சொன்னதாவது:—"எங்களுக்குள்ளே, (கலகக்காரக் கட்சி) அடங்காத கட்சி ஒன்று இருக்கிறது. அவர்கள் எங்கள் இனத்தைச் சேர்ந்தவர்க ளல்லவென்றே நாங்கள் பாவித்து வருகிறோம். என்ன வந்தாலும் வரட்டும்; எங்கள் கூட்டம் ஒருநாளும் வரி கொடுக்காது. கடவுளின் கிருபையால் மற்றவர்களும் கொடுக்கமாட்டார்கள் என்று நினைக்கிறோம்". அனேகமாய் எல்லோருமே வாக்குக் கொடுத்துவிட்டார்கள். ஒருத்தரும் பின்னடிப் போய்விட மாட்டார்கள் என்று தோன்றுகிறது" என்று இன்னும் பலர் சொன்னார்கள். "எங்கள் கிராமத்துக்கு நான் ஜவாப்தாரி. என் கிராமம் கடைசிவரைக்கும் நிற்கும்" என்று மூன்று நான்கு பேர்கள் கொஞ்சம் கர்வக் குறியோடு பேசினார்கள்.

இவ்வளவு ரஸமான சரக்குகளைக் கேட்டபின்னர், ஸர்தார் நிதானமாய்ச் சொல்லுகிறார்:—

"இந்தப் போராட்டத்தில் நீங்கள் பாயுமுன், இன்னும் தெளிவாக இதைப்பற்றி யோசிக்கும்படி நான் உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். என்னை யொத்த 'சண்டைக்காரன்' உங்களுக்குத் தலைமை வகிக்கிறான் என்று எண்ணி, போராட்டத்தைக் குறைத்து மதிப்பிட்டுவிடாதீர்கள். என்னையும் எனது சகாக்களையும் மறந்து விடுங்கள். கொடுமையை

7250.



யும் அநீதியையும் எதிர்த்துப் போராட வேண்டுமென உங்களுக்குத் தோன்றினால், போராடுங்கள். போராட்டத்தைச் சிறிதாக, எளிதாக, கருதவேண்டாம். நீங்கள் கேவலமாகத் தோற்றுப்போனீர்களோ, பல வருஷங்களுக்கு உங்களால் தலை தூக்கவே முடியாது. நீங்கள் ஜயித்தீர்களாயின், சுய ராஜ்யத்துக்கு அஸ்திவாரம் யமைத்தவர்களாவீர்கள். கூட்டத்தில் தீர்மானம் செய்யப் போகிறோமே, அப்பொழுது நாங்கள் ஒருவரும் தீர்மானத்தைப்பற்றி வாய்திறக்க மாட்டோம். நீங்கள்தான் அதைப் பிரேரிக்கவேண்டும், ஆமோதிக்கவேண்டும், ஆதரிக்கவேண்டும். சரித்தானே!"

புதிதாக ஸெட்டில்மெண்டு நடந்த சொராஸி தாலூகாவிலிருந்து சில பிரதிநிதிகள் ஸர்தாரிடம் வந்து, "போராட்டத்தில் எங்கள் தாலூகாவையும் சேர்துக்கொள்ள வேண்டும்" என்று மன்றாடிக் கேட்டுக்கொண்டார்கள். "இரண்டு தாலூகாக்களை அரண் செய்து, கட்டுப்பாடுண்டாக்கி, போராட்டத்தை நடத்துவது என்றால் இப்பொழுது முடியாத காரியம். பர்டோலிக்கு ஏற்படுகிற முடிவினாலே, உங்களுக்கும் லாபமோ, நஷ்டமோ உண்டாவது நிச்சயம். அயல் ஒப்பந்தம் வால் வீச்சு என்பதை நீங்கள் கேள்விப்பட்டதில்லையா? நீங்கள் இப்பொழுது போராட்டத்தில் தலையிட்டுக் கொள்ள வேண்டாம் என்று" அவர்களை ஸர்தார் தடுத்துவிட்டார்.

பின்னர், மிராசுதார் மகாநாடு கூடிற்று. ஸர்தார் சுருக்கமாகப் பேசினார். பேச்சு வருமாறு:—

"போனதடவை உங்களிடம் நான் சொன்னதுபோல, பட்சபாதமில்லாத கமிட்டி யொன்றை நியமிக்க வேண்டும் என்று கவர்னர் துரைக்குக் கடிதம் எழுதினேன். அதற்கு எனக்கு ஒரு பதில் வந்தது. ஆனால் அது ஒரு பதிலில் சேர்த்தியில்லை. என்னுடைய கடிதம் 'ஆலோசனைக்காகவும் பைசலுக்காகவும்' ரிவினியூ இலாகாவுக்கு அனுப்பப்பட்டிருக்கிறதாம்! எப்பொழுது அவர்கள் பைசல் செய்யப் போகிறார்

களோ, அது நமக்குத் தெரியாது. அவர்கள் முடிவுக்கு வருகிற வரையிலும், நம்மால் காத்திருக்கவும் முடியாது.

"என்னுடைய கடிதத்தைப்பற்றி 'முடிவு ஏற்படுகிற வரையிலும், வரி வசூலிக்காமல் நிறுத்தி வைத்திருக்கிறோம்; ஆகையால் நீங்களும் உங்கள் மகாநாட்டை ஒத்திவையுங்கள்' என்று ஸர்க்கார் சொன்னால், அதற்குச் சந்தோஷமாக நான் இணங்கியிருப்பேன். ஆனால், இப்பொழுதோ, நீங்கள் செய்யப்போகிற முடிவுக்காகவே நான் காத்துக் கொண்டிருக்கிறேன்.

"உங்களைக் கடைசியாகப் பார்த்துவிட்டுப் போனபிறகு சட்டத்தைப் புரட்டிப்பார்த்தேன். வரி உயர்வு கொடுமையாயிருக்கிறது என்பது ஒருபுறமிருக்க, அது சட்டப்பிரகாரம் உயர்த்தப் பட்டிருக்கிறதா என்றால், அதுவுமில்லை. ரிவினியூ சட்டப்பிரிவு 107-வது செக்ஷனுக்கு விரோதமாக இருக்கிறது....

"ஸெட்டில்மெண்டு ஆபீஸர் கிராமங்களைச் சுற்றிப் பார்த்து, மிராசுதார்களோடு கலந்து பேசி, தமது யாதாஸ்தைத் தயார் செய்யவில்லை. (இப்படிச் செய்யாதது சட்டத்துக்கு விரோதம்). ஸெட்டில்மெண்டுக் கமிஷனரோ, பழைய முறையை விட்டுவிட்டு, கிராமங்களைப் புதிய முறையில் தொகுத்துவிட்டார். இவ்வாறு தொகுப்பதில், முன்னிருந்த ஏற்பாடுக்கு மாறுதல் ஏற்பட்டதால், அரசாங்கத்தார், சம்பந்தப்பட்ட கிராமங்களுக்குப் புதிதாகநோட்டீஸ் அனுப்பியிருக்கவேண்டும். புதிய ஸெட்டில்மெண்டை உடனே அமுலுக்குக் கொண்டு வரவேண்டும் என்ற ஆத்திரத்தினால், ஸர்க்கார் இந்த அறிவிப்புச் செய்யத் தவறிவிட்டார்கள். (இது சட்டத்துக்கு விரோதம்).

"எனவே, ஸர்க்கார் இணங்கிவரும் வரையில், முழுக் கிஸ்தியையும் நீங்கள் கொடுக்க வேண்டாம் என்று நான் உங்களுக்கு யோசனை சொல்லுகிறேன். அரசாங்கத்தாரின் (மிருக) பலத்தோடு நீங்கள் போராடுவதற்கு உங்களுடைய

திடமான பிடிவாதத்தையும் உங்களுடைய சகிப்புத் தன்மையையும் தவிர, உங்களிடம் வேறு ஆயுதங்கள் கிடையாது என்பதை நீங்கள் ஞாபகப்படுத்திக் கொள்ளவேண்டும்.

"வந்த கஷ்டங்கள் எல்லாவற்றையும் பொறுத்துக் கொள்ளுகிறது என்று மட்டும் ஜனங்கள் சங்கற்பம் செய்து கொண்டால் போதும்; எந்தக் கலங்காத கொடுங் கோலனும் கலங்கிப்போய் இணங்கித்தான் ஆகவேண்டும்.

"இன்றைய ப்ரச்னை சில லட்சரூபா சம்பந்தமான ப்ரசனையல்ல. இப்பொழுது எழுந்திருக்கும் பிரச்னை தன்மதிப்பைப் பற்றியதாகும். ஜனங்களின் பிரதிநிதித்துவம் இல்லையாயின், வரிவிதிக்கலாகாது என்பது அரசியலில் அடிப்படையான தத்துவமாகும். உங்கள் கட்சியைக் கேட்காமல், அவர்கள் (அரசாங்கத்தார்) ஒன்றுமே செய்திருக்கப்படாது.

"அரசாங்கத்தின் மனம்போனபடிக் கெல்லாம் வரி விதிக்கும் எதேச்சாதிகாரத்தை, நீங்கள் எதிர்த்துத்தான் ஆக வேண்டும். எதிர்க்க வேண்டுமானல், நீங்கள் எதற்கும் கலங்கப்படாது; புத்தியைக் கூர்மையாகத் தீட்டிவைத்துக் கொள்ளவேண்டும். பொறுமையைக் கொஞ்சங்கூட இழக்கலாகாது.

"உங்களுடைய சக்தியைப் பலவழிகளிலும் அரசாங்கத்தார் பரீட்சைசெய்து பார்ப்பார்கள். (சிலருக்கு) லாபத்தைக் காண்பித்துப் பார்ப்பார்கள். உங்களுக்குத் தெரியாமலே, உங்களுக்குள் பிளவை உண்டாக்க முயலுவார்கள். ஆனல், நீங்கள் எதையும் பொருட் படுத்தாமல், வரிகொடாமை என்ற சங்கற்பத்தோடு ஒட்டிக்கொண்டிருக்கவேண்டும்.

"நடுநிலைமைகொண்ட கமிட்டியை ஸர்க்கார் நியமிக்கிற வரையில் அல்லது வரிஉயர்வு சம்பந்தமான உத்தரவுகளை ரத்து செய்கிறவரையில் இந்தப் போராட்டம் நடைபெறும் என்ற குறிப்பை, தீர்மானத்தில் சேர்த்திருக்கிறேன். வரி உயர்வு அநியாயமானது, கொடுமை கொண்டது, அது யாதொரு கட்டுத்திட்டத்துக்கும் அடங்கியதல்ல என்பதைப்

பற்றி நமக்கு எவ்விதச் சந்தேகமும் இல்லையாயினும், பட்ச பாதமில்லாத கமிட்டியை நியமிப்பது என்ற ஜீவாதாரமான கொள்கையை அரசாங்கத்தார் ஒப்புக்கொள்ளும்படி நாம் செய்து விடுவோமாகில், அது ரூபாய் அணுப் பைசாக் கணக்கில் தாற்காலிகமாகவோ அல்லது சாசுவதமாகவோ வரக் கூடிய எவ்வித லாபத்தைக்காட்டிலும் உயர்ந்ததாகும்.

"இனிமேல் அதிகமாக நான் சொல்லுவதற்கு ஒன்று மில்லை. கடவுள் சாட்சியிருக்கிறார்; எதைச் செய்தாலும், உங்களுடைய முழுப் பொறுப்பையும் உணர்ந்துகொண்டு, பூரா லாப நஷ்டத்தையும் அறிந்துகொண்டு, உங்கள் கண்ணைத் திறந்து பார்த்து, காரியம் செய்யுங்கள். உங்களிலே தலைமையாக இருப்பவர்கள் பேரில், அரசாங்கத்தார் கைவைத்து, அதைப்பிறருக்குப் படிப்பினையாகக் காண்பிக்கலாம். இந்தத் தீர்மானத்தை இன்றைக்குப் பிரேரித்து, ஆமோதித்து, ஆதரிக்கிறவர்களுடைய நிலங்களை ஸர்க்கார் பறிமுதல் செய்யலாம். இவைகளைக் கண்டும் கலங்க மாட்டீர்கள் என்ற நம்பிக்கை உங்களுக்கு இருக்குமாகில்,—போராட்டம் நல்ல போராட்டந்தான்—'சண்டைக்கு' ப் புறப்படுங்கள்."

கூட்டத்திலே, குண்டூசி விழுந்தாலும் கேட்கும், அவ்வளவு நிச்சப்தம். என்ன நேருமோ என்ற கவலை, அங்கே கூடியிருந்தவர்களின் முகங்களில்சிறிதளவு கூடக் காணப்படவில்லை. கீழ்க்கண்ட தீர்மானம், மகாநாட்டில் ஏகமனதாய் நிறைவேறிற்று. தீர்மானத்தை, எல்லா வகுப்பார்களும்—கன்பி, அனவ்லர், பனியா, பார்ஸி, முஸ்லீம்—எல்லோரும் ஆமோதித்து, ஆதரித்தார்கள்.

> "பர்டோலித் தாலூகா மகாஜனங்கள் மகாநாடு கூடித் தீர்மானித்தது என்னவென்றால், (1) பர்டோலிப் புதிய ஸெட்டில்மெண்டு கொடுமை கொண்டது, அநியாயமானது, கட்டுத்திட்டத்துக்கு அடங்காதது; (2) பழைய திட்டப்படி வரி வாங்கிக்கொள்ள அரசாங்கத்தார் இணங்குகிற வரையில், அல்லது ஊர் ஊராகச் சென்று புதிய ஸெட்டில்மெண்டைப்பற்றி விசாரித்து

முடிவுக்கு வரும்படியாக நடுநிலைமை கொண்ட கமிட்டி யொன்றை அரசாங்கத்தார் நியமனம்செய்யும்வரையில், புதிய திட்டப்படி யாரும் வரிகொடுக்க வேண்டாம் என்று இந்தத் தாலூகா வாசிகளுக்கு, இந்த மகாநாடு யோசனை சொல்லுகிறது."

ஒருவர், சுருக்கமாகப் பேசி, இந்தத் தீர்மானத்தைப் பிரரேபித்தார். இன்னும் சுருக்கமாக, சில வார்த்தைகள் கூறி, மற்றும் இருவர் இதை ஆமோதித்தார்கள். மற்றவர்கள் பேச்சே பேசாமல், சும்மா ஆதரித்தார்கள்.

வேறு பிரசங்கம் ஒன்றும் நடைபெறவில்லை. குர் ஆனி லிருந்து, சில சூராக்கள் ஓதப்பட்டன. ஹிந்துத் தோத்திரப் பாட்டும் பாடப்பட்டது. மகாநாட்டில் இருந்த யாவரும் 'ராம நாமம்' ஜபித்தார்கள். பிறகு மௌனம். இந்த வைபவங்க ளுடன் கூடிய சுப முகூர்த்தத்தில், தீர்மானம் நிறை வேறிற்று.

இது 1928௵ பிப்ரவரி௴ 12௳

## அத்தியாயம் 8.

சரி! தண்ணீரில் குதித்தாய்விட்டது. நீந்தத் தெரிய வேண்டாமோ? இல்லாவிட்டால், ஆழமல்லவா ஆளை விழுங்கி விடும்? சத்தியாக்கிரகம் என்ற சமுத்திரத்தில், பர்டோலி வாசிகள் குதித்துவிட்டார்கள். ஒன்று அவர்கள் மிதக்க வேண்டும்; அல்லது சாகத் துணியவேண்டும். ஏனென்றால் சாகத் துணிந்தவனுக்குச் சமுத்திரம் முழங்கால் என்று சொல்லுவதை நேரில் பரீட்சை பார்த்துவிடலா மன்றோ?

மகாநாடு முடிந்தது. தீர்மானமும் வெகு முறுக்காக நிறைவேறி விட்டது. ஆனால் உள்ள நிலைமை என்ன? பூராத் தீர்வையையும் கொடுக்காமல் நிறுத்திக்கொள்ள, எல் லோருமே சம்மதிக்கவில்லை. சட்டசபை மெம்பர்கள் யோசனை சொன்னது போல, புதிய வரி உயர்வை மட்டும் பிடித்து வைத்துக்கொண்டு, பழைய ரேட்டுப்படி கிஸ்தியைக்

கொடுத்து விடுகிறது என்று ஒரு கட்சி. "சத்தியாக்கிரகமா! அப்பா" என்று, வார்த்தையைக் கேட்டவுடனேயே மூர்ச்சை போகும் சிலர், ஒருவருக்கும் சொல்லாமலே தங்கள் கிஸ்தியைச் செலுத்திவிட்டார்கள். இன்னும் பலர், 'மதில் மேல் பூனைகளைப் போல' எந்தப் பக்கம் குதிக்கிறது என்று பார்த்துக்கொண் டிருந்தார்கள்.

மேற் சொன்னது அபிப்பிராய பேதம். ஆனால், பரம்பரை ஜாதி வித்தியாசங்களினால், ஜனங்களுக்குள் கட்டுப்பாடான ஒற்றுமை இல்லை. பட்டிதார் வகுப்பார்களுக்குள்—அதாவது கன்பிப் பிரிவார்களுள்—நல்ல கட்டுப்பாடு உண்டு. மற்றவர்களிடம் கட்டுப்பாடு இல்லை. இவர்களெல்லோரும் சேர்ந்து, பட்டிதார்களை ஒழித்துவிட்டால்? இருப்பதற்குள், ரானிபராஜ் கூட்டத்தார்தான் ரொம்பவும் ஏழைகள் ஸர்க்கார் கொடுக்கும் முதல் அடியிலேயே, அவர்கள் நெஞ்சு தளர்ந்து, சளைத்துப் போய்விட்டால்? பனியாமார்கள் பணக்காரர்கள். அவர்களில் சிலருக்கு நூற்றுக் கணக்கான ஏகர் பூமி உண்டு. அவர்கள் கடைசிவரையில் நிற்பார்கள் என்று சொல்லுவதற்கில்லை. மேலும், அவர்களிலே பலருக்கு, ஸர்க்கார் உத்தியோகஸ்தர்களுடன் நெருங்கிய சம்பந்தமுண்டு. எனவே, அவர்கள் எந்த நிமிஷமும், ஸர்க்காருக்குச் சரணாகதி செய்துவிடலாம். இவர்கள் சர்க்காரைக் கும்பிடுவார்களானால், இவர்களிடம் கடன் வாங்கிக் காலம் தள்ளும் ரானிபராஜ் வகுப்பாரும் ஓய்ந்து விடுவார்கள். அனவ்லர்கள் (பிராமணர்கள்) வணங்காமுடி மிராசுதார்கள்; சுபாவமாகவே, அவர்கள் நிதானஸ்தர்கள். பதறி எதையும் அவர்கள் செய்து வருவதில்லை. அவர்கள் "போராட்டம் மும்முரமாய் நடக்கட்டும், பார்த்துக்கொள்ளுவோம்" என்று யோசித்துக்கொண் டிருந்தார்கள். தாங்கள் தயார் என்று 122 முஸ்லீம்கள் வாக்குக் கொடுத்த தென்னவோ உண்மைதான். ஆனால் சூரட் நகர முஸ்லீம்கள் சரியாயில்லை. அவர்களுடைய வாடை, பர்டோலியிலே வீசி விட்டால், முஸ்லீம்கள் சரியாய் இருப்பார்களென்று சொல்ல முடியாது.

குஜராத்து முழுதும், கள் சாரயக் கடைகள் ஏலம் எடுப்பவர் கள் அனேகமாய்ப் பார்ஸிக்காரர்கள். காங்கிரஸ்காரர்கள் 1921-22-இல் கள்ளு சாராயக்கடை மறியல் செய்து மது விலக்குப் பிரசாரம் செய்ததிலே இந்தப் பார்ஸிக்காரர்களுக்கு ரொம்ப நஷ்டம். எனவே பார்ஸிகள், தாலூகாவாசிகளோடு சேர்ந்து இந்த இயக்கத்தில் ஈடுபட்டுத் தளராமல் நிற்பார்கள் என்று திடமாய்ச் சொல்லமுடியுமா?

ஸர்தார் வல்லபாயோ, 'சண்டைப் பிரதிக்ஞை' செய்து விட்டார். பர்டோலி வாசிகளும் ஒக்கப் பாடி விட்டார்கள். மேலே குறிப்பிட்ட துணுக்குகள் யாவும் போராட்டத்துக்கு அனுகூலங்களா, பிரதிகூலங்களா, நீங்களே யோசித்துப் பாருங்கள். இதற்குள், ஸர்தாருக்கு, அவருக்கு வலது கை போல விருக்கும் மோகனலால் பாண்டியாவிடமிருந்து, ஒரு கடிதம் வந்தது. கடிதத்தைப் பார்த்தால், நீங்களே திடுக்கிடு வீர்கள்; பர்டோலி சத்தியாக்கிரகம் எந்த நிலைமையில், எந்தச் சக்தியைக்கொண்டு நடந்தது என்று நினைத்து, நீங்களே ஆச் சரியப்படுவீர்கள். கடிதத்தின் ஒரு பகுதி பின்வருமாறு:—

"என்னைச் சுற்றி யிருக்கிற நிலவரத்தைப் பார்த்தால், என்னைப் பயமும் சந்தேகமும் கவ்வுகின்றன. இன்னும் சில நாட்களுக்குள், ஸர்க்காரோடு கடும்போர் புரியப் போகிற ஜனங்கள் இவர்களாய் இருக்கமுடியுமா? போர் மனோபாவமே ஒருவருக்கும் இல்லை. ஒன்றுமே நேராததுபோல, அவர்கள் காரியம்செய்துகொண்டிருக்கிறார்கள். இதுகலியாணக்காலம். ஒவ்வொரு கிராமத்திலும், இப்பொழுது கலியாண குதூகலம் தான். ஆடம்பரமான உடைகளை அணிந்துகொண்டு, வண்டி சவாரியிலே, ஊருக்குஊர் போய்க்கொண் டிருக்கிறார்கள். சத்தியாக்கிரகம் நடக்கட்டும் அல்லது நின்று போகட்டும்; அதைப்பற்றிச் சிலருக்குக் கவலையே கிடையாது. தாசில் தார் அவர்கள் தங்கள் குழந்தைகளின் கலியாண காலத்தில் பிரஸன்னமாயிருந்து தங்களைக் கௌரவித்தால் போதும்! இதோடு, கலியாண விருந்துகளையும் சேர்த்துக்கொள்ளுங்கள். இதுதான், இப்பொழுது பர்டோலியைப்பற்றி வரையக்கூடிய

பூரண சித்திரமாகும். எது நடந்தாலும் நின்றாலும் அவர்களுக்குப் பாதகமில்லை; தங்களுடையச் சின்னஞ் சிறிய குழந்தைகளுக்குக் கலியாணம் எப்படியாவது செய்துவிட வேண்டுமே என்பதுதான் அவர்களுக்குக் கவலை, 'வல்லமை பொருந்திய ஸர்க்காரோடு போராடுங்கள்' என்று தாங்கள் யோசனை வேறு சொல்லும் ஜனங்கள் இவர்கள்தானா? எனக்கு எக்கமில்லை. ஆனால் நம்முடைய சக்தியைப் பெரிது படுத்தி நினைத்துக்கொண்டு, நிதானம் தவற வேண்டியதில்லை. தங்கள் மானத்தையும் கௌரவத்தையும் கடவுள்தான் காப்பாற்றவேண்டும்."

பாண்டியாவின் கடிதத்தைப் படித்த எவரும், பர்டோலியிலே சத்தியாக்கிரகப் போராட்டம் வெற்றியுடன் நடந்திருக்கும் என்று நம்ப முடியுமா?

இத்தனை பிரதிகூலங்கள் இருந்தன வென்றாலும் போராட்டத்துக்குச் சாதகமா யிருந்தவைகளைச் சொல்ல வேண்டாமா? புதிய ஸெட்டில்மெண்டு விஷயத்தில் ஒருவருக்காவது துளிக்கூடத் திருப்தி கிடையாது. பர்டோலி வாசிகளுக்குள் கடைப்பட்ட கோழைக்குக் கூட, ஸர்தாரிடம் அளவு கடந்த நம்பிக்கை இருந்தது. இவை யிரண்டும்தான் அனுகூலங்கள்.

பாண்டியாவின் பிரார்த்தனைப் பிரகாரம் தமது மானத்தைக் காப்பாற்றும் வேலையைப் பூராவும் கடவுளிடம் ஒப்படைத்துவிடவில்லை ஸர்தார். பல சண்டைகளில் குண்டு பட்டு வடுக்கண்ட வீரனை வல்லபாய், 'யுத்த முஸ்தீபுகள்' எப்படிச் செய்தார்? "நூறுபேர்கள் சாவுவரையில் திடமாகப் போராடக் கூடியவர்கள் இருந்தாலும் போதும், வெற்றி நிச்சயம்" என்று ஸர்தார் பர்டோலிவாசிகளிடம் சொன்ன போதிலும், பர்டோலித் தாலூகாவின் 17000 மிராசுதார்களும் இந்தப் போராட்டத்தில் ஏதேனும் ஒருவகையில் கலந்துகொள்ளவேண்டு மென்பது அவரதுபேரவா. எனவே, தாலூகாவைப் பல பகுதிகளாகப் பிரித்து, ஒவ்வொரு பகுதியிலும் தேர்ந்த காங்கிரஸ் தொண்டர்களைப் பிரசார வேலைக்கு

அமர்த்திவிட்டார். இவர்களும் மற்றவர்களும் பர்டோலிப் போராட்டத்தின் வெற்றிக்குக் காரணர்களா யிருந்தபடியால், அவர்களுடைய பெயர்களைக் கட்டாயமாகப் பிரபலப்படுத் தித்தாளுக வேண்டும். இவர்கள், 'உடல் பொருள் ஆவி' மூன்றையும் பிரசங்க மேடையில் உபசாரத்துக்காகத் துறந் தவர்கள் அல்ல.

பர்டோலி (டவுன்) பகுதியிலே—கலியாண்ஜி, ஜகத்ராம் தவே, குஷால்பாய்; ஸர்போன் பகுதியில் டாக்டர் திருபுவன தாஸ் ; மாதிப்பகுதியில், ஸ்ரீ மக்கான்ஜி தேசாய் ; வேதச்சிப் பகுதியில், சூனிலால் மேதாவும் அவரது தர்ம பத்தினியும் ; வலோட், புகாரிப் பகுதிகளை டாக்டர் சண்டுலால் ஏற்றுக் கொண்டார். சண்டுலால் எப்படிப்பட்டவர் தெரியுமா ? உற்சாகம் குமிழிவிடும் தன்மை வாய்ந்தவர். இவருடைய பகுதியிலே, ராணிபராஜ்மார்கள் ஏராளம். கண்கொட்டுவ தற்குள் சண்டுலால்இவர்களைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்துவிட்டார் எனலாம். வரட் பகுதியையும் அதன் சுற் றுப் புறத்தையும் தமக்குப் பொறுக்கிக்கொண்டார் மோகன் லால் பாண்டியா. இவர்தான் ஸர்தாருக்கு அந்தக் கடிதம் எழுதினுரே அந்தப் பழைய நண்பர் ; ஸர்தாருக்கு ரொம்ப வும் 'வேண்டு மென்னப்பட்டவர்'. ரவிசங்கர்—ஆஹா ! இந்த ஆத்மத் தூய்மை கொண்ட 'முரட்டு'க் கிராம வாசியை, என்ன வர்ணித்து எழுதுவது ? இவர் ஸர்தா ருக்கு வலது கண். அகத்தூய்மையும் புறத் தூய்மை யும் ஒருங்கே விளங்கப்பெற்ற இப்பெரியார், ஸர் போன் பகுதியில் வேலை செய்யத் துவக்கினுர். தர்பார் சாகேப் கோபால்தாஸ் மகான். இவர் ஒரு பெரிய ஜமீன் தார் ; பரம்பரைப் பணக்காரர். இவர் சத்தியாக்கிரக இயக் கத்தில் 1920-ம் ஆண்டிலேயே கலந்து கொண்டார். கலந்து கொண்ட தோஷத்துக்காக, இவருடைய பூராச் சொத்தும் ஸர்க்காரால் பறிமுதல் செய்யப்பட்டது. ஸர்தாரை, பர் டோலிக்கு எப்படியாவது கொண்டுவந்து போராட்டத்தைத் துவக்கவேண்டும் என்று துடிதுடித்துக்கொண்டிருந்த கலி

யாண்ஜீயோடு கூடப்போய், ஸர்தார் மனத்தைத் திருப்பியவர்களுள் கோபால்தாஸ் ஒருவ ரல்லவா? இவர் பாம்னியைத் தமது இலாகாவாக எடுத்துக்கொண்டார். சூரட் கலகக் காலத்தில், மந்தஹாஸத்துடன் தடியடி வாங்கிக்கொண்டு, சபர்மதிச் சிறையில் இரண்டு வருஷம் தவம் செய்த ஸ்ரீ சினய் அவர்களுக்கு, பர்டோலி டவுனிலே வேலை. கதர் வேலையில் நிபுணரான கேசவ பாய் தமது எஜமானர் லட்சுமிதாஸ் புருஷோத்தமரிடம் உத்தரவு பெற்றுக்கொண்டு, டாக்டர் சண்டுலாலுக்குச் சகாயமாய் வலோட் பகுதியில் வேலை செய்யப் புறப்பட்டார். நாகபுரிக் கொடிப் போராட்டத்தில் ஈடுபட்ட தீரன் பூல் சந்த் பாபூஜி ஷா என்பவர் மாதிக்குப் போனார். 'போர்ஸாத் புலி' அம்பாலால் படேல் பால்டாவிலும், நாராயண்பாய் புகாரியிலும் வேலை செய்யத் துவக்கினார்கள்.

முஸ்லீம்களுக்காக, பரோடா சமஸ்தானத்து ஹைகோர்ட்டில் நீதிபதியாயிருந்து பென்ஷனோடு விலகிய அபாஸ் தியாப்ஜி அவர்களும் சபர்மதி சத்தியாக்கிரக ஆசிரமத்தைச் சேர்ந்த இமாம் சாகேப் அப்துல் காதர் பாவாஸீர் அவர்களும் வேலைசெய்தார்கள்.

இப்பேர்ப்பட்ட போராட்டத்துக்கு விளம்பர இலாகாக் கட்டாயம் வேண்டுமே! அப்போதைக்கப்போது நடக்கிறது கிராமவாசிகளுக்குத் தெரியவேண்டும். எனவே, விளம்பரக் காரியாலயம் ஒன்றைத் திறந்துவைத்து அதற்கு நிர்வாகஸ்தராக ஜகத்ராம் தவே அவர்களை, ஸர்தார் நியமனம் செய்தார். தவே அவர்களுக்குத் தாலூகாவைப்பற்றித் தெரியாத சங்கதி ஒன்றுமே கிடையாது. எல்லாக் குறிப்புகளும் அவர் நகக் கண்களிலே தயாராய்க் காத்துக்கொண்டிருக்கும். அவருடைய பிரசார எழுத்தோ, அழகு தவழும் சித்திரம் வரைந்ததுபோல இருக்கும். இவருக்குத் தினசரி வேலை என்ன? நாள் செய்திகளைத் திரட்டி, ஸர்தாரின் பிரசங்கத்தைத் துண்டுப்பிரசுரத்தில் பிரசுரிப்பது. இந்தத் துண்டுப் பிரசுரங்களை இலவசமாகக் கிராமவாசிகளுக்கு வினியோகம்

செய்தார்கள். முதலிலே கையால் எழுதிக் கொடுத்தார்கள். அது சாத்தியப்படவில்லே. பிறகு சூரட் நகரில் அச்சடித்துப் பரப்பினுர்கள். 15000 பிரதிகளுக்கு மேல் செலவாயிற்று. இந்தத் துண்டுப் பிரசுரங்களேப் படிக்காத கிராமமில்லே; படிக்காத நாளில்லே. ஜனங்கள் தினமும் இதற்காக ஆவலுடன் காத்துக்கொண் டிருப்பார்கள்.

போராட்டம் முடியும்வரையில், சுவாமி ஆனந்தர், ஸர்தாருக்கு அந்தரங்க காரியதரிசியாக அமர்ந்தார். இவ்வளவு வரையில், தலேவர் வல்லபாய் ஸ்தாபனம் செய்த அமைப்பாகும். கிராமவாசிகள் சும்மா யிருந்தார்களா? தங்களுக்குள்ளாகவே, தொண்டர்களேத் தயார் செய்தார்கள். தங்கள் ஊர்களில் வேலே செய்வது, சமீபத்திலிருக்கும் சத்தியாக்கிரக விடுதிகளுக்குச் செய்தி கொண்டுபோவது, ஆசிரமத் தலேவர்களோடு கிராமங்களேச் சுற்றுவது சொன்ன சில்லறை வேலேகளே யெல்லாம் செய்வது—இந்தத் தொண்டர்களின் ஊழிய மாகும். இந்த வேலேகளேச் சளேக்காமல் செய்தவர்கள் ரானிபராஜ் வகுப்பைச் சேர்ந்த தொண்டர்கள். இந்த அமைப்பு வேலே பிப்ரவரிமீ 12உ மாலேக்குள் ஆரம்பித்துவிட்டதாகச் சொல்லலாம். அன்றையச் சாயங்காலமே ஸர்தார் வங்கனேர் என்ற ஊருக்குப் புறப்பட்டுப் போனுர். அங்கே ஒரு அற்புதமான பிரசங்கம் செய்தார். அவர் சொன்னதாவது:—

"இந்தக் கூட்டத்தில் அதிகமாகச் சகோதரிகளேக் காணும். சகோதரிகள் தான் கூட்டங்களில் ஜாஸ்தியாகப் பிரசன்னமா யிருக்க வேண்டும். இந்தப் போராட்டத்தின் பளு, அவர்களுடைய தலேகளிலேதான் பொத்தென்று வந்து விழும். ஆடுமாடுகளே ஸர்க்கார் சிப்பந்திகள் ஜப்தி செய்யும் பொழுது, சகோதரிகள்தான் பார்த்துக்கொண்டிருக்க நேரிடும். ஜப்தி சிப்பந்திகள் அடிக்கடி கிராமத்துக்கு வருவார்கள். இவர்கள் செயல்களேப் பயமில்லாமல் பார்ப்பதற்கும் பொறுத்துக் கொள்ளுவதற்கும் சகோதரிகள் பழக்கிக் கொள்ளவேண்டும். இல்லாவிட்டால், போராட்டத்துக்கு

மோசம் வந்துவிடும். எத்தனை சகோதரர்கள் கூட்டத்துக்கு வருகிறார்களோ, அத்தனைபேர்கள் சகோதரிகளும் வரவேண்டும். இதைக் கட்டாயம் கவனியுங்கள்.

"உங்கள் நடவடிக்கைகளை மாற்றிக்கொள்ள வேண்டும். நீங்கள் எல்லோரும் புது மாதிரியாக ஆகிவிடவேண்டும். உங்கள் கலியாணக் குதூகலங்களெல்லாம் முடிந்துவிட்டனவா? எப்பேர்ப்பட்ட வலுத்த ஸர்க்கார்! அவர்களோடு மல்யுத்தம் செய்வதென்றால் இந்த 'கேளிக்கைகளில்' மனம் செல்லலாமா? நாளை முதல் உங்கள் வீடுகளை மூடிப் பூட்டிக் கொண்டு, கழனிகளுக்குப் போய், சாயங்காலம்தான் திரும்ப வேண்டும். ஜப்தி வேலையில் தங்களுக்கு ஒத்தாசை செய்ய, உங்களுக்குள் சில பேர்வழிகளைப் பிடிக்கப் பார்ப்பார்கள் அரசாங்கத்தார். அதற்கு இடங்கொடுக்காமல் பார்த்துக் கொள்ள வேண்டியது உங்கள் வேலை.

"இந்தச் சோம்பலையும் உறக்கத்தையும் உதறித் தள்ளி விடுங்கள். உங்களுக்கோ 'பெத்தபேரு' (பெரிய கௌரவம்) கிடைத்து விட்டது. அந்தப் பெயர் சித்திப்பதற்கு, நீங்கள் இதுவரையும் அதிகமாக ஒன்றும் செய்துவிடவில்லை; இனி மேல் தான் செய்ய வேண்டும். இப்பொழுது, காலை முன்னாலே எடுத்துவைத்தாகி விட்டது இனிமேல் திரும்பிப் பார்க்கவே படாது.

"1921-22-இல் கூட்டச் சட்ட மறுப்புச் செய்து காண்பிக்க காந்திஜி உங்கள் பர்டோலித் தாலூகாவைத் தான் பொறுக்கி எடுத்தார். அப்பொழுது அது இந்தியாவின் சுதந்திரப் போரில் ஒரு சண்டை. இப்பொழுது நீங்கள் போராடப் போவது ரொம்பச் சின்னச் சண்டை. உங்கள் பெயரைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள்.

"உங்களைப் பிரித்துப் பிரித்துப் பிளவுகள் உண்டாக்க அதிகாரிகள் எல்லாவித உபாயங்களையும் நாடுவார்கள், ஜாக்கிரதை! உங்கள் ஊர் அபிப்பிராயப் பேதங்களையும் சில்லறை

மனஸ்தாபங்களையும் நீங்கள் மறந்துவிடும்படி மன்றாடிக் கேட்டுக்கொள்ளுகிறேன். கிராமத்துச் சில்லறைச் சண்டைகள் யாவும் ஒழியவேண்டும். கடுமையான விரோதி என்று கிராமத்தில் யாரையேனும் நீங்கள் இதுவரையிலும் நினைத்துவந்தாலும், அவரைக் கூட உங்களுடைய ஆப்த நண்பராகப் பாவித்து, அவருடன் அன்னியோன்யமாய்ப் பழகவேண்டும். அப்படி செய்தால்தான், உங்களுக்குள் பிளவு ஏற்படாது. யாரும் உங்களைப்பார்த்து மதிக்கிருப்போ லிருக்கும்.

"உங்கள் நிலங்கள் பறிமுதல் ஆகிவிடுமோ என்று உங்களில் சிலர் பயப்படுகிறார்கள் என்பது எனக்குத் தெரியும். பறிமுதல் என்றால் என்ன? இந்த நிலத்தை, அதிகாரிகள் இங்கிலாந்துக்கு (சீமைக்கு) தூக்கிக்கொண்டு போய் விடுவார்களா? கடைசிப்பட்சமாய் என்ன நேரலாம். இந்த நிலமெல்லாம் ஜப்தியாகி, ஸர்க்கார் கணக்குப் புஸ்தகத்திலே ஏறலாம். நீங்கள் எல்லாரும் கட்டுப்பாடாக, ஒற்றுமையுடன் இருந்தால், அந்த நிலத்தை யாராவது வந்து சாகுபடி செய்துவிட முடியுமா? உங்கள் நிலங்கள் பூராவும் பறிமுதல் செய்யப்பட்டன என்றாலே போதும், குஜராத் முழுதும் உங்களுக்குப் பின்னுதவியாக இருக்கும் என்பதை நிச்சயமாக நம்புங்கள்.

"கிராமத்தைக் கட்டுப்படுத்துங்கள். தாலூகா பூராவும், ஊருக்கு ஊர், செய்தி தந்திமாதிரி பறக்கணும். ஒவ்வொரு கிராமத்தையும் பார்த்தால், 'ஓஹோ! போராட்டத்துக்குத் தயார்' என்று பார்ப்பவர் கண்ணில் படவேண்டும். மேலாவிலிருந்து (ஸத்யாக்கிரக ஆசிரமங்களிலிருந்து) வரும் தாக்கீதுகளுக்கு முணுமுணுப்பின்றிக் கீழ்ப்படிந்து நடக்கவேண்டும். கட்டுப்பாடுமட்டும் இருந்துவிட்டால், சண்டையிலே பேர்பாதிவெற்றி இப்பொழுதே உங்களுக்கு வந்துவிட்டதாக எண்ணிக் கொள்ளுங்கள். ஒவ்வொரு கிராமத்திலும் ஸர்க்கார்ப் பேர்வழிகள் மணியக்காரரும் கர்ணனும் தானே? நமக்கோ, ஒவ்வொரு 'மேஜரும்' ஒரு தொண்டர்".

மோஹன்லால் பாண்டியாவின் தீன கருதிக் கடிதத்துக்கு, இது பதில். வங்கனேர்வாசிகள், கூட்டத்துக்கு வந்திருந்தவர்கள், அப்படியே பரவசமாய்ப் போய்விட்டார்கள்.

## அத்தியாயம் 9.

'சண்டைக்காரர்கள்' என்று பெயரெடுக்கிறவர்கள், அனேகமாய்ச் சமாதானப் பிரியர்களாகவே இருப்பார்கள். 'எதிராளி'யின் மூர்க்கத்தனத்தால், சமாதானத்தில் பிரியமுள்ளவர்கள்கூடச் சண்டைக்காரர்களாக மாறிவிடுகிறார்கள். வல்லபாய் இயற்கையிலேயே அமைதியைவிரும்புகிறவர். விவகாரமில்லாமல் எப்படியாவது வம்பு வழக்குகளை தீர்ப்பதிலேதான் அவருக்கு ஆசை; ஆனால் தானாக வந்த வம்பையும் லேசிலே விட்டுவிடமாட்டார். என்னை வம்புக்கிழுக்கிறார் ஒருவர் என்றால் என்ன? என்னுடைய தன்மதிப்புக்கு உலை வைக்கப்பார்க்கிறார் அவர் என்று தான் அர்த்தம். தன்மதிப்புக்குப் பங்கம் வரக்கூடிய நிலைமையில், எந்த வம்பையும் அலட்சியமாகப் பாவித்துக்கொண்டிருக்க முடியாது.

ஸர்தார், போராட்டத்துக்கான முஸ்தீப்புகளை, பர்டோலியில் ஒரு புறம் தயார் செய்துகொண்டிருந்தார். இன்னொரு பக்கம், ஸர்க்காரோடு கடிதப்போக்கு வரவும் செய்துகொண்டிருந்தார். 'யுத்தம் செய்யாமல்' இந்தப் பிரச்னையை எப்படியாவது தீர்த்துவைக்க முடியுமா என்பதிலே அவருக்கு விருப்பமும் கவலையும் ரொம்ப ஜாஸ்தி. சண்டையில்லாமல் காரியம் நடந்து விடட்டுமே என்பது அவரது ஆவல். சோம்பலாலும் கோழைத்தனத்தாலும் சாதாரண மனிதர்களின் உள்ளத்திலே எழும் ஆசையல்ல ஸர்தாரின் ஆசை. வல்லபாய், சண்டையை வெறுக்கும் வீரன்.

வல்லபாய் பிப்ரவரி 6உ எழுதிய கடிதத்துக்கு, அரசாங்கத்தார் ரிவினியூக் காரியதரிசி மூலமாக, நீட்டி முழக்கிக்கொண்டு, 17உ பதில் அனுப்பித்து வைத்தார்கள். கடிதம் ரொம்ப ஜோர்! அதன் சுருக்கம் பின்வருமாறு:—

"இந்தப் புதிய ஸெட்டில்மெண்டு நடைபெறும் முப்பது வருஷ காலத்துக்குள், பர்டோலித்தாலூகா செழித்துக் கொழுத்துச் சுகமாக விருக்கப்போகிறது என்பதில் யாதொரு சந்தேகமுமில்லை என்பது சபையோடு கூடிய கவர்னர் அவர்களின் பிடிவாதமான கருத்து............................ அனுபவசாலி ரிவினியூ உத்தியோகஸ்தரான ஸ்ரீ ஜயகார் அவர்கள், பத்து மாத காலத்துக்கு மேல், தாலூகா முழுதும், கிராமம் கிராமமாகச் சுற்றிப் பார்த்துச் சோதனை செய்திருக்கிறார்......வாடகையாக மதித்து வரியை விதிப்பதும் வசூல் செய்வதும் இது தான் இந்த ராஜதானியில் முதல் தடவையாகும் என்று நீங்கள் சொல்லுவதற்கு ஆதாரம் இருப்பதாகத் தெரியவில்லை.........ஸெட்டில்மெண்டு உத்தியோகஸ்தர்கள் சிபார்சு செய்ததைக் குறைத்து விதித்திருப்பது இது தான் முதல் தடவை என்று குறிப்பிட்டிருப்பதும் தவறுகும்...........ஒரு பகுதி கூட வரியை வஜாச் செய்ய, அரசாங்கத்தார் தயாராயில்லை.........பர்டோலி மிராசுதார்கள் தங்கள் சொந்த யுக்தியைக் கொண்டோ அல்லது 'வெளியூர்ப் பேர் வழிகளின்' யோசனையைக் கேட்டோ கிஸ்தி செலுத்தத் தவறினால், அதன் பலன்களை அவர்கள் அனுபவித்துத் தீர நேரிடும்".

ரஸமான இந்தக் கடிதத்துக்கு, ஸர்தார் ஜவாப்பு எழுதாம லிருக்க முடியுமோ? ரிவினியூ ஸெக்ரடரி விலாஸத்துக்குப் பதில் போட்டார். பதிலின் சாரம்:—

"குத்தகை ரீதியாக இதுவரையிலும் ஸெட்டில்மெண்டு செய்யப்படவில்லை என்பதற்கு வலுத்த ஆதாரங்கள் இருக்கின்றன........பொறுப்பு வாய்ந்த ஸர்க்கார் ரிவினியூ உத்தியோகஸ்தரே சொல்லுகிறார்......ராஜியாக நூற்றுக்கு 22 ஸர்க்கார் வரியை உயர்த்தினார்களே, அதற்குத் தர்க்க முறைப்படி அரசாங்கத்தாருக்கு என்ன ஆதாரம் கிடைத்ததோ? ......பர்டோலி வாசிகளுக்கு அனர்த்தம் நேரப் போகிறது என்று அரசாங்கத்தார் பயமுறுத்துவதற்கு வந்தனம்........ நாங்கள் 'வெளியூர்ப் பேர் வழிகள்' என்று தாங்கள்

சொல்லும்பொழுது, ஒரு சிறிய விஷயத்தை மறந்து விட்டீர்கள். தாங்கள் பிரதிநிதியாக விளங்கும் அரசாங்கத்தை மேலிருந்து நடத்தி வைப்பவர்கள் யாவரும் 'வெளியூர்ப் பேர் வழிகள் (வெள்ளைக்காரர்கள்)'. நான் பர்டோலிக்கும் சொந்தம்; இந்தியாவின் எந்தப் பகுதிக்கும் சொந்தமானவன். கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிற பர்டோலி வாசிகள் அழைத்து, நான் போனேன். அவர்கள் வேண்டாமென்ருல், வெளியேறத் தயார். பலாத்காரத்தால் நடை பெறும் ஆட்சி முறையை, அதுவும் குடிமக்களின் ஜீவசத்தைத் தினமும் உறிஞ்சிவரும் ஆட்சி முறையை, (என்னை வேண்டாம் என்று அவர்களால் சொல்ல முடிவது போல) அவ்வளவு லேசாய், வேண்டாம் என்று, அவர்களால் தள்ளிவிட முடியுமா?"

இந்தக் கடிதத்தை பார்த்தவுடன், ரிவினியூக் காரியதரிசி ஸ்ரீ ஸ்மித் அவர்களுக்கு ரொம்பவும் ஆத்திரம். அவர் பதில் எழுதினர். வல்லபாய் சொல்லுவது ஒன்றுக்கும் ஆதாரமே கிடையாது என்று சாதித்தார். "என் சொந்த ஹோதாவில், தங்களை வெளியூர்ப் பேர்வழி என்று சொல்லவில்லை. அது எனது தனிக் கருத்தல்ல. சபையோடு கூடிய மேதகு கவர்னர் அவர்கள், யோசித்து முடிவுக்கு வந்த கருத்தாகப் பாவிக்க படுதல் வேண்டும். இனிமேல் ஏதேனும் கடிதம் எழுத வேண்டுமானல், தாங்கள் ஜில்லாக் கலெக்டருக்கு எழுத வேண்டும்" என்று கடிதம் முடிவுற்றது.

அதிகாரிகள் படிப்படியாக வல்லபாய் அவர்களை அவமானப் படுத்துகிருர்களாம்! பம்பாய் ஸர்க்காரின் பொக்கிஷ மெம்பர்—ஆனல் இந்தியர்—குஜராத் வெள்ளக் கஷ்ட நிவாரண வேலை சம்பந்தமாக வல்லபாயும் அவரது சகாக்களும் செய்த அரிய தொண்டைப்பற்றிப் பாராட்டிப் பேசுகையில், கூறியதாவது:—

> "சில ஆண்டுகளுக்கு முன், குஜராத்தில், தன்னலமில்லாத பொதுஜன ஊழியர்கள் மருந்துக்குக் கூட அகப்படமாட்டார்கள். ஆனல் மகாத்மா காந்தியின்

அரிய முயற்சியால், கிராமாந்திரப் பக்கங்களில், நல்ல தியாக புருஷர்களான தொண்டர்கள் தோன்றியுள்ளார்கள். குஜராத் வித்யாபீடத்திலிருந்து தொண்டர்களாக வந்தவர்கள், அபூர்வமான தொண்டு செய்திருக்கிறார்கள். காந்தியின் காஷாயம் வல்லபாய் படேல் அவர்களின் பேரில் விழுந்தது மிக்கப் பொருத்த முள்ளதே! எவ்வளவு ஆவலுடனும் வேகத்துடனும் திறமையாகவும் அவர் வேலை செய்தார் என்பது யாவரும் அறிந்ததே".

ஸர்க்காரின் ஒரு முகம், இவ்வாறு வல்லபாயை வாழ்த்துகிறது; இன்னொரு முகம், அவரைக் கடிதத்தின் மூலமாக அவமானப்படுத்தத் துணிகிறது.

இதுவரையில் நடந்த கடிதப் போக்குவரத்தைப் பிரசுரிக்கக் கவர்னரிடமிருந்து அனுமதி பெற்று, ஸர்தார் எல்லாவற்றையும் பத்திரிகைகளில் பிரசுரம் செய்து விட்டார். இந்தக் கடிதங்களுக்குக் கீழே, ஸர்தார் ஒரு குறிப்பு எழுதினார்:—

"ஸர்க்கார் சொல்லும் கட்சி செல்லத் தக்கதல்ல. பர்டோலி சத்தியாக்கிரகம் சிறியதொரு லட்சியத்தைக்கொண்டதாகும். பொது ஜனங்களின் உரிமை யொன்றை வற்புறுத்தி, அதை ஸ்தாபித்துக் கொள்ளுவதாகும். பர்டோலித் தாலூகாவில் புதிதாக வரியை உயர்த்துவதற்கு நியாயமே கிடையாது என்பது ஜனங்களின் கட்சி. இந்தக் கட்சியைக் கூட, நான் வற்புறுத்தவில்லை. நான் வற்புறுத்துவதெல்லாம் இது தான்; இந்த பிரச்னையைத் தீர விசாரித்து முடிவு செய்யும்படியாக, நடு நிலைமை தாங்கிய கமிட்டி யொன்றை அரசாங்கத்தார் நியமனம் செய்யவேண்டுமென்று தான்.

"ஸெட்டில்மெண்டு ஆபீஸரின் யாதாஸ்தையும் ஸெட்டில்மெண்டுக் கமிஷனர்கையாண்டிருக்கும் கொள்கையையும் ஆட்சேபித்து, அவைகள் தவறு என்று சொல்லுகிறேன். நான் சொல்வது தவறு என்று ஸர்க்கார் ருசுப்படுத்தட்டுமே!

பழைய ரேட்டில் கிஸ்தியை வாங்கிக்கொள்கிறோம் என்று சொன்னாலும் சரி அல்லது பட்சபாதமில்லாத கமிட்டியை நியமிக்கிறோம் என்று அரசாங்கத்தார் சொன்னாலும் சரி, பர்டோலித் தாலூகா வாசிகள் தங்கள் கிஸ்தியைச் செலுத்தத் தயாராயிருக்கிறார்கள். இந்த இரண்டிலொரு நிபந்தனையை ஏற்றுக்கொள்ள எந்தக் கௌரவம் வாய்ந்த அரசாங்கமும் பின் வாங்காது".

ரிவினியூக் காரியதரிசி ஸ்மித் அவர்களின் சீறும் கடிதத்துக்குப் பதட்டமில்லாமல், வல்லபாய் பதில் எழுதிவிட்டார். பொய்க் கௌரவம் குறுக்கே வந்து பாதிக்காமற் போனால், இப்பொழுதேனும் போராட்டத்தை அரசாங்கத்தார் தடுத்திருக்கலாம். சென்ற ஐரோப்பிய மகாயுத்தத்தில், ஜர்மன் கெய்ஸர், இங்கிலீஷ் சேனையைப் பார்த்து, 'நகைக்கத்தக்க சிறிய சேனை' யென்று ஏளனம் செய்யவில்லையா? பர்டோலி சத்தியாக்கிரகிகளை அதிகாரிகள் மதிக்கவில்லை. அது மட்டுமா? 'இனி, கலெக்டருக்கு நீங்கள் கடிதம் எழுதவேண்டும்' என்று வல்லபாய் அவர்களை அவமானப் படுத்தவும் துணிந்தார்கள்.

## அத்தியாயம் 10.

தமக்கும் அரசாங்கத்தாருக்கும் இடையே நடந்த கடிதப் போக்குவரத்தைப் பிரசுரம் செய்து, நிலவர நிலைமையை ஸர்தார் அவர்கள் விளக்கித் தெளிவுபடுத்திக் காண்பித்தது நல்லதாய்ப் போயிற்று. பத்திரிகைகள் தங்கள் புத்திக்கும் கல்பனைக்கும் எட்டிய பிரகாரம், பர்டோலிப் போராட்டத்தை வர்ணித்து எழுதத் துவக்கி விட்டன.

"பழைய பர்டோலிச் சட்ட மறுப்பு உயிர்த்து வந்து விட்டது" என்று இந்த இயக்கத்தில் அனுதாபம் கொண்ட பத்திரிகைகள் எழுதின. "அரசியல் நிர்வாகத்தைத் தடை செய்யும் பொருட்டே, வல்லபாய் இந்தப் போராட்டத்தை ஆரம்பித்திருக்கிறார். அவர் நல்லவர் தான்" என்று மழுப்பிக் கொண்டே, 'டைம்ஸ் ஆப் இந்தியா' போன்ற பத்திரிகைகள்

குத்தலாகவும் குறும்பாகவும் தாக்கி எழுதின. "சட்டத்துக்கு மீறிய இயக்கத்தில் குடியானவர்களைக் கலந்துகொள்ளச் செய்வது, அவர்களுக்குக் கொடிய தீமை செய்வதாகும்" என்று ஒரு பத்திரிகை எழுதிற்று. "இந்த இயக்கத்திலே, காந்திஜிக்குத் துளிக்கூட விருப்பமும் சம்மதமும் கிடையாது" என்ற வதந்தியையும் கிளப்பி விட்டார்கள்.

சில்லறை அதிகாரிகளின் தகாத செயல்களைக்கூட, அரசாங்கத்தின் பெயரால், பெரிய நிர்வாகிகளும் கவர்னர்களும் தாங்கிப் பேசுவது மரபு; அதாவது, அரசாங்கத்தில், ஒருவரை யொருவர் விட்டுக் கொடுத்துக்கொள்ள மாட்டார்களாம்! ஒரு மனங்கொண்டதுபோல எல்லாரும் செயலாற்றுவார்களாம்! இது ஒரு அமைப்பின் ஓட்டத்துக்கும் நிர்வாகத்துக்கும் இன்றியமையாத உபாயமாயின், இதை ஏனையோர்கள் பின்பற்ற மாட்டார்களா?

ஜனங்களும், அவர்களோடுசேர்ந்து வல்லபாய்உள்ளிட்ட சமூகத் தலைவர்களும் ஊழியர்களும் 'பர்டோலியின் கட்சி சரி' என்று சொல்லும்பொழுது, அதைத் தாம் தனியாக விசாரித்துத் தான் முடிவுக்கு வரவேண்டும் என்று காந்திஜி கருதுவாரா? ஸர்தார் பிரசுரித்த கடிதப்போக்குவரத்தைப் பார்த்ததும், காந்திஜிக்கு அளவற்ற வருத்தம். இது சம்பந்தமாக, 1928ஆு மார்ச்சுமீ 8உ 'யங் இந்தியா' பத்திரிகையில் பின்வருமாறு காந்திஜி எழுதினர்:—

"பர்டோலி ஸெட்டில்மெண்டு சம்பந்தமாக ஸ்ரீ வல்லபாய் படேலுக்கும் பம்பாய் அரசாங்கத்தாருக்கும் நடந்த கடிதப் போக்குவரத்தைப் படிக்கும் பொது ஜன ஊழியர் யாவரும் தீவிரமாக யோசனை செய்யும்படி நேரும். எத்தகைய ராஜாங்கத்தின் கீழ் நாம் வாழ்கின்றோம் என்பது கடிதப் போக்குவரத்தி லிருந்து புலனாகும்.

"வல்லபாய், கீர்த்திக்கோ, கவர்மெண்டுக்கோ, தெரியாதவரல்ல; புதிதானவரு மல்ல. உழைப்பும் யோக்கியதையும் சக்தியும் மிக வாய்ந்த பொது ஜன ஊழியர்

வல்லபாய் என்று சர்க்காரே ஒப்புக் கொண்டிருக்கிறார்களே! அவருடைய ஆமதாபாத் நகர பரிபாலன வேலையைப் பாராட்டி யிருக்கிறார்கள். வெள்ளக் கஷ்ட நிவாரண சம்பந்தமாக வல்லபாய் செய்த அபூர்வமான வேலையை, அரசாங்கத்தார், சில தினங்களுக்கு முன்னர் தான் வானமளாவப் புகழ்ந்திருக்கிறார்கள்.

"அவர்களுக்குத் திகைப்போ, கௌரவக்குறைவோ, ஸ்திதி நஷ்டமோ ஏற்படக்கூடிய வேலையில் வல்லபாய் அமர்ந்தால், அவருடைய பழைய வேலை யாவும் மறந்து போய்விடும் போலிருக்கிறது! தங்களுடைய ஸ்திதிக்காகவே, தங்கள் பெயர் (கீர்த்தி) கெடாமலிருக்கவேண்டும் என்கிறார்கள் அவர்கள். வெறும் வரட்டுக் கீர்த்தியிலே அவர்களுக்கு நம்பிக்கையில்லை. பெயர் என்றால் பணந்தான் என்று அவர்களுக்கு அர்த்தம்.

"என்வே, அவர்களுடைய முதல் கடிதத்திலேயே, அவர்கள் வல்லபாயின் நன்னோக்கத்தைச் சந்தேகித்து, அவர் வெளியூர்ப் பேர்வழி என்று வேறு அவரை அவமானப்படுத்துவதும் தகும் என்று எண்ணிக் கொண்டார்கள். மேதகு கவர்னர் அவர்கள்கூட, இவ்வாறு அவமானப்படுத்துவதில் உடந்தையா யிருந்தார் என்று கடைசிக் கடிதத்திலிருந்து தெளிவாகத் தெரிகிறது. எனவே, அவமானம் இன்னும் கொஞ்சம் அழுத்தமாகச் செய்யப்பட்டிருக்கிறது.

"அரசியல் நிர்வாகத்திலே நிர்வாகிக்கும் கவர்னருக்கும் மன ஒற்றுமை இருக்கலாம்; அறிக்கைகளின் பாஷையைக்கூட கவர்னர் அவர்கள் முழுதும் அங்கீகாரம் செய்ய வேண்டுமென்பதில்லை; ஏனெனில் பொது ஜனங்கள் தாங்கள் ஸர்க்காருக்கு எழுதும் கடிதங்களில் திவலை எதிர்ப்புத் தன்மையோ சுயேச்சையோ காண்பிப்பார்களாகில், ஸிவிலியன் ஸெக்ரிடரிகளுக்கு (ஐ. ஸி. எஸ். பரீட்சை தேறி உத்தியோகம் பார்க்கும் காரியதரிசிகளுக்கு) மூக்குக்குமேல் கோபம் வந்து விடுகிறது. இதையெல்லாம் கவர்னரும் ஆதரிக்கிறார்

என்று கொள்ள வேண்டியதில்லை என வல்லபாய் மரியாதையாகக் குறிப்பிட்டிருக்கிறார். கவர்னரும் இந்த நிந்தனையில் சேர்ந்து கொண்டார் என்பதிலிருந்து என்ன தெரிகிறதென்றால், தற்போதைய கவர்னரைப்போல் நல்ல தனமும், நடுநிலைமையும் உள்ள கவர்னரா யிருந்தாலும் சரி, அவர்கள் அதிகாரவர்க்கத்தினரின் சூழ்ச்சி வலையிலிருந்து தப்பிக்க முடியாது என்பதுதான். 'செருக்கின் முடிவு சீரழிவுதான்'; மமதையின் முடிவு வீழ்ச்சியேயாகும்.

"ஆனால் வல்லபாயின் முதுகு ரொம்ப விசாலமானது. தங்களுடைய பத்திரமான இடங்களிலிருந்து கொண்டு, அதிகாரவர்க்கத்தார் வீசியெறியும் அவமான வார்த்தைகளை அந்த முதுகு தாங்கமுடியும். என்றாலும், இதைப்பற்றி நான் ஏன் விரிவாகப் பேசினேன் என்றால், முன்னணியிலிருக்கும் (கௌரவம் வாய்ந்த) பொதுஜன ஊழியர்களைக்கூட அவமானப்படுத்தத் துணிந்த அரசாங்கத்தின் தன்மை ரொம்பவும் பொறுப்பற்றது என்பதைக் குறிப்பிடும் பொருட்டேயாகும்.

"அரசாங்கத்தாருக்கு வருத்த முண்டாக்கி, அவர்களை நிலை தடுமாறச் செய்தது என்ன என்று சிறிது யோசித்துப் பார்ப்போம். தற்போதைய நிலைமையில், நிலவரி என்பது சட்டத்தின் அதிகார எல்லைக்கு உட்படாத ஒரு இலாகாவாகும். எப்படி எவ்வளவு வரி விதிக்கிறது என்ற அதிகாரம் முழுதும் அரசியல் நிர்வாகஸ்தர்களின் கையில்தான் இருக்கிறது; பொது ஜன வாக்குக்கு அல்லது சட்டத்துக்கு, அதை உட்படுத்தவேண்டும் என்று இதுவரையிலும் செய்த முயற்சிகள் யாவும் பலிக்காமற் போய்விட்டன.

"ஸர்க்காரின் செலவோ, நாளுக்கு நாள் (விஷம்போல) ஏறிக்கொண்டு வருகிறது. அந்தச் செலவில் பெரும் பகுதி ராணுவ சம்பந்தமானது. இந்த செலவுக்குப் பணம் கண்டு பிடிக்கவேண்டும். நிலத்தின் கிஸ்தியைத்தான் கண்டபடியெல்லாம் உயர்த்த முடியும்; ஏனெனில், கிஸ்தி செலுத்துபவர்கள் ஜன சமூகத்தில் (கட்டுப்பாடில்லாத) பெருங் கூட்டத்தார்;

அவர்கள் ஊமைகள்; அவர்களுடைய வார்த்தை எங்கேயும் எருது. அவர்களைத் தான், நெஞ்சிலே ஈரமில்லாமல் கசக்கிப் பிழிய முடியும்.

"வரி விதிப்பதில் ஜனங்களுக்கு அதிகாரம் இருந்தாலும் சரி, அல்லது அதை ஜனங்கள் வெற்றிகரமாக எதிர்த்தாலும் சரி, அப்பொழுது, பொறுப்பில்லாமல் நடைபெறும் ஆட்சி முறை முடிவடைந்து விடும்.

"வரியை உயர்த்தினதை ஏற்றுக்கொள்ள, பர்டோலித் தாலுகா வாசிகளுக்கு இஷ்டமில்லை. அவர்கள் ஸர்க்காருக்கு மனுப் பண்ணிக் கொண்டார்கள். பரிகாரம் தேடிக்கொள்ளுவதற்காக, சட்டவரம்புக்கு உட்பட்டவைஎன்று கருதப்படும் உபாயங்கள் யாவற்றையும் அவர்கள் கையாண்டு பார்த்தாகி விட்டது. ஒன்றுக்கும் பலன் இல்லாமற்போகவே, தங்களுக்கு யோசனை சொல்லுவதற்கும், தேவையானல் சத்தியாக்கிரகப் போராட்டத்தில் தலைமை வகித்துத் தங்களை நடத்தும்படிக்கும் வல்லபாயை அவர்கள் வேண்டிக் கொண்டார்கள்.

"வல்லபாய், அவர்களுடைய கேஸை விசாரித்துப் பார்த்தார்; நியாயம் என்று கண்டு கொண்டார். என்றாலும் அரசாங்கத்தாருக்குத் திகைப்பும் ஜனங்களுக்கு நீடித்த துன்பமும் ஏற்படலாகாது என்ற நல்லெண்ணத்துடன், அரசாங்கத்தாருக்குக் கடிதம் எழுதி, கௌரவமான வழியொன்றை அவர்களுக்குக் குறிப்பிட்டார். அரசாங்கத்தார், ஜனங்கள் சொல்லும் கட்சி நியாயம் என்று ஒப்புக்கொள்ள வேண்டியதில்லை. இரண்டு தரப்புக் கட்சிகளையும் விசாரிக்க, அரசாங்கத்தார் பட்ச பாதமில்லாத கமிட்டியை நியமனம் செய்யட்டும். இந்தக் கமிட்டியின் தீர்ப்புப் பிரகாரம் நடக்க, ஜனங்கள் கட்டுப்படுகிறார்கள்' என்று வல்லபாய் வழிசொன்னார். இதை, அரசாங்கத்தார் உதாஸீனத்துடன் நிராகரித்துத் தள்ளிவிட்டார்கள்.

"ஸர்க்காரின் கட்சியைத் தப்பென்றும் பர்டோலியின் கட்சியை நியாயம் என்றும் தேசப் பொது ஜனங்கள் ஏற்றுக்

கொள்ள வேண்டுமென்பதில்லை. நடு நிலைமை வாய்ந்த கமிட்டியை நியமிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளப்படுகிறதே, அதைப் பொது ஜனங்கள் ஆதரித்தால் போதுமானது. கமிட்டி நியமன மாகாத வரையிலும், 'நிலம் பறிமுதல் வரையில் எவ்விதக் கஷ்டத்தையும் அனுபவித்து, இந்த வரி உயர்வை எதிர்ப்போம்' என்று பர்டோலி வாசிகள் சங்கற்பம் செய்து கொண்டிருக்கிறார்களே, அதை ஆதரிக்கும் படியாகப் பொதுஜனங்கள் கேட்டுக்கொள்ளப் படுகிறார்கள்.

"பிரஸ்தாபப் போராட்டம் ஸ்வராஜ்யப் போராட்டமல்ல என்று வல்லபாய் பாகுபடுத்திக் காண்பித்தது சரி. சுயராஜ்யம் பெறுவதற்காக நடத்தப்பெறும் வரிகொடா இயக்கம் இது அல்ல. இந்தப் போராட்டத்தின் லட்சியம் சின்னது; குறிப்பிட்ட ஒரு குறைக்குப் பரிகாரம் தேடுவதாகும். பர்டோலி வரி உயர்வைப் போலொத்த, அநியாயமாய் எதேச்சாதிகாரத்துடன் விதிக்கப்படும் எந்தத் தீர்வையையும் எதிர்த்துப் போராட, ஒவ்வொரு மனிதனுக்கும் பாத்தியம் உண்டு; அது அவனுடைய கடமையும் கூட.

"பிரஸ்தாபப் போராட்டம், ஒரு பிராந்தியத்தின், குறிப்பிட்ட ஒரு அநீதியை நிவர்த்தி செய்வதற்காக ஏற்பட்டிருந்த போதிலும், அதன் நல் விளைவு இந்தியாவுக்குப் பொதுவானதாகும். பர்டோலியைப்பற்றி எது உண்மையோ அதுவே, இந்தியாவின் பல பகுதிகளைப்பற்றியது மாகும். இந்தப் போராட்டத்துக்கும் ஸ்வராஜ்யத்துக்கும் மறைமுகமாக சம்பந்தம் உண்டு.

"நம்முடைய குறைகள் இன்னவையென்று எதன்மூலமாகத் தெரிந்து கொள்ளுகிறோமோ, கட்டுப்பாடும் அமைதியும் கொண்ட எதிர்ப்புக்கு எது நமக்குத் தென்பு கொடுக்கிறதோ, சமுதாயமாகக் கஷ்டம் அனுபவிக்க எது பழக்கிக் கொடுக்கிறதோ, அந்தச் சம்பவம் நம்மைச் சுயராஜ்யத்துக்குச் சமீபமாக அழைத்துச் செல்லுவதாகும்."

மகாத்மாஜி, பர்டோலிப் போராட்டத்தை ஆதரிக்க

வில்லை என்று பரப்பி வந்த புரளி; ஸர்க்காரை ஸ்தம்பிக்க வைப்பதற்காக வரிகொடா இயக்கம் ஆரம்பிக்கப் பட்டிருக் கிறது என்ற பொய்—இதையொத்த அவதூறுகள் யாவும் புரட்டுகள் என்று மகாத்மாஜியின் "யங் இந்தியா"க் கட்டுரை தெளிவு படுத்திவிட்டது.

## அத்தியாயம் 11.

வல்லபாயின் முதல் பிரசங்கத்திலிருந்தே, எல்லாச் சத் தியாக்கிரகக் 'காம்புகளும்' (ஆசிரமங்களும்) சரிவர வேலை செய்ய ஆரம்பித்துவிட்டன. வல்லபாய் சொன்னதுதான் சட்டம். அதை அப்படியே கீழ்ப்படிந்து நடக்கலானார்கள். ஸர்தார் எந்த ஆசிரமத்துக்குப் போனாலும் சரி, அங்கே அவர்கள் அதுவரையிலும் செய்த வேலையின் யாதாஸ்துப் படிக்கப்படும். பாம்னியிலே படித்த யாதாஸ்தில் விநோத மான குறிப்பொன்று காணப்படுகிறது:—

"இப்பொழுது தான் ஜப்தி நடவடிக்கைகள் துவக்கி யிருக்கிறார்கள். நாங்கள் இந்தத் தருணத்தில் நல்ல வேலை செய்து வருகிறோம். ஜப்தி ஆபீஸர்கள் அடிக்கடி வருகிறார் கள். ஆனால் எந்த வீட்டுக் கதவும் திறந்திருந்தால்தானே! நமது வாலண்டியர்களுக்கு, தம்பட்டமும் சங்குகளும் கொடுத்திருக்கிறோம். அவர்கள், அதிகாரி ஒருவரைக் கண்ட மாத்திரத்தில், தம்பட்டம் அடிப்பார்கள் அல்லது சங்கு ஊதுவார்கள் கிராமம் முழுதுக்கும் நோட்டீஸ் கொடுத்தது போல! இந்தக் 'குழந்தை' வாலண்டியர்களுக்கு, இந்த வேலை ரொம்பவும் பிடித்தம்."

சாத்வீகப் போராட்டங்களில், பொதுவாக, முதலடி எதிரி அடிப்பதுதான் உத்தமமாகும். எதிரி தாக்கத் தாக் கத்தான், மற்றவர்கள் அதைப் பொறுத்து, உண்மையை விளக்கச் சந்தர்ப்பம் ஏற்படும். முதல் 'குண்டுப் பிரயோகம், பிப்ரவரிமீ" 18௳ ஏற்பட்டது.

"மிராசுதார்கள் பூராக் கிஸ்தியையும் பத்து நாட்களுக் குள் செலுத்திவிட வேண்டும். இல்லாவிட்டால் தீர்வையில்

நாலிலொரு பங்கு அபராதம் போடப்படும்" என்று மிராசு தார்களுக்கு அதிகாரிகள் நோட்டீஸ் 'ஸர்வ்' செய்தார்கள். இதற்காக, குறிப்பாக முக்கியமான கிராமங்களைப் பொறுக்கி எடுத்தார்கள். வலோத் கிராமத்திலே 'முகாமையாயிருந்த' 15 பனியாமார்களின் பேரில், அதிகாரிகள் தங்கள் ஆத்திரத் தைக் காண்பித்தார்கள். தாலூகாவிலேயே, இந்தக்கிராமத்துப் பனியாமார்கள்தான் 'கடுங்கோழைகள்' என்பது பிரசித்தி.

இதிலே ஒன்றும் பலாத்காரமேயில்லை; வெறும் பய முறுத்துதல் மட்டுந்தான். பெட்டுவா என்ற ஊரில், கணக்கர் ஒரு ஏழை ரானிபராஜ் குடியானவனை நன்ருக அடித்துவிட் டார். முதலிலே, கணக்கு பிள்ளை, அதட்டி உருட்டிப் பார்த்தார். அந்த விவசாயி மசியவில்லை. இணங்காதது கண்டு, கணக்கர் அவரை அடித்து உதைத்துப் புரட்டி இழுத்துவிட்டார். இன்னொரு இடத்திலே, இரண்டு பேர் களைக் கிஸ்தி கொடுக்கும் வரையில், ஒரு அறையில் போட்டுப் பூட்டி வைத்து விட்டார்கள். ஸர்க்கார் தரப்பிலே, சில்ல றைச் சிப்பந்திகள் நடந்துகொண்ட முறை இவ்வாறு.

டெபுடிக் கலெக்டர் ஒருவர். நல்ல வாலிபம்! அனுப வமே கிடையாது என்று சொல்லலாம். இந்தப் போராட் டத்திலே தமது இஷ்டப்படியெல்லாம் செய்து வந்ததை ஸர்க்கார் ஆமோதிக்குமாறு அடித்துவிட்டார். அவர் 'நாஜூக்' வேலையெல்லாம் செய்தார். சில முக்கியஸ்தர் களைக் கூப்பிடுவார். அவர்களோடு கட்சி பேசுவார். "பூராக் கொடுக்க வேண்டாம், கொஞ்சம் கொடுத்தால் போதும். ஒரு ரூபாய் மட்டும் கொடுங்கள். எனக்காகக் கொடுங்களேன்" என்று கபடமாகப் பேசுவார். "தங்களுக்குக் கோடி நமஸ்காரம்; கிராமத்தின் அனுமதியில்லாமல், நாங்கள் எப்படிக் கொடுக்கிறது" என்பார்கள் மிராசுதார்கள். "நான் உங்களை ஜெயிலிலே தள்ளுகிறேன் என்று வைத்துக்கொள் ளுங்கள்" என்று டெபுடி கலெக்டர் பயமுறுத்துவார். "நீங்கள் எதற்காக எங்களை ஜெயிலிலே போடுகிறது! நாங் கள் ராஜத் துரோகம் செய்து விட்டோமா" என்பார்கள்

மிராசுதார்கள். டெபுடி கலெக்டர் சிரித்துவிட்டு, மன்னிப்புக் கேட்டுக்கொண்டு, தம் வழி செல்வார்.

டெபுடி கலெக்டரின் 'நய பய' முறைகள் வலோடில் பலிக்கவில்லையே யொழிய—அதாவது பிரயோகம் செய்யப் பட்ட இடங்களில் பலிக்கவில்லையே யொழிய, பிரயோகம் செய்யாத இடங்களில் பலிக்கத் தொடங்கின. கடோட் கிராமத்துப் பனியாமார்கள் ஆரம்பமுதலே, ஆட்டம் கண்ட வர்கள். அவர்களுக்கு நோட்டீஸ் ஒன்றும் சாதராவாகவே யில்லை. இருந்தாலும் கிஸ்தியிலே ஒரு பகுதியைக் கொடுத்து விட்டார்கள். இந்தமாதிரி செய்துவிட்டார்களே என்று சத்தியாக்கிரகிகளுக்கு வருத்தந்தான். ஆனால், இதனால் மற்றவர்கள் தவறிப்போக இடமேற்படவில்லை. பயங் கொள்ளிகள் முதலிலேயே நழுவிவிடுவது நல்லதுதான் என்று ஜனங்கள் நிதானத்துடன் பேசிக்கொண்டார்கள்.

போராட்டம் தினசரி கடுமையாகிக்கொண்டு வருவதை ஜனங்கள் உணர்ந்தார்கள். சத்தியாக்கிரக உறுதிமொழிப் பத்திரத்தில் புதிது புதிதாக, நபர்களின் கையெழுத்துக்களைத் தொண்டர்கள் வாங்கிச் சேர்க்கத் தலைப்பட்டார்கள். ஒவ் வொருநாளும் புதுப் புதுக் கிராமம் போராட்டத் திட்டத்தில் கலந்துகொள்ளச் சம்மதித்ததாகச் செய்தி! மார்ச்சுமீ துவக்கத்தில், தாலூகா முழுதுக்கும், இரண்டொரு கிராமங் கள்தான் போராட்டத்தில் சேராமல், ஒதுங்கி நின்றன; இரண்டொரு மிராசுதார்கள்தான் தங்கள் மனதைத் திடப் படுத்திக்கொள்ளவில்லை. சின்ன மிராசுதார்கள் எல்லோரும் எல்லாவிடங்களிலும் போராட்டத்தில் குதூகலத்துடன் சேர்ந்து கொண்டார்கள். பெரிய மிராசுதார்களுக்குக் கொஞ் சம் தயக்கம்.

ஆனால், ஸர்தாரின் சொல்மாரிகள் தாலூகாவாசிகளின் உள்ளத்தில் வர்ஷித்து வேலை செய்ய ஆரம்பித்துவிட்டன. ஸர்தாரின் பேச்சிலே, ஸ்வாரஸ்யம் எதிலே இருந்தது? வார்த்தைகளை, அடைமழையைப் போலப் பொழிந்து கொட்டு

பவரல்ல வல்லபாய்; சின்னச் சின்ன வாக்கியமாகப் பேசு வார். பேச்சின் நடையோ, கிராமத்துக் குடியானவர்களின் நடை; வார்த்தைகளோ, கிராமத்துக் குடியானவர்களின் வார்த்தைகள். உபமானங்கள், கதைகள் அப்படியே! மேலும், ஆத்மார்த்தமாக, குடியானவர்களுக்கு இன்னொரு குடியானவன் பேசுகிறதுபோல இருந்தால், கிராமத்துக் குடியானவர்களுக்கும் மிராசுதார்களுக்கும் உற்சாகம் ஏற்படுவதில், ஆட்சேபம் என்ன? வல்லபாயின் அழகான, பசை நிறைந்த, சக்திவாய்ந்த கிராம்யப் பேச்சை இங்கிலீஷிலே மொழி பெயர்ப்பது முடியாது.

மின்சாரத்தைப் போலப் பாயும் அவர் பிரசங்கங்களின் பலன் என்ன? ஒதுங்கி நின்றவர்கள்கூட, போராட்டத்தில் கலந்துகொள்ளத் துவக்கினார்கள். அதுவும், அனவ்லர்கள் (பிராமணர்கள்) வாசம் செய்துவரும் ஸர்போன் கிராமத்திலே, கொடி மின்னல் எவ்வளவு விரைவிலே தெரியுமோ அந்தமாதிரி பலன் தெரிந்தது. சின்ன மிராசுதார்கள் முதலிலே கையெழுத்திட்டார்கள். பிறகு பெரிய மிராசுதார்கள். ஒன்றிரண்டு ஸர்க்கார் உத்தியோகஸ்தர்களைத் தவிர, கிராமத்தில் எல்லாரும் வாக்குக் கொடுத்துவிட்டார்கள். இந்த ஸர்க்கார் ஊழியர்கள்கூட, அவர்கள் கையெழுத்துப் போடாவிட்டாலும், கடைசிவரையில் கிஸ்தி செலுத்தாமல் திடமாயிருந்தார்கள்.

ரானிபராஜ் வகுப்பார்க்கு, மெதுவாகத்தான் கண் விழிப்பு உண்டாயிற்று. நோட்டீஸ் ஸாதாரா ஆகாமலே, சில பனியாமார்கள் கிஸ்தி செலுத்திவிட்டார்கள் என்றுமே அவர்கள், தங்களிடம் வழக்கமாகக் கடன் வாங்கும் ரானி பராஜ்மார்கள் சிலருக்குக்கூடச் சேர்த்து, வரியைக் கொடுத்து விட்டார்கள். இது எதிர்ப்பார்த்ததுதான். ஆனால், பெரும் பகுதிப் பனியாமார்கள் கொடுக்காமல் நிறுத்திக்கொண்டார்கள்.

குடியை நிறுத்திக்கொண்ட ரானிபராஜ்மார்களுள் ஆண்களும் பெண்களும் சுத்தமான கதர் ஆடை தரித்துக்கொண்டு

கூட்டத்துக்கு வருவார்கள். கூட்டத்திலே, ஸர்தாரின் பிரசங்கம்மட்டுந்தானு தெவிட்டாத தித்திக்கும் தேன்? தொண்டர்கள் பாடுவது அற்புதம். கத்தியாவாடிலிருந்து நான்குபேர்கள் வந்திருந்தார்கள். அவர்களுடைய கீதம் தேவகானம்தான். பூல்சந்த் கஸ்தூர்ச் சந்த் ஷா, அவர் மனைவி, அவரது தோழர்கள் சிவனுனந்தர், ராம் நாராயணன், இவர்கள் பாடுவதைக் கேட்டு ஜனங்கள் சொக்கிப்போய்விடுவார்கள். பூல் சந்த் ஒரு கவி. ஏற்கனவே, அவர் பல பாடல்கள் இயற்றியிருந்தார். இப்பொழுது தாலூகாவிலிருக்கும் உற்சாகத்தினுல் இன்னும் புதிது புதிதாகப் பாடல்கள் பாட, அவருக்கு ஆவேசம் உண்டாயிற்று. இவர்கள் முதலிலே, வலோட் கிராமத்தில் வந்து தங்கினுர்கள். ஆனுல், அவர்களுடைய பஜனை மூலமாய், அவர்களுக்குத் தாலூகா முழுதும் 'கிராக்கி' ஏற்பட்டுவிட்டது.

பூல் சந்த் ஷா அவர்கள், சத்தியாக்கிரக தத்துவத்தைப் பற்றிப் பாடிய பாட்டுகள் யாவும் மிகவும் எளிய நடையில், சாதாரண மெட்டில் அமையப் பெற்றனவாகும். குழந்தை முதல் எல்லோருக்கும் அவைகள் நெட்டுரு ஆகிவிட்டன. எல்லோரும் தாங்களாகவே பாட ஆரம்பித்துவிட்டார்கள். இந்தப் போராட்டத்தில், பூல்சந்த் ஷாவின் பாட்டுகள் செய்த வேலை இவ்வளவு அவ்வளவு என்று சொல்லிமுடியாது.

'ஆண்களோடு பெண்களும் சரி நிகர் சமானமாக'க் கூட்டங்களுக்கு வருவது வழக்கமாகிவிட்டது. பிரபல பார்ஸி குடும்பத்தைச் சேர்ந்த ஸ்ரீமதி மிதுபென் பெடிட் அவர்களும் தர்பார் சாகேப் கோபால தாஸின் மனைவியார் ஸ்ரீமதி பக்தி பென் அவர்களும் ஸ்திரீகளுக்குத் தலைவிகள். ஸ்ரீமதி மிதுபென் பணக்காரியாதலால், அவர் முரட்டுக் கதர்ச் சேலையை உடுத்திக்கொண்டு, கிராமப் பிரசாரம் செய்ய ஆரம்பித்தவுடனேயே, பெண்களுக்கும் கதரில் மோகமுண்டாயிற்று. ஆண்களும், வெட்கிப்போய்க் கதர்ப் பித்தர்களானுர்கள். ஸ்ரீமதி மிதுபென், கால் நடையாக, 'நடையன்' ஒன்றுமில்லாமல், கதர் மூட்டையைத் தூக்கிக்கொண்டு, கிரா

மம் கிராமமாகச் சென்ற காட்சியே! காட்சி இவருடைய அரிய தியாகத்தில், கிராமவாசிகள் ஈடுபட்டுப் போனார்கள்.

நம்முடைய நண்பர் பழைய டெபுடி கலெக்டர் இருக்கிறாரே, அவர் சும்மா யிருப்பாரா? நல்ல வாலிபம்! போதாக் குறைக்கு, அவர் சொன்னபடி யெல்லாம், மேலதிகாரிகள் கேட்கிறார்கள். எனவே, அவர் உற்சாகமாய் வேலை செய்வதற்கு என்ன தடை? வலோட் கிராமத்தில், தனவந்தர்களான இரண்டு பனியாமார்களை இவர் கூப்பிட்டு, “உங்கள் வீட்டிலே, கிஸ்திக்கு வேண்டிய பணத்தை, நோட்டாக வைத்திருங்கள். நான் ஜப்தி ஆபீசரை அனுப்புகிறேன். அவர் இந்தப் பணத்தை ‘அட்டாச்’ பண்ணி எடுத்துக்கொண்டு வந்துவிடுவார். உங்கள்பேரிலே பழியும் வராது; கிராமத்தார்களையும் ஏய்த்துவிடலாம்” என்று புத்தி சொல்லிக் கொடுத்தார்.

சொன்னது ‘பலிச்சுப் போச்சு’. 1500 ரூ. 785 ரூ. நோட்டுகளை, அந்தப் பக்தர்கள் தயாராக வீட்டில் வைத்திருந்தார்கள். ஜப்தி சிப்பந்திகள் வீட்டுக்குள்ளே நுழைந்து, நோட்டுகளை எடுத்து, கிஸ்திக்கு வரவு வைத்துவிட்டார்கள். ‘உங்கள் பேரில் பழிவராது கிராமத்தார்களை ஏய்த்துவிடலாம்’ என்று டெபுடி கலெக்டர் யுக்தி சொன்னாரே, அந்தப் பாகம் யோசனைதான் பலிக்காமற் போய்விட்டது. ‘உள்வையினத்திலே’ காரியம் நடந்துவிட்டது என்று கிராமத்தார்களுக்கு எப்படியோ தெரிந்துவிட்டது. அவர்களுக்கு ஆத்திரம் பொங்குகிறது. இந்தச் செய்தி, எல்லாக் கிராமங்களுக்கும் காட்டுத் தீயைப்போலப் பரவிவிட்டது.

இந்த இரண்டுபேர்களையும் பகிஷ்காரம் செய்வதென்று கிராமத்தார் கூட்டம் கூடினார்கள். இதைக் கேட்டதும், வல்லபாய் நடுநிசியிலே அந்த ஊருக்கு ஓடி, கிராமத்தைச் சமாதானப்படுத்தினார்.

‘வலோட் மகா ஜனங்களே! நீங்கள் ஆத்திரப்படுவது தர்ம மல்ல. ‘நாங்கள் சாத்விகமாகப் போராடுவோம்’ என்று

உங்கள் உறுதிமொழிப் பத்திரத்தில் கண்டிருக்கிறது. சாத்விகத்துக்கும் கோபத்துக்கும் வெகுதூரம். இந்த இரண்டு துர்ப்பாக்கியசாலிச் சகோதரர்கள் செய்த காரியத்தால், நீங்கள் உங்கள்சங்கற்பத்தைத் திடப்படுத்திக்கொள்ளவேண்டும் எதிர்காலத்துக்கு, இதுவே உங்களுக்கு எச்சரிக்கையாகும்.

"இவர்கள் இருவரும், அதிகாரிகளின் போதனையால் செய்த காரியமாகும் இது. இவர்கள் அதிகாரிகளின் சூழ்ச்சிக்கு இரையாகிவிட்டார்களே என்று நீங்கள் இவர்களின் பேரில் இரக்கப்படவேண்டும். இவர்கள்பேரில் கோபித்துக் கொள்ளலாமோ! உங்களாலே தவிர்க்க முடியாத காரியத்திலே நீங்கள் ஆத்திரப்படுவது லாபமில்லை. அவர்கள் செய்தது கேவலமான வேலைதான். ஆனால், அதைக் கிண்டிக் கிளற வேண்டாம்.

"இயக்கத்தை விட்டு நழுவிப்போகிறவர்கள் சிலர்கூட இருக்கவேமாட்டார்கள் என்று நீங்கள் மனப்பால் குடித்துக் கொண்டிருக்கவில்லையே. இவர்களைச் சும்மா விட்டுவிட்டால், கட்டுப்பாடு குலைந்து அழிந்து போகும் என்று நீங்கள் பயப்படுகிறதாகத் தோன்றுகிறது. கையெழுத்துப் போட்டவர்கள், தெரிந்தே வேண்டுமென்று, அதற்கு மீறி நடப்பார்களானால், அவர்களை உங்களால் எவ்வளவு காலம் தடுக்க முடியும்? கடுமையான எந்த நடவடிக்கையையும் அவர்கள்பேரில் நீங்கள் எடுத்துக்கொள்ளக்கூடாது என்று உங்களை மன்றாடிக் கேட்டுக்கொள்ளுகிறேன். கசங்கக்கூடியவர்கள் யார் என்று கண்டுபிடித்து' பின்னாலே அவர்கள் கிஸ்தி கொடுப்பதைக் காட்டிலும் முன்னாலேயே கொடுப்பது நல்லது என்று அவர்களிடம் சொல்லுங்கள். எது நேர்ந்தாலும் நேரட்டுமே! என் திகிலடையவேண்டும்?

"இன்றைக்கு ஜப்தி யதிகாரி கொக்கரிக்கலாம். ஆனால், இனிமேல் அவருக்கு இந்தத் தாலூகாவில் வேலை இருக்காது."

கிராமத்தார் ஒருவாறு சமாதானம் அடைந்தார்கள். தப்பிப்போன இரண்டுபேரும் போதுமானபடி பிராயச்சித்தம்

செய்துகொண்டாலொழிய அவர்களோடு உறவாட, மற்ற வர்கள் மனங்கொள்ளவில்லை. பதிதர்களிடம் (சறுக்கி விழுந்தவர்களிடம்) போய்க் கட்சிபேசி, அவர்கள் செய்தது தவறு என்று உணரும்படி செய்து, பகிரங்கமாக மன்னிப்புக் கேட்டுக்கொள்ளும்படி அவர்களை வழிக்குக் கொண்டுவருகிற வரையில், கிராமத்தார்களுக்குத் ‘ தூக்கம் கிடையாது ’.

அவர்கள் மன்னிப்புக் கேட்டுக்கொண்டதுடன், பாக்கிக் கிஸ்தியைக் கொடுப்பதில்லையென்றும் உறுதியாகச் சொன்னார்கள். அதுமட்டுமா ? கொழுக்கட்டை தின்ற வாய்க்குக் குறுணிமோர் தட்சிணையாம் ! அவர்களில் ஒருவர், தமக்கு ஆத்ம சுத்தி ஏற்படுவதற்காக, தாமே விதித்துக் கொண்ட அபராதமாக, சத்தியாக்கிரகப் போராட்ட நிதிக்குப் பாதகாணிக்கை, ரூ. 800 சமர்ப்பித்தார்.

தீமை யிலிருந்து கூட நன்மை சில சமயங்களில் வரும் என்கிறார்களே, அந்தச் சம்பவங்களில் இது ஒன்று. அவர் ஸர்க்கார் கிஸ்தியைக் கொடுத்தது மறந்து போய்விட்டது. அவர் சமர்ப்பித்த சத்தியாக்கிரக நிதியைப்பற்றித் தான், ஜனங்கள் பேசிக் கொண்டார்கள்.

மாதம் முடிகிற சமயம். என்றாலும் பதிதர்களாய்ப் போனவர்கள் இரண்டொருவர்தான். தங்கள் காலமும் நெருங்கிவிட்டது என்று மணியக்காரர்களும் உணர்ந்தார்கள். நடவடிக்கை எடுத்துக்கொண்டு, நோட்டீஸ் கொடுத்தாகி விட்டது. ஜப்தி, ஏலம் பாக்கி, இவைகளிலே, மணியக்காரர் கள் ஒத்துழைக்க வேண்டுமல்லவா ?

ஆனால், ஸர்தார் தமது ஒவ்வொரு பிரசங்கத்திலும் என்ன சொல்லுகிறது வழக்கமென்றால், “ கிராமத்தார்களின் வாய்தான் மணியக்காரர். கிராமத்தின் சார்பாகப் பரிந்து, ஸர்க்காருடன் பேசவேண்டியது அவருடைய கடமையாகும். அநியாய வரியை வசூல் செய்வதற்காக, தம்முடைய சகோதரர்களின் சொத்தை ஜப்தி செய்து, அவர்களுக்குத் தொந்திரவு கொடுத்து, இம்சிக்கப்படாது. ஜப்தி வேலை, தமது

அந்தஸ்துக்கும் சுயமரியாதைக்கும் கீழான வேலை என்று மணியக்காரர் ஸர்க்காரிடம் முறையிட்டுக் கொள்ளவேண்டும்" என்றுதான்.

பர்டோலியிலே, அறுபது மணியக்காரர்கள் கூடி, ஸர்தாரோடு கலந்து பேசினார்கள்; மனதைவிட்டுப் பேசினார்கள். "கேவலமான ஜப்தி வேலையில் தாங்கள் ஒத்தாசை செய்வதில்லை" என்று அவர்கள் ஏகமனதாய்த் தீர்மானித்துக்கொண்டார்கள். தலையாட, வால்மட்டும் சும்மா யிருக்குமா? "ஜப்தியான சொத்தைத் தூக்குவது முதலிய எவ்வித சகாயமும் உத்தியோகஸ்தர்களுக்குச் செய்வதில்லை" என்று வெட்டி, தலையாரிகளைச் சேர்ந்த வர்க்கத்தாராகிய 'துப்ளர்கள் தேட்' அடங்கிய ராணிபராஜ்மார்கள் தங்கள் கூட்டங்களில் தீர்மானித்துக் கொண்டார்.

துண்டுச் செய்தித் தினசரி மூலமாக, இயக்கம் நெடுந்தூரம் பரவி விளம்பர மாகிவிட்டது. பக்கத்து ஜலால்பூர் தாலூகா வாசிகள் பணஉதவி செய்கிறோம் என்று ஸர்தாருக்குத் தெரிவித்துக் கொண்டார்கள். பர்டோலிக்கு அனுதாபத்தைத் தெரிவிக்க, சூரட்டிலே ஒரு மகாநாடு கூட்டுவது என்று யோசனை செய்தார்கள். ஒன்றுக்காவது, வல்லபாய் இடங் கொடுக்கவில்லை.

"ஸர்க்கார் கடுமையான முறைகளைக் கையாளத் துவக்கட்டும்; ஜனங்களும் தங்களிடம் சத்தியாக்கிரகிகளின் சகிப்புத் தன்மை அமோகமாய் இருக்கிறது என்று ருசுப்படுத்தட்டும். அப்பொழுது, அபிமானிகள் ஒத்தாசைசெய்ய முன்வரலாம். அடக்குமுறைத் தீக்குதிப்பு (அக்கினிஸ்நானம்) எங்களுக்குக் கிடைக்கும் வரையில், அனுதாபிகள் தங்கள் அனுதாபத்தைப் பத்திரமாக, மூட்டைகட்டி வைத்திருக்க வேண்டும் என்று வேண்டிக் கொள்ளுகிறேன். எங்களை விளம்பரப் படுத்திக் கொள்ளக் கூடியதாக, நாங்கள் இதுவரையிலும் பிரமாதமாக ஒன்றுமே செய்துவிடவில்லை" என்று ஸர்தார், அபிமானிகளைப் பார்த்து ஒரு போடு போட்டுவிட்டார்.

எதிரிக்கு அனுவசியமாகக் கோபம் மூட்டாமல், வரையோடு போராடுவதே, சத்தியாக்கிரகத்தின் தத்துவமாகும். சத்தியாக்கிரகம் டம்ப விளம்பர வேலையல்ல. அது உயிர்ச் சத்தைத் தந்து வளர்க்கும் அமிர்த சஞ்சீவியாகும்.

## அத்தியாயம் 12.

பர்டோலித் தாலூகாவில், 32 கிராமங்கள், தங்களுக்கு இயல்பாயுள்ள கீழ்த்தரத்திலிருந்து, மேல் தரத்துக்கு, அர்த்தமில்லாமல், அநியாயமாய்ஸெட்டில்மெண்டில்உயர்த்தப்பட்ட விஷயம் ஏற்கனவே குறிப்பிடப்பட்ட விஷயம்; வாசகர்கள் மறந்திருக்க முடியாது. இந்தக் கேவலமான ஒழுங்கீனத்தை, ஸர்தார் அரசாங்கத்தாருக்குத் தெரியப்படுத்தினர். மேல்தரமாகச் சேர்க்கப்பட்ட கிராமங்களுக்குப் புதிதாக நோட்டீஸ் தேவையில்லை என்று வியாக்கியானம் செய்து மழுப்பப் பார்த்தார்கள். ஆனல், ஜனங்களுடைய கட்டுப்பாடான சக்திக்குப் பயன் இல்லாமற் போய்விடுமா? 32 கிராமங்களிலே, 22 கிராமங்களை, மறுபடியும் அவைகளுடைய பழைய தரத்துக்குக் கொண்டு வந்துவிட்டதாக, அரசாங்கத்தார் அறிக்கை விடுத்தார்கள். ஸெட்டில்மெண்டு ஆபீசரின் தவறு கொஞ்சம் 'ரிபேர்' ஆயிற்று.

இதிலிருந்து, அதிகாரிகளுக்கு ஞானேதயம் ஏற்பட்டுவிட்டதாகச் சொல்லி விடுவதற்கில்லை. தர உயர்வு சம்பந்தமாக, இந்தப் புதிய ஏற்பாடு செய்யப்பட்டதே யொழிய, வரி உயர்வு சம்பந்தமாக எதுவும் செய்யத் தாங்கள் தயாராயில்லை என்று அரசாங்கத்தார் தெளிவுபடுத்தினர்கள். இந்த அறிவிப்பினல், அபத்தமான தர உயர்வு ரத்து செய்யப்பட்டதைக் குறித்து, ஜனங்கள் மகிழ்ச்சியடைந்தார்கள். இது சிறிது லாபம் தானே? ஆனல் ஜனங்களின் கட்சி யென்ன? ஸெட்டில்மெண்டு, சட்டப்பிரகாரம் சரியான முறையில் நடைபெறவில்லை என்ற அவர்கள் கட்சிக்கு இன்னும் பரிகாரம் ஏற்படவில்லை.

ஸ்ரீ பீம்பாய் நாய்க், பம்பாய்ச் சட்டசபையில் கேள்வி

கேட்டதற்கு, "ஸெட்டில்மெண்டு செய்கையில், பொதுவாக ஜனங்களின் பொருளாதார நிலையை விசாரிக்க வேண்டிய தில்லை. அப்படி விசாரிப்பது பொருத்தமும் இல்லை. குத்த கையையும் பகுதிப் பணத்தையும் கொண்டு, வரி நிர்த்தார ணம் செய்வது தான் உண்மையான, அடிப்படை முறையா கும்; ஏனெனின், இதன் மூலமாய், பொருத்தமான பொரு ளாதாரக் குறிப்புகள் யாவும் இதில் அடங்கியிருப்பது புலனுகும்" என்று கூச்சமில்லாமல் பதில் சொன்னுர் ரிவினியூ மெம்பர்.

தன் கட்சிதான் சரி என்று பித்துக் கொண்டிருப்பவர் களுடைய சமாதானமும் வியாக்கியானமும் இந்த வகையிலே தான் செல்லும். பர்டோலியின் வரி உயர்வுக்கு அவர் சமா தானம் சொல்லுகையில், "அவர்கள் இப்பொழுது அதிகம் குடிப்பதில்லை; ரொம்பப் பணம் மிச்சப்படுத்தி வைத்திருப் பார்கள். ஆகையினுலே, கொஞ்சம் ஜாஸ்தியாகக் கிஸ்தி செலுத்தலாம். 1833-இல் கிஸ்தி இருந்ததைக் காட்டிலும் இப்பொழுது நூற்றுக்குப் பதினேழு வீதம் தானே உயர்ந் திருக்கிறது? சுமார் நூறு வருஷ காலத்திலே இதுதானே உயர்வு" என்று நொண்டிப் பேச்சுப் பேசினுர். நல்லபழக்கங் களால் ஜனங்கள் மீத்துவைக்கும் பணத்தை எப்படியாவது சர்க்கார் கஜானுவுக்குக் கொண்டுவந்து சேர்த்து விட வேண்டும் என்பது ரிவினியூ மெம்பரின் நோக்கம் போலும்!

நூற்றுக்குப் பதினேழு வீதம் தான் உயர்ந்திருக்கிறது என்ருரே, அந்தக் கணக்கும் பொய்க்கணக்கு. எப்படி யென் ருல், 20 ஏகர் நிலம் சாகுபடி செய்யும் குடியானவன், ஆறு ஏகர் மேய்ச்சல் தரைப் பூமியை இலவசமாய் அனுபவிக்கலாம் என்று 1833-இல் இருந்தது; சாகுபடி செய்த நிலத்துக்குத் தான் கிஸ்தி. ஆனுல் இந்தப் புதிய ஸெட்டில்மெண்டு பிரகாரம் அந்த ஆறு ஏகர் மேய்ச்சல் பூமிக்கும், சாகுபடி நிலத்தைப் போலக் கிஸ்தியுண்டு. கணக்குப் போட்டுப் பார்த்தால், ரிவினியூ மெம்பர் சொன்னதுபோல, நூற்றுக்குப் பதினே ழல்ல; நூற்றுக்கு ஐம்பத்திரண்டு உயர்வு. நஷ்டம் இது

மாத்திரமல்ல. மேய்ச்சல் தரை, குடியானவனுக்கு இலவச மாய்க் கிடைத்த காலத்தில், ஏராளமாக அவன் மாடு கன்று களை வளர்க்க முடிந்தது. இப்பொழுது மேய்ச்சல் பூமிக்கும் கிஸ்தி என்று ஏற்பட்டவுடனே, அவன் முந்திப் போல அத்தனை மாடுகள் வைத்துக்கொள்ள முடியவில்லை. வளர்க் கிற மாடுகளுக்கும், தீனி சரிவர இட்டேறுவதுமில்லை.

"கொண்டைமேலே கிஸ்தி ஏறிவிட்டது என்கிறார்களே; அப்படியானால், மிராசுதார்கள் நிலங்களை விட்டுவிடுகிறது தானே" என்று ஸெட்டில்மெண்டுக் கமிஷனர் ஆண்டர்ஸன் துரை, ஆத்திரத்துடன் கேட்கிறார். "முப்பது வருஷங் களுக்கு முன்னர், கிஸ்தி வசூலுக்கு யாதொரு நடவடிக்கை யும் எடுத்துக்கொள்ளப் பட்டதுமில்லை, தேவையு மிருந்த தில்லை. இருந்தாலும் கிஸ்தி சுமையாகச் சுமந்து போய் விட்டதாம்!" என்று மேலே சொன்ன துரை நையாண்டி செய்கிறார். இவ்வளவு ஆத்திரத்துக்கு நடுவே, கேலியும் செய்யமுடியும் என்று இவருக்குத் தோன்றிற்றே, அதைக் கண்டு நாம் எல்லோரும் சந்தோஷப்பட வேண்டியது தான்.

ஸெட்டில் மெண்டு ஆபீசர் ஸ்ரீ ஜயகாரின் யாதாஸ்தை, இதே ஆண்டர்ஸன் துரை பரிசீலனை செய்கையில், "தாக்கலா யிருக்கிற புள்ளி விவரங்கள் யாவற்றையும் தமாஷாச் செய்து பார்ப்போமானால், 1896-ம் வருஷ ஸெட்டில்மெண்டில் பர் டோலி அளவுக்குமீறி வரிவிதிக்கப்பட்டது என்ற முடிவுக்கு வரலாம்; அல்லது குத்தகை வருமானத்தில் பேர்பாதிக் கிஸ்தி என்ற எல்லைக்குச் சரியாகவந்து விட்டதாகவும் சொல்லலாம்" என்று குறிப்பு எழுதி யிருக்கிறார்.

"கிஸ்தி கடுமையாயிருந்தால், மிராசுதார் ஏன் நிலத்தை விட்டு விடவில்லை" என்று அவர் ஆடம்பரமாகக் கேட்கிறார். மனைவி வாய்ப்பட்டி என்று சன்னியாசம் வாங்கிக்கொள்வதா அல்லது வாங்கிக்கொள்ள முடிகிறதா? பிள்ளை ஊதாரிச் செலவுகாரன் என்று அவனிடமிருந்து உறவை அறுத்துக் கொள்ளமுடிகிறதா? பொறுப்பில்லாதபடி கண்டபடிஎல்லாம்

எழுதவும் பேசவும் காரியங்கள் செய்யவும் கங்கணங் கட்டிக் கொண்டிருக்கிற ஆண்டர்ஸன், ஜயகார் அவர்களைப்போன்ற அதிகாரிகளை வேலையிலிருந்து நீக்கத்தான் முடிகிறதா? பாசமும் பிராரப்தமும் சேர்ந்து போராடும்பொழுது, சில விஷயங்களை லேசாகச்செய்துவிட முடியாது என்றால், ஆண்டர்ஸன் துரை கேட்கப்போகிறாரா?

"விவசாயத்தினால் மட்டும், ரயத்துகள் ஜீவனம் செய்ய முடியுமா என்று என்னைக் கேட்டால், முடியாதுதான். ஆனால் அவர்கள் விவசாயமில்லாத காலத்தில், கூலி வேலை செய்யலாம்; தங்கள் கட்டை வண்டிகளை வாடகைக்கு விடலாம்; பால் விற்கலாம்; நெய் விற்கலாம், இத்யாதி" என்று, ஸர்தாரை அவமானப் படுத்தத் துணிந்த ரிவின்யூ ஸெக்ரிடெரி ஸ்மித் அவர்கள் கெட்டா ஜில்லாவில் அவர் 1924-ம் வருஷம் கலெக்டராக இருக்கையில், இருபத்திரண்டு பேர்கொண்ட பழைய வரி நிர்மாணக் கமிட்டி ஒன்று குறிப்பிட்டோமே, அதன் முன்னிலையில் சாட்சியம் சொல்லியிருக்கிறார். ஆண்டர்ஸன் துரைக்கு ஸ்மித் துரை ஜவாப்பு சொல்லிவிட்டார். துரைக்குத் துரை எது வேண்டுமானாலும் சொல்லலாம். அது பொறுத்துப் போய்விடும். நாம்தான் சொல்லப்படாது. சொன்னால், அது பொய்யாகக்கூடப் பாவிக்கப்படும்.

இவைகள் எல்லாம் ஒழிந்து போகட்டும். ஆண்டர்ஸன் துரை, சட்டசபையில் தமது பிரசங்கத்தை முடித்த தோரணையைப் பாருங்கள். "ஒருவன் கட்சி நியாயமாயிருந்தால் அவனுடைய சக்தி பத்தாள் சக்திக்குச் சமம். அது போலவே அரசாங்கத்தாரின் சக்தியும்; ஏனென்றால் அவர்களுடைய கட்சி நியாயமானது" என்று அவர் ஆரம்பித்து உச்சஸ்தாயிக்கு, இமைப்பொழுதுக்குள் ஏறிவிடுகிறார்.

"சில ஆண்டுகளுக்குமுன், கம்பீரமாகச் சட்ட மறுப்பு அபிநயம் செய்ததால், பர்டோலி, உலகப்பிரசித்தம் பெற்றுவிட்டதாக, நமக்குச் சொல்லப்பட்டு வருகிறது. தலைவர் அவர்களே! அதற்குப் பெயர் வந்துவிட்டது என்பதை நான்

ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால் அது எப்பேர்ப்பட்ட கீர்த்தி! வீணாகக் கேலிக்கு ஆளாகும் கீர்த்தியை நம்மில் யாரேனும் விரும்புவார்களா? இந்த நிலங்களை விற்பதற்குச் சமயம் வரும் பொழுது அவைகளை வாங்குவதற்கு, ஏராளமான ஜனங்கள் முன்வருவார்கள் என்று இந்தப் போராட்டத்தைநடத்துபவர் கள் நன்கு அறிந்துகொள்ளட்டும் என்று நான் சொல்லுகி றேன். நல்ல சொத்தை ஏலம் எடுக்காமல், ஜனங்களைப் பலாத் காரமாகவோ, சாத்வீக முறையிலோ, தடுக்கவே முடியாது. அவர்கள் வெற்றி விருது கூறிக்கொண்டிருக்கவேண்டாம். அவர்கள் கண்டிப்பாய்த் தோற்றுப்போகப் போகிறார்கள். இதை நன்றாக உணரும்படியாக நான் அவர்களை வேண்டிக் கொள்ளுகிறேன்."

ஏதேச்சாதிகாரிகள்இவ்வாறுதான் எப்பொழுதும் பேசி, ஏமாந்து போயிருக்கிறார்கள் என்று சரித்திரம் முறையிடுகி றது. பர்டோலிக் கதையும் ஆண்டர்ஸன் துரைக்கு விரோத மாகத்தான் தீர்ப்புச் சொல்லிவிட்டது. பர்டோலிவாசிக ளுக்கு உயிர்த்தோழரும் ஒப்பற்ற தலைவருமான ஸர்தாரைக் காட்டிலும், அவர்களிடத்தில் ஆண்டர்ஸன் துரைக்கு வாஞ் சை இருக்கிறதாம்! பர்டோலியின் கௌரவத்திலே, மானத் திலே, ஆண்டர்ஸன் துரைக்குத்தான் அதிக அக்கரையாம்!

## அத்தியாயம் 13.

ஆனால், நம்ம கதையை, நடுவில் நிறுத்திவிடலாகுமா? பனி யாமார்களின் பேரில் 'சாதரா' செய்த நோட்டீஸ்களினால், ஸர்க்காருக்கு யாதொரு நல்லதும் ஏற்படவில்லை அவைகளை யெல்லாம் உபயோகமில்லாத காகிதங்களாகவோ அல்லது மஞ்சள் நிறத் துண்டுச் சீட்டுகளாகவோ, ஜனங்கள் மதித்தார் கள். ஜப்தி வேலையில், கர்ணங்கள் ரொம்பவும் முனைந்துதான் நின்றார்கள். முனைந்தது வீண். மோகனலால் பாண்டியா, ரவிசங்கர் பாய், தர்பார் சாகேப் கோபாலதாஸ் இவர்களுக்கு ஜப்தி சிப்பந்திகளின் 'வேலை மானங்கள்' எல்லாம், இண்டு இடுக்கு விடாமல் தெரியும். எனவே ஜப்தி நடவடிக்கைகளைப்

புழுதி மாயமாக்கத் தக்க யுக்திகளை அவர்கள் ஜனங்களுக்குச் சொல்லிக் கொடுத்தார்கள். கர்ணனும் வெட்டியும், ஜப்தி செய்ய வீடுகளுக்குச் சென்றால், அவர்களிடம் என்ன செய்கிறதென்று சின்னக் குழந்தைகளுக்குக்கூடத் தெரியும். "நீங்கள் இந்த மாதிரி செய்யப்படாது என்று உங்களிடம் சொல்லும்படியாக எங்களுக்கு உத்தரவு. ஸர்தார் என்ன செய்யணும் என்று சொல்லுகிறார், தெரியுமா" என்று தொண்டர்கள், அவர்களிடம் வல்லபாயின் பிரசங்கங்களைப் படிக்கத் துவக்கிவிடுவார்கள்.

"உங்களுக்கு இப்பொழுது வேண்டியது என்ன தெரியுமா? அதுதான் பயமின்மை" என்பார் ரவிசங்கர். ஜனங்களிடம், இவ்வாறு கேட்கிறதன் பயனாக, அவர்களுடைய சக்தி நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து கொண்டே வந்தது. ராணி பராஜ் வகுப்பைச் சேர்ந்த மணியக்காரர்களுக்குக்கூடத் தைரியம் உண்டாயிற்று என்றால், வேறு பாக்கி என்ன சொல்ல வேண்டும்? "சுவாமி! ஜப்தி வேலையில், உங்களுக்கு நான் யாதொரு ஒத்தாசையும் செய்ய முடியாது. ஜப்தியான சொத்தைத் தூக்கிக்கொண்டு போக, என்னிடம் 'வெட்டி கிட்டி' கிடையாது. கூலியாட்களும் இல்லை" என்று ஒரு ராணிபராஜ் கிராம மணியக்காரர் ஜப்தி ஆபீஸரிடம் சொல்லிவிட்டார்.

ஒவ்வொரு கிராமத்திலும் புதிது புதிதாகத் தொண்டர்கள் வந்து சேர்ந்து கொண்டிருந்தமையால், எல்லாக் காம்புகளும் நாளுக்கு நாள் வலுத்துக்கொண்டே வந்தன. தர்பார் சாகேப் அவர்களுடைய 'காம்பு', ஒரு தர்பார்தான். பாமினி கிராமத்தில், பெரிய வீடொன்றை, அவருக்காக, ஒரு பிரமுகர் ஒழித்துக் கொடுத்து விட்டார். ஒவ்வொரு நாள் சாயங்காலமும் பஜனை; அந்தச் சமயம், ஊரே கூடிவிடும். 'நவஜீவன்' பத்திரிகை படிப்பார்கள். காந்தியின் தற்சரிதத்தைப் படிப்பார்கள். இல்லாவிட்டால், பூல்சந்த் அவர்களுடைய சத்தியாக்கிரகப் பாட்டுகளைப் பாடுவார்கள். கூட்டம் கலைவதற்கு ராத்திரியில் நடுச் சாம மாகிவிடும். இன்

ஞொரு கிராமத்திலே, ஸத்தியாக்கிரக விடுதி, அந்தக் கிராமத்தின் ஏழ்மைத்தனத்துக்கு ஏற்றுப்போல, வைக்கோல் வேய்ந்த சிறிய குடிசையாக விருக்கும்.

ரூ. 800 சத்தியாக்கிரகநிதிக்குக் கொடுத்துப் பிராயச்சித்தம் செய்துகொண்டாரே, அவருடைய 'குற்றவாளி நண்பர்' இப்பொழுது, போராட்டத்துக்காக, ரூ. 651 கொடுத்துப் பரிகாரம் செய்துகொண்டார். இத்தகைய சம்பவங்களினால், ஜனங்களுக்கு உற்சாகம்; இது சிலசமயங்களில் எல்லைமீறிக் கூடப்போய்விட்டது எனலாம்.

கடோட் கிராமம் இன்னும் இயக்கத்தில் சேர்ந்து கொள்ளவில்லை. அந்த ஊரிலே இரண்டு பெரிய மிராசுதார்கள். அவர்கள் 'திமிர்கொண்டவர்கள்' போல நடந்து கொண்டார்கள். வேண்டுமென்றே பொது ஜனங்களைப் பழிக்கவேண்டுமென்றது மாதிரி, தங்களுக்கு எங்கெந்தக்கிராமங்களில் நிலங்கள் உண்டோ, அவைகளுக்கெல்லாம் கிஸ்தியைச் செலுத்திவிட்டார்கள். பக்கத்துக்கிராமத்து ஜனங்களுக்கெல்லாம் ஆத்திரம். கூட்டம் கூடினார்கள். "இந்த இரண்டு மகான்களின்நிலங்களை யாரும்உழுது சாகுபடி செய்வதில்லை. பண்ணை வேலைக்கு யாரும் ஆள் சேர்வதில்லை; சேர்த்துக் கொடுப்பதுமில்லை. கடோட் கிராமத்திலிருக்கும் மற்ற மிராசுதார்கள் இந்த இரண்டு பேர்களையும் அடக்கிவைக்க யாதொன்றும் செய்யாமையால், கடோட் கிராமத்தை, இதர கிராமத்தார்கள் பகிஷ்காரம் செய்ய வேண்டும்" என்று வாசாம கோசரமாய்த் தீர்மானம் செய்து விட்டார்கள். கடைசிப் பகுதியான கடோட் பகிஷ்காரத் தீர்மானத்தை ரத்து செய்யும்படி மோகன்லால் பாண்டியா பட்டபாடு பெரும் பாடாய்ப் போய்விட்டது.

ஜப்தி நிலத்தை யாரும் ஏலத்தில் எடுப்பதில்லையென்றும் பறிமுதலாகும் நிலத்தைக் கிரயத்துக்கு வாங்குவதில்லை யென்றும் சத்தியாக்கிரகப் போராட்டத்துக்கு நிதி சேர்க்க வேண்டுமென்றும் அந்தந்த ஜாதிக் கூட்டங்களிலே, தீர்மானம் செய்தார்கள். போராட்ட நிதிக்காக, யாரும்

போய்க் கேட்காமலே சாமான்களாக வந்து குவிந்தன. “ சாமானுக வேண்டியதில்லை; இஷ்டப்பட்டவர்கள் பணமாக அனுப்பினுல் நலம். ஏனெனில், தான்யங்களை விற்பதும் கணக் கெழுதுவதும் கஷ்டமாயிருக்கிறது ” என்று பின்னர் அறிவிக்கப்பட்டது.

இதுவரையிலும், நூற்றுக்கணக்கில் அபராத நோட்டீஸ் கள் சாதரா செய்யப்பட்டன. ஆனுல், அவைகளை யாரும் லட்சியம் செய்ததாகத் தெரியவில்லை. யாரும் ஏழை ரானி பராஜ் மிராசுதாரை எளிதிலே மிரட்டலாமே! நம்ப நண்பர் டெபுடி கலெக்டர், இந்த வேலையைச் செய்யாமல் சும்மா இருந்து விடுவாரா ?

டெ. கலெக்டர்:—ஏன், உன் கிஸ்தியை இன்னும் கொடுக்கவில்லை ?

ரா. மிராசுதார்:—எஜமான் ! தாராளமாய்க் கொடுக்கி றேனுங்க ! உயர்த்தி யிருக்காங்களே, அந்த வரியை மட்டும் தள்ளிவிடச் சொல்லுங்க, எஜமான் !

டெ. க:—வரியைக் கொஞ்சந்தானே உயர்த்தி யிருக் கிறது!

ரா. மி:—எங்களுக்குக் கட்டுங்களா, எசமான் ? எங்க சோறைக் கஞ்சியாய்க் காய்ச்சி நாங்க குடிக்கிறேங்க. அது கூட எங்களுக்குக் கிடைக்காமல், எசமானுங்க செய்யணுமா!

டெ. க:—நீ கிஸ்தி செலுத்தாமற் போனே, உன் நிலம் கண்டிப்பாய் உன் கை விட்டுப் போய்விடும்.

இதற்கு வசனத்திலே பதில் சொல்லவேண்டும் என்கிற இஷ்டமே அந்த மிராசுதார்க்கு ஏற்படவில்லை. ஒரு பாட்டை அப்படியே பாடினுர். அந்தப் பாட்டின் கருத்துப் பின்வரு மாறு:—“ பூவிலே ராசா, பருத்திப் பூவுங்க. மற்றெல்லாப் பூவும் செல்லாக்காசு கூடப் பொறுதுங்க. ராசாக்கெல்லாம் ராசா வர்ண பகவானுங்க. எந்த ராசாவும் எங்க நிலத்தைக்

கொண்டு பொய்த்திட முடியாதுங்க. அந்த ராசா இருக்காரே, மழை ராசா, அவங்க பேயல்லே, எங்க கதி அதோ கதிங்க"

இந்த மாதிரி, (தீண்டாத வகுப்பார் ஒருவர்) பாட்டிலே டெபுடி கலெக்டருக்குப் பதில் சொல்லுவதாயிருந்தால், பர்டோலியின் நிலைமை எப்படி மாறிப் போயிருக்க வேண்டும்? மிராசுதார் நேரே நிமிர்ந்து பார்த்துப் பதில் சொன்னல், அதுகூட அதிகாரிகளுக்குக் கலக்கத்தை உண்டாக்கத் தான் செய்யும்.

1914-வது வருஷத்திலே மகாயுத்தம் ஆரம்பித்தவுடனே, கற்றுக்குட்டிப்போர் நிபுணர்கள்எல்லோரும்,யுத்தம் இரண்டு மூன்று மாதகாலத்துக்குள், ஜெர்மனி அடியோடு அழிந்து போகிறதோடு முடிவடைந்து போகும் என்று துள்ளினர்கள். கிச்சினர் பிரபு மட்டும் மூன்று வருஷத்துக்குமேல் இழுக்கும் என்றார். நம்ம நண்பர் டெபுடி கலெக்டர் இருக்கிறரே, அவர், என்ன தெரியுமா, சர்க்காருக்கு யோசனை சொன்னர்? "பத்துப் பதினைந்து பயங் கொள்ளிப் பனியாமார்களுக்கு மட்டும் நோட்டீஸ் 'ஸர்வ்' பண்ணினல் போதும், எல்லாருக்கும் ஆட்டம் கண்டுவிடும்" என்று நிபுணரைப்போல யோசனை சொன்னர். ஆனல் "முதல் குறி அடிகள்" எல்லாம் வீணய்ப் போயின. அருண்டவனுக்குத்தானே, இருண்ட தெல்லாம் பேய்? பயப்படாதவனுக்கு இருட்டுக் கூட வெளிச்சமாக மாறிவிடுமோ, என்னவோ? எனினும், மிராசுதார்களை இன்னும் பயங்கரமாகப் பயமுறுத்தவேண்டும் என்று அதிகாரிகள் தீர்மானம் கொண்டார்கள்.

மார்ச்சுமீ 26உ யைத்தான் நல்ல நாள் பார்த்தது போல, பாஜிபுரம் கிராம சேட் வீர்ச் சந்த் சேனஜி (இவர் ஒரு பனியா (அவர்களின் வீட்டுக்கதவில், வலோட் மாகாண ஜப்தி உத்தியோகஸ்தரின் கையெழுத்திட்ட நோட்டீஸ் ஒன்று ஒட்டப்பட்டது. "வலோட் மாகாணத்திலிருக்கும் உமது பட்டா நிலங்களின் கிஸ்தியாகிய 160—15—4 யையும்

வருகிற ஏப்ரல்மீ 12வுக்குள் நீர் செலுத்தாவிட்டால், அந்த நிலங்கள் பறிமுதல் செய்யப்படும்" என்று நோட்டீஸில் கண்டிருந்தது. இதேமாதிரி, அன்றையத்தினமே, வலோட் மாகாணத்து ஏழு மிராசுதார்களுக்கு நோட்டீஸ்!

இந்த நோட்டீஸ்கள் என்ன செய்யும்? சேத் வீர்ச் சந்த் அசைந்தால் தானே? அவர் வலோட் மாகாண மஹால் காரிக்கு (ரிவினியூ இன்ஸ்பெக்டருக்கு) தைரியமாக ஒரு கடிதம் எழுதினர். அதன் சில பகுதிகள் பின்வருமாறு:—

"இந்த நோட்டீஸுக்காக, இந்த (வலோட்) மாகாண முழுதிலும் என்னை நீங்கள் பொறுக்கி யெடுத்திருப்பதைப் பார்த்தால், இந்த மாகாணத்திலேயே, நான்தான் படு மோசமான பயங்கொள்ளி என்று நீங்கள் என்னைக் கருதுவதாக, நான் நம்பும்படி யிருக்கிறது. தாலூகா பூராவுமே பறிமுதல் செய்யப்பட்டதாக அறிவித்தாலும் சரி, ஒன்று உயர்வரியைத் தள்ளுகிற வரையில் அல்லது கமிட்டி நியமனமாகும் வரையில் யாருமே இந்தத் தாலூகாவில், இத்தகைய நோட்டீஸ்களைக் கவனித்துக் கீழ்ப்படியப் போவதில்லை என்பதை நீங்கள் அறிந்து கொள்ள வேண்டுமாய்க் கேட்டுக் கொள்ளுகிறேன்.

"நீங்கள் அரசாங்கத்தின் உண்மையான ஊழியன் என்று எண்ணிக் கொண்டிருப்பீர்க ளானல், தாலூகாவின் உண்மையான நிலைமையை, ஸர்க்காருக்கு நீங்கள் தெரிவித்து, அநியாயத்தைத் திருத்துவதில்நீங்கள் ஜனங்களுக்கு ஒத்தாசை செய்யவேண்டியது உங்கள் கடமையாகும். நீங்கள் பென்ஷன் வாங்கிக் கொள்ளுகிற காலமோ. ரொம்பக் கிட்ட நெருங்கிட்டது; எனவே, இந்த பழிச் சொல்லுக்கிடமான நிலைமையிலிருந்து எப்படியாவது நீங்கள் விலகிக் கொள்ள வேண்டுமென்று நான் உங்களை வணக்கமாக வேண்டிக் கொள்ளுகிறேன்.

"அடுத்தபடியாக, மிராசுதார்களின் நிலங்களைப் பறிமுதல் செய்வதைக் காட்டிலும், நீங்கள் உங்கள் வேலையை ராஜிநாமாச் செய்வது உசிதம் என எனக்குத் தோன்றுகிறது.

லீவு எடுத்துக் கொள்ளாமல், எவ்வளவோ லீவுக் காலத்தை நிறுத்திவைத்துக் கொண்டிருக்கிறீர்கள். முதலிலே லீவு எடுத்துக் கொண்டு, லீவு முடிகிற சமயத்தில் பென்ஷன் வாங்கிக் கொள்ளுங்கள். தங்களுக்குத் தகாத ஜப்திக் காரியத்தைச் செய்வதைக் காட்டிலும் அப்படிச் செய்வது தான் உத்தமம் என்று எனக்குப் படுகிறது"

ஸத்தியாக்கிரக மூச்சுக் காற்றை உள்ளே இழுத்துக் கொண்டேயிருந்தால், தைரியமும் அன்பும் உண்மையும் ஏன் வராது? "பனியாமார்கள் பலஹீனர்கள், பயங் கொள்ளிகள் என்று பெயர் படைத்து விட்டார்கள். அந்தப்பேர் பொய்த்துப் போகும்படியாக, இந்தப் போராட்டத்தில் அவர்கள் நடந்து கொள்ளுவார்கள். இதுவும் இதற்கு மேற் கொண்டும் வரும் என்று நாங்கள் எதிர் பார்த்துத் தான் இருக்கிறோம். ஸர்க்காருக்கு எதுஇஷ்டமோ, அதை அவர்கள் செய்யட்டும்" என்று பாக்கி ஏழு மிராசுதார்களும் வல்லபாய்க்குக் கடிதம் எழுதினார்கள்.

இந்த எட்டுப் பேர்களுடைய கடிதங்களும், மின்சார சக்தியைப்போல இமைப் பொழுதில், தாலூகா முழுதும் உற்சாகம் உண்டாக்கிவிட்டது. "இவர்களுடைய அதிருஷ்டமல்லவா அதிருஷ்டம்" என்று மற்றவர்கள் பொறாமைப்பட ஆரம்பித்து விட்டார்கள். எங்கு பார்த்தாலும் இவர்களுக்கு வாழ்த்து! ஆனால், தாலூகாவுக்கு வெளியே, பொது ஜனங்களின் உள்ளம் பொங்கிக் கொதிக்க ஆரம்பித்து விட்டது.

இந்த உத்தரவுகளைக் கேட்டு, நாட்டாரின் உள்ளத்தின் நிலைமை எவ்வாறு இருக்கிறது என்பதற்கு அறிகுறியாக, காந்திஜி 'யங் இந்தியா'வில் எழுதிய குறிப்பு:—

"'ஜலியன் வாலாப் படுகொலையை நடத்திய சேனைபதி டையரை, ஹண்டர்க்கமிட்டிமெம்பர்கேள்விகேட்டபொழுது 'பயங்கரப் படுகொலையின் மூலமாய், ஜனங்களைப் பயமுறுத்துவதற்குத்தான் அவ்வாறு செய்தேன்' என்று டையர் பதில் சொன்னார். அவர் உள்ளதை ஒப்புக்கொண்டாரே! அவர்

புதிதாக எதையும் நிரூபணம் செய்து விடவில்லை. இந்தியன் ஸிவில் ஸெர்விஸாரின் (ஐ. ஸி. எஸ். காரர்களின்) இந்நாட்டுப் பெருங்கீர்த்திக்கு, பயங்கரப் பயமுறுத்தலே அஸ்திவாரம் என்று சொல்லிவிடலாம்.

"நமது பத்திரிகை அச்சுக்குப் போகும் சமயத்தில், மேற்சொன்ன கொள்கைக்கு ஏற்றாற்போல, பயங்கர ஆட்சி நடைபெறுவதாகச் செய்தி எட்டுகிறது. பர்டோலி ரயத்துகளை எப்படியாவது கீழ்ப்படியும்படி செய்துவிட வேண்டுமென்பதற்காக, 'ஸம்மரி' நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப் படுவதாகத் தெரிகிறது.

"பர்டோலி ரயத்துகளில் எட்டுப் பேர்களின் பேரில், பறிமுதல் நோட்டீஸ் சாதரா செய்யப்பட்டிருக்கிறதாம்! பெயர்களை யெல்லாம் ஜாக்கிரதையுடன் பொறுக்கி எடுத்திருக்கிறதாகத் தோன்றுகிறது. எல்லாரும், கொஞ்சம் பசையுள்ள பனியாமார்கள். பலவீனர்கள், பயங் கொள்ளிகள் என்று பெயர் எடுத்த பனியாமார்களின் பேரில் நோட்டீஸ் எடுத்தால், அவர்கள் பயந்து அலறி விடுவார்கள் என்று கருதியே இவ்வாறு செய்யப்பட்டிருக்கிறது. 'பனியாமார்கள் தளர்ந்துபோய் விட்டால், மற்றவர்களும் தானுகத் தளர்ந்து போய் விடுவார்கள்' என்று அரசாங்கத்தார் யோசனை செய்திருக்க வேண்டும். இந்த முதல் பயங்கரத் தோற்றத்தைக் கண்டு, ஸத்தியாக்கிரகிகள் ஆச்சரியப்பட வேண்டியதில்லை. 'பறி முதலும் நேரும். அதைக் காட்டிலும் கடுமையாகவும் நேரும்' என்று இவ்வாறு அவர்களுக்கு அடிக்கடி தெரிவிக்கப்பட வில்லையா? தங்களுக்குள்ளே சகிப்புச் சக்தி இருப்பின், அதை வெளிக்காண்பிப்பதற்கு இதுவே தருணமாகும்."

குஜராத்தி 'நவஜீவன்' பத்திரிகையில், பயங்கரமென்பதைப்பற்றி விரிவாக எழுதினர் மகாத்மா.

"சேத் வீர்ச்சந்த் அவர்களின் பாக்கி ரூ. 160-க்காக, ஜப்தி நடவடிக்கை எடுத்துக் கொண்டிருந்தால், அதைப்

பற்றி நாம் கவலைப்பட்டிருக்கப் போவதில்லை சிறிய தொகைக்காக, ஆயிரக் கணக்கான ரூ. மதிப்புப் பெறும் நிலத்தைப் பறிமுதல் செய்வது டையர் ஆட்சி தான். 'பல்லுக்குப் பல், கண்ணுக்குக் கண்', பழிவாங்க வேண்டியது என்பது மோஸஸின் தர்ம சூத்திரம்; இதைக் கூட மிஞ்சிவிட்டது ஸர்க்காரின் தற்போதைய பழிவாங்கும் தன்மை. ஒரு ரூபாய் கடனுக்காக, ஆயிரம் ரூ. வசூல் செய்பவனைக் கொடுங்கோலன், ராவணன் என்று தாராளமாகச் சொல்லலாம்.

" தாங்களே ஆக்கிக் கொண்டிருக்கும் சட்டங்களின் பிரகாரம், கைது, பறிமுதல் எது வேண்டுமானாலும் செய்ய, அரசாங்கத்தாருக்கு அதிகாரம் இருக்கிறது. இந்த அதிகாரங்களை உபயோகப்படுத்திக்கொள்ள அவர்கள் கொஞ்சங் கூடத் தயங்க மாட்டார்கள்" என்று வல்லபாய் உங்களுக்கு வாய் சலிக்காமல் எத்தனையோ தடவைகள் சொல்லியிருக்கிறார். அது இப்பொழுது ருசுவாகி வருகிறது. இந்தப் பறிமுதல் நோட்டீஸ்களைக் கண்டு, நீங்கள் திகிலடைய வேண்டாம்.

" அரசாங்கமோ, அல்லது இந்த நிலங்களை விலைக்கு வாங்க முன்னுக்கு வரும் துரோகியோ, அந்த நிலங்களை விழுங்கிட முடியாது. விழுங்கி ஏப்பம் விட எண்ணினால், அது விஷத்தைப் போல வேலை செய்யத் துவக்கிவிடும். வாக்கைக் காட்டிலும், தன்மதிப்பைக் காட்டிலும் நிலமா பெரிது? நிலமே யில்லாத பேர்கள், ஆயிரக் கணக்கில் இந்தத் தேசத்தில் இருக்கிறார்கள், பலர் நிலம் வைத்துக் கொண்டிருந்தார்களே அதைப் போன வெள்ளம் அடித்துக்கொண்டு போய், மணல் காடாய் இப்பொழுது இருக்கிறது.

" ஆண்டவன் சோதனையான அந்த வெள்ளத்தைக் குஜராத் தைரியமாய்ப் பொறுத்துக்கொண்டு ஆபத்துக்குத் தப்பிவிட்டதானால், அரசாங்கத்தின் சோதனையை பர்டோலி தாங்கி தனது வாக்கைக் காப்பாற்றட்டும்".

காந்திஜியின் இந்த எழுத்து, பர்டோலி வாசிகளுக்குத் தைரியத்தையும் ஊக்கத்தையும் கொடுத்தது.

## அத்தியாயம் 14.

மார்ச்சுமீ மும் முடிந்துவிட்டது. எப்ரல்மீ பிறந்தது, நாலைந்து நாட்களும் ஆகிவிட்டன. நேரே கிஸ்தி வசூலாகிறதாயில்லை. இரண்டு மாத காலமாய், ஜனங்கள் தங்கள் பிடிவாதத்தைக் கொண்டுசெலுத்தி விட்டார்கள். அதற்கு மேல்? பம்பாயில் பிரசுரமாகும் 'டைம்ஸ் ஆப் இந்தியா' என்ற (வெள்ளைகார)ப் பத்திரிகை, 'வழியில் கள்ளனுமுண்டு; ஆனால் பயமுமில்லை' என்ற சுருதியில், இந்தப் போராட்டத்தைப் பற்றி எழுத ஆரம்பித்தது. "எப்ரல்மீ பிறந்தும், சத்தியாக்கிரகப் போராட்டம் தணிகிறதாகக் காணோம். நிலப் பறிமுதல் போன்ற நடவடிக்கைகளின் பலன் தெரிவதற்கு இன்னும் மூன்று வாரங்களாகும்; ஏனெனில், ரிவினியூச் சட்டத்தின் மாமூல் முழுதும் நடந்தாக வேண்டும். (ஜப்திக்கு இத்தனை நாட்களுக்குப் பின் எலம், பறிமுதல் நோட்டீசுக்கு இத்தனை நாட்களுக்குப் பின் பறிமுதல்........என்ற மாமூல்களுக்குக் காலவரையறை குறிப்பிடப்பட்டிருக்கிறது; அந்தக் காலம் கழியவேண்டுமல்லவா?) அதற்குக் கொஞ்சகாலம் செல்லும். இது வரையிலும்,கொஞ்சம் ஜங்கம சொத்துப் பறிமுதலாகி யிருக்கிறது. ஆனால் ஸர்க்கார் பயமுறுத்தும் ஸ்தாவர சொத்து (நிலம்) பறிமுதல் நேர்ந்தால், விவசாயிகளுக்கு மிகக் கேட்டை விளைவிக்கும். ஸத்தியாக்கிரகத்தின் மூலமாக ஏதோ நல்ல பலன் கிடைக்கும் என்று ஆசை காட்டப்பட்டார்களே அது வராது என்று உணர்ந்து கொண்டால், இயக்கம் பட்டென்று கட்டுவிட்டுப் போய்க் குப்பை யாகிவிடும்" என்று, ஸர்க்கார் கட்சியையே எப்பொழுதும் ஆதரிக்கும் மேற்சொன்ன பத்திரிகை எழுதிற்று.

ஆனால், 'டைம்ஸ் ஆப் இந்தியா'ப் பத்திரிகையின் ஆசாபாசாங்குகளுக்கு, பர்டோலி இடங் கொடுக்கவில்லை. தேர் மாதிரி, மெதுவாக, அலட்சியத்துடனும் உல்லாசமாகவும் நகர்ந்துகொண்டே போயிற்று. ஸர்க்கார் எடுத்துக்கொண்ட நடவடிக்கைகளின் யுக்தி யொன்றும் பலிக்கவில்லை. பர்

டோலித் தாலுகாவைச் சுற்றியுள்ள பிராந்தியங்களில், பரோடா சமஸ்தானப் பிராந்தியங்களில் கூட, மீட்டிங்கு களைக் கூட்டி, "ஸத்தியாக்கிரகிகளை ஒடுக்கப் பார்க்கும் முயற்சிகளில், நாம் ஸர்க்காருக்குச் சகாயமா யிருக்கப் படாது. நம்முடைய பூரண அனுதாபமும் சத்தியாக்கிரகி களுக்கு உரித்தாகுக" என்று தீர்மானம் செய்தார்கள். (ஜப்தி சொத்தைத் தூக்கிக்கொண்டுபோக ஆள் கொடுக்கக் கூடாது, வாடகைக்கு வண்டி விடப்படாது, ஜப்தி சொத்துக் களை ஏலம் எடுக்கக்கூடாது என்பன போன்றவை, அவர்கள் காண்பித்த அனுதாபத்துக்கு அடையாளங்கள்).

குஜராத்துக்கு வெளியே, நாட்டின் பல விடங்களிலும் கூட்டங்கள் கூடி, ஜனங்கள் தங்கள் அனுதாபத்தைத் தெரி வித்துக் கொண்டார்கள். சத்தியாக்கிரகப் போராட்டத் துக்கு நிதி வேண்டுமென்று, ஸர்தார் மனுப் பண்ணிக் கொள்ள வில்லையாயினும், பணம் ஏராளமாக வரத் துவக் கிற்று. ஸ்ரீ மணிலால் கோத்தாரி மூலமாய், ரூ. 1000-மும் ஒரு மோட்டார்க் காரும் கிடைத்தன. தென்னப்பிரிக்கா, ஜொகான்ஸ் பர்க்கிலிருந்து அனுதாபத் தந்தியும் பணமும். சட்ட வரம்புக்குட்பட்ட வழிகளிலே தான் தங்களுக்கு எப் பொழுதும் பக்தி என்று சொல்லிக்கொண்டிருந்த பம்பாய் மாகாணச் சங்கத்தார், "வெறும் எதேச் சாதிகாரத்தைக் கொண்டு, பர்டோலியிலும் ஏனைய தாலுகாக்களிலும் ஸர்க் கார் வரியை உயர்த்தினது தவறு. நிலவரி நிர்மாணக் கமிட்டி யின் சிபார்சுப் பிரகாரம், ரிவினியூச் சட்டத்தை மாற்றி, வரி சம்பந்தமாகச் சட்டசபைக்கு அதிகாரத்தைக் கொடுக்கக் கூடிய சட்டமொன்றை ஆக்கும் வரையில், புதிய வரி உயர்வை வசூலிக்காமல் நிறுத்திவைக்க வேண்டும்" என்று அனுதாபத் தீர்மானம் செய்தார்கள்.

கவர்ன்மெண்டின் மனது மாறவில்லை. பர்டோலி ஸெட்டில்மெண்டு சரி யென்று அதிகாரிகள் பிரசாரம் செய் தார்கள். பகிரங்கமாகப் பிரசாரம் செய்தார்களா? மீட்டிங் போட்டு, அதிலே, நியாய அநியாயத்தைத் தெளிவாக எடுத்

துக் காண்பித்தார்களா ? இல்லை. விவசாயிகளைப் பய முறுத்தினார்கள் ; அல்லது தந்திரமாக அவர்களிடம் பேசினார்கள். “ அதோ, அந்தக் கிராமத்திலே இன்னார் இன்னார் கொடுத்து விட்டார்களே; நீங்கள் ஏன் கொடுக்கப்படாது ” என்று பொய் மூட்டைகளை அளக்க ஆரம்பித்தார்கள். கணக்குப்பிள்ளை ஒருவர், தமது வண்ணான் செலுத்தவேண்டிய கிஸ்தியைத் தாமே கையிலிருந்துபோட்டு, கூலியில் ‘ உளவடைத்துக் கொள்ளுவது ’ என்று செலுத்திவிட்டார்.

ஆனால், இரண்டொருவரைத் தவிர, மற்றெல்லோரும் அதிகாரிகள் இருக்கிற வழியை நாடுவதே யில்லை. தங்கள் கட்டுப்பாட்டைப் பலப்படுத்திக் கொண்டார்கள். கிராமத்துத் தொண்டர்கள் பருந்துபோலப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஜப்திசெய்வதற்காக வரும் மணியக்காரர் கணக்குப்பிள்ளை முதலியவர்கள் கண்ணில் பட்டால் போதும் ; உடனே ‘ சங்கு, தப்பட்டை வாத்தியம் ’ தான் ; பூட்டின கதவுகளுக்கு வெளியே நின்றுகொண்டு, ஸ்திரீகள் சிரிப்பார்கள்.

கூட்டங்களோ என்றால், அதை ஏன் கேட்கிறீர்கள் ? ஒரு மாதத்துக்கு முன், கூட்டத்தில் முன்னூறு நானூறு பேர்கள் இருந்தால், இப்பொழுது மூவாயிரம், நாலாயிரம். முந்திப் பெண்கள் அதிகமாக வரமாட்டார்கள். இப்பொழுது, புருஷர்களைக் காட்டிலும் ஸ்திரீகள் தான் அதிகம். நடுப்பகல் அல்லது நடு நிசி எப்படியாயிருந்தாலும், கூட்டத்தின் எண்ணிக்கைக்குக் குறைவே கிடையாது. கூட்டத்துக்காக, நெடுந்தூரத்திலிருந்து, கொளுத்துகிற வெயிலில் வருவார்கள். ராத்திரியில் கூட, குழந்தை, ஸ்திரீ எல்லோரும் பக்கத்துக் கிராமங்களுக்குப்போய் விடுவார்கள் ஸர்தாரின் பிரசங்கத்தைக் கேட்பதற்காக.

பர்டோலித் தாலூகா முழுதுக்கும், ‘கடோட்’ கிராமம் மட்டும்தான் திருஷ்டிபரிஹாரமாக, இயக்கத்தில் சேராமல் ஒதுங்கி நின்றது. மற்றக் கிராமங்களில், ஊர்ப்பட்ட உற்சா

கம்! உற்சாகத்திலே, ஒரு ஊருக்கும் மற்ருெரு ஊருக்கும் போட்டி! இப்படியிருக்கிற சந்தர்ப்பத்திலே, "எங்கள் கடோட் கிராமத்திலேகூட, 50 பேர்கள் கையெழுத்துப் போட்டுவிட்டார்கள். தாங்கள் கட்டாயம் எங்களூருக்கும் வந்து, எங்களுக்கு உபதேசம் செய்யவேண்டும்" என்று சில உற்சாகிகள், ஸர்தாரை வந்து அழைத்தார்கள். வல்லபாய் போனார். ஆனல், சரியான பலன் ஏற்படவில்லை.

இந்தப் போராட்டக் காலத்திலேயிருந்த உற்சாகத்தை என்னென்று வர்ணிக்கிறது? ராத்திரி ஒன்பது மணிக்கு 'நணிபலோட்' என்ற சின்னக் கிராமத்தில் இருந்த உற்சாகத்தைமட்டும் குறிப்பிட்டால் போதுமானது.

ஊர்கோலம் அந்த வேளையிலே! லேசான ஊர்கோலமா? பிரம்மாண்டமான ஊர்கோலம்! ஆண்கள் எத்தனையோ, அத்தனை பெண்கள்! புருஷர்களெல்லாரும் சத்தியாக்கிரகப் பாட்டுகள் பாடிக்கொண்டு போனார்கள். பெண்களோ, பழைய சாது ஒருவர் பாடிய பஜனைப் பாட்டொன்றைப் பாடிக்கொண்டு சென்ருர்கள். "எங்கள் நாயகன் வந்துவிட்டார். எங்களுக்கு இனிமேல் துக்கங்கள் ஏது" என்பது பெண்கள் பாட்டின் பல்லவியாகும்.

பிரசங்க ஸ்தானத்துக்குச் சென்றதும், சந்தடியின்றி எல்லோரும் உட்கார்ந்தார்கள். வல்லபாய் ஆஸனத்தில் அமர்ந்ததும், குமரிகளும் கிழவிகளுமாக நூற்றுக்கணக்கானவர்கள் அவரை வணங்கி, அவருக்குச் சந்தனமும் புஷ்பமும் கொடுத்து, ஜயத்துக்கு அறிகுறியாக அவரது நெற்றியில் குங்குமமிட்டு, போராட்ட நிதிக்காகத் தங்கள் கையில் கிடைத்ததை ஸமர்ப்பித்தார்கள். இந்தமாதிரி அரை மணி நேரத்துக்குமேல் நடந்தது. இவ்வாறு நேர்ந்தது வல்லபாய்க்குப் புதிய அனுபவம். அவர் ஸ்தம்பித்துத் திகைத்துப்போனார். கடைசியாக, ஒரு ஸ்திரீ, ஐந்து ரூபாய் நோட்டை அவர் முன்னல் வைத்துவிட்டு, தன் கையா

லெழுதிய கடிதத்தையும் நீட்டினுள். அந்தக் கடிதம் நீங்கள் பார்க்கவேண்டுமா? அப்படியானல், இதோ இருக்கிறது:—

"செய்யத்தகாத விபரீத காரியமெதையும் நாங்கள் செய்துவிடவில்லை. இந்தப் போராட்டம் நடைபெறுவது எங்கள் லாபத்துக்காக; எங்கள் குடும்பங்களைக் காப்பாற்றிக் கொள்ளுவதற்காக. எங்கள் வீட்டுக்காரரிடமிருந்து தாங்கள் சத்தியாக்கிரக உறுதிமொழி வாங்கிக்கொண்டதற்காக, நான் தங்களை வாழ்த்துகிறேன். எங்கள் ஸ்தாவர ஜங்கம சொத்து எது பறிமுதல் செய்யப்பட்டாலும் பாதகமில்லை; நாங்கள் இருவரும் விருப்புடன் அவைகளைச் சகித்துக்கொண்டிருப் போம் என்று வாக்குக் கொடுப்பதற்காகவே, நான் இப் பொழுது தங்கள் முன்னிலையில் வந்து நிற்கிறேன். என் கணவன் ஜெயிலுக்குப்போகும் பாக்கியம் பெறுவாராகில், முகமலர்ச்சியுடன் நான் அவரை வழியனுப்புவேன்."

இந்தக் கடிதத்தைப் படிக்கும் எவர் மனந்தான் உற்சாகப்படாது? மற்றவர்களுக்கு உற்சாகம்; ஆனல் வல்லபாய் அவர்களுக்கு, அதுவே கரைகடந்த பொறுப்பு. அந்தக் காலங்களில் அவருடைய பேச்சுகள் யாவும் நரம்புக்கு நல் விருந்தாகும். களைத்துப்போகும் உள்ளமும், பேச்சைக் கேட்டால், வஜ்ஜிரமாகப் போய்விடும். அவர் பேசின பேச்சுக்களை அப்படியே எழுதிவிடலாம்; ஆனல் அவருடைய கண்களில் தீப்பொறி பறந்ததே, அவருடைய குரலில் ஆண்மை ஜொலித்ததே—அவைகளை எப்படி வரைவது?

ஸர்தாரின் பிரசங்கம் அவ்வளவும் அப்படியே படிப்பினை. அவருடைய அழகான, கிராமியக் கொச்சைப் பேச்சுக்களைச் சித்தரிக்க முடியாது. வேறு பாஷைகளில், முக்கியமாக இங்கிலீஷில் மொழி பெயர்க்க முடியாது. ஒரு பிரசங்கத்திலே ஸர்தார் சொன்னர்:—

"மதங்கொண்ட யானையைப்போல, அரசாங்கம் வெறி பிடித்து ஓடுகிறது. எதையும் தன் காலின் கீழ் வைத்து நசுக்கிவிடலாம் என்று அது எண்ணிக்கொண்டிருக்கிறது.

மதங்கொண்ட யானை என்ன சொல்லிக்கொள்ளுகிறது? 'முன்னேயெல்லாம் சிங்கங்களையும் புலிகளையும் காலில் வைத்து நசுக்கியாகிவிட்டது. இந்தச் சின்னக் கொசு எம் மட்டு' என்று தனக்குத்தானே சொல்லிக்கொண்டு, ஆனந்த மடைகிறது. 'வெறி பிடித்து, போகிற வழியெல்லாம் யானை போகட்டும்; சரியான நிமிஷத்தில், முதுகின்பேரில் (துதிக் கையின்பேரில்) உட்கார்ந்துகொள்ளலாம் என்ற வித்தையை, சின்னக் கொசுவுக்கு இப்பொழுது சொல்லிக்கொடுத்துக் கொண்டிருக்கிறேன். கொசு யானையைக் கண்டு பயப்பட வேண்டியதே யில்லை. யானை, கொசுவைக் காலில் வைத்து நசுக்கவே முடியாது. ஆனால், கொசுவைக் கண்டுதான் யானை பயப்படவேண்டி யிருக்கும்.

"பெரிய பானைக்கு முன்னே, ஒரு ஓட்டாஞ்சல்லி (ஓட்டுப்பாளம்) எம்மாத்திரம்? ஆனால் பானையைக் கண்டு, பாளம் பயப்படவேண்டிய தில்லை. ஏனெனில், பாளம், பானையை சுக்குத் தூள்களாக உடைத்துவிட முடியும்; ஆனால், பானை, சல்லியை உடைக்க முடியாது.

"இரண்டு மாதங்களுக்கு முன், பயத்தினால், நீங்கள் கடுநடுங்கிப் போயிருந்தீர்கள். அப்பொழுது, இத்தனைபேர்களை என்னால் கூட்டியிருக்க முடியுமா? அப்பொழுது சகோதரிகளோ, கூட்டத்துக்கு வருவது மில்லை. இன்றைக்கு, உங்களுடைய கிராமத்தின் தோற்றமே அடியோடு மாறிப்போய் விட்டதே! தோளோடு தோள் சேர்ந்து, எல்லோரும் ஒரு ஆள்போல இப்பொழுது இருக்கிறீர்கள்.

"மகத்தான சோதனைகள் வரப்போகின்றன. இது வரையிலும், நீங்கள் ஒன்றையும் இழந்து நஷ்டப்பட்டுப் போகவில்லை. உங்களுடைய சர்வத்தையும் இழக்கும்படி, இனி நேரும். ஆயினும், முடிவிலே, மிராசுதார் ஒன்றையும் இழக்கப் போவதில்லை என்பதை நன்றாக உணரும்படி, நான் உங்களை வேண்டிக்கொள்ளுகிறேன்.

"மிராசுதாரும் கூலியாளும் ராஜாங்கத்தின் இரண்டு

தூண்களாவார்கள். அவர்கள் உண்மையாகச் செல்வத்தை உண்டாக்குபவர்கள். ஆனால் செல்வத்தை அவர்கள் அனுபவிப்ப தில்லை. இந்த நிலைமையை நீங்கள் எவ்வாறு பொறுத்துக்கொண் டிருக்கிறீர்கள்? உங்கள் தாலூகாவைக் கட்டுப்படுத்துங்கள். உங்களைப் பார்த்து மற்றவர்கள் பழகிக்கொள்ளும்படியாக இருக்கவேண்டும். போராட்டம் நீடிக்க நீடிக்க, லாபம் உங்களுக்கு; நஷ்டம் ஸர்க்காருக்கு.

"உங்களுக்கு எல்லாமே போய்விடுகிறது என்று வைத்துக்கொள்வோம். அதோடு, அந்தச் சனியன் பயமும் தொலைந்து போய்விடு மல்லவா? சொற்பச் செலவிலே, உங்கள் பெயர் நிலைத்துவிடு மல்லவா? போராட்டத்தின் மூலமாய், உங்கள் சொந்தக் கௌரவத்தை அடையக் கற்றுக்கொள்ளுவீர்கள்."

இன்னொரு பிரசங்கத்திலே, ஸர்தார் சொல்லுகிறார்:—
"இயற்கை விதியை ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள். சில பருத்தி விதைகள் பூமிக்குள் புதைந்து, அழிந்துபோனாலொழிய, அதோ குவிந்து கிடக்கிறதே அவ்வளவு பஞ்சும் கிடைக்காது என்று உங்களுக் கெல்லோருக்கும் தெரியும். அந்த விதைகள் உண்மையிலேயே அழிந்து போய்விடுகின்றனவா? பூமிக்குள் புதைந்துபோன அந்த விதைகள் பெருமிதமான உயிருடன், மீண்டும் பிறக்கின்றன.

"கஷ்டமும் துன்பமும் உங்களுக்குப் புதிதானவைகள் அல்ல. விவசாயம் செய்கிறவர்களைப்போல, யார் வெயிலிலே உழைத்து, மழையிலே அடிபட்டு, குளிரிலே விறைக்கிறார்கள்? கொசுவின் தொல்லைகளை, விவசாயிகளைப்போல, வேறு யார் அனுபவிக்கிறார்கள்? ஏற்கனவே, நீங்கள் அனுபவித்து வருகிற கஷ்டங்களைக் காட்டிலும், பெரிதான கஷ்டங்களை உங்கள் பேரில், அரசாங்கத்தார் ஏற்றிவைக்க முடியாது. முணுமுணுக்காமல், முகமலர்ச்சியுடன், சங்கற்ப சித்தத்துடன், எது வந்தாலும் அனுபவியுங்கள். முடிவிலே வெற்றி உங்களுடையதுதான்."

தீண்டாதார் ரானிபராஜ் கூட்டங்களிலே, இப்பொழுது பேசின உச்ச ஸ்தாயியிலே பேச முடியுமா? வாழ்விலே பெரிய ஆசைகளில்லாமல், கிடைத்ததைக் கொண்டு திருப்தியுடன் வாழ நேர்ந்த இவர்களிடம் உயர்ந்த ஸ்தாயியில் பேசினால், பேச்சு அவர்களைக் கவ்வாது. பயத்திலே மூழ்கிக் கிடக்கும் அவர்களுக்கு நம்பிக்கையும் தைரியமும் உண்டாகும்படியாகப் பேசவும் வேண்டும். ரானிபராஜ் சகோதரிகளைப் பார்த்து, ஸர்தார் சொல்லுகிறார்:—" உங்கள் சொத்துக்களை ஜப்திசெய்ய வந்தார்களாகில், தைரியமாய் அவர்களை வரவேறுங்கள். உங்களுடைய பித்தளை வளையல்களையும் கண்ணாடி மூக்குத்திகளையும் கல்லோலைகளையும் அவர்களிடம் கொடுங்கள். இஷ்டமானல், அவர்கள் போட்டுக்கொள்ளட்டும்."

இப்படிப் பேசினல், யாருக்குத்தான் சிரிப்பும் உற்சாகமும் உண்டாகாது? பெண்களுக்கு அது சொன்னர்; ஆண்பிள்ளைகளுக்கு? அவர் சொன்னதாவது:— . .

" ஜப்தி செய்யும்பொழுது, அவர்களுக்கு ஒத்தாசைக்காக உங்களை அவர்கள் கூப்பிடுவார்கள். அந்தப் பயத்தை எட்டத் தள்ளிவிடுங்கள். நீங்கள் ஆண்மகன்கள் நீங்கள் பறையர்க ளல்ல. பறையர் என்ற அடிமைப் பெயரை மறந்துவிடுங்கள். உங்களிடமிருந்து பலாத்காரமாக வேலை வாங்குபவர்கள்தான் பலவீனர்கள், பயங்கொள்ளிகள்; நீங்க ளல்ல. உங்களுக்காகவும் உழைத்துக்கொண்டு, பிறருக்கும் உழைத்துப்போடும் நீங்களா பலவீனர்கள்? 'ஆள் கிடைக்காவிட்டால், ஜப்தி சொத்தை நீரே தூக்கிக்கொண்டு வாரும்' என்று ஒரு ரிவினியூ இன்ஸ்பெக்டர், பக்கத்துக் கிராம மணியக்காரரைக் கட்டளையிட்டாராம்.

" மணியக்காரர், அதைப் பொறுத்துக்கொண்டு, சும்மாயிருந்திருக்கக்கூடாது. 'அது என் வேலையல்ல; எனக்குக் கீழிருக்கிறவர்கள்கூட, அந்தக் கேவலமான வேலையைச் செய்யமாட்டோம் என்கிருர்கள். எனக்கும் இஷ்டமில்லை. தங்களுக்கோ, சம்பளம் ஜாஸ்தி. அந்த வேலையைச் செய்ய

எங்களிடம் சொல்லுவதைக் காட்டிலும், தாங்களே செய்து விடக்கூடாதோ, என்று அந்த மணியக்காரர் சொல்லியிருக்க வேண்டும்.

சட்டமறுப்பிலே நம்பிக்கை இல்லாதவர்களுக்குக்கூடச் சந்தோஷமும் திருப்தியும் வரும்படியாக, இந்தப் போராட்டத்திலிருந்து, நல்விளைவுகள் பல தோன்றின என்பது குறிப்பிடத்தக்கது. ஹிந்துக்களும் முஸ்லீம்களும் நெருங்கிப் பழக ஆரம்பித்தார்கள். கடன் வாங்கினவர்களும் கொடுத்தவர்களும் பரஸ்பரம் பிரியமாய்ப் பழகினார்கள். பொதுவாக, எல்லா வகுப்பார்களுக்குள்ளாகவும், நெருக்கம் உண்டாயிற்று.

உதாரணமாக, ரானிபராஜ் வகுப்பார்களுக்குள்ளாகவே, இரண்டு கட்சிகள்: வர்ஜிதர்கள், மற்றவர்கள், குடிப்பதை நிறுத்தியவர்களுக்கு வர்ஜிதர்கள் என்று பெயர். 1921-ம் வருஷ மது விலக்குப் பிரசாரமுதல், இந்த இரண்டு கட்சிகளும் இருந்து வந்தன. இந்த இரண்டு கட்சிகளும் ஒன்று சேரும்படியாக, இந்தப் போராட்டம் செய்து விட்டது. கூட்டங்களிலே, வர்ஜிதர்களும் மற்றவர்களும் நேசப் பான்மையுடன் கலந்து கொண்டார்கள். வர்ஜிதர்களின் வீட்டு ஸ்திரீகள் சுத்தக் கதர் உடுத்திக்கொண்டு, நகையொன்றும் அணிந்து கொள்ளாமல் இருப்பார்கள். இப்பொழுது ஏற்பட்ட சங்கமத்தால், 'மற்றவர்களும்' குடியை ஒழித்து, கதர் உடுத்தி, சுத்தமாக இருக்கக் கற்றுக்கொண்டார்கள். ஆசிரமங்களிலிருந்து, ராட்டைகளை வாங்கி, அவைகளில் நூற்கத் துவக்கினார்கள். எனவே, இவர்களின் பேரில், நாகரிக வாடை வீசத் துவக்கிவிட்டது.

கிராமத்து வெட்டிமை வேலை செய்பவர்கள் பறையர் வகுப்பைச் சேர்ந்தவர்கள் என்பது உங்களுக்குத் தெரியும். அவர்கள் வெட்டிமை வேலைசெய்வதற்கு, ஊர்ச் சமுதாயமாக அவர்களுக்கு மானியம் விடப்பட்டிருக்கும். இந்த மானியத்திலிருந்து மட்டும், அவர்கள் ஜீவனம் செய்ய முடியாது.

அவர்கள் சில்லறைக் கூலி வேலையும் செய்துதான் பிழைக்க வேண்டும். ஜப்தி வேலையில் ஸர்க்காருக்கு ஒத்தாசை செய்ய மாட்டோம் என்று வெட்டியார்மார்கள் சொல்லி விட்டார்கள். இவர்கள் காண்பித்த ஆண்மைத்தனம் தொத்துநோயைப் போலப் பரவிவிட்டது.

"வெட்டியான்களுக்கு நாங்கள் சளைத்தவர்களா" என்று கர்வத்துடன் மணியக்காரர்கள் பேசத் தலைப்பட்டார்கள். ஸர்க்காருடன் சேரமாட்டோம் என்றவுடனே, வெட்டியார்களை மிராசுதார்கள் பிரியத்துடன் பாராட்டினார்கள். வேலைக்காரன் என்று எண்ணிவந்த வெட்டியை, சகோதரன் என்றும் நண்பனென்றும் பாவிக்கத் துவங்கினார்கள் மிராசுதார்கள். தீர்க்க வைரிகளைப்போல இதுவரையிலும் நடந்து கொண்டு வந்தவர்களை ஒன்று சேர்த்த போராட்டத்தின் பெருமைதான் என்ன!

போராட்டத்தினால், தாலூகா முழுதும் கதர் இயக்கம் பரவிவிட்டது. ஆடம்பரமில்லாமல், ஸ்ரீமதி மிதுபென் பெடிட் தமது கதர்ப் பிரசார வேலையை நடத்திவந்தார். பெண்களை நூற்கும்படி செய்தார். சத்தியாக்கிரகத் தத்துவத்தின் நுணுக்கங்களை, அவர்களுக்கு எடுத்து விளக்கிக் காண்பித்தார். போராட்டத்தின் நல் விளைவுகளில் இதுவுமொன்றாகும். வல்லபாயின் வலது கண்ணான ஸ்ரீ ரவிசங்கர் ஜல்லியன் வாலாபாக் தினமாகிய ஏப்ரல்மீ 13உ சூரட் நகரில் பேசிய பேச்சிலிருந்து சில துணுக்குகளை இங்கு கொடுக்காமலிருக்க முடியாது. ரவிசங்கர் சொல்லுகிறார்:—

"இன்றையதினம் ஜல்லியன் வாலா தினம். தேகக் கட்டுள்ள பஞ்சாபிகள், அந்த அவமானங்களை எப்படிப் பொறுத்துக்கொண்டிருந்தார்கள் என்பது எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது. ஸர்க்கார் இந்தியர்களுக்குக் கொடுக்கும் வீர்ய மழியும் கல்விதான் அதற்குக் காரணம் போலும்! காந்திஜி, பாஞ்சாலத்துக்கு விசாரணை செய்யச் சென்றிருந்தபொழுது, என்ன நடந்தது என்ற உண்மையைச் சொல்லக்கூட, அவர்களுக்குத் தைரியமில்லாமல் போய்விட்டது.

" தேசீயக் கல்வி என்றால் என்ன? நான் கிராமத்தான். நான் படிப்பில்லாதவன்; பெரிய பிரசங்கச் சுமையை உங்கள் பேரில் போட்டுவிடுவேன் நான் என்று நீங்கள் பயப்பட வேண்டாம். பள்ளிக்கூடங்களிலே, நமது பிள்ளைகளுக்கு இப்பொழுது கிடைக்கிறதே, அது தேசீயக் கல்வி அல்ல என்பது நிச்சயம்.

" இது சம்பந்தமாக, 1921-ம் வருஷம் நேர்ந்த சம்பவம் ஒன்று எனக்கு நினைவு வருகிறது. ஒரு காரியமாக, காந்திஜியைப் பார்க்கப் போயிருந்தேன். குஜராத் வித்யா பீடத்தை அமைப்பைப்பற்றி வாதம் செய்து கொண்டிருந்தார்கள். குஜராத்திலிருக்கும் பெரிய மூளைக்காரர்களில் அநேகர் அங்கே இருந்தார்கள். தலைமை ஆசிரியர் வேலையைப் பற்றிப் பேச்சு நடந்தது. வாதம் என்ன என்று எனக்குச் சரியாய் ஞாபகமில்லை; ஆனால், ஒன்றுமட்டும், என் நினைவில் அழுத்தமாக இருக்கிறது. ஒவ்வொருவரும் தாங்கள் சொல்ல இஷ்டப்பட்டதைச் சொல்லி விட்டார்கள். கடைசியாக, 'தலைமை ஆசிரியராக ஒருவரும் வராவிட்டால், நான் கண்டிப்பாய் வருகிறேன். பையன்கள் இதுவரைக்கும் கற்றுக் கொண்டதை மறக்கும்படியாக அவர்களுக்குச் சொல்லிக் கொடுப்பதற்கு எனக்குத் தெரியும்' என்று வல்லபாய் சொன்னார். அங்கே கூடியிருந்தவர்கள் யாவரும் விழுந்து விழுந்து சிரித்தார்கள். எல்லோரும் அதை விகடமாகக் கருதினார்கள். இதை இவர்கள் விகடமாகக் கருதிவிட்டதைப் பார்த்து, காந்திஜி சிரித்தார்.

" நல்லது! அன்றைக்கு யார் சொன்ன யோசனையைக் கேட்டுச் சிரித்தார்களோ, அவர்தான் இப்பொழுது பர்டோலித் தாலூகாவிலே பெரிய பள்ளிக்கூடம் போட்டிருக்கிறார். 88000 பிள்ளைகளுக்குப் படிப்புச் சொல்லிக் கொடுத்துக் கொண்டு வருகிறார். இதுவரையிலும் கற்றுக்கொடுக்கப்பட்டு வந்ததை மறக்கும்படியாக, அவர்களுக்குப்பாடம்போதிக்கப் பட்டுவருகிறது. நம்மை நபும்ஸகர்களாக்கிய ஸர்க்காரை மதிக்காமலிருப்பதற்கு அவர்கள் கற்றுக் கொண்டு வருகிறார்கள்.

"வல்லபாய் நடத்திவரும் பள்ளிக்கூடத்தில். நான் ஒரு 'சட்டாம்பிள்ளை'. முதல்பாடம் முடிந்துவிட்டது. ஆத்ம த்யாகம் என்ற இரண்டாவது பாடம் இப்பொழுதுதான் ஆரம்பமாயிருக்கிறது. பர்டோலியின் ஆத்மாதான் நம்முடைய பாடப் புஸ்தகம். ராத்திரியும் பகலும், அந்தப் புஸ்தகத்தின் ஏடுகள். தினசரி சம்பவங்கள்தான் பாடங்கள்."

## அத்தியாயம் 15.

வல்லபாய் அவர்களுக்கு, 'ஸர்தார்' என்ற பட்டம், யார் எப்பொழுது கொடுத்தார்கள் என்று திட்டமாய்ச் சொல்ல முடியாது. இந்தப் போராட்டத்தின் நடுவே, இந்த ஏப்ரல்மீ தான் ஜனங்கள் தாராளமாக, அந்தப் பட்டத்தை அள்ளிக் கொடுத்திருக்க வேண்டும். அது அழுத்தமாகப் பிடித்துக்கொண்டது. சரியான பட்டம்! அதற்கேற்ற பட்டதாரி! குடியானவரின் வீட்டிலே பிறந்தவ ரல்லவா வல்லபாய்? எனவே, ரத்தப்பாசம் எப்படி விட்டுப்போகும்? குடியானவன் என்ருல், ஸர்தாருக்கு உயிர். குடியானவனை, எப்படியாவது அவனுடைய துன்பக்கடலிலிருந்து, கரையேற்றவேண்டும் என்பது ஸர்தாரின் பேரவா.

ஸர்தார் முதன் முதலாகக் காந்திஜியைக் கண்டது 1917 ஸூலத்தில். இந்தியத் தேசீயத்தின் மூல தத்துவங்களை அவரிடமிருந்துதான், வல்லபாய் கற்றுக்கொண்டார். 'இந்தியா என்ருல் அதன் பட்டணங்கள், நகரங்கள் அல்ல. இந்தியா வென்ருல், லட்சக்கணக்காகப் பரந்து கிடக்கும் கிராமங்கள். கிராமங்களின் உயிர்நாடி போன்றவர்கள் விவசாயிகள். அந்த விவசாயிகளின் கதிமோட்சத்துக்கு வழி தேடினுலொழிய, எந்த வேலைத் திட்டத்துக்கும் எந்த விடுதலைத் திட்டத்துக்கும் அர்த்தமில்லை' என்ற உபதேசத்தைச் செய்தார் காந்திஜி வல்லபாய்க்கு. இந்த உபதேசத்தை நாட்டில் பரப்பி அதற்காகப் பாடுபட்டு உழைத்தவர்களுள், சிறப்பாக, மகன்லால் காந்தியையும் வல்லபாயையும் சொல்ல வேண்டும். குரு (காந்திஜி) சூத்திரமாகச் சொன்னுர். சிஷ்யர்கள், தங்கள் மேதைக்கும் மனேபாவத்துக்கும் இசைந்த துறைகளில்

வேலை செய்து, அனுபவத் திட்டங்களைச் சமைத்து, தங்கள் முழுக் கவனத்தையும் காலத்தையும் அவைகளுக்கெனச் செல விட்டார்கள்.

வல்லபாய் குடியானவர் வீட்டுக் குழந்தை. அவருடைய தகப்பனார் உயிருடன் இருக்கையில், தமது குழந்தைப் பருவத்தில், வல்லபாய் அவருடன் கூடச்சென்று, நிலங்களைச் சுற்றிப் பார்துக்கொண்டு, வழியிலே தகப்பனார் போட்ட மனக்கணக்குகளில் பெரிதும் தேர்ச்சி பெற்றார். படோலிப் போராட்டத்தில், அவருடைய உண்மையான ஆத்ம ஸ்வரூபம் வெளியாயிற்று என்று சொல்லலாம். "உலகத்திலே யாருக்கேனும் தலை நிமிர்ந்து நடக்க உரிமை யிருக்குமாகில், அது விவசாயிதான். அவன்தான் படைக்கும் பிரம்மா. மற்றவர்கள் அந்த வேலையை அழிக்கும் வீணர்கள்" என்று வல்லபாய் அடிக்கடி சொல்லிவிட்டு, "இருந்தாலும் அவன் ஒடுக்கப்பட்டிருக்கும் தற்போதைய கேவலமான நிலைமையை நினைத்தால்—" என்று மனம் கசிந்து உருகுவார்.

ஒரு சமயம் ஸர்தார் சொல்லுவார்:—"மிராசுதார் பண்ணையாள் இவர்கள் இருவரையும் நம்பித்தான் உலகம் நடந்து வருகிறது. இருந்தாலும் நீங்கள் இருவரும், ஒன்றுக்கும் தோதில்லாத ஸர்க்கார்ச் சேவகனைக் கண்டு நடுநடுங்கி, அவன் காலால் இட்ட வேலையைத் தலையால் செய்கிறீர்களே! தன் இஷ்டம்போல, ஸர்க்கார் உங்கள்பேரில் வரி போடுகிறது. அதிலே உங்களுக்கு யாதொரு அதிகாரமும் கிடையாது. மண்ணுக்கு வரி; 'தண்ணிக்குத்' தீர்வை; சிறப்பான பாசனக்கட்டணம்; தண்ணீர்க் கசிவுக்குத் தீர்வை; உங்கள் பணத்தையும் உழைப்பையும் கொண்டு, நீங்கள் நிலத்தைத் திருத்தினீர்களோ, அதற்கும் வரி; உங்கள் மாடுகள் எப்படி உழைக்கின்றனவோ, அதுபோலவே, நீங்களும் சூரியோதய முதல் அஸ்தமனம்வரையில், கழனிகளில் உழைக்கிறீர்கள். பல்லைக் கிட்டுகிற குளிர், கொளுத்துகிறவெயில், கொட்டுகிறமழை— ஒன்றும்உங்களுக்குக்கிடையாது. தொடைமட்டும் சேற்றிலே வேலை செய்து சாகுபடி செய்தால் அந்த நெல்லுக்குமா வரி?

பயத்தால் ஏன், இவ்வளவு நடுங்குகிறீர்கள்? உங்களைப் பார்த்தால் எனக்கு வெட்கமா யிருக்கிறது, தலை குனியவேண்டியிருக்கிறது. மனிதர்களைப் போல நிமிர்ந்து, உங்களுடைய சொந்த சொரூபத்தைத் தெரிந்துகொண்டீர்களோ, அதுவே எனக்குப் போதும். என் தொண்டு, பயனும் பதவியும் பெற்றுவிடும். தற்கால அரசியல் நிபுணர்கள் ஒன்று கண்டு பிடித்திருக்கிறார்கள். அது என்ன என்று உங்களுக்குத் தெரியுமா? யார் பூமியிலே பாடுபட்டுச் சாகுபடி செய்து தானியங்களை உற்பத்திசெய்து பிறருக்கு ஜீவாதாரம் கொடுக்கிறார்களோ, அவர்கள் பட்டினி கிடந்து சாவதற்கான உபாயத்தை அரசியல் நிபுணர்கள் கண்டுபிடித்திருக்கிறார்கள்.

"விவசாயிகளின் கேவலமான நிலைமைக்குக் காரணமாயிருக்கும் அரசியல் முறையைக் கண்டால், என் மனம் பொங்குகிறது. பூமிக்குச் சொந்தக்காரர் அரசாங்கத்தார் என்றும மிராசுதார்கள் வெறும் குத்தகைதார்களென்றும் யார் விதித்தது? இந்தத் தத்துவந்தான் விவசாயிகளின் பிராணனை உறிஞ்சிக்கொண்டே வருகிறது. நம் தேசத்திலே படித்தவர்கள் இருக்கிறார்களே, அவர்கள் இந்த ரத்தத்தை உறிஞ்சும் தத்துவத்தை ஆதரிப்பதுதான் மனதுக்கு ரொம்பச் சங்கடமாயிருக்கிறது."

ஜன சமூகத்திலே, உள்ளதற்குள், ரொம்பவும் குண சீலர்கள் விவசாயிகள்தான் என்பது ஸர்தாரின் பிடிவாதமான கருத்து. கடவுள்பக்தி, உழைப்பு, யோக்கியப் பொறுப்பு, வஞ்சகமில்லாமை, துர்ப்பழக்கங்க ளில்லாமை—இந்த நல்ல தனங்களெல்லாம் இருப்பவன் விவசாயியைத் தவிர வேறு யார் என்று அதட்டியே பேசுவார் வல்லபாய். 'இப்பேர்ப்பட்ட குண சீலன், இன்னொருவனைக் கண்டு பயப்பட வேண்டுமாம்.' வஞ்சகமில்லாத சுத்தவான் யாருக்குமே பயப்பட, வேண்டியதில்லை. இருந்தாலும் குண சீலனாகிய விவசாயி பயப்படுகிறானே! இது வேடிக்கையல்லவா? ஆம்; இது ஸர்தாருக்குத் தெரியும். அவர் கருத்து என்ன? விவசாயி என்ற நிலைமையில் இருப்பவர், விவசாயத்-

தொழிலே கைக்கொண்டவர், எவரும் யாருக்குமே பயப் படவேண்டிய தில்லே என்பதை வற்புறுத்துவதுதான் ஸர் தாரின் நோக்கமாகும்.

மேலும் பர்டோலி விவசாயிகளேக் கண்டதும், வல்ல பாய்க்கு அவர்களுடைய சுய சொரூபம் கண்ணுக்குப் பட்டதோ, என்னவோ? அவர்களேக் கண்டதும், ஸர்தாரின் உள்ளம் இளகிப்போய்விடும். மானஸீகமாக மறைந்து கிடக் கும் கடவுள்பக்தி, இந்த விவசாயிகளேக் கண்டதும், ஸர்தா ரின் தேக முழுதும் பரவி, அவரைப் பரவசப்படுத்துமோ என்னவோ? "வல்லபாய் தமது ஆண்டவனேப் பர்டோலி யில் கண்டு கொண்டார்" என்று காந்திஜி சொல்லுவார். உண்மை! எவ்வளவு பொருத்தம்!

வல்லபாய்க்கு ஒரு பிடிவாதமான கருத்து "கடவுளி னிடம் பக்தியில்லாமற்போயின், இவர்கள் (விவசாயிகள்) தங் கள் வாக்கை எப்படிக் காப்பாற்ற முடியும்? இவர்களுக்கு வேறு ஆதரவும் சக்தியும் ஏது?" என்று தமக்குள்ளாகவே தீர்மானித்துக் கொண்டார். விவசாயிகளின் உள்ளத்தைக் கவரவேண்டுமானல், மதத்தின் மூலமாகத்தான் கவரமுடியும் என்று கருதி, "நிலமா? அதற்கென்ன பஞ்சம்? அது இங்கே, அங்கே, எங்கேயு மிருக்கிறது. ஆனல், விவசாயி தன் வாக்குக்குத் துரோகம் செய்து விட்டானே, பூமியிலே மழையே பெய்யாது. விவசாயி மட்டும் தன் வாக்கை முறிக் கட்டும்; அவன் அதனலே உலகத்தையே நாசமாக்கிவிடு வான்" என்று சொல்லுவார். ஸர்தார் சொல்லுகிறது விவ சாயிகளுக்குப் புரிகிறது. அவர்கள் நினைப்பதை, ஸர்தார் வெளியிட்டுச் சொல்லுகிருர். குறுக்கே, மற்றவர்களுக்கு வேலே யேது?

பரஸ்பரம் மனம் லயித்துப்போன தலேவரும் சீடர்களும் இருப்பின், அவர்கள் நடத்தும் போராட்டம் ஏன் தோற்கும்? எவ்வாறு தோற்கமுடியும்? வல்லபாய்க்கு ஏற்ற போர்க்களம் பர்டோலி; பர்டோலிக்கு ஏற்ற தலேவர் வல்லபாய்!

## அத்தியாயம் 16.

ஜனங்களின் சக்தி வளர்ந்து கொண்டு போவதைக் கண்டு, ஸர்க்கார் நிம்மதியுட னிருக்கமுடியுமா? பறிமுதல் நோட்டீஸ்களில் கண்ட தவணை தாண்டிப்போய் விட்டது. தாலூகா முழுதும் பெரிய கூட்டங்கள்! ஸ்ரீ சிவதாஸனி, தாதுபாய் தேசாய், பீம்பாய் நாயக், தீட்சித் இவர்கள் நால்வரும் (பம்பாய்ச் சட்டசபை மெம்பர்கள்) இந்தச் சமயத்திலே பர்டோலிக்குப் போய்ச் சேர்ந்தார்கள். இவர்களிலே சிவதாஸனி என்பவர் ஐ. ஸி. எஸ். பரீட்சை தேறி, உதவிக் கலெக்டர் வேலை பார்த்து, (காந்திஜி 1922-ம் வருஷத்தில் சிறை சென்றபொழுது, தமதுவேலையை ராஜிநாமாச் செய்து, சமூகத் தொண்டு செய்ய முன் வந்தவர். இவர் சூரட் ஜில்லாவின் பிரதிநிதியாக, பம்பாய்ச் சட்டசபையில் விளங்குகிறார். இவர், பர்டோலியில் கூடிய பிரம்மாண்டமான கூட்டத்தில் பின் வருமாறு பேசினார்:—

"இன்றைக்கு இருப்பதைப்போல, தாலூகா கட்டுப்பட்டிருக்கும் என்று கொஞ்சகாலத்துக்கு முன் வல்லபாய் கூட நினைத்திருக்க முடியாது. கடைசிவரையில், பர்டோலி தளராமல் நிற்குமாகில், இந்தப் போராட்டம் ஆங்கில ஆதிபத்தியத்தில் மூளி யுண்டாக்கிவிடும். சட்டசபைத் தேர்தல் சம்பந்தமாக, உங்கள் பக்கங்களில் சில ஆண்டுகளுக்கு முன் நான்சுற்றுப்பிரயாணம்செய்துகொண்டுவருகையில், 'நாங்கள் பசுக்கள். எங்களைச் சிங்கத்தினிடத்தி லிருந்து காப்பாற்றுங்கள்' என்று என்னிடம் சொல்லிக்கொண்டீர்கள். இப்பொழுது உங்களுக்குச் சிங்கத்தின் பயமே போய்விட்டதே! நீங்கள் சிம்மங்களாகி விட்டீர்களே! நீங்கள் வாக்குக் கொடுத்திருப்பது வல்லபாய்க்கு மட்டுமல்ல; தேசத்துக்கே கொடுத்திருக்கிறீர்கள். அதை நிறைவேற்றுங்கள். உங்களுக்கும் க்ஷேமம்; தேசத்துக்கும் நன்மை."

பர்டோலியைப் பார்வையிட்ட சட்டசபை அங்கத்தினர்கள் நால்வரும் பரவச மடைந்து சொக்கிப்போய் விட்டார்கள்.

ஸர்தாரின் நியாய புத்தியைப் பாருங்கள். உண்மையான ஸத்தியாக்கிரகிகளுக்குத்தான் அத்தகைய நியாய மனப்பான்மை உண்டாகும். சர்வமானிய நிலங்களுக்கு வரி உயர்த்தப்படவில்லை. ஆகையால் இதையும் பொதுவான போராட்டத்தில் எப்படிச் சேர்க்கலாம் என்று ஸர்தாருக்குத் தோன்றிற்று. இந்த 'க்விட் ரெண்டை' நிறுத்திவைத்துக்கொள்ளுவதற்குத் தகுந்த முகாந்தரமே யில்லை. ஆனால், முதலிலேயே இதைக் கொடுத்துவிடுங்கள் என்றால், ஜனங்களுக்கு இந்த மயிரிழை வித்தியாசம் தெளிவாகவும் புரியாது; கட்டுப்பாடும் குலைந்துபோய்விடும். அந்தப் பயந்தான் இப்பொழுது கிடையாதே! எனவே, ஸர்தார் தாக்கீது அனுப்பினார். "ஸர்வமானியத்துக்குக் கிஸ்தியைக் கொடுத்துவிடுங்கள். ஆனால், ரசீது வாங்கும்பொழுது, ஸர்வமானியத்துக்காக என்று கண்டு வாங்கத் தவறாதீர்கள். திறப்பு நிலங்களுக்கு வரவு வைத்து விடாமல் பார்த்துக் கொள்ளுங்கள்" என்பதுதான் அந்தத் தாக்கீது. இந்த 'க்விட் ரெண்ட்' தாலுக்கா பூராவுக்கும் ரூ. 8756—12—0; தாலூகாவின் மொத்த கிஸ்தியோ 6 லட்சத்துக்குமேலே.

ஜனங்களுடைய சக்திக்கும், அதிலே ஸர்தாருக்கு இருந்த நம்பிக்கைக்கும் வேறு அத்தாட்சியும் வேண்டுமா? சட்டசபை மெம்பர்கள் வந்திருந்தார்களே, அந்தச் சமயத்தில் வல்லபாய் தமது போராட்டத்தின் முறையை எடுத்துத் தெளிவாகக் கூட்டத்துக்குப் பிரசங்கம் செய்தார்:—

"இன்றைக்கு இங்கு விஜயம் செய்திருக்கும் சட்டசபை மெம்பர்கள் நம்முடைய மனிதர்கள்தான். ஆயினும், அவர்கள் ஒரு முறையிலே இன்றைக்கு நம்முடைய விருந்தினர்கள். அவர்களுடைய வேலை, போராட்ட வகைகள் வேறு; நம்முடைய வழிகள் வேறு. ஸர்க்கார் ஏற்படுத்தியிருக்கும் களத்திலே, அவர்கள் ஸர்க்காரோடு போராடுகிறார்கள். அது ஆபத்தான வேலை என்பது என் கருத்து. இத்தகைய போராட்டத்தில், ஸர்க்கார்தான் சமர்த்தர்கள். களம் அவர்களுடையது; முறை அவர்களுடையது; சமயமும் சந்தர்ப்

பங்களும், ஸர்க்கார் தங்களுக்குச் சௌகரியமாக அமைத்துக் கொண்டவை. நூற்றிலே ஒரு தடவைகூட, நமது நண்பர் கள் அங்கே ஜயிப்பது கஷ்டம். இதற்குப் பெயர் சட்ட வரம்புக் குட்பட்ட போராட்டம் என்கிறார்கள் நமது சட்ட சபை நண்பர்கள். அந்தப் போராட்டம் எனக்கு பிடிக்க வில்லை.

“அவர்கள் இன்னும் கண்விழித்துக் கொள்ள வில் லையே என்று தான் நான் ஆச்சரியப்படுகிறேன். அவர்களு டைய முயற்சியின் பயன் முழுதும் நஷ்டமே யொழிய, லாபமே கிடையாது. இந்தப் போராட்டமோ, நான் ஏற் படுத்திக் கொண்டது. இது எனக்கு ஸகஜமாயுள்ளது. வேறு வழியாகக் கதிமோட்ச மில்லை என்று இந்த நண்பர் களும் ஒப்புக்கொள்கிறார்கள்.

“ஏதோ சில லட்ச ரூபாய்களை மிச்சப்படுத்திக் கொள் ளுவதற்காக, இந்தப் போராட்டம் ஏற்படவில்லை. வரி உயர்வு நியாயந்தான் என்று எனக்குப் பட்டிருக்கு மாகில், ‘கிஸ்தி யைக் கொடுத்து விடுங்கள் என்று ஜனங்களுக்கு யோசனை சொல்ல, நான் தயங்கி யிருக்கமாட்டேன்.

“சென்ற வருஷம், குஜராத்தில் வெள்ளச் சேதம் உண் டாயிற்று. வரிவஜாவுக்காகக் கிளர்ச்சி செய்ய வேண்டும் என்று என்னிடம் சொன்னார்கள். முடியாது என்று கண் டிப்பாய்ச் சொல்லிவிட்டேன். ‘வஜாக் கேட்பது நியாய மில்லை. விளைவு நல்ல விளைவு. வெள்ளச்சேதம் என்று சொல்லுவது கூடாது. பஞ்ச நிவாரணத்துக்காக, ஸர்க்கார் பத்து லட்சமும் பொதுஜனங்கள் இருபது லட்சமும் கொடுத் திருக்கிறார்கள். கிஸ்தி செலுத்தி விடுவது தான் நியாயம், என்று சொல்லி விட்டேன்.

“வணக்கத்துடன், இன்னொரு விஷயத்தையும் தெரி வித்துக் கொள்கிறேன். குஜராத் பிராந்திச் சமிதியார் தங் கள் மனிதர்களை ஸமயத்திலே அனுப்பி, அரசாங்கத்தாருக்கு ஒத்தாசை செய்யாம லிருந்திருப்பார்களாகில், ஸர்க்காருக்கு

50, 60 லட்சத்துக்கு மேல், கிஸ்தி நஷ்ட மேற்பட்டிருக்கும் என்று பகிரங்கமாகச் சொல்லுகிறேன்.

"பர்டோலிப் போராட்டத்தைத் துவக்கு முன், 'விவசாயிகளின் நிலைமை எங்கேயும் கேவல மாகிக்கொண்டு வருவது. எல்லாத் தாலூக்காக்களையும் சகட்டு மேனிக்குச் சேர்த்துப் பார்க்கக் கூடாது' என்று ஸர்க்காருக்கு எழுதினதற்கு, 'நான் வெளியூர்ப் பேர்வழி' என்று அரசாங்கத்தார் எனக்குப் பதிலெழுதினர்கள். நான் வெளியூர்ப் பேர்வழியாம்!

இனிமேல் சமாதானமோ, வியாக்கியானமோ செய்ய முயலுவதில் லாபமென்ன? ஜப்தி, பறிமுதல் நோட்டீஸ்கள் தாலூகாவில் மலிந்து போய் விட்டன. ஆனல், அவைகளின் மூலமாய், அரசாங்கத்தார் எதிர்பார்த்த பலன் உண்டாகவில்லை. இன்னும் கடுமையான நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ள வேண்டு மென்று அதிகாரிகள் தீர்மானித்துக் கொண்டார்கள்.

சமுத்திரக் காற்று வாங்கிக் கொண்டிருந்த டிவிஷன் கமிஷனர் அவர்களுக்கு உடனே சூரட் நகரத்திற்குச் சென்று முகாம் போடவேண்டும் என்று தந்திமேலே ஏப்ரல் மாதம் 14-ந் தேதி உத்தரவு. சூரட் ஜில்லாக் கலெக்டருக்கும் அதே மாதிரி தாக்கீது. அவர் அப்பொழுது மலைவாசம் செய்து கொண்டிருந்தார். பர்டோலியிலே கடுமையான போராட்டம்; கமிஷனருக்குக் கடல் காற்றும், கலெக்டருக்கு மலைக் காற்றும் தேவையா யிருக்கின்றன! போராட்டத்துக்குப் பின்னர், முதன் முதலாக, கலெக்டர் அவர்கள் பர்டோலியில் முகாம் செய்வது இதுதான். இதுவரையிலும் கலெக்டருக்குக் கண், நமது பழைய, உல்லாச, யௌவன டெபுடி கலெக்டர் தானே?

கலெக்டர் சூரட்டிலே முகாம்போட்டார். போட்டதும், கடைக்காரர்களெல்லாரும் கடைகளைச் சாத்தி, பூட்டி விட்டார்கள். ஏன்? திறந்திருக்கும் கடைகளை அவர் ஜப்தி

செய்து விட்டால், என்ன செய்கிறது? இன்னொரு ஊருக்குப் போகலாம் என்று தீர்மானித்தார். வாடகைக்கு மோட்டார் பேசப்போனுர்கள் போலீசார். "நாங்கள் ஏற்கனவே, சத்தியாக்கிரகிகளுக்கு மோட்டார் விடுவதாக, வாடகை பேசியாகி விட்டது. எங்கள் வார்த்தையை முறித்துக் கொண்டு, கலெக்டர் துரைக்கு மோட்டார் விடமுடியாது" என்று அந்த டிரைவர் சொல்லிவிட்டார். அவருடைய லைஸென்ஸைக் கேட்டார்கள். அவரிடம் லைஸென்ஸ் இல்லை. ஆனல் பித்தளை பாட்ஜைக் காண்பித்தார். "அதைக் கீழே வைத்துவிடு" என்று போலீஸார் உத்தரவு போட்டு விட்டார்கள். வல்லபாய்க்காகப் பேசி வைத்திருந்த மோட்டார்க் காரின் டிரைவர் லைஸன்ஸையும், போலீஸார் பிடுங்கி வைத்துக் கொண்டார்கள்.

கலெக்டர் அவர்கள், ஸர்போன் போய்ச் சேருவதற்கு அஸ்தமனமாகி, ரொம்ப நேரமாகி விட்டது. "கலெக்டர் வருகிருர்" என்று சின்னப்பிள்ளைகள் தப்பட்டை அடித்தார்கள். எல்லாக் கதவுகளையும் மூடிக்கொண்டார்கள். ஆனல், மணியக்காரரைக் கூப்பிட் டனுப்பினுர்கள். அவர் போனுர். "வரிசெலுத்தி விட்டீரா?" என்று அவரைக் கேட்டார்கள். "ஸத்தியாக்கிரகத் தலைமை ஆபீஸிலிருந்து தாக்கீது வந்ததன் பேரில் சர்வ மானியத்துக்குக் கிஸ்தி செலுத்திவிட்டேன்" என்று அவர் பதில் சொன்னுர். "இந்த நிலங்களுக்கும் கிஸ்தி செலுத்திவிடும். மற்றவர்களையும் கொடுக்கும்படியாக நீர் சொல்லவேணும்" என்ருர்கள். "பிரயோசனமில்லாத வேலை! நான் கொடுக்கமுடியாது. என் சொல்லை ஜனங்கள் கேட்கவும் மாட்டார்கள் பறிமுதல் முதலிய சங்கதிகளுக்கு அவர்கள் பயப்படுவதாகவும் காணேம்" என்றுமணியக்காரர் சொல்லிவிட்டார். கலெக்டரும் அயர்ந்துபோனுர்.

அடுத்த நாள் கர்ணங்களை வரவழைத்து, "பறிமுதல் செய்த நிலங்களை வந்து வாங்குபவர்களுக்குத் தோதாக இருக்கிறமாதிரியுள்ள நிலங்களுக்கெல்லாம் படம் (மாப்) தயா

ரித்து வையுங்கள்" என்று சொல்லிவிட்டு, கலெக்டர் அவர்கள் ஆத்திரத்துடன் சூரட்டுக்குத் திரும்பிப் போனூர்.

ஆத்திரத்தோடு, சூரட்டுக்குச் சென்ற கலெக்டர் அவர்களை 'டைம்ஸ் ஆப் இந்தியா'ப் பத்திரிகையின் நிருபர் பேட்டி கண்டார். அப்பொழுது கலெக்டர் துரை சொன்னதாவது:—

"தாங்கள் கொடுக்கவேண்டிய நிலவரி முதலிய எல்லா வரிகளையும் கொடுத்துவிட, விவசாயிகளில் பலர் விருப்பத்துட னிருக்கிருர்கள். ஆனுல் இவர்களைச் சமூகப் பகிஷ்காரம், பலாத்காரம், தீ வைத்தல் முதலிய பய முறுத்துதல்களைக் கொண்டு கர்ப்பங் கலங்கச் செய்து விட்டார்கள். இந்தப் போராட்டத்தை நடத்திவரும் ஒத்துழையாதார்களின் முட்டாள் யோசனையை, விவசாயிகள் கேட்பார்களாகில்—! இந்த ஒத்துழையாதார்களில் பெரும் பான்மையோர், வெளித் தாலூகாப் பேர்வழிகள்; இந்தத் தாலூகாவிலே அவர்களுக்குக் குழி நிலம் சொந்தமாகக் கிடையாது; ஆகையினுலே, இழப்பதற்கு அவர்களுக்கு ஒன்றுமே இல்லை—இவர்களின் பேச்சை விவசாயிகள் கேட்பார்களாகில், முடிவிலே, விவசாயிகள் தான் கஷ்டப்பட நேரிடும். ஒத்துழையாத் தலைவர்கள் நடத்திவரும் இயக்கத்தின் பயனுக, தாலூகாவில்கலகம்நேருவதற்கு ரொம்பவும்இடமிருக்கிறது."

கலெக்டர் இவ்வாறு பேட்டி கொடுத்தாரே, அது நியாயமாகுமா, உண்மையாகுமா? கலெக்டர் போன விடங்களிலெல்லாம், ஜனங்கள் இவருடன் பேசினுர்களா? ஒரு வீட்டுக் கதவாவது திறந்து இருந்ததா? ஜனங்களில் யார் போய் இவரிடம் முறையிட்டுக் கொண்டார்? இவருடைய சிப்பந்திகள், கீழதிகாரிகள் இவரிடம் அளந்த பொய் மூட்டைகள் தானே இவைகள்? கலகம் தாலூகாவில் இல்லையே என்று கலெக்டர் அவர்களுக்குத் துயரமோ, என்னவோ?

ஆடுமாடுகளை ஜப்தி செய்யும் நடவடிக்கைகள், இது முதல் எடுத்துக்கொள்ளப்பட்டன. வீட்டைப் பூட்டை உடைத்து ஜப்தி செய்யலாம் என்ற அதிகாரத்துடன், சிறப்

பாக மூன்று ஜப்தி உத்தியோகஸ்தர்கள் நியமிக்கப்பட்டார்கள். போலீஸ் படையை அதிகப்படுத்தினார்கள். பம்பாய் நகரத்திலிருந்து பட்டாணி (முஸ்லீம்) அடியாட்களைத் தருவித்தார்கள். இவர்கள் ஜப்தி உத்தியோகஸ்தர்களுக்குச் சகாயமாயிருப்பதற்காம்! ஜப்தி செய்யப்பட்ட மாடுகள் இவர்கள் பார்வையிலும் பந்தோபஸ்திலும் இருக்குமாம்!

இயக்கத்தை நசுக்கிவிட்டதாக, நிமிஷத்துக்கு நிமிஷம் பேசிக்கொள்ளும் அதிகாரிகளுக்கு உள்ளூர்களில், தாலூகாவுக்குள்ளாகவே ஆள் கிடைக்காமல், பம்பாயிலிருந்து பட்டாணிகளைக் கொண்டுவர வேண்டி வந்தது, ரொம்பவும் விநோதமே யாகும். ஹிந்துத் தாசில்தாருக்கு மாற்றம். அவர் ஸ்தானத்தில், முஸ்லீம் தாசில்தார் பர்டோலிக்கு வந்து சேர்ந்தார். ஹிந்துக்களுக்கு விரோதமாய் முஸ்லீம்களை இவர் கிளப்பிவிடக்கூடும் என்ற ஆசை! இதுவரையிலும் கர்ணிகர்கள், ஸர்தாரின் பிரசங்கத்தை ரிபோர்ட்டு செய்து கொண்டு வந்தார்கள். இனிமேல், அந்த வேலையைச் செய்ய ஸி. ஐ. டி. ரிப்போர்ட்டர்கள்!

கடோட் கிராமம் மட்டும் இயக்கத்தில் சேரவில்லை என்றோம். கிராமத்து முக்கியஸ்தர்கள் ஸர்தாரைப் பேட்டி கண்டு, தங்கள் ஊருக்கு விஜயம் செய்யவேண்டுமென்று வேண்டிக் கொண்டார்கள். ஸத்தியாக்கிரக இயக்கத்தில் கடோட் கிராமத்தையும் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்பது அவர்களுடைய பிரார்த்தனை. கடோட் கிராமத்தார் சரியான ஜாமீன் கொடுத்து, முன் நடந்து கொண்டதற்காகப் பிராயச் சித்தம் செய்து கொள்ளாமற்போனால், அந்தக் கிராமத்தைப் போராட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்படாது என்று பக்கத்து ஊர்ப் பிரமுகர்கள் ஸர்தாரை வேண்டிக் கெண்டார்கள்.

இரண்டு கைகளாலேயும், கரோடை வரவேற்பீர்களாக! உங்களுக்குப் பொறுமையும் மன்னிப்புத் தன்மையும் வேண்டும். உள்ளபடியே கடோட் கிராமத்தார் உள்ளம் கரைந்திருப்பதால், அவர்கள் வருந்துவதே, அவர்களுடைய நன்

னடத்தைக்கும் நல்லெண்ணத்துக்கும் ஜாமீனாகும் என்று வல்லபாய் மற்றக் கிராமத்தார்களுக்கு யோசனை சொன்னார்.

இயக்கத்தில் கடோட் கிராமம் புதிதாகச் சேர்ந்த தான தால், அதிகப்படி ஊக்கமும் உற்சாகமும் காண்பிக்க ஆசைப்படுவது இயற்கைதானே? கடோட் கிராமத்தில் நிய மித்திருக்கும் ஜப்தி உத்தியோகஸ்தருக்கு யாதொரு சாமா னும் சப்ளை செய்யாமல் கட்டுப்பாடு செய்யவேண்டும் என் பது கடோட் கிராமத்தாரின் கருத்து. அவர்களுடைய யோசனை, சத்தியாக்கிரக தத்துவத்துக்கு ஏற்றதல்ல என்று காண்பிக்கும் பொருட்டு, ஸர்தார் உருக்கமாக ஒரு பிரசங்கம் செய்தார்:—

"சத்தியத்தையும் சாத்வீகத்தையும் அடிப்படையாகக் கொண்டதொரு போராட்டத்தில், வருத்தத்திலோ அல்லது கோபத்திலோ, நாம் ஒன்றுமே செய்யலாகாது. அது பல வீனத்துக்கு அடையாளம். நம்பேரில் தள்ளப்படும் கஷ்டங் கள் யாவற்றையும் நாம் முக மலர்ச்சியுடன் ஏற்றுக்கொள்ளு வதிலேதான், நமது சக்தி குடிகொண் டிருக்கிறது. ஜப்தி வேலையில் நீங்கள் அதிகாரிகளுக்குச் சகாயம் செய்யவில்லை என்றால், அது எனக்கு அர்த்தமாகும். அந்தமாதிரி செய் வது உங்கள் கடமையும்கூட. தினசரி வாழ்க்கைக்கு வேண் டியவற்றைக் கொடுக்க மறுக்காதீர்கள். சந்தை விலைப் பிர காரம், எல்லாச் சாமான்களும் அவர்களுக்குக் கிடைக்க வேண்டும்.

'கலெக்டர் டைம்ஸ் ஆப் இந்தியா' நிருபருக்குப் பேட்டி யளித்திருப்பதை நான் படித்தேன். இரண்டரை மாதகாலமாய் நான் ஊர் ஊராய்ப் போய்ப் பார்த்துக் கொண்டுதான் வருகிறேன். இந்த அநியாய வரியைக் கொடுக்க இஷ்டப்படும் ஒரு பேர்வழியைக்கூட நான் இது வரையும் சந்திக்க வில்லை. கலெக்டர் அவர்கள் சூரட்டுக்கு வந்த பிறகுதான், தகாத முறையில், ஜனங்களை முக்கியமாகப் பார்ஸிக்கார மிராசுதார்களை, பயமுறுத்துவதாக எனக்குச்

செய்திகள் எட்டுகின்றன. பார்ஸிக் கள்ளுக்கடைக்காரர்களே அவர்கள் மிராசுதார்களாக இருப்பதால், கலால் இலாகா இன்ஸ்பெக்டர் ரொம்பவும் தொந்திரை செய்து, கிஸ்தி செலுத்தும்படியாகக் கட்டாயப் படுத்துகிறாராம்.

“ஸர்க்கார் உங்களைப் பிரிக்கப் பார்க்கிறார்கள். உங்களைப் பிரித்தால்தான், அவர்களுக்குச் சக்தி. அவர்களுடைய ஆசையை நீங்கள் ஏய்த்து விடுவீர்கள் என்று நான் நிச்சயமாய் நம்புகிறேன். எவ்வளவு ஆத்திர மூட்டினாலும், இயக்கத்துக்குக் கெட்ட பெயர் வரும்படியாக எதையும் நீங்கள் செய்யலாகாது.

“அவர்கள் பூட்டை உடைத்து உங்கள் வீட்டில் நுழையட்டும். உங்கள் சொத்தை யெல்லாம் அவர்கள் எடுத்துக் கொண்டு போகட்டும். முகமலர்ச்சியுடன் அவர்களைப் பொறுத்துக் கொள்ளுங்கள். ஆத்திரப்பட வேண்டாம். அவர்களுக்கு எது இஷ்டமோ, அதைச் செய்யட்டும். தீக்கோ, பலாத்காரத்துக்கோ பயந்துபோய்க் கிஸ்தி கொடுக்காம விருப்பவர்கள் இந்தத் தாலூகாவில் இருப்பார்களானால், அவர்கள் என்னிடம் வரட்டும். அவர்களை நேரே நான் தாசில்தாரிடம் அழைத்துக் கொண்டு போகிறேன். அவர்களுக்கு என்ன பந்தோபஸ்து வேண்டுமோ, அவ்வளவையும் தர, நான் தயாரா யிருக்கிறேன். அப்படி யாரும் இருக்கிறதாகத் தெரியவில்லையே!

“பலாத்காரத்துக்குக் கடைசி வார்த்தை என்று வர்ணிக்கக் கூடியதான இந்த அரசாங்கத்தை, பலாத்கார முறையால் ஜயிக்கவே முடியாது. நீங்கள் அமைதியோடு இருந்து, போலீசாருக்கு யாதொரு வேலையு மில்லாமல் செய்துவிடுங்கள். அவர்களைச் சோம்பேறிகளாக ஆக்கிவிடுங்கள். அவர்கள் திரும்பிப் போய்விடுவார்கள்.”

ஸர்தாரின் ஆணித்தரமான பேச்சுக்குப் பின், தாலூகாவிலே, கலவரம்கூட நேருமோ? இதுவரையிலும் பயப்படக் கூடாது என்று வற்புறுத்தி வந்தார். இப்பொழுது சாத்வீகத்துட னிருக்கவேண்டும் என்று வற்புறுத்துகிறார். அரசாங்கத்

தாருக்கு ஆத்திரம் வரவர, ஜனங்களிடம் அதிகமான சாத்வீகம் வேண்டும் என்று ஸர்தார் வற்புறுத்துவது நியாயந் தானே?

"இனி நீங்கள் போர்ப் பாட்டுகள் பாடவேண்டாம். சகோதரிகள் பாடுவதைப் போல, பஜனைப் பாடல்கள் பாடினுல் போதும். என்னுடைய சகாக்களில் யாரும் இனிப் பிரசங்கம் செய்யவேண்டாம். பிரசங்கம் தேவையானுல், நான் மட்டும் செய்கிறேன். நமது தியாகம் ஆரம்பமா யிருக்கிறது. அது அழுக்கற்றதாயும் தூய்மை கொண்டதாயும் இருக்கட்டும். ஸர்க்கார் ஆத்திரத்துட னிருக்கிருர்கள்; கடுமையான அடக்கு முறையைக் கையாளத் தீர்மானித்து விட்டார்கள். பெரிய அதிகாரிகளுக்குச் சில்லறை அதிகாரிகளின் பேரிலும் சிப்பந்திகளின் பேரிலும் கோபம். இவர்கள் என் ஜனங்களை நயபய வழிகளில் திருப்ப முடியவில்லை என்பதை அதிகாரிகளால் தெரிந்துகொள்ள முடியவில்லை. சில்லறை அதிகாரிகளின் பேரில், பெரிய அதிகாரிகளுக்குச் சந்தேகம். இந்தத் தாலூகாவிலிருந்து, கணக்கர்கள் பலரை மாற்றப்போவதாக வதந்தி. சத்தியாக்கிரகிகளின் பேரில் வழக்குத் தொடரவும் கைது செய்யவும் தயார் என்றும் கேள்வி. இவைகள் யாவும் ஸர்க்காரின் தற்போதைய ஆத்திரத்தின் அறிகுறிகளாகும். எனவே, அப்படியே எல்லோரும் சாத்வீகமாக யிருக்கவேண்டும். நாம் செய்தது தவறு என்று அவர்கள் சொல்லும்படியாக, நாம் இடம் வைத்துக்கொள்ள லாகாது' என்று, ஸர்தார் தாலூகா பூராவுக்கும் தாக்கீதுகள் அனுப்பி வைத்தார்.

சிறிய ஒரு எழுத்துக்கூடப் பிசகாமல் இந்தத் தாக்கீதுகள் அனைத்தும் அப்படியே ஜனங்களால் கீழ்ப்படியப் பட்டன என்று சொல்லத் தேவையில்லை.

## அத்தியாயம் 17.

பர்டோலித் தாலூகாவிலே, இப்பொழுது, சட்டத்துக்கு மீறிய காரியங்கள் ஏராளமாக நடக்கத் துவக்கி விட்டன. எல்லாம் செய்தது அதிகாரிகளே, இதையே பயங்கர ஆட்சி

என்றுசொல்லலாம். இதைக் கண்டு, ஜனங்கள் பயந்து போனு லல்லவோ, இதைப் பயங்கர ஆட்சி என்று அழைக்கலாம்? ஜனங்கள், அசையாப் பிள்ளையார்களாக இருந்தார்கள். கவலையும் பயமும் கொண்டவர்கள் அதிகாரிகள் தான்.

கிஸ்தி பாக்கி வசூல் செய்வதற்காக, ரிவினியூக் கோட் நூலிலே, கடுமையான ஷரத்துகள் இருக்கின்றன என்று சொல்லத் தேவையில்லை. சாதாரணமாக, ஆயிரம் ரூ. கடன் கொடுத்தவன், கடன் வாங்கினவன்பேரில், வியாஜ்ஜியம் போடலாம். கடன் வசூல் செய்வதற்காக வியாஜியம் முடிவா கிறதற்குப் பல மாதங்கள், பல வருஷங்கள் கூட ஆகின்றன. கடன் கொடுத்தவருக்குச் சாதகமாகத் தீர்ப்புச் செய்கிற பொழுதும், கடன்காரனுடைய நிலைமையையும் யோசித்துப் பார்த்து, லேசான தவணைகளில் கடனைச்செலுத்தலாம் என்று நீதிபதி நிதானத்துடன் முடிவு சொல்லுகிறார். ஆனால், அர சாங்கத்துக்கு கிஸ்தி பாக்கி கொடுக்க வேண்டிய விவசாயிக் கடன்காரனுடைய நிலைமையோ பரிதாபத்துக் குரியதாகும்.

அரசாங்கத்தார் அவன்பேரில் வியாஜ்ஜியம் போடவே ணும்என்ற தேவையேயில்லை. ஜில்லாக்கலெக்டர், கீழ்க்கண்ட முறைகளில், அவர் உசிதம்போல எதையேனும் ஒன்றையோ அல்லது எல்லாவற்றையுமோ கையாண்டு, கிஸ்தி வசூல் செய்யலாம் என்று நில ரிவினியூ நூல் சொல்லுகிறது.

1. வரி செலுத்தாதவனுடைய நிலங்களைப் பறிமுதல் செய்து, கிரயம் செய்து விடலாம்.

2. பாக்கி போட்டவனுடைய ஜங்கம சொத்துக்களை ஜப்தி செய்து, அவைகளை ஏலம் போடலாம்.

3. மேற்படியானுடைய ஸ்தாவர சொத்தை விற்பனை செய்து விடலாம்.

4. மேற்படியானைக் கைது செய்து, சிறைக்கு அனுப்பி விடலாம்.

இந்த நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ளுகையில், சில

நிபந்தனைகள் உண்டு. பாக்கி போட்டவனுடையவும் அவனுடைய குடும்பத்தாருடையவும் படுக்கைகள் சமையல் பாத்திரங்கள் முதலியவற்றை ஜப்தி செய்யப்படாது. ஜப்தி செய்யும்பொழுது சாட்சிகளை வைத்துக்கொண்டு செய்யவேண்டும். விவசாயிகளின் தொழில் சம்பந்தமான ஆயுதங்களையும் அவர்களுடைய ஜீவனோபாயத்துக்குத் தேவையான ஆடு மாடுகளையும் ஜப்தி செய்யப்படாது. பொழுது விடிவதற்கு முந்தி, சூரியாஸ்தமனத்துக்கும் பிந்தி ஜப்தி செய்யக்கூடாது. குடியிருப்பு வீடுகளின் பூட்டுகளை உடைத்து உள்ளே பிரவேசித்து ஜப்தி செய்யலாகாது. அரசாங்கத்தார் இப்பொழுது முதல் எடுத்துக்கொண்ட நடவடிக்கைகளில், இந்த நிபந்தனைகள் ஒன்றையாவது கவனிக்கவே யில்லை. தாங்கள் ஆக்கிய சட்டத்தையே ஸர்க்கார் மீறினார்கள். குடியானவர்களின் ஜீவனோபாயத்துக்குத் தேவையாயிருந்த மாடுகள் கூட ஜப்தி செய்யப்பட்டன. பூட்டுகளை உடைத்து, வீடுகளுக்குள் பிரவேசித்தார்கள். சாட்சிகளை வைத்துக்கொண்டு, ஜப்தி செய்யவில்லை. இரவு பகல் எந்த நேரத்திலும் ஜப்தி கோலாகாலமாக நடைபெற்றது, இவைகள் எல்லாவற்றையும், இப்பொழுதே என் சொல்லிவிட வேண்டும் ?

அதிகாரிகள், தாங்கள் இதுவரையில் எடுத்துக்கொண்ட ஜப்தி முதலிய நடவடிக்கைகளைக் கண்டு பர்டோலி மிராசுதார்கள் பயந்துபோய் விடவில்லை என்று உணர்ந்தவுடன், புதிய யுக்திகள் செய்ய ஆரம்பித்தார்கள்.

சாராயக் கடைப் பார்ஸிகள், அவர்களுடைய கைகளில் லேசாய்ச் சிக்கிக்கொண்டவர்களல்லவா? பொழுதுவிடிந்தால் பொழுது போனால், சாராயக் கடைகாரர்கள் அதிகாரிகளின் கண்களிலேதானே விழிக்கவேண்டும் ? சாதாரணக் கடைக்காரர்களைப்போல, அவர்கள் தங்கள் கடைகளை மூடிவைக்கப் படாது. லைஸென்ஸ் அல்லவா ? என்ன செய்ய முடியும் ? இந்தச் சாராயக் கடைகளை, நினைத்தால், அதிகாரிகள் திடும் பிரவேசம் செய்யலாம். கொஞ்சங்கூடத் தன்மையில்லாமல், டெபுடி கலெக்டர், ஒரு சாராயக் கடையில் நுழைந்து, பெரிய

பெரிய சாராயப் பீப்பாய்களை ஜப்தி செய்தார். இதற்குக் கலால் இன்ஸ்பெக்டர் சாதகம்.

பீப்பாய்களைக் கொண்டுபோக முடியவில்லை. கூலிகள் அகப்பட்டால்தானே? ஆகையினலே, பீப்பாய்களை முத்திரை போட்டு வைத்துவிட்டுக் கடையைப் பூட்டிக்கொண்டு போய் விட்டார் டெபுடி கலெக்டர். பார்ஸிச் சாராயக் கடைக்காரர் டெபுடி கலெக்டருக்கு ஒரு கடுமையான கடிதம் எழுதினர்:— "தாங்கள் எடுத்துக்கொண்ட நடவடிக்கை சுத்தத் தவறு. ஜப்திசெய்த பீப்பாய்களைக் கடையிலே வைத்துப் பூட்டிவிட்ட தால், அதற்காக நாளொன்றுக்கு ரூ. 5. வாடகை கொடுத்து விட வேண்டும். வரி கொடுக்க இஷ்டப்பட்டவர்கள் கூடப் பிறருடைய துர்ப்போதனையால், கொடுக்கவில்லை என்று கலெக்டர் சொன்னது தவறு. வரி கொடுக்காதே என்று பார்ஸி மிராசுதார்களாகிய எங்களிடம் யாருமே சொல்ல வில்லை. வரிகொடு என்று அதிகாரிகள்தான் தகாத முறை யில் எங்களைக் கட்டாயப் படுத்துகிறார்கள்" என்று எழுதி னர். இந்தச் சேதி, மேலதிகாரிகளின் காதுக்குப் போயிற்று. இப்படிச் செய்தது தவறு என்று அவர்கள் கண்டித்து, "உடனே கடையைத் திறந்து விடுங்கள்" என்று டெபுடி கலெக்டருக்குத் தாக்கீது அனுப்பினர். டெபுடி கலெக்டரின் ஆட்கள், நடுநிசியிலே 'வியர்க்க விறுவிறுக்க', பார்ஸிக்காரர் கடைக்கு ஓடி, அதைத் திறந்து விட்டுவிட்டு, "என்னமாய் அந்தமாதிரி கடிதம் எழுதலாம்?" என்று கடைக்காரரிடம் கோபித்துக் கொண்டார்கள். கலெக்டர் பெரிய துரை சொன்னது பொய் என்று சொல்ல, இந்தச் சாராயக்கடைக் காரன் துணியவாவது! இந்தச் சிப்பந்திகளுக்கு ஆத்திரம் வராம லிருக்க முடியுமா? கடைக்காரருடைய பெயர் "கறுப்பு லிஸ்டில்" தாக்கலாகிவிடும் என்று சொல்லிவிட்டுப் போய் விட்டார்கள்.

சாராயம் என்றல் ஸர்க்காரின் மதிப்பிலே, கரென்ஸி நோட்டுகளைப்போல. 300 ரூபாய் கிஸ்திக்கு 2000 ரூபாய் சாராயத்தை ஜப்தி செய்ய, அதிகாரிகளுக்குப் பாத்தியமில்லை

இந்த சத்தியாக்கிரகப் போராட்டத்தினுல், பார்ஸிகளால் கடைக்காரர்களுக்குத்தான் அதிகமான தொந்திரவு. தினம் தினம் அவர்களுக்கு ஸர்க்காரோடு, பண வரவு செலவு உண்டு. கடை லைஸென்சுக்காகவோ அல்லது சாராயம் வாங்குவதற்காகவோ, பார்ஸிக்காரர்கள் பணம் கொடுத்தால், அதை அவர்களுக்குச் சொந்தமான நிலங்களின் கிஸ்திக்கு வரவு வைத்து ஈடுசெய்ய ஆரம்பித்தார்கள் ஸர்க்கார் அதிகாரிகள். காரியம் ஒழுங்கா யிருக்கிற தல்லவா ?

ஒரு சமயம், ஒரு பார்ஸிக்காரர் கஜாஞவிலே பணம் செலுத்தப்போனுர். ரூ 700. இதைக் கிஸ்திக்கு வைத்துக் கொள்ளுவோம் என்ருர்கள் அதிகாரிகள். "எனக்கு ஒரு குழிநிலம்கூட மிராசு இல்லையே" என்ருர் பார்ஸிக் கனவான். "உம்முடைய உறவினர்களின் கிஸ்தி பாக்கிக்காக வைத்துக் கொள்ளுகிறேம்" என்று, ஓநாய் ஆட்டுக்குட்டிக் கதை வேலை செய்தார்கள். இதைக் கேட்டதும், பார்ஸிக் கனவான் கஜாஞவில் பணம் செலுத்தாமலே, திரும்பி வந்துவிட்டார்.

எருமைமாடுகளை ஜப்தி செய்வது தினசரி வழக்கமாகி விட்டது. எருமைமாடுகள் யாருடையவை என்று விசாரிக்கவோ, ஜப்திக்கு ரசீது கொடுக்கவோ, ஜப்தியின் பொழுது சாட்சிகளை வைத்துக் கொள்ளவோ வேண்டும் என்ற எண்ணமே யில்லாமல், நடவடிக்கைகள் ஜோராய் நடந்தன. தாசில்தாரும் அவரது திருக்கூட்டத்தாரும் போலீசார் சகிதமாக, ஒரு கிராமத்துக்கு, விடியற்காலமே வருவார்கள். ஒரு மந்தை மாடுகளையும் ஜப்தி என்று சொல்லிவிடுவார். யார் மாடு ? மிராசுதார் மாடுதாஞ, அப்படியே மிராசுதார் மாடா யிருந்தபோதிலும், அவருக்குக் கிஸ்தி பாக்கி உண்டா என்பதைச் சிறிதும் விசாரிக்காமலே, ஜப்தி செய்வார் தாசில்தார். ஒரு சமயம் 58 மாடுகள், வலோடில் ஜப்தி. ஜப்தி நோட்டீஸ் எப்படித் தெரிமா ? "சிகார் கிராமத்து ராமகோவிந்த் வகையருவின் 58 மாடுகள் கிஸ்தி பாக்கிக்காக ஜப்தி" என்று நோட்டீஸ். மாடுகளுக்குக் காவலாளிகளான பட்டாணிகள் அவைகளை அடித்து, எப்படி யெல்லாம் தொந்

திரை செய்யவேண்டுமோ, அப்படி யெல்லாம் செய்து வந்தார்கள். ராமகோவிந்த் வகையருவாம்! கிராமத்தார் பூராவும் பங்காளிகள் போல, பிரிவினையாகாத குடும்பம் மாதிரி பாவிக்கப்பட் டிருக்க வேண்டும்! அபேதவாதமா?

என்ன செய்தும் பயன் என்ன? 'எண்ணெய்ச் சேதத்துக்குத் தக்கபடி, பிள்ளைக்குப் படிப்பு வரவில்லை' என்ற மாதிரிதான். 13 எருமை மாடுகளை ஓட்டிக் கொண்டு போக, 5 போலீஸ்காரர்கள்! பெரிய பெஞ்சுகளும் தானிய மூட்டைகளும் ஜப்தி! ஆனால் ஜப்தி செய்த இடத்திலேயே, அவைகள் இருந்தன. தூக்கிக்கொண்டுபோக ஆள் அகப்பட்டால் தானே! வண்டிகள் ஜப்தி! ஆனால் அவைகளை ஓட்டுவதற்கோ, இழுத்துக்கொண்டு போவதற்கோ ப்யூன்கள் அல்லது பட்டாணிகள் அல்லது போலீஸ்காரர்கள்தான்!

இப்பொழுது பறிமுதல் நோட்டீஸ்கள் ஏராளம். பனியாமார்கள் அசையாப் பிள்ளையார்க ளாகிவிட்டதைக் கண்டு, முஸ்லீம் மிராசுதார்களின்பேரில் பாய்ச்சல். பர்டோலிப் பிரமுகரான இப்ரஹீம் படேல் பேரில் குறி விழுந்தது. ஆயிரக் கணக்கான ரூபாய் பெறுமானமுள்ள அவருடைய நிலங்கள் பறிமுதல் என்று பஹிரங்கப்படுத்தப்பட்டது. இதை இப்ரஹீம் படேல் சாகேப், லட்சியம் செய்தால் அல்லவோ? அடுத்தபடியாக,கன்பிமார்களின்பேரில்பாய்ச்சல். அவர்களா அசைகிற பேர்வழிகள்? வலோட் கிராமத்துப் பனியாமார்களில் ஒருவருடைய எல்லாச் சொத்தும் பறிமுதல். எல்லா நிலங்களையும் ஸர்க்கார் எடுத்துக்கொண்டுபோன சுபதினத்தைக் கொண்டாடுவதற்காக, அவர் தமது சிநேகிதர்களுக்கும் சத்தியாக்கிரகிகளுக்கும் ஒரு விருந்து வைத்தார்.

எங்கே பார்த்தாலும் பெரும்பெருங் கூட்டங்கள். பெண்மணிகள் பஜனை செய்துகொண்டு ஸர்தாருக்கு முன்னால், கையால் நூற்ற நூலைக் கொண்டுவந்து குவித்து விடுவார்கள். ஜனங்கள் மனம் தளரவில்லை யென்றால் அதிகாரிகளுக்கு ஆத்திரம் உண்டாவது சகஜந்தானே? பல தொண்டர்கள் பேரில் பொய்க் கேஸ்கள். முதலில், களப்பலியானது ஸ்ரீ ரவிசங்கர்

வியால் (ஸர்தாரின் வலது கண்). ஸர்க்கார் அதிகாரிகள் தங்கள் வேலையைச் செய்துகொண் டிருக்கையில், அவர்களைச் செய்யவொட்டாமல் ஸ்ரீ ரவிசங்கர் தடுத்தார் என்பது அவர் பேரில் சாட்டப் பெற்ற குற்றம். விவரம் என்னவெனில், பர்டோலியிலிருந்து வலோடுக்கு டெபுடிகலெக்டரின் சாமான்களை ஏற்றிக்கொண்டு போவதற்காக, மூன்று வண்டிகள் வாடகை பேசப்பட்டனவாம். வாடகை பேசும்பொழுது யாருக்கு என்று வண்டிகளின் சொந்தக்காரருக்குத் தெரியாது. விஷயம் தெரிந்ததும், அவர் ரவிசங்கரை அழைத்துக்கொண்டு கச்சேரிக்குப் போனார். “எங்களுக்குப் போகிறதற்கு இஷ்டமில்லை. ஆனால் தொந்திரை செய்கிறார்கள்” என்று வண்டிக்காரர்களில் ஒருவன் சொன்னான். “சம்மதமில்லை என்றால் கட்டாயப்படுத்தக் கூடாது” என்று ரவிசங்கர் தாசில்தாரிடம் சொல்லிப் பார்த்தார். “ஓய்! நீர் கச்சேரியை விட்டு வெளியே போம்” என்று ரவிசங்கரைக் கட்டளையிட்டார்கள். ரவிசங்கர் வெளியே வந்துவிட்டார். வண்டிக்காரர்களும் வண்டிகளை அங்கேயே போட்டுவிட்டு, ரவிசங்கருக்குப் பின்னால் போய்விட்டார்கள். இந்தச் செயல், ஹத்துமீறிய குற்றமாம்! இதற்கு பலி ரவிசங்கர்! ஸர்க்கார் அதிகாரிகளின் வேலையைத் தடை செய்த குற்றத்துக்காக, (ஜனங்கள் வரிகொடுத்து, ராஜாங்கம் நடைபெற ஒத்தாசை செய்யாததால்), பர்டோலித் தாலூகா வாசிகளனைவரையும் குற்றவாளிகளாகக் கருதித் தண்டனை விதிக்கலாமே! பாரதப் போரில், அகத்தூய்மை புறத்தூய்மை யமைந்து, ஸாமுத்ரிகா லட்சணங்கள் ஒன்றுகூடக் குறையாமல் அழகு நிறைவோடு நின்ற அரவான் களப்பலியாக இடப்படவில்லையா? உத்தமரான ரவிசங்கருக்கு இத்தகைய பாக்யம் கிடைத்ததே! குஜராத்திலே, ஸர்தாருக்கு அடுத்தபடியாக வுள்ளவர் ரவிசங்கர் தானே! ரவிசங்கருக்கு 5 மாதம் 10 நாள் கடுங்காவல் தண்டனை.

இதைக் கேள்விப்பட்டதும், காந்திஜி ரவிசங்கருக்கு அனுப்பிய தந்தியில் “நீங்கள்தான் பாக்கியசாலி; கிடைத்த

உணவைச் சாப்பிடுகிறது ; வெயிலையோ, குளிரையோ பற்றிக் கவலை யில்லை ; கட்டிக்கொள்ளுவதற்குக் கந்தைகள் இருந்தாலும் போதும். இப்பேர்ப்பட்ட பாக்கியசாலியான உங்களுக்கு எல்லோருக்கும் முன்னுல் சிறை செல்லும் அதிருஷ்டம் வந்திருக்கிறது. ஸ்தானங்களை மாற்றிக்கொள்ளலாம் என்று ஈசனுக்கு இச்சையிருந்து, உங்களுக்கும் தயை இருக்குமாகில், இந்த நிமிஷமே, உங்களோடு இடம் மாற்றிக் கொள்ளத் தயாராயிருக்கிறேன். உங்களுக்கும் நாட்டுக்கு வெற்றி! பாபுவின் ஆசீர்வாதங்கள்."

காந்திஜி குறிப்பிட்ட பாக்கியங்களோடு, இவ்வாறு மகாத்மா தந்தியடிக்கும் பாக்கியமும் பெற்ற ரவிசங்கரைப் பற்றி, என்ன வர்ணிப்பது? தாலூகாவின் முக்கிய ஸ்தலங்களிலே, ஹர்த்தால்கள்! அடுத்த அடி தங்கள்பேரில் விழும் என்று தொண்டர்களில் ஒவ்வொருவரும் தயாராய்க் காத்துக்கொண் டிருந்தார்கள்.

. .

பரோடா ஸமஸ்தானத்தில் ஸானிடரிக் கமிஷனர் வேலையிலிருந்து, தமது வேலையை ராஜிநாமாச் செய்து விட்டு, பொதுஜன ஊழியத்தில் தமது ஜீவிய காலத்தைக் கழிக்க எண்ணி, சுமார் பத்து ஆண்டுகளாக (1928-இல்) தேசப் பணி செய்துகொண்டு வருபவர் டாக்டர் சுமந்த் மேதா அவர்கள். அவர் இந்தப் போராட்டத்தைக் கவனித்துக் கொண்டே வந்தார். ரவிசங்கர் கைதியானதும், இந்தப் போராட்டத்தில் கலந்து கொள்ளாமலிருக்க டாக்டர் மேதாவால் முடியவில்லை. ரவிசங்கரின் இலாகாவில் வேலை செய்யும்படியாக, ஸர்தார் டாக்டர் மேதாவை வேண்டிக் கொண்டார். தமது தர்ம பத்தினி ஸ்ரீமதி சாரதா கௌரி அவர்களுடன் ஸர்போன் பிராந்தியத்துக்கு வந்து சேர்ந்தார் டாக்டர். காந்திஜியின் மூன்ருவது மகன் ராம்தாஸ் காந்தியுள்பட ஏழுபேர்கள் பர்டோலிக்குத் தொண்டர்களாக இப்பொழுது வந்தார்கள்.

ரவிசங்கரரின் கேசுக்குப் பிறகு, அரசாங்கத்தார்

இரண்டுவிதப் போலீஸ் உத்தரவுகள் பிறப்பித்தார்கள். ஒன்று ஜில்லாக் கலெக்டர் பெயரால்; மற்ருென்று ஜில்லாப் போலீஸ் சூபிரண்ட் பெயரால். உத்தரவுகளின் சுருக்கம் பின்வருமாறு:—“அவனவன் செய்கிற காரியத்தை, வேறு யாரும், எவ்வகையாலோ பயமுறுத்தி, அவனை அந்தக் காரியத்தைச் செய்யவொட்டாமல் தடுக்கக்கூடாது. இந்த உத்தரவு பொது ஜனங்கள் உபயோகப்படுத்திக் கொள்ளும், ரஸ்தா, தெரு அல்லது இடம்—இவைகளைப் பொறுத்ததாகும். ஸர்க்கார் கட்டிடங்கள் அல்லது ஸர்க்கார் சிப்பந்திகளின் வீடுகள்—இவைகளையும் பொறுத்தது. மாடுகளோ, வண்டிகளோ, ரோட்டில் போய்க்கொண்டிருந்தால், யாரும் எக்காரணத்தை முன்னிட்டும் தடுக்கப்படாது. ரோடுகளிலோ பொது ஸ்தலங்களிலோ அல்லது ஸார்க்கார் கட்டிடங்களிலோ யாரும் தப்பட்டை அடிக்கப்படாது; பாடக்கூடாது; கொம்பு அல்லது சங்கு ஊதக்கூடாது. இந்த நோட்டீஸ்கள் ஆறு மாத காலம் அமுலி லிருக்கும்.”

இந்த உத்திரவுகளி லிருந்து, ஸர்க்காரின் கிலி வெட்ட வெளிச்சமாகிவிட்டது. சங்கு ஊதப்படாது என்று உத்தரவு பிறப்பிக்கவேண்டிய நிலைமைக்கு அரசாங்சத்தார் வருவார்களானுல், சங்கு ஊதுதல் எவ்வளவு பயங்கரங் கொண்டதாக, ஸர்க்கார் அதிகாரிகளின் மனதிலே பட்டிருக்கவேண்டும்! ஜனங்கள் மனமொப்பிச் சம்மதித்தால்தான், அரசாட்சி நடைபெற முடியும் என்ற உண்மையை, இந்த உத்தரவுகள் தெளிவுபடுத்தினவே யொழிய, இந்த உத்தரவுகளின் மூலமாய் ஸர்க்காருக்கு, பர்டோலித் தாலூகாவில் சாதகம் ஒன்றும் ஏற்படவில்லை.

ஆனுல் சர்க்காரின் நோக்க மென்ன? பர்டோலிப் போராட்டம் சாத்வீகப் போராட்டமல்ல வென்று காண்பிப்பதும் எப்படியேனும் ஸர்தார் வல்லபாய் தவருன முறையைக் கைக்கொள்ளச் செய்யவேண்டு மென்பதும் அரசாங்கத்தாரின் நோக்கமா யிருத்தல் வேண்டும். ஆனுல் இந்த வலையிலே அகப்படுகிற ஆசாமி ஸர்தார் அல்ல. ஒரு தவறு, ஒரு சின்னப்

பொய் அரிச்சந்திரன் சொன்னால் அல்லது செய்தால்போதும் என்று விசுவாமித்திரன் எவ்வளவு பாடுபட்டதாகச் சொல்லப்படுகிறது! அது பழைய கதை; இது புதிய சரித்திரம். "சங்கு ஊத வேண்டாம்; தப்பட்டை அடிக்கவேண்டாம்; வழக்கம்போலச் சாத்வீக முறையில் பிறர் மனதைத் திருப்பலாம். அது குற்ற மென்று தடுக்கப் பார்ப்பது சட்டமாகாது" என்று ஸர்தார் தாக்கீது அனுப்பிவிட்டார்.

ஸர்க்காரின் சட்டமீறிய மனப்பான்மை, பர்டோலியின் போக்கையே அடியோடு மாற்றி வந்தது. வல்லபாய் இப்பொழுது, ஆமதாபாத் நகரசபையின் தலைவர் என்ற பதவியை ராஜினாமாச் செய்யும்படி நேர்ந்தது. எனவே, அவருடைய முழுக்கவனமும் காலமும் பர்டோலிக்குத்தான். இதற்கு முன் வாரத்துக்கு மூன்று நாள் பர்டோலிக்கு; இப்பொழுது வாரத்துக்கு ஏழு நாள். ஆகையால், தாமே, எல்லாக் கிராமங்களையும் சுற்றி நேரில் பார்க்க, வசதியும் சந்தர்ப்பமும் ஏற்பட்டன. ஸர்தாரை நேரே பார்த்தபின்னரும், அவரது ஆணித்தரமான பேச்சுகளைக் கேட்டபின்னரும், பர்டோலி வாசிகள் கலங்கவும் செய்வார்களோ? ஸர்தார் சிரித்தால், பர்டோலி வாசிகளும் சிரிப்பார்கள். அவர் கெட்டியாக வாயை மூடிக்கொண்டால், அவர்களும் அப்படித்தான். பயங்கரக் காட்சிகளையும், சிரிக்கத்தக்க காட்சிகளாக வர்ணிக்கும் அற்புதமான வல்லமை ஸர்தாரிடம் உண்டு. மாதிரிக்கு ஒன்று:—

"பர்டோலிக்குத் தனியான கீர்த்தி ஏற்பட்டிருக்கிறது! அதன் வீதிகளிலே, ஆயுதம் தாங்கிய போலீசார் பவனி வருகிறார்கள்; துப்பாக்கியுடன் வீரர்கள் குதிரைகளின்பேரில் ஏறிச் சவாரிசெய்து, தெருக்களை அலங்கரிக்கிறார்கள்! இதுவரையிலும் உங்களை ஸர்க்கார் லட்சியம் செய்ததுண்டா? பித்துப்பிடிக்கும் இந்தக் கோடை வரட்சியிலே, நாள் தவறாமல், அதிகாரிகள் உங்கள் தெருக்களில் அங்கும் இங்கும் ஓடிக்கொண்டிருக்கிறார்கள். இப்பொழுது இந்தக் கொல்லு

கிற வெயிலிலே, போலீஸ் சூபிரண்டு துரையும் வந்து, உங்க ளுக்குத் தரிசனம் கொடுக்கிறுர்!

"இதுவரையிலும், இந்தத் தாலூகாவில் ஜப்தி நட வடிக்கைகள் இருந்ததே யில்லை என்கிறுர்கள். இப் பொழுதோ, இதற்கென்று மூன்றுபேர்களை அரசாங்கத்தார் நியமித்திருப்பது உங்களுக்கு லேசான கௌரவமா? ஜப்தி செய்யப்பட்ட சாமான்களை எடுத்துக்கொண்டு போவதற்கு சூரட்டு நகரத்திலிருந்து, அதிகாரிகள் மோட்டார் லாரிகளைக் கொண்டு வரவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டிருப்பது, உங்க ளுக்கு லேசான கௌரவமா? ஸர்க்காரின் சில்லறை வேலைக் காரர்களுக்கும் பட்டாணிகளுக்கும் இதுவரையிலும் கட்டை வண்டி சவாரிதான் இந்திரபோகமா யிருந்தது. ஆனுல் அவர் கள் இப்பொழுது ஸர்க்கார் மோட்டார்களில் உல்லாசமாய்ச் சவாரி செய்வது யாராலே, என்று நினைக்கிறீர்கள்? உங்க ளாலே தான்; உங்களுக்கு அது லேசான கௌரவமா?"

கண்டிப்பாயும் பேசுவார் ஸர்தார்:—"உங்களுடைய ஜாதிக் கட்டுப்பாடுகளை வலுப்படுத்திக் கொள்ளுங்கள். அதை யாரும் குறைகூறமுடியாது. ஆறுயிரம் மைலுக்கு அப்பாலிருந்து இங்கே வந்து நம்மை ஆளுகிறுர்களே, அவர்க ளிடத்திலும் ஜாதிக்கட்டுப்பாடு உண்டு. அந்தக் கட்டுப்பாட் டின்மூலமாகத்தான், அவர்களால்நம்மவர்களை ஆளமுடிகிறது. தங்களுக்குள் தவறு செய்தவர்களைக்கூட, அவர்கள் பிறரிடம் காட்டிக் கொடுத்துவிடுவதில்லை. அப்படி யிருக்க, நமது அமைப்பின்பேரில், கலெக்டருக்கு ஏன் ஆட்சேபம் ஏற்பட வேண்டும்? அவர்களுக்குச் சாதகமா யிருப்பது தேகபலம்; அதைத் துணைக்கொண்டு, அவர்கள் எளியார்களை உறிஞ்சி விடுகிறுர்கள். நம்முடைய அமைப்பு, சாத்வீகத்தை ஆதார மாகக் கொண்டது; தற்காப்புக்காக மட்டும் ஏற்பட்டதாகும்.

"ஸர்க்கார் கலவரத்தை விரும்புகிறுர்கள்; நம்மைப்பலாத் காரத்துக்குத் தூண்டப் பார்க்கிறுர்கள். கிஸ்தி வசூலுக்கும் தப்பட்டை சங்குக்கும் சம்பந்தமில்லை. அவர்களுடைய நோட்

டீஸ்களைப்பற்றி, நாம் வாக்கு வாதம் செய்யவேண்டாம். நாம் ஆத்திரப்படமாட்டோம் என்று காண்பித்து விடுங்கள். நாம் திகைத்துப் போகமாட்டோம் என்று ருசுப் படுத்தி விடுங்கள். உங்களை அடக்கப் பார்த்தால், சாத்தியப் படாமல் செய்து விடுங்கள். ஸர்க்கார் நிலை தவறி நிற்கிறது. இரும்பிலே ஆயிரம் பொறி பறக்கலாம். சம்மட்டியிலே பொறி பறக்கலாமோ? பறந்தால், சம்மட்டியின் கைப்பிடிக் காம்பிலே தீப்பிடித்து விடுமே! ஸர்க்கார் இரும்பிலே, பொறி பறக்கலாம். சம்மட்டியாகிய ஜனங்களிடம் பொறி பறக்க லாகாது. ஜனங்கள் சாந்தமா யிருப்பின், அரசாங்கத்தாரும் சாந்தத்தை அடைந்து விடுவார்கள்."

எந்த மனிதனும், தக்க சந்தர்ப்பம் வாய்த்தால், நிமிஷத் துக்கு நிமிஷம் வளர்ந்து உயர்ந்துகொண்டே போக முடியும் என்பதற்கு ஸர்தாரின் பேச்சுகள் போன்றவை அத்தாட்சி கள்.

## அத்தியாயம் 18.

தாலூகா முழுதும் ஜப்தி மயம்! ஆயிரக் கணக்கில் பறி முதல் நோட்டீஸ்கள்! தாலூகா பூராவுக்கும் புது ஸெட்டில் மெண்டின்படிக்கு, என்ன கிஸ்தியோ, அதற்கு எத்தனையோ பங்கு மதிப்புள்ள நிலங்கள் பறிமுதல். இத்தனை நிலங்களை யும் எப்பொழுது அரசாங்கத்தார் பறிமுதல் செய்து, தங்கள் வசம் கொண்டு போய்ச் சேர்த்துக் கொண்டார்களோ, அதற்குப் பிறகுகூட, ஹத்துமீறிச் சர்க்கார் அதிகாரிகள் ஏன் நடக்கவேண்டும்? காரணம் மிகவும் எளிது. ஜனங்களின் பிடிவாதத்தைக் குலைத்து, அவர்களை அரசாங்கத்துக்குப் பணியவைக்கவேண்டும் என்ற ஒரே நோக்கம்தான். பூமி யைத் தங்கள் வசம் வைத்துக்கொண்டு ஒன்றும் செய்ய முடி யாது என்று அவர்களுக்குத் தெரியும்.

நிலத்துக்கு விலைகாரர்கள் வந்து விட்டார்கள் என்று அதிகாரிகள் ஆடம்பரமாய்ச் சொன்னார்களே, அதுவும் அவ் வளவாக உண்மையில்லை. மேலும், இந்த ரயத்துகளை, அந்த

நிலங்களிலிருந்து அவ்வளவு எளிதிலே அப்புறப்படுத்த முடியாது என்பதும் ஸர்க்காருக்குத் தெரியும். ஸர்க்காருக்கு நிலம் தேவையில்லை. அவர்களுக்கு வேண்டியதெல்லாம், இந்த ரயத்துகளின் பணிவு ஒன்றுதான்.

முதலிலே, ஜப்திக்காகப் புதிதாய் உத்தியோகஸ்தர்களை நியமித்தார்கள்; அவர்களுக்கு ஒத்தாசைக்காக போலீஸ்; ஜப்தி செய்த ஆடுமாடுகளைப் பந்தோபஸ்தில் வைத்துக் கொள்ள "பட்டாணிகள்"; மாடுகளை விற்பதற்காகக் கசாப் புக் கடைக்காரர்கள் தருவிக்கப்பட்டார்கள். மாடுகள் இனு மாகவே அவர்களிடம் கொடுக்கப்பட்டதாகக் கருதலாம்; அவ்வளவு ஸல்லிசான விலை. இந்தச் சேதி ஜனங்களின் காதில் விழ விழ, அவர்களுக்கு ஆத்திரம். ஏற்கனவே, பட்டியில் அடைக்கப்பட்ட மாடுகள், தீனி, தண்ணீர் இல்லாமல் எவ் வளவு இரக்க மின்றி நடத்தப்பட்டனவோ, அதைக் கேட்டே ஜனங்களுக்கு வருத்தம்.

இந்தப் பணத்தை வைத்துக்கொண்டு "மாடுகளை நன் ருய்ப் பட்டியில் வைத்துக்கொள்ளுங்கள்" என்று பர்டோ லிப் பிரமுகர் ஒருவர் தாசில்தாரிடம் சொல்லிப் பார்த்தார். "உங்களுடைய உதவி தேவையில்லை. அரசாங்கத்தாருக்கு, அவர்கள் கஜாணவில் போதுமான பணமிருக்கிறது" என்று, பிரமுகரின் நோக்கத்தைப்பற்றி கூறி, தாசில்தார் அவருடைய வாயை அடக்கிவிட்டார். தங்கள் வீடுகளுக்குள்ளாகவே, ரயத்துகள் தங்கள் மாடுகளைக் கட்டிக் காப்பாற்றி வந்ததற்கு இதுதான் காரணம்.

ஒரு ஏழைத் தையல்காரன். அவனுக்கு நிலமே இல்லை. அவனிட மிருந்து ஸர்க்காருக்குச் சேர வேண்டியதாக ஒரு காசுகூடக் கிடையாது. இருந்தாலும், ஒருநாள் பொழுது விடிந்ததும் பார்த்தால், அவனுடைய மூன்று எருமை மாடு களையும் காணேம். எங்கேயும் தேடிக் காணமல், வலோட் பட்டியைப் போய்ப் பார்த்தால், அங்கே வேறு பல மாடு களோடு இவைகளும் இருந்தன. ரிவினியூ இனிஸ்பெக்டரிடம் போய் "மாடுவேண்டும்" என்ருன். "இரண்டு நாள் தீனிச்

செலவைக் கொடுத்து விட்டு ஓட்டிக்கொண்டு போகலாம்" என்றார் அதிகாரி. "யாருக்கு யார் செலவு நஷ்டம் கொடுக்கிறது என்று தெரியவில்லை. நானா, ஸர்க்காரா?" என்றான் அவன். "ஏன் பேச்சை ஓட்டுகிறாய்? போய்விட்டு வரலாம்" என்று கதவைக் காண்பித்தார். "அப்படியா! சரி! எதிரே நிற்கிற காந்திக் குல்லாய்த் தொண்டரிடம் கலந்து கொண்டு, உங்களிடம் வருகிறேன்" என்று சொல்லிவிட்டு, தையல்காரன் சிறிது நகர்ந்தான்.

'தொண்டர்' என்று கேட்ட உடனே, ரிவினியூ இன்ஸ்பெக்டர் நடுங்கிப்போய், "சரி சரி! பிறகு பார்த்துக்கொள்ளுகிறோம்! உன் மாடுகளை இப்பொழுது ஓட்டிக் கொண்டு போகலாம்" என்றார். யார் போடுகிறது, காந்தி குல்லாய்க்கு ஜே?

இன்னொரு விநோத சம்பவம். மஹால்காரி (ரிவினியூ இன்ஸ்பெக்டர்) வலோடுக்குப் போயிருந்தார். குயத்தெரு வழியாக நடந்து கொண்டிருக்கையில், ஒரு வீடு திறந்திருந்தது அவர் கண்ணில்பட்டது. போலீசும் பட்டாணிகளும் பின் தொடர, மஹால்காரி, வீட்டுக்குள் ஓடினார். வீட்டுக்குள் சின்னப் பெட்டியும் நாற்காலியும் இருந்தன. "இவைகளைத் தூக்குங்கள்" என்றார் அதிகாரி.

அந்த வீட்டுக்காரிக்கு ப்ரேமி என்று பெயர். அவள் உள்ளேயிருந்தாள்; இவர்களுடைய நோக்கம் இன்னதுதான் என்று அவளுக்குத் தெரியவில்லை. "அங்கே என்ன செய்கிறீர்கள்? எனக்கு 'நிலபலம்' கிடையாது. எனக்குக் கிஸ்தியும் கிடையாது. இங்கே எதற்காகத் தங்கள் தரிசனம்?" என்று அதட்டினாள்.

கணக்கர்:—ஏன் நிலம் இல்லை? உன்னிடமிருந்து ரூ. 15—5—5 பாக்கி யிருக்கிறதே, கொடுத்துவிடு.

ப்ரேமி:—என்ன அபத்தம்! சத்தியம் செய்வதற்குக் கூட, ஒரு கோட்டு மண், எங்களுக்கு ஐந்து வருஷமாய்க் கிடையாது.

கணக்கர்:—சரி, இருக்கட்டும்! அப்படியானால், கேசவ ஊகாவின் வீடு எங்கே?

ப்ரேமி:—அதை நான் உங்களுக்கு எப்படிச் சொல்லுகிறது?

மஹால்காரி:—நல்லது! இது யார் வீடு? உன் புருஷன் பெயர் என்ன?

ப்ரேமி:—உங்களுக்கு ஒன்றுமே சொல்லப் போவதில்லை. எனக்கு நிலம் கிடையாது. நீங்கள் வெளியே போகலாம்.

மஹால்காரி (தமது ஆட்களைப்பார்த்து):— நாம் கொல்லைப்புறமாய்ப் போவோம்.

ப்ரேமி, "அப்படி நீங்கள் போகக்கூடாது" என்று குறுக்கே நின்று தடுத்துவிட்டு, கொல்லைக் கதவை, தன் பெண்ணின் மூலமாய்ப் பூட்டவும் செய்துவிட்டாள்.

மஹால் காரியும் அவரது பரிவாரமும், உண்மையிலே, "வந்தவழி பார்த்து" க்கொண்டு போய்விட்டார்கள்.

ஏற்கனவே, ஒரு பார்ஸிச் சாராயக்கடைக்காரரைப் பற்றி, பிரஸ்தாபம் செய்யப்பட்டது. அவருடைய பெயர் ஸேட் டொராப்ஜி. பார்ஸிகளே ரொம்பப் பயந்தவர்கள், சாதுவானவர்கள். இந்த ஸேட்டை, அதிகாரிகள் கண்ணில் துரும்பைக் கொடுத்து, ஆட்டிப் பார்த்தார்கள். 'பயந்த' பார்ஸி, அசையவில்லை. பார்ஸிகள் தான் கள், சாராயக்கடை ஏலம் எடுப்பவர்கள். குஜராத் கலால் வருமானம், பார்ஸிகளின் மூலம் தான் ஸர்க்காருக்கு.

மிகவும் கடுமையாக அவரை அதிகாரிகள் கையாண்டதற்குக் காரணம், அவர் டெபுடிகலெக்டருக்குத் தைரியமாய் எழுதிய கடிதம் தான். இவரும் இவரது மாமியார் நவஜ்பாயும் கூட்டு ஏலத்தார்கள். மாமியார் கிழவி, என்ன அபாயமும் பொருள் நஷ்டமும் வருமோ, என்று அவள் பல சமயம் பயந்திருக்கலாம். இருந்தாலும் மருமகனுடைய துணி

னுல், அவளும் துணிவு கொண்டாள். மேலும், அக்கம் பக்கத்தி லிருக்கிற ஜனங்கள் கஷ்டப்படுவதை, அவள் கண்ணுல் பார்க்க வில்லையா? எனவே, கடைசி வரையிலும், இந்தக் கிழவி அம்மாள் திடமாய் இருந்தாள்.

மஹால்காரி, டொராப்ஜியின் கடைக்குப்போய், கடையைத் திறந்து, பந்தோபஸ்தை ரத்து செய்துவிட்டு, கடை விற்கலாம் என்று ஸேட்டுக்கு உத்தரவு போட்டார். "ஜப்தி செய்து வைத்திருக்கிறீர்களே, அந்தச் சாராயத்தை எடுத்துக் கொண்டு போய்விடுங்கள். பிறகு விற்கிறேன்" என்ருர். உடனே, சில, காலிப் பீப்பாய்களை மஹால்காரி ஜப்திசெய்து, அவைகளிலே ஜப்தி சாராயத்தை ஊற்றச் சொன்னர். பீப்பாய்கள் ஓட்டை. எவ்வளவோ சாராயம் சிந்தி வீணுய்ப் போய்விட்டது. பிறகு புதுப் பீப்பாய்களைத் தருவித்து, சாராயத்தை மோட்டாரில் வெளியேற்றினர்கள். ரூ. 2000 பெறுமான சாராயத்தை, ரகஸியமாக, ஸர்க்கார் தாசனை இன்னொரு பார்ஸி எலத்தாருக்கு ரூ. 98-க்கு விற்ருர்கள். இவ்வளவும் செய்தது போதாதென்று கருதி. அவருடைய கிஸ்திபாக்கி ரூ. 144—6—8 க்காக, ரூ. 30000 பெறுமான நிலத்துக்கு, பறிமுதல் நோட்டீஸ் அனுப்பினர்கள் ஸேட்டுக்கு. சாராய விலை ரூ. 98 எங்கே போயிற்ரே? அது கழிக்கப்பட வில்லை.

ஸேட், கொஞ்சங்கூடப் பயப்படவில்லை. "என்னுடைய ரூ. 2000 பெறுமான சாராயம் என்ன ஆயிற்று? என்ன பயங்கர ஆட்சி அமுல் நடத்தினுலும், இந்தத் தாலூகாவும் தலை வணங்காது; நானும் அப்படியே" என்று டொராப்ஜி டெபுடி கலெக்டருக்குக் கடிதம் எழுதிவிட்டார்.

ரவிசங்கர் எத்தகைய குற்றம் சாட்டப்பட்டாரோ, அதே குற்றம் சினய் அவர்கள் பேரிலும் சாட்டப்பட்டது. பர்டோலியிலுள்ள பல வகுப்புகளையும் பரஸ்பர மிருந்த நேசக் குறைவைப் போக்கி, அவைகளை ஒன்று படுத்திய அபாரத்தொண்டு, சினய் அவர்களைச் சேர்ந்ததாகும். வெட்டியான் முதலியவர்களை—ஸர்க்காரோடு சேர்ந்தால்—

ஜாதி விலக்குச் செய்து விடுவதாகப் பயமுறுத்தியதாக சினுய் அவர்களின்பேரில் குற்றச்சாட்டு. தண்டனை எட்டு மாதம் இருபது நாட்கள்; கடுங்காவல்.

இதுவரையிலும் கைது செய்யப்பட்டவர்கள், சிறைப் பழக்கமுள்ள பழைய தொண்டர்கள். இனிப் புதுப்பேர் வழிகள். வலோட் கிராமத்துப் பிரமுகரான ஷண்முகலால் என்பவர் கைது செய்யப்பட்டார். வலோடை, அரணுன கோட்டையாகச் செய்தவர் இவர்தான். வெளியூர்த் தொண் டர்கள் வலோட் பிராந்தியத்தில் தீவிரமாக வேலே செய்த போதிலும், ஸ்ரீ ஷண்முகலால் இல்லாமற் போனுல், ஒன்றுமே நடந்திராது. இந்தப் போராட்டத்தின் அடிகள் யாவும் இவர் பேரிலேதான். ஆனுல் களேக்கவில்லே. தமது இனத்தாராகிய பனியாமார்களே, கட்டுவிடாமல் வைத்துக் காப்பாற்றிய வர் இவரே. வயதிலே ரொம்பச் சிறியவர்; கீர்த்தியிலோ ரொம்பப் பெரியவர். தாலூகா முழுதும் கீர்த்தி; நரைத்த தலேக் கிழவர்கள் கூடப் பொருமைப்படக்கூடிய கீர்த்தி. இவரோடு கைதியானவர்கள் சிவானந்தர், அமிருதலால். இருவரும் கத்தியவாடைச் சேர்ந்தவர்கள்—இவர்கள், கேஸ் நடந்து சிறைக்குச் செல்லுமுன், இவர்களுக்கு வாழ்த்து மகாநாடு.

இந்த மகாநாட்டில் வல்லபாய் பிரஸன்னமா யிருந்தார். ஷண்முகலாலின் வயோதிகத் தாயார் பிரஸன்னம். தாலூகா வாசியான தன் புதல்வன், தாலூகாவுக்காக முதன்முதல் சிறை செல்லுகிறுன் என்று அந்த அம்மாள் கர்வமடைந்த தாகவே தோன்றிற்று, ஷண்முகலால் லட்சப்பிரபு சுகத் திலே உழன்றவர். காலேஜ் படிப்பு எதுவும் இல்லாதவர். அவருடைய பண்ணேயையும் லேவாதேவித் தொழிலேயும் நடத்துவதற்குப் போதுமான படிப்புள்ளவர். இப்பேர்ப் பட்ட ஷண்முகலால், அன்றைய வாழ்த்துக் கூட்டத்தில் எப்படிப் பேசினுர்?

“ தாலூகா வாசிகளுக்குள் நான் தான் முதன் முதலாகச் சிறைக்குப் போகப்போகிறேன் என்பது குறித்து, எனக்குப்

பூரிப்பும் கர்வமும். நான் குற்றம் சாட்டப்பட்ட போதிலும், நான் நிரபராதி என்ற எண்ணம் என் சந்தோஷத்தை அதிகப்படுத்துகிறது. நான் யாரையும் பயமுறுத்தின தில்லை; பயமுறுத்துவது, என் இயற்கைக்கே பொருந்தினதல்ல. நான் எதிர்வாதம் செய்யவேண்டும் என்றும் அதற்காக வக்கீல்களை அமர்த்திக் கொள்ள வேண்டுமெனவும் என் பந்து, மித்திரர்கள் என்னிடம் வற்புறுத்துகிறார்கள்.

"என்னைத் தண்டிக்க வேண்டுமென்று மாஜிஸ்டிரேட் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறார். அதை, நூறு வக்கீல்கள் சேர்ந்தாலும், மாற்றமுடியாது. எதற்காக எதிர்வாதம் செய்யவேண்டும்? இந்தத் தாலூகாவுக்கு நான் கெட்டபெயர் கொண்டுவந்து வைக்கமாட்டேன் என்று தாலூகா வாசிகளுக்கும் ஸர்க்காருக்கும் கூட உறுதி கூறுகிறேன். நாளுக்குநாள் போராட்டம் கடுமையாகிக் கொண்டு வருகிறது. அதிலே, நான் இனிமேல் பங்கெடுத்துக் கொள்ள முடியாதே என்பது தான் என் வருத்தம். நான் சுக்வாசியாச்சே, ஜெயில் கொடுமை தாங்குவேனோ மாட்டேனோ என்று என் உறவினர்கள் பயப்படுகிறார்கள். கடவுள் காப்பாற்றுவார். அவரை நம்பித்தான் போகிறேன்.

"வலோட், இந்தச் சத்தியாகிரகப் போராட்டத்தில் முன் அணியிலிருப்பது கண்டு, எனக்கு கர்வம். நூற்றுக் கணக்கில் சிறையை நிரப்புங்கள். அரசாங்கத்தாரின் மாயத்தால் ஏமாந்து விடாதீர்கள். பிளவுபட்டுப் போக வேண்டாம். எது போனாலும் பாதகமில்லை. நமது ஸர்தாருக்கு மட்டும் துரோகம் செய்யத் துணியாதீர்கள். வருவதை யெல்லாம் பொறுத்துக்கொள்ள, நமக்கு ஆண்டவன் வல்லமை தந்தருள்வானாக!"

மறு நாள் கேஸ் நடந்தது. கணக்குப்பிள்ளை பிராஸிகூஷன் தரப்பிலே சாட்சி. அவர் மென்று விழுங்குகிறார். நாக்கு எழவில்லை. என்ன செய்வார் பாவம்! ஸர்க்கார் வக்கீல் சொல்லத் தூண்டியதை எல்லாம் அப்படியே பாடம் ஒப்புவித்து விட்டார். ஸர்க்கார் வக்கீலைக்கூட இரண்டொரு

தரம் இப்படிச் செய்யலாகாது என்று மாஜிஸ்டிரேட் கண்டிக்கவும் செய்தார். முடிவு? ஷண்முகவானுக்கு ஆறுமாதக் கடுங்காவல். மற்ற இருவருக்கும் 9 மாதக் கடுங்காவல். இது நடந்தது மேமீ 15௳.

## அத்தியாயம் 19.

பறிமுதல் நோட்டீஸ்கள் நெல் பட்டரையை போல, குவிந்து விட்டன. மொத்தத்தில் 1500-க்கு அதிகம். வரம்பு மீறி, அதிகாரிகள் நடந்துகொண்ட வகைகளையெல்லாம் எழுதுவது சாத்தியப்படாத சங்கதி. 'மாதிரி'க்காக, சில கேஸ்களைக் குறிப்பிடுவோம்.

ஒரு கிராமத்திலே ஒரு கிழவி. அவளுக்கு நிலம் சொற்பம் தான். அந்த நிலத்தையும் அவள் தருமத்துக்கு எழுதி வைத்து விட்டாள். இந்த அம்மாளுடைய வீட்டில், கொல்லைப் புறமாக நுழைந்துகொண்டார் ஒரு கிருஸ்தவ ஜப்தி ஆபீசர். தர்மத்துக்கு எழுதி வைத்து விட்டாலும், தஸ்தாவேஜி இன்னும் ரிஜிஸ்டர் ஆகவில்லையென்றும் பட்டா இன்னும் அந்த அம்மாள் பேரில்தான் இருக்கிறதென்றும் கணக்கர் சொன்னர். அவளுடைய கிஸ்தி பாக்கி ரூ. 4, தான். இதற்காக, 100 ரூ. பெறுமான எருமைமாட்டை ஜப்தி செய்து, "நாலு ரூ. செலுத்திவிட்டால், எருமைமாடு விட்டு விடப்படும்" என்று சொன்னர்கள். கிழவி மறுத்து விட்டாள்.

ரோட்டுக்குப் பக்கத்திலே, ஒரு கொல்லையிலே, ஒரு வண்டி கிடந்ததைப் பார்த்தார்கள். ஜப்தித் தலைவர், வேலியை முறித்துக்கொண்டு, உள்ளே போய், வண்டியை வெளியே கொண்டுவரச் சொன்னர், பட்டாணியைப் பார்த்து. வெளியே வண்டியைக்கொண்டு வரலாம். ஆனல், அதை எப்படிக் கொண்டு போகிறது? கிராம மணியக்காரர் அங்கு இல்லை. அதை ஒப்புவிக்கும்படியாக, அங்கே யாரும் இல்லை. அதிகாரிகள் ஒரு யுக்தி செய்தார்கள்.

"இந்த வண்டியை, கிராம மணியக்காரர் தமது வசம்

எடுத்துக்கொள்ள வேண்டியது. இந்தச் சங்கதியை எல்லோரும் தெரிந்துகொள்ள வேண்டும். எல்லோரும் இதற்கு ஜவாப்தாரி" என்று உத்தியோகஸ்தரும் பட்டாணிமார்களும் உரக்கச் சொல்லிவிட்டு, அந்த இடத்தைவிட்டு நகர்ந்தார்கள்.

சேத் விர்ச் சந்த் சேஜஜி யவர்களின் நிலத்தைப் பறிமுதல் செய்த பிறகும், அரசாங்கத்தாரின் மனம் சாந்தியடைய வில்லை. அவருடைய குதிரைகளை ஜப்தி செய்தார்கள். அவருடைய வீட்டில், குடியில்லாத பாகம் ஒன்று உண்டு, அதிலே, ஒரு நாள் காலமே, ஜப்தி ஆபீசர் நுழைந்து, குடம், தட்டு, பாத்திரங்கள், தானியம், இவைகளை ஜப்தி செய்தார். சட்டப்படி, இவைகளை அதிகாரி ஜப்தி செய்திருக்கவே கூடாது.

பரோடா சமஸ்தானத்தில் பிஸாட் என்று ஒரு கிராமம். அதற்கும் பர்டோலி பட்டணத்துக்கும் கொஞ்ச தூரம் தான். பிஸாட் குடியானவர்கள் இரண்டு பேர்கள், பர்டோலிக்கு வந்து, நான்கு கறவை எருமை மாடுகளை (கன்றுகளோடு) வாங்கிக்கொண்டு, ஒரு நாள் காலமே, தங்களூர்ப் பக்கம் போய்க்கொண் டிருந்தார்கள். மறைவிலே ஒளிந்து கொண்டிருந்த பட்டாணிகளும் போலீஸ்காரர்களும், ரோட்டிலே பாய்ந்து, கறவை மாடுகளைப் பிடித்துக்கொண்டார்கள். தாங்கள் பரோடா சமஸ்தானத்தைச் சேர்ந்தவர்களென்றும் தாங்கள் எதுவும் இந்த அரசாங்கத்துக்குச் செலுத்தவேண்டியதில்லை யென்றும் அழுத்தமாய்ச் சொல்லிப் பார்த்தார்கள். "இந்தக் கதையை யெல்லாம் தாசில்தாரிடம் போய்ச் சொல்லிக்கொள்ளுங்கள்" என்றார் ஜப்தி ஆபீசர். பர்டோலிக்குத் திரும்பிப் போய், தாசில்தாரைப் பார்த்தார்கள். அவர் ஊரில் இல்லை. ஊரிலில்லை தாசில்தார் என்று இந்தக் குடியானவர்கள் ஜப்தி ஆபீஸரிடம் வந்து சொன்னார்கள். 'நான் ஒன்றும் செய்யமுடியாது; தாசில்தாரைப் போய்ப் பாருங்கள்' என்று திருப்பி யடித்துவிட்டார் ஜப்தி ஆபீஸர். மறுபடியும் தாசில்தார் கச்சேரிக்குப் போனார்கள்.

ரொம்ப நேரம் காத்துக்கொண்டிருந்து, அவர்களுடைய மனு எடுத்துக்கொள்ளப்பட்டது. 'நீங்கள் சொல்லிக்கொள்ள வேண்டியதை, ஜப்தி ஆபீசரிடம் எழுத்தில் எழுதிக் கொடுங்கள்' என்று தாசில்தார் தீர்ப்புச் சொன்னார். விநோதம்!

பலாத்காரமாக, பூட்டுகளை உடைத்து, வீடுகளில் அதிகாரிகள் நுழைந்த கேஸ்கள் ரொம்ப அதிகம். பூட்டை உடைக்காமல், மறுசாவி போட்டுத் திறந்து, உள்ளே நுழைந்ததும் ரொம்ப ஜாஸ்தி. மாதி என்ற கிராமத்துக்கு, விடியுமுன், ஜப்தி ஆபீசரும் அவருடைய பரிஜனங்களான பட்டாணிகளும் போய்ச் சேர்ந்தார்கள். பட்டாணிகளில் ஒருவன், வீட்டின் பின் கட்டிலே நுழைந்து விட்டான். அந்தக் கட்டுக்குள் பிரவேசிக்கிற சமயத்தில், வீட்டுக்காரி ஓடிப் போய், கதவைச் சாத்த எத்தனித்தாள். அவளைத் தொடர்ந்து சென்றான் பட்டாணி. கதவைத் திறந்தான். வீட்டுக்காரி, அதை மறுபடியும் மூடப் பார்க்கையில், அவள் கைகளைப் பிடித்துக்கொண்டான். முடிவு ஐந்து மாடுகள் ஜப்தி.

அன்னிய னொருவன், அதுவும் பட்டாணி, பலாத்காரமாய் வீட்டில் நுழைந்தது மல்லாமல், வீட்டுக்காரியின் கைகளையும் தொட்டுப் பிடித்துக்கொண்டான் என்ற செய்தி தாலுகா முழுதும் காட்டுத் தீயைப்போல, பரவிற்று. ஜனங்களுக்கு ஒரே ஆத்திரம். இது நடக்கும்பொழுது, ஸ்ரீ மணிலால் கொத்தாரி அங்கே யிருந்தார். அந்த அம்மாளின் வாக்குமூலத்தை வாங்கிக்கொண்டு, செய்தியை, பத்திரிகைகளில் பிரசுரித்தார்—தேச முழுதும் தெரிந்து போய் விட்டது.

ஜப்தி மாடுகளை ஏலம் எடுப்பதற்கு ஒருவருமில்லை. ப்யூன்கள், போலீஸார், பட்டாணிகள்—இவர்கள் தான் அகப்பட்டார்கள். இவர்களாவது, மாடுகளை விலைக்கு வாங்கவாவது! விலை என்று பெயருக்கு வைத்து, ரொம்ப சொற்பமான தொகைக்கு, இவர்களிடம் மாடுகள் தள்ளிவிடப்பட்டன. பட்டாணிகள், போலீசார் புடை சூழ, ஜப்தி ஆபீ

சர்கள், கிராமங்களில் பவனி வரும் காட்சிகளை வர்ணித்து, பாட்டுகளும் கட்டிவிட்டார்கள். கிராமத்தார்கள். உயிருள்ள போராட்டத்திலே மன எழுச்சி ஏற்படுகிற காலங்களிலே, ஆத்திரத்தையும் ரோஷத்தையும் எழுப்பும் சம்பவங்களினாலே, மனிதனுடைய எல்லா அம்சங்களும் விழித்து எழுந்து, நர்த்தனம் செய்யும். அப்பொழுது மனிதன் ஆடுவான், பாடுவான், அரிய செயல் செய்வான். கற்பனைக்கும் அடங்காத தியாகத்தைச் செய்வான். மனதிலே ஸ்மரிக்க முடியாத, தைரியத்தைக் காண்பிப்பான்.

வங்கனேரில் 'கெடுபிடி'. கலகம் செய்ததாயும் ஸர்க்கார் சிப்பந்திகளை வேலை செய்ய வொட்டாமல் தடுத்ததாயும், பத்தொன்பது பேர்கள் கைது செய்யப்பட்டார்கள். சிலரை ஜாமீனில் விடுதலை செய்தார்கள். மற்றவர்கள், ஜாமீன் கொடுத்து வெளியே வர, சம்மதிக்காமல், சிறையிலேயே இருந்தார்கள். ஹிந்து தாசில்தாருக்குப் பதிலாக, முஸ்லீம் தாசில்தாரைப் போட்டார்களே, அதிலே கொஞ்சம் லாபம் ஸர்க்காருக்கு ஏற்பட்டது. வங்கனேர் கிராமத்தில் சிலரைக் கிஸ்தி செலுத்தும்படியாகச் செய்து விட்டார் முஸ்லீம் தாசில்தார். ஆனல் கிஸ்தி செலுத்திய இவர்கள், ஸத்தியாக்கிரக உறுதி மொழிப்பத்திரத்தில் கையெழுத்துப் போட்டவர்க ளல்ல. மோட்டா என்ற கிராமத்திலே, விபரீதம் ஏற்பட்டது. அங்கே, 'சத்தியாக்கிரகத்தில்' கையெழுத்துச் செய்தவர்களில் சிலர், அதிகாரிகளின் தூண்டுதல் மூலமாய், கிஸ்தி பாக்கியைச் செலுத்தி விட்டார்கள்.

இந்த மாதிரி அவகேடுகளால், மற்றவர்கள் மனந் தளர்ந்து போகவில்லை. இவைகளினுல், தாலூகாவின் சக்தி தினம் தினம் புதிது புதிதாக வளர்ந்துகொண்டே போயிற்று. சின்னக் குழந்தைகள் கூட, போராட்டத்தின் தன்மையை அறிந்து உணர்ந்து கொள்ளத் துவக்கினர். மாலெக்பூர் என்ற கிராமத்தில், ஒரு விசேஷம் நடந்தது. ரொம்பவும் மனதுக்கு இனிப்பான சம்பவம்! ஸர்தார் மாலெக்பூருக்குப் போயிருக்கிற சமயம். அவரை வரவேற்

றது யார்? பதின்மூன்று வயதுப் பெண் முன்னணியில் நின்று வரவேற்ருள். மொரார்தாஸ் பிக்காபாய் அவர்களின் பெண். அவள் வெறுங்கையோடு, ஸர்தாரை வரவேற்ருளா? இல்லை. அந்தக் கிராமத்து ஸ்திரீகளின் சார்பாக ரூ. 41 கொடுத்தாள். ஊமை போல வரவேற்ருளா? இல்லை. வரவேற்கும்போது அவள் சொல்லுகிருள்:—

"எங்களுடைய மாகாண காப்டன் (தலைவர் ரவிசங்கர். இவர் இந்தப் பிராந்தியத்திலேதான் பிரசாரவேலை செய்து வந்தார்) கைது செய்யப்பட்ட போதிலும், எங்கள் கிராமம் அப்படியே ஒன்ருக அசையாமல் நிற்கிறது. இந்தக் கிராமத்துச் சகோதரிகளின் சார்பாக, இந்தச் சிறு தொகையை ஏற்றுக்கொள்ள, தாங்கள் மனம் அருளவேண்டும். இன்றைக்கு, எங்கள் கிராமத்தில், பறிமுதல் நோட்டீஸ்கள் பல ஒட்டப்பட்டிருக்கின்றன. அவைகளைப் பார்த்து, எங்களுக்கு பிரம்மானந்தம்! சமயம் வந்தால், முதலிலேயே ஜயிலுக்குப் போகும்படியாக எங்கள் தகப்பனுரை, நானும் என் சகோதரியும் வேண்டிக்கொண்டு வருகிருேம். அவர் இல்லாத காலத்தில், நாங்கள் நிலத்தை உழுது பயிர் செய்கிருேம் என்று அவருக்கு உறுதி கூறி யிருக்கிருேம்."

போராட்டத்திலிருந்து நாலைந்து பேர்வழிகள் விலகிக் கொண்டார்களே, அதைப்பற்றி ஸர்தார் என்ன நினைத்தார்? ஸர்தாரின் பிரசங்கங்கள் மின்சாரத்தைப்போல, தாலூகா பூராவிலும் அதைச் சுற்றியும் நாலா பக்கங்களிலும் பரவி வந்தது என்ருேமே, அப்படிக்கிருந்துமா, இவர்கள் விலகிக் கொண்டார்கள் என்ருல், ஸர்தார் சொல்லுவதைக் கேட்போம்.

"நம்ம பேர்வழிகளைக் கொண்டே, தாலூகா முழுதும் விஷத்தைப் பரப்ப, கூடுமானவரையிலும், அரசாங்கத்தார் முயற்சிசெய்து பார்க்கிருர்கள். இந்த விஷத்தைப் பரப்பப் பாடுபடுபவர்கள் நமது சகோதர இந்திய உத்தியோகஸ்தர்கள் தான். இவர்கள் நம்மவர்கள். ஆனுல், ஜாக்கிரதையாய் இவர்களுடன் பழகுங்கள். இருட்டிலே திருடர்கள் கன்னம்

போடுவதைப்போல, இவர்கள் நமக்குள் பிளவுகளை உண்டாக்க முயற்சி செய்கிறார்கள். நம்முடைய பலவீனங்கள் என்னவென்று அவர்கள் கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள்; நம்முடைய பலவீனங்களைக்கொண்டு அவர்கள் செழிக்கிறார்கள். அவர்களிலே குடிகாரர், நம் குடிகாரர்களை, குடியைக் காட்டிக் கெடுக்கிறார். நம்மிலே பயந்தவர்களை, அவர்களுக்குள் துடுக்கானவர்கள், என்னவெல்லாமோ காட்டி பயமுறுத்துகிறார்கள். அவர்களின் கிட்டப் போகாதேயுங்கள். அவர்களுடைய புரட்டுகளைக் கண்டு, ஜாக்கிரதையா யிருங்கள். காதவழி (பத்துமைல் தூரம்) கிட்டக்கூட, அவர்களிடம் நெருங்கவேண்டாம்.

“உங்களில் சிலர், எதிர்க் கட்சியில் சேர்ந்துகொண்டாலும், திகில் அடையவேண்டாம். உங்கள் மனத் திடத்திலிருந்து, சிறிதும் நழுவவேண்டாம். ஜயமடைந்த சேனையிலும் சாகிறவர்கள் இல்லையா? அதைவிட்டு ஓடிப்போகிறவர்கள் இல்லையா? நமக்குள் இன்னார் பலவீனர்கள் என்று தெரிந்துபோவது நல்லதல்லவா? அவ்வளவு அழுக்கு விலகிப் போயிற்று என்று தெரிந்துகொள்ளுங்கள். முடியுமானால், உங்கள் நிலத்தை இங்கிலாந்துக்குத் தூக்கிக்கொண்டு போகலாம் என்று அரசாங்கத்தாருக்கு நீங்கள் சொல்லுங்கள். தாலூகாவைச் சுற்றி, மெஷீன் பீரங்கிகளும் ஆகாய விமானங்களும் வரட்டும். பாதகமில்லை. நமக்கு ஆயுதபலம் கிடையாது. ஆனால், அதை எதிர்ப்பதற்கு. அதைக் காட்டிலும் உயர்ந்ததும் சுத்தமானதுமான சக்தி நம்மிடம் இருக்கிறது. அந்தச் சக்திதான் உண்மை. அதுதான், நாம் நமது வாக்குறுதிக்கு பக்தி செலுத்தும் தன்மை.”

இன்னொரு இடத்தில் ஸர்தார் பேசியதாவது:—“அவர்கள் உங்கள் எருமைகளையும் சொத்தையும் எடுத்துக்கொள்ளட்டுமே! உங்கள் ஆத்மாவைக்கூட, அவர்களால் எடுத்துக்கொள்ள முடியுமா? சொத்து மோகம், இறுதியில் லாபமில்லாத சங்கதி. ஒரு மனிதனுக்கு எவ்வளவு நிலம் வேண்டும்? முஸ்லீம்களுக்கு ஆறு அடி நிலம் (புதைப்பதற்கு) வேண்டும்.

ஹிந்துக்களுக்கு அதே நிலம் சில மணிநேரம் (சவம் எரிவ தற்கு) இருந்தால் போதுமானது. சரியான கட்சியிலேதான், எப்பொழுதும் கடவுள் இருக்கிறார்."

இப்படிப் பேசிக்கொண்டே போகையில், பவுண்டிலே அடைக்கப்பட்டிருந்த மாடுகள் கத்தும் சத்தம் கேட்டது. அவைகளுடைய திக்கற்ற குரலைக் கேட்டதும் ஸர்தார் சொல்லுகிறார்:—"ரிபோர்ட்டர்களே! தயை செய்து இதைக் குறித்துக் கொள்ளுங்கள். எதை? சற்றுமுன் எருமை மாடுகள் பரிதாபமாய்ச் சத்தம் செய்தனவே, அதை. சட்டத் தால் ஆக்கப்பட்ட அரசாங்கத்தை, தப்பட்டைச் சத்தம் தலை கீழாய்க் கவிழ்த்துவிடும் என்று ஸர்க்கார் எண்ணினார்கள். இந்த எருமை மாடுகள்—அந்தத் தப்பட்டைகளுக்கு அப் பன்."

இன்னும் அதிகமாக, மாடுகள் சத்தம் செய்தன. ஸர்தார் மிதமிஞ்சிய உருக்கத்துடன் சொல்லுகிறார்:—"அவைகள் ஏன் உரக்கக் கத்துகின்றன, தெரியுமா? இந்த (ஆங்கில) சாம்ராஜ் யத்திலிருந்து, உண்மையும் நியாயமும் ஓடிவிட்டன என்று நீங்கள் (ரிபோர்ட்டர்கள்) அறிவதற்காக, அவைகள் தொண்டை கம்முகிற தினுசிலே கத்துகின்றன."

ஸர்தார், ஜனங்களுக்கு ஏற்படக்கூடிய கஷ்டங்களைக் குறைத்துப் பேசும் வழக்கம் உடையவ ரல்ல. பயந்தவர்கள் தாலூகாவை விட்டு வெளியேறலாம், அல்லது மலைவாசம் செல்லலாம். உங்களைத் 'தீப் பரீட்சை' பார்க்கிறவரையிலும் உங்களுக்கு அரசாங்கத்தார் நியாயம் வழங்கப்போவதில்லை. ஸர்க்கார் உங்களிடம் நயமாய்ச் சொல்லிப் பார்ப்பார்கள். அதை நீங்கள் அலட்சியம் செய்தால், உங்களை அடக்கத்தான் அவர்கள் முயலுவார்கள். இந்தப் போராட்டத்தில், சில லட்ச ரூபாய் நஷ்டமேற்பட்டுவிடுமே என்று ஸர்க்கார் கவ லைப்படவில்லை. தனது எதேச்சாதிகாரத்தைக் கொண்டு, கோடி ரூ. வேண்டுமானாலும், ஸர்க்கார் கிஸ்தி வசூல் பண்ண லாம். இன்றைக்கு நாம், இந்தப் போராட்டத்தில் வெற்றி யடைந்துவிட்டால், பர்டோலி செய்ததுபோல, இந்தியாவின்

மற்றைய பகுதிகளும் செய்யத் தொடங்கினால், என்ன செய்கிறது என்பதைப்பற்றித்தான், ஸர்க்காருக்குக் கவலை. எனவே, நீங்கள் எதைப்பற்றிக் கவலைப்படவேண்டும்? உங்களைப்பற்றி மட்டுமல்ல. இந்தியா முழுதுக்கும் நீங்கள் பிரதிநிதிகளாயிருந்து, இந்தியாவின் கௌரவம் உங்கள் கையில் இருக்கிறது என்பதை நீங்கள் உணரவேண்டும்.'

இத்தகைய பிரசங்கத்தைக் கேட்டவர்கள் எப்படி நெஞ்சு தளர்வார்கள்?

ஸர்க்காரின் அடக்கு முறை வலுக்க வலுக்க, ஜனங்களுடைய தீர்மானமும் கெட்டிப்பட்டது. ஆனால், இப்பொழுது ஒரு ஆபத்துத் தோன்றிற்று. ஸர்க்காரின் நோக்கத்தைத் தோல்வியுறச் செய்வதற்காக, சிலர் சில அசட்டு யோசனைகளை, சாத்வீக வழியைத் தழுவாத யோசனைகளைச் சொன்னார்கள். 'கூரான இரும்புக் கம்பிகளை ரோட்டில் நட்டுவைத்தால், அதிகாரிகளின் மோட்டார்வண்டிச் சக்கரங்கள் வெடித்துப்போகும்; அல்லது பாதையிலே வேலிகட்டிவிடுவது; அல்லது பாதையைக் குறுக்கே பிடித்து ஆழமாய் வெட்டிவிடுவது' என்று அபத்த யோசனைகள் சொன்னார்கள். இவைகளைக் கேட்டதும், ஸர்தாருக்கு வருத்தம். ஸர்தார் சொன்னார்:—

"பலாத்காரம் நேருமாகில், என் தலைதான் முதலிலே போகும் என்பதைக் கலெக்டருக்கு ருசுக் காண்பிக்கத் தயாராயிருக்கிறேன். இது சாத்வீகப் போராட்டம் என்பதை ஆயிரமாவது தடவையாக உங்களுக்கு ஞாபகப்படுத்துகிறேன். சாத்வீகப் போராட்டத்தின் ரஸம் என்னவெனில், நாளுக்குநாள், நமக்கு அமைதிகொண்ட சக்தி சேர்ந்துகொண்டே வரும். உங்கள் உதடுகளில் புன்முறுவல் தவழ்ந்துகொண்டே, நீங்கள் இறக்கவேண்டும் என்பதை உபதேசிக்க, நான் இங்கு வந்திருக்கிறேன். ஒரு பொட்டு ரத்தம்கூட நீங்கள் சிந்தலாமோ?

"உங்களுக்கா நான் உபதேசம் செய்ய வருவது? சாத்

வீக உபதேசம் முதன்முதலாகப் பெற்றவர்கள் நீங்கள். உங்களுக்குப் பின்னர் கற்றுக்கொண்டவன் நான். அஹிம்சா மந்திரத்தை இந்தியாவுக்கு அளித்த அவருடைய கொடியின் கீழ், உங்களில் பலர் தென்னுப்பிரிக்காவில் சாத்வீகப் போராட்டம் செய்திருக்கிறீர்கள். அந்தப் பள்ளிக்கூடத்தில் நீங்கள் சட்டாம் பிள்ளைகள். நாளுெரு 'கத்துக்குட்டி'! உங்களுக்கு நான் பாடம் சொல்லவாவது?"

இன்னொரு பேச்சிலே, ஸர்தார் சொல்லுகிறுர்:— "இந்தத் தாலூகாவின் அமைதியைக் காப்பதற்கு ஏற்பட்டிருக்கும் காவல்காரன் நான் என்று உங்களிடம் வணக்கமாகத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். சபர்மதியில். தமது சாந்திமயமான பீடத்திலிருந்து, இந்த இயக்கத்தை ஒருவர் (காந்தி) கவனித்துக்கொண்டு வருகிறுரே, அவருக்கு ஜவாப்தாரி நான் என்று நினைத்துக்கொண் டிருக்கிறேன். ஒரு சிறு பிசகு, அல்லது தவறு குறுக்கிட்டு, அவருடைய பெயரும் ஜீவிய வேலையும் கெடாமல் பார்த்துக்கொள்ளுவதுதான் எனது பெரிய தர்மம் என்று மதித்து வருகிறேன்."

வைஷ்ணவர்கள் கூறும் சரணுகதி தத்துவத்துக்கு உயிருள்ள அத்தாட்சி வல்லபாய் ஆவார். காந்தி குரு; வல்லபாய் சிஷ்யன். அவர்களுக்கிடையே ஓடும் பக்திச் சரடை வெளிக் காண்பித்துவிட்டார் வல்லபாய், காந்தியினிடம் ஸர்தார் எவ்வாறு பூராவும் சரண் புகுந்தார் என்பதற்கு, அவருடைய மேற்சொன்ன சொற்கள் சாட்சிகளாகும்.

## அத்தியாயம் 20.

ரிவினியூ சட்டத்தின் ஷரத்துகளை மீறி, எத்தனை வகைகளில் முறைத்தவறுன காரியங்கள் செய்யவேண்டுமோ, அத்தனை வகைகளையும் பார்த்து விட்டார்கள் அதிகாரிகள் என்று சொல்லிவிடலாமோ என்று நினைத்தால், இன்னும் ஓரிரண்டு வகைகள் பாக்கியிருக்கின்றன என்று சொல்லவேண்டும். கிஸ்தி வசூலுக்கு, கலால் இலாகா உத்தியோகஸ்தர்கள் எப்

படி உபயோகப்பட்டார்கள் என்று ஸேட் டொராப்ஜி சம்பந்தமாகக் கூறப்பட்டது. இப்பொழுது விவசாய இலாகா உபயோகப்படுத்திக் கொள்ளப்பட்டது.

தாலூகாவில், பல விவசாயிகள், ஸர்க்கார் விவசாய இலாகாவிலிருந்து பருத்தி விதை கடன் வாங்கி யிருந்தார்கள். எனவே அவர்கள், தங்கள் பஞ்சை, விவசாய இலாக மூலமாக விற்ருர்கள். சாகுபடி அபிவிருத்திக்காக, இந்த விதைகளை விவசாய இலாகாவிடமிருந்து வாங்கினுர்கள். விவசாயிகள் விற்பனைக்குக் கொண்டுவரும் பஞ்சை, விவசாய இலாகாதார் வாங்கி, தங்கள் கட்டிடத்தில் வைத்து, அதை விற்றுக் கொடுப்பது வழக்கம். இந்த மாதிரி விற்பனைக்கு வந்திருந்த பஞ்சு மூட்டைகளை, ஒரு சமயத்தில் தாசில்தார் ஜப்தி செய்தார். நம்பிக்கையிலே, இந்தப் பஞ்சு, விவசாய இலாகாதாரிடம் வைக்கப்பட்டிருந்தது. இந்தப் பொதி மூட்டைகள் ரூ. 73000-க்கு விற்கப்பட்டன. இவ்வளவையும் கிஸ்திக்காகச் செலுத்திவிட வேண்டும் என்று விவசாய இலாகாத் தலைவருக்குத் தாக்கீது போயிற்று. விவசாய இலாகாத் தலைவர் யோக்கியர். இந்த முறைத் தவருன காரியத்தைச் செய்ய, அவர் மனச்சாட்சி இடங் கொடுக்கவில்லை. விவசாயிகள் தம்மிடம் நம்பி ஒப்படைத்ததாயிற்றே என்று அவர் மனம் வருந்தினுர். தகாத காரியம் என்று அவர் எழுதிப் பார்த்தார். ஆனுல் பலிக்கவில்லை.

துப்பாக்கி லைஸென்ஸ் ரத்து செய்யப்பட்டு, துப்பாக்கி முதலிய ஆயுதங்களை அதிகாரிகள் பலாத்காரமாய் எடுத்துக் கொண்டார்கள். பென்ஷன் போய்விடும் என்றும் பென்ஷன் தாரிகள் பயமுறுத்தப்பட்டார்கள். இப்பேர்ப்பட்ட அபூர்வமான சந்தர்ப்பத்தில், கமிஷனர் அவர்களுக்கு டாக்டர் எடல் ஆபெராம் என்ற ஒருவர் அகப்பட்டார். இந்த டாக்டர் ரொம்ப சாது. அவருக்கு வஞ்சகம், சூது ஒன்றுமே தெரியாது. ஜன சமூகத்தொண்டிலே மிகுதியும் ஈடுபட்டவர். இந்த டாக்டர் கமிஷனரின் நோக்கத்தைத் தெரிந்து கொள்ளாதது ஆச்சரியமே ; இருந்தாலும், டாக்டரின் பரோபகார

சிந்தையை, தமக்குச் சாதகமாக உபயோகப்படுத்திக் கொண்டார் கமிஷனர்.

விவசாயிகள் அளவுக்கு மீறிய கஷ்டங்களை அனுபவித்து வருகிறார்கள் என்பது உண்மை. தங்கள் வேண்டுகோள்களுக்கு ஸர்க்கார் இணங்கி வராவிட்டால், ஜனங்கள் இன்னும் அதிகமாகக் கஷ்டங்களுக்கு ஆளாகவேண்டும் என்பதும் உண்மை தான். டாக்டரின் நல்ல சிந்தையை உபயோகப்படுத்திக் கொண்டு, தமக்கு ஒரு கடிதமும் பத்திரிகைகளுக்கு ஒரு கடிதமும் எழுதும்படி செய்தார் கமிஷனர் எடல் ஆபெராமை. 'கிஸ்தியைக் கொடுத்து விட்டு, பிறகு, சட்ட வரம்புக்கு உட்பட்டு, கிளர்ச்சி செய்யுங்கள் விவசாயிகளே' என்பது பத்திரிகைகளுக்கு டாக்டர் எழுதிய கடிதத்தின் சாரம். தம்மாலியன்றதைச் செய்யக் குறிப்பிட்டுத் தமக்குக் கடிதம் எழுதுமாறு, டாக்டர், கமிஷனருக்குக் கடிதம் எழுதினர். இந்தக் கடிதத்தை உபயோகப்படுத்திக் கொண்டு, கமிஷனர் பின்வருமாறு டாக்டருக்குக் கடிதம் எழுதினர்:—

"சூரட்டு (முகாம்)
"1928ஶ மேமீ 8உ.

"அருமை டாக்டர் எடலாபெராம் அவர்களே!

"உங்கள் கடிதத்துக்கு அநேக வந்தனங்கள். நீங்கள் பத்திரிகைகளுக்கு எழுதிய கட்டுரைகள் உங்கள் பரோபகார சிந்தையால் தூண்டப் பெற்றனவே யன்றி' ஸர்க்கார் அதிகாரி எவராலும் தூண்டப் பெறவில்லை என்பது எனக்கு நிச்சயம்.

"கிஸ்தி வசூல் செய்யக் கடுமையான முறைகளைக் கையாளுவதற்குமுன், அவர்களுடைய போராட்டத்தைவிட்டு விடும்படியாக, கெய்ராவிலிருந்து வந்திருக்கும் கிளர்ச்சிக்காரர்களிடம் ரொம்பவும் சமாதானம் சொல்லிப் பார்த்தேன். பலவித அகௌரவங்களுக்கு, ஸர்க்கார் அதிகாரிகள் உட்படுத்தப் பட்டமையால், ஸர்க்கார் கட்சி இன்னதென்று பர்டோலித் தாலூகா வாசிகளுக்கு எடுத்துச் சொல்ல, ஸர்க்கார் அதிகாரி

களுக்கு இடமில்லாமற் போய்விட்டது. அவர்களுடன் யாராயினும் நெருங்கிப் பழகினல் போச்சு! அவர்களுக்கு ஜாதி விலக்கு முதலிய பயமுறுத்துதல்கள். ஸர்க்கார் கட்சி சட்ட சபையில் சொல்லப்பட்டது. அதைக் கேட்குமாறு (கிளர்ச்சிக்காரர்கள்) ஜனங்களை விட்டால்தானே?

"பர்டோலி வாசிகளை அண்டிப் பிழைத்து அவர்களைத் தவறான பாதையில் நடத்தி வருகிறார்களே கிளர்ச்சிக்காரர்கள், அந்தக் கூட்டத்தாரால், பர்டோலி ஏழை விவசாயிகள் கெடலாகாதே என்று என்னைக் காட்டிலும் கவலையோடு இருப்பவர் வேறு எவரும் இல்லை. வரி கொடாமையை நிறுத்திவிட்டால், எந்தத் தனிக் கிராமத்தின் கட்சியையும்—அது சரியான காரணங்கள் காண்பித்தால்—சரிவரக் கவனித்து, சோதித்து, முடிவு செய்ய, நான் விருப்பத்துடனிருக்கிறேன் என்று ஆர். பி. பீம்பாய் நாய்க் அவர்களிடம் தெளிவாகச் சொல்லி யிருக்கிறேன்.

"கிஸ்தியை வசூல் செய்ய, எந்த முறையையும் ஸர்க்கார் கையாளுவார்கள் என்று சொல்லத் தேவையில்லை. சட்டப்படி நடந்த எந்த ஸெட்டில் மெண்டைத்தான், இவர்கள் ஒப்புக் கொள்ளுவார்கள்! 1918இல் கெய்ராவில், வரி கொடா இயக்கத்தை நடத்திய அதே பேர்வழிகள், அதே முறைகளை, இப்பொழுதும் பர்டோலியில் இயக்கத்தை நடத்தி, கையாண்டு வருகிறார்கள். ஜாதி விலக்கு, அபராதம் முதலியன, அவர்கள் கையாளும் ஆயுதங்கள்.

"கெய்ரா ஜில்லாவில், ஐந்து தாலூக்காக்களிலிருந்து, இவர்கள் வந்திருக்கிறார்கள். அந்தத் தாலூகாக்களில், ஸெட்டில்மெண்டு, இரண்டு வருஷங்களுக்கு ஒத்திப் போடப்பட்டிருக்கிறது. ஏழு எட்டுமாத காலமாக, அந்தத் தாலூகாக்களுக்கு அரைக்கோடி ரூபாய்க்கு மேல், கவர்ன்மெண்டார் 'அட்வான்ஸ்' பண்ணியிருக்கிறார்கள். பர்டோலியில் இவர்கள் இப்பொழுது ஜயித்து விட்டால், கெய்ராஜில்லா கிஸ்தி, ஸர்க்கார் கொடுத்த கடன்—இரண்டையும் வசூல் செய்ய, மோசம் வந்துவிடும்.

"இந்தக் கடிதத்தை, நீங்கள் எப்படி வேண்டுமானாலும், உபயோகப்படுத்திக் கொள்ளலாம். நான் எழுதியதில் எதுவும் ரகசியமில்லை; எல்லாம் பகிரங்கமாகத் தெரிந்த சங்கதிகளே!

"உங்கள்

"W. W. ஸ்மார்ட்."

மேலே கண்ட கடிதத்தை, விமர்சனமோ, வியாக்கியானமோ செய்யத் தேவையில்லை. அந்தக் கடிதத்தின் நோக்கம் யாவரும் (எடலாபெராமைத் தவிர) அறிந்ததே. ஸ்மார்ட் அவர்கள் சொரிந்திருக்கும் அடை மொழிகளைக் கண்டு, ஸர்தாருக்கு ஆத்திரம் துளிக்கூட உண்டாகவில்லை. பத்து வருஷங்களுக்கு முன், வல்லபாயோடு, 'கேதா' சம்பந்தமாகப் போராடிய ப்ராட் அவர்கள், காந்திஜியையும் வல்லபாயையும் குறிப்பிடுகையில், நாகரிகமும் மதிப்பும் நிறைந்த நல்ல சொற்களை உபயோகப்படுத்தினர். ப்ராட், காந்தியை 'நண்பராக' பாவித்து, 'சுத்த, சாத்விக சாது' என்று மரியாதையாகவும், வல்லபாயை 'மேஹர்பான் வல்லபாய் ஸாகேப்' என்று வாய் நிறைய வாழ்த்தியும் எழுதியிருக்கிறார். ஸ்மார்ட் அவர்கள் ப்ராட் துரைமகனரின் பள்ளியில் பழகியவ ரல்ல போலும்! எதிரி யென்றால் அவனைத் திட்டாமல், என்னமாய்ப் பேசுகிறது என்ற மனப்பான்மை கொண்டவர் ஸ்மார்ட். ஸ்மார்ட் அவர்களின் நாகரிகக் குறைவைப்பற்றி, ஸர்தார் அவரோடு சண்டை போடுவதில் பயனில்லை! ஆனால் அவர் கடிதத்தில் எழுதத் துணிந்த பொய்களை வெளிப்படுத்த வேண்டாமா?

கமிஷனர் ஸ்மார்ட் பர்டோலிக்கு வராமலே, கவர்ன்மெண்டு கட்சியை, அதிகாரிகள் எடுத்துச் சொல்லுவதற்கு இடமில்லாமல், அவர்கள் அகௌரவங்கள் பலவற்றுக்கு ஆளாக்கப்படுகின்றார்கள், என்று எழுதி விட்டார். இருந்தாலும் ஸர்தார் பதிலாகச் சொன்னதாவது:—

"ஸ்மார்ட் அவர்கள் பர்டோலிக்கு வரட்டும். தாலுகாவி

லிருக்கும் 17000/- பட்டாதார்களையும் அங்கே கூட்டி வைக்கிறேன். அவர், பட்டதார்களுக்கு ஸர்க்கார் கட்சியை எடுத்துச் சொல்லுவதில் எனக்கு ரொம்பவும் ஆசை. ஆனால், ஸ்மார்ட்டுக்குக் கீழ் இருக்கும் அதிகாரிகளிடம், கிட்டக்கூட, பர்டோலிவாசிகள் வரமாட்டார்கள். பர்டோலி யில் பலாத்காரத்தால் கலகம், தீ முதலியன நேரும் என்று சிறிது காலத்துக்கு முன்னர் சூரட் கலெக்டர் சொன்னரே, அந்தக் குற்றச் சாட்டுதலிலிருந்தும் பர்டோலி தாலுகா வாசிகளை ஸ்மார்ட் அவர்கள் விடுவித்ததற்காக வந்தனம்.

"கமிஷனர் கெய்ராக் கிளர்ச்சிக்காரர்களைப்பற்றி அவதூருகப் பேசுகிறார். அவர்களின் சேஷ்டையால் கெய்ராவின் கிஸ்தியும் ஸர்க்கார் கடனும் வசூலிக்க முடியாமல் போகு மென்கிறார். இதே கிளர்ச்சிக்காரர்கள் குஜராத் வெள்ளச் சேதக் காலத்தில், ஓடோடியும் போய் விவசாயிகளுக்கு ஒத்தாசை செய்திராவிடில், ஸர்க்கார் ஒண்டியால் மட்டும் இந்த நிவாரண வேலை செய்திருக்க முடியுமா? சமயத்தில் இந்த வேலையைக் கிளர்ச்சிக்காரர்கள், தங்கள் உயிருக்கு ஆபத்து வந்தாலும் பாதகமில்லை. என்று கருதி, விவசாயிகளுக்குத் துணி, உணவு, விதை முதலியவைகள் கொடுத்திராவிட்டால், அவர்கள் உழுது பயிர் செய்திருக்க முடியாது. இந்த வருஷம் கிஸ்தி (அநேக லட்ச ரூபா) வசூல் செய்திருக்க ஸர்க்காராலும் முடியாது.

"கிளர்ச்சிக்காரர்கள் மலிவாக, விதை மண்டிகள், மர மண்டிகள் வைத்திருந்ததால் தான். ஸர்க்கார் ரொம்பப் பணம் மிச்சப்படுத்த முடிந்தது. இவர்களால் கிஸ்தி வசூலுக்கும் கடன் வசூலுக்கும் அபாயம் என்று கமிஷனர் சொல்லுவது மிகவும் அழகுக் குறைவாகும், அதர்மமாகும்."

மேற்கூறிய கருத்துக்களை, எழுத்திலும் பிரசங்கங்களிலும் தெளிவாகத் தெரிவித்துவிட்டார் ஸர்தார். ஆனால், தேசம் பொதுவாக என்ன சொல்லிற்று? காந்திஜி "யங் இந்தியா"வில் எழுதியதைத்தான், தேசம் சொன்னதாகக் கொள்ளவேண்டும்.

காந்தி பின்வருமாறு எழுதினர்:—

"பர்டோலிப் போராட்டம் உல்லாசமாய் நடந்து கொண்டு வருகிறது. பறிமுதல் நோட்டீஸ்கள் பறக்கிற 'ரேட்'டைப் பார்த்தால், தாலூகா முழுதும் ஸர்க்கார் வசம் போய் விடும். அவர்கள், (ஸர்க்கார்) கிஸ்திக்கு மேல் ஆயிரம் மடங்கு பணம் விவசாயிகளுக்குச் செலுத்தலாம். தைரியமாக மட்டும் இருக்கும் பட்சத்தில், பர்டோலி விவசாயிகளுக்கு, இந்தப் பறிமுதல்களால், நஷ்டமே ஏற்படாது. அவர்களுடைய சொத்து முழுதும் போய்விடலாம். ஆனால் எல்லாவற்றைக் காட்டிலும் உயர்ந்தது என்று யோக்கியர்கள் எதை மதிக்கிருர்களோ—அது தான் மானம், கௌரவம்—அதை அவர்கள் காப்பாற்றிக்கொண்டு விடுவார்கள். திட நெஞ்சும் (உழைக்க) முரட்டுக் கைகளும் உள்ளவர்கள், சொத்து, உடமைகள் நஷ்டத்தைக் குறித்துப் பயப்பட வேண்டியதில்லை.

"பறிமுதல் நோட்டீஸ் உபாயம் தோற்றுப்போனதும், அதோடு, ஊழியர்களைக் கைது செய்யும் உபாயத்தையும் ஸர்க்கார் கைக்கொண் டிருக்கிருர்கள். பாஞ்சாலத்தில், ராணுவ அமுல் காலத்தில் இருந்ததுபோல, பாவனை விசாரணைக் கோர்ட்டுகள் நடத்திவருகிருர்கள். பிராஸிகூஷன் தரப்பிலே கேட்கிறது மாதிரி, நீதிபதி தீர்ப்புத் தண்டனை சொல்லுகிருர். விருப்புடன் கஷ்டத்தை ஏற்றுக்கொண்டால், கஷ்ட மனுபவிப்பவனுக்கு நன்மைதான் உண்டாகும்.

"ஆனால் எதைச் சகிக்க முடியவில்லை என்ருல், அதிகாரப் புரட்டும் திமிரும்தான். பொய்யும் புளுகுமாக, வடபிரிவுக் கமிஷனர் அவர்கள் ஒருவருக்குக் கடிதம் எழுதியிருக்கிருர். வெய்ராக் கிளர்ச்சிக்காரர்களால் போராட்டம் துவக்கப்பெற்றது என்று சாடுவிடுவது சுத்தப் பொய்யாகும். போராட்டம் பர்டோலி ஜனங்களாலேயே ஆரம்பிக்கப்பட்டது. அவர்கள் யோசனை கேட்டது ஒருவரைத்தான். அது வல்லபாய் படேல். அவரை, கமிஷனருக்குக் கொஞ்சம் தெரிந்திருக்கும் என்று எண்ணுகிறேன். கிளர்ச்சிக்காரர் என்ற பட்டம்

வல்லபாய்க்குப் பொருந்துமா என்பதை வாசகர்கள்தான் தீர்மானிக்க வேண்டும்.

"ஸர்க்கார் அதிகாரிகள் 'ஷாடோ' செய்யப்பட்டார்கள் கல்லெறி பட்டார்கள் என்ற அகௌரவங்களுக்கு ஆளானுர்கள் என்று கூறுவது உண்மை யல்ல.

"ஊழியர்கள், பர்டோலி வாசிகளின் பேரில் பிழைக்கிருர்கள்; அவர்களைத் தவருன முறையில் நடத்துகிருர்கள் என்று சொல்லப்படுகிறது. இது அவமானச் சொல்லாகும். தேசத்துக்கு மட்டும் தனது சக்தி நினைப்பு இருக்குமாயின், இந்த அவமானச் சொல்லுக்காக, பகிரங்கமாக மன்னிப்புக் கேட்டுக் கொள்ளும்படியாக, கமிஷனருக்கு நேர்ந்திருக்கும். தமது கோபத்தாலும் அதிகார மயக்கத்தாலும், கமிஷனர் எவர்களைக் 'கிளர்ச்சிக்காரக் கூண்டு' என்று அழைக்கிருரோ, அவர்கள் யாவரும், பெருத்த தியாகத்தை முற்கொண்டு, பர்டோலிக்குத் தொண்டு செய்கிற, கௌரவம் வாய்ந்த தேசத் தொண்டர்கள் என்பதை அவர் அறியக்கடவர்! இவர்களிலே வல்லபாய் பாரிஸ்டர்; நரைத்த தலைக்காரர் அப்பாஸ் தியாப்ஜி ஒரு பாரிஸ்டர், பரோடா மாஜித் தலைமை நீதிபதி; இமாம் சாகேப் பாவஸீர் ஒரு பக்கிரி; அவருக்கு பர்டோலியின் ஆதரவு வேண்டியதே யில்லை. டாக்டர் சுமந்த் மேதாவும் அவரது மனைவியாருமா? டாக்டருக்குச் சிறிது காலமாக உடம்பு சுகமில்லையாயினும், மிகுந்த தியாக உணர்வுடன் பர்டோலிக்கு ஊழியம் செய்கிருர். மேலும், மேற்சொன்ன நால்வரும் கெய்ராவைச் சேர்ந்தவர்க ளல்ல.

"தாஸா தர்பார் சாகேப் அவர்களும் அவரது மனைவி ஸ்ரீ பக்தி பாயுமா? நாட்டுக்காக, அவர்கள் தங்கள் சொத்து முழுமையும் இழந்து விட்டார்கள். அவர்கள் பர்டோலியை நம்பிப் பிழைக்க வில்லை. டாக்டர்கள் சந்து லால், திருபுவன தாஸ் கெய்ராவைச் சேர்ந்தவர்க ளல்ல. பூல் சந்த் ஷா. அவர் மனைவி, அவர் சீஷன் சிவானந்த்—இவர்கள் கெய்ராவைச் சேர்ந்தவர்க ளல்ல. இவர்கள் நீண்ட காலமாக, மௌனமாகத் தேசத் தொண்டு செய்பவர்கள். பர்டோலியின் துயரத்தைக்

கேட்டு, இவர்களும் இவர்களைப் போல ஏனையோரும் வந்திருக்கிறார்கள். கமிஷனருக்குத் துளியாவது கௌரவ புத்தி இருக்குமாயின், அவர் தாமாகவே, இந்தக் கனவான்களுக்கும் சீமாட்டிகளுக்கும் தவறு என்று மன்னிப்புச் சொல்லிக் கொள்ள வேண்டும்.

“சட்டமறுப்புப் போராட்டம் துவக்கு முன்னர், சட்ட வரம்புக்கு உட்பட்டது என்று சொல்லப்படும் உபாயங்கள் யாவையும் தேடி உபயோகித்துப் பார்த்தும், பர்டோலிவாசிகளுக்குப் பலனும் பரிகாரமும் கிடைக்காமல் போய் விட்டது என்ற மிகப் பொருத்தமான உண்மையை, கமிஷனர் அவர்கள் அடியோடு மறைத்து விட்டார்.

“பர்டோலி தனது போராட்டத்தை நிறுத்தி விட்டால், தவறாகத் தாம் உயர்த்தப்பட்ட கிராம மிருப்பின், அது விசாரிக்கப்படும் என்று கமிஷனர் சொல்லி, பொது ஜனங்களின் கண்ணில் மண்ணைத் தூவப் பார்க்கிறார். தர உயர்வு என்பது தற்போதைய ப்ரச்னையே அல்ல. வரி விதிக்கும் முறை தவறு என்பதுதான் ப்ரச்னையாகும். ஆனால் தங்கள் கட்சியை, விசாரிக்காமலே ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று பர்டோலி வாசிகள் ஆசைப்பட வில்லை. பட்சபாத மில்லாத கமிட்டி, இதைப்பற்றி விசாரிக்க, நியமிக்கப் படவேண்டும் என்று அவர்கள் வற்புறுத்துகிறார்கள். அந்தக் கமிட்டி வரும் முடிவுக்குக் கட்டுப்படுவதாகவும் அவர்கள் உறுதி கூறுகிறார்கள்.

“கிஸ்தி செலுத்த முடியாது என்று அவர்கள் சொல்லவில்லை. தனி நபர்களின் அல்லது தனிக் கிராமங்களின் கஷ்டத்துக்குப் பரிகாரம் தேட முயலவில்லை. இது ஒரு கொள்கையைப் பற்றிய ப்ரச்னையாகும். கிஸ்தி உயர்வு சம்பந்தமாக, யாதொரு விசாரணையும் செய்யாமல், ஏதேச்சாதிகாரமாய் வரியை உயர்த்த ஸர்க்காருக்கு அதிகாரமில்லை என்று பர்டோலி வாசிகள் அழுத்தமாகக் கூறுகிறார்கள். சுயராஜ்யத்துக்காக நடத்தப் பெறும் வரி கொடா இயக்கம் இதுவல்ல என்று மீண்டும் நினைப்பூட்டுகிறேன். ஒரு தாலூகா வாசிகளுக்குப்

பொதுவாக ஏற்பட்ட குறை பாட்டைத் தீர்துக் கொள்ளும் பொருட்டாக ஏற்பட்டதாகும். எனவே.................. கமிஷனர் சொல்லுவது குறும்புத்தனமாகும்.

"கிளர்ச்சிக்காரர்கள் வெற்றி அடைந்தால், கெய்ராவில் ஸர்க்கார் விவசாயக் கடனுக்கு ஆபத்து வந்துவிடாது. கடன் வாங்கினவர்கள் திருப்பிக் கொடுக்க மழுப்பினுல், இந்தக் கடன்களை வசூல் செய்ய, சம்பளமில்லாமல் கலெக்டர் வேலையை, அந்தத் தலைமைக் கிளர்ச்சிக்காரர் வல்லபாய் பார்ப் பார் என்பதை ஸர்க்கார் கண்டு கொள்ளுவார்கள்.

"கிளர்ச்சிக்காரர்கள் ஜயமடைந்தால் என்ன நேரும்? கௌரவம் வாய்ந்த பொதுஜன ஊழியர்களை அவமரியாதை யாகப் பேச, அதிகாரிகள் துணியமாட்டார்கள். வடக்குப் பிரிவுக் கமிஷனர் சொன்னது போல, புரட்டுச் சொல்ல முடி யாது. புது ஸெட்டில்மெண்டு அநியாயம் என்று தோன்றி ஞல்—இப்பொழுது பர்டோலியில் தோன்றுவது போல— ஜனங்களுக்குப் பரிகாரம் தேடிக்கொள்ளத் தென்பு உண் டாகிவிடும்.

"ஜனங்களுக்கு ஒரு வார்த்தை. பிரித்தாள் என்ற கொள் கையைத் தழுவி அரசியல் நிர்வாகம் நடைபெறுகின்றது என்ற உண்மையை அழுத்தமாக விளக்கிக் காண்பிக்கும் பொருட்டு, பெரும்பாலும் ஹிந்துக்கள் வாழும்இந்த பர்டோ லிப் பிராந்தியத்தில் முஸ்லீம் உத்தியோகஸ்தர்களையும் பட்டாணி சோதாக்களையும் தருவித்து இருக்கிறுர்கள். பர்டோலி வாசிகள் உண்மையான சத்தியாக்கிரகிகளா யிருப் பின், அரசாங்கத்தை நிச்சயமாக 'பேதா மாத்து' செய்து விடலாம். இவர்களைக் கண்டு சந்தேகிக்க வேண்டாம்; பயப்படவேண்டாம்; அவர்களைத் தொந்திரவு செய்யவேண் டாம். உத்தியோகஸ்தர்கள் நமது நாட்டார்கள். பட்டாணி கள் நமது பக்கத்து நாட்டார்கள். கூடிய சீக்கிரத்தில் அர சாங்கத்தார் தங்கள் பிசகை உணர்வார்கள். ஹிந்துவின் மானம் முஸ்லீமுக்கும் முஸ்லீமின் கௌரவம் ஹிந்துவுக்கும் அருமையா யிருக்கும் என்று ஸர்க்கார் தெரிந்துகொள்ளுவார்

கள் இதை வெட்ட வெளிச்சமாகக் காண்பிப்பதற்குத் தக்க சந்தர்ப்பம் வாய்த்திருக்கிறது பர்டோலி வாசிகளுக்கு.

“அன்பின் சட்டமாகிய சத்தியாக்கிரகச் சட்டத்தை அவர்கள் நிரூபணம் செய்து காண்பிக்கட்டும். கொடுங்கோல் கமிஷனரின் கல் நெஞ்சையும் அவர்களால் உருக்க முடியும்.”

காந்திஜியின் இந்த எழுத்து, நாட்டின் உயிர்நாடியாகும்.

## அத்தியாயம் 21.

மே மாதமும் முடிந்து போய்விட்டது. நமது பழைய நண்பர் யெனவன டெபுடி கலெக்டர் ஆருடம் சொன்ன பிரகாரம், பத்துப் பதினைந்து ஜப்தி நோட்டீஸ்களுக்குள்ளும் நாலைந்து வாரத்துக்குள்ளும் போராட்டம் நின்று போகவில்லை. பர்டோலியைப்பற்றித் தான் (இந்தியா) தேச முழுதும் பேச்சு. இவ்வாறு, பர்டோலி எதிர்த்து நின்று போராடும் என்று யாரும் நிச்சயமாய் நம்பினதே யில்லை. தலைமுறை தலைமுறையாக, பயங்கொள்ளிஎன்று பட்டம் வாங்கி வந்த பனியாமார்கள், அவர்களைக் கேலி செய்பவர்களின் நாக்கு அடைத்துப் போகும்படியாக, அவ்வளவு துணிவுடன் நடந்து கொண்டார்கள். “ஸர்க்கார் தாசர்கள்” என்று பரம்பரையாகப் பெயர் வாங்கிய பார்ஸிகளின் மத்தியில், ஸேட் டொராப்ஜி ஒருவர் தோன்றினும் போதாதா? டொராப்ஜியின் தியாகத்தால், ஏனைய பார்ஸிகளில் பெரும்பான்மையோரின் உள்ளம் மாற, சந்தர்ப்பம் வாய்த்தது. பர்டோலி பட்டினத்தில், இந்தப் போராட்டத்துக்குத் தூண்கள்போல் நின்று, அதை வலுப்படுத்திய அந்த இரண்டு முஸ்லீம் மிராசுதார்களிடம் முஸ்லீம் தாசீல்தாரின் ‘வேலை’ பலிக்க வில்லை. பர்டோலிப் பெண்மணிகளின் இயற்கைத் துணிவு, பர்டோலிக்கு வெளியே இருக்கும்பெண்மணிகளுக்கு ஆவேசத்தையும் உற்சாகத்தையும் தந்தது.

பர்டோலியைப் பற்றித்தான் எங்கும் பேச்சு. ஆமதாபாதில் பேச்சு; பம்பாயில் பேச்சு; ரயில் வண்டியில் பேச்சு; ரோடில் பேச்சு ; கடைத்தெருவில் பேச்சு ; டீக்கடைகளில்

பேச்சு. தினசரி சத்தியாக்கிரகப் பிரசுரத்தைப் படிக்காமற் போனால், யாருக்குமே, மனநிம்மதி ஏற்படவில்லை. மேமீ ஆரம்பம்வரையில், யாரிடமிருந்தும் பண உதவி தேவையில்லை என்று ஸர்தார் கண்டிப்பாய்ச் சொல்லிவிட்டார். பர்டோலி நிமிர்ந்து நின்று போராடுகிற தன்மையைக் கண்டதும், ஸர்தார் பொது ஜனங்களிடம் பண உதவிக்கு மனுச் செய்து கொண்டார்.

பர்டோலித் தாலூகாவிலிருந்தே ரூ. 10000 கிடைத்தது. இவ்வளவு பணமும் அனேகமாய் ஸ்திரீகள்தான் கொடுத்தார்கள். ஸர்தாரின் மனுவை. காந்திஜியும் ஆதரித்தார். வர்ஷ தாரையாக, பணம் வெளியிலிருந்து வர ஆரம்பித்து விட்டது. பணம் எங்கு அனுப்புகிறது என்று முதலிலே பலருக்குத் தெரியவில்லை. பாம்பாயிலிருந்து ஒரு சீமாட்டி ரூ. 500. முதல் தடவையாகக் கொடுத்துவிட்டு, அதே தொகையைப் போராட்டம் நடைபெறும் வரையில் மாதா மாதம் அனுப்பி வைப்பதாகச் சொன்னார்.

குஜராத்தில், அந்தக் காலத்தில் ரயிலில் போனால், வேடிக்கை வேடிக்கையாக, போராட்டத்தைப்பற்றிய பேச்சைக் கேட்கலாம். "இதெல்லாம் எங்கே போய் நிற்கும்" என்பார் ஒருவர், அதிகாரிகளின் செயல்களை நேரிலே பார்த்த ஒருவர், "நாங்கள் எதையும் பொறுத்துக் கொள்ளுவோம்; ஆனால் எருமைகளைப் பட்டாணிகள் சித்திரவதை செய்கிறதை மட்டும் எங்களால் பொறுக்க முடியவில்லை. பட்டாணி ராஜாங்கமாகப் போய் விட்டது. மாதி கிராமத்தில், ஒரு பட்டாணி திருட்டுத்தனமாக, பின் புறத்தில், ஒரு வீட்டுக்குள் நுழைந்ததுதான் உங்களுக்குத் தெரியும். வரவொட்டாமல் தடுக்கப் பார்த்த வீட்டுக்காரியை, அந்தப் பட்டாணி கையைப் பிடித்துக் கொண்டானே! இதற்கு என்ன அர்த்தம்? இவைகளின் முடிவு என்ன" என்பார். இன்னொருவர் சொல்லுவார்:—"ஸர்போனில் இருக்கும் ஜப்தி ஆபீசர் ஒரு அனவ்லா பிராமணன். அந்தத் துர்ப்பாக்கியசாலிக்குப் பெண்ஜாதி யில்லை; விஷம் குடித்து, அவருடைய மகன் தற்

கொலை செய்துகொண்டான். காப்பாற்ற வேண்டுமென்று அவருக்கு யாருமே யில்லை. பின்னை எதற்காக இதை யெல்லாம் செய்துகொண்டிருக்கிறார் ?".

ரயில் வண்டியில், அனேகமாய் எல்லார் கையிலும் சத்தி யாக்கிரகத் துண்டுப்பிரசுர மிருக்கும். கதர்ப்பையைத் தோளில் மாட்டிக்கொண்டு ஒருவர் எந்த ஊர் வீதிவழியாகப் போனாலும், தினசரித் துண்டுப்பிரசுரம் (விலைக்கு) இருக் கிறதா என்று அவரைக் கேட்பார்கள். விளம்பர சபையின் பிர சார வேலை ஜனங்களால் எவ்வளவு தூரம் ரஸிக்கப்படுகிறது என்பது இவைகளினின்றும் நன்கு விளங்க வில்லையா? ஸர்தார், வெளியிலிருந்து பண உதவி வேண்டினாரே யொழிய ஆள் உதவி வேண்டவே யில்லை. போராட்டத்தின் இந்தக் காலத்தில், ஸ்ரீ ஸி. ஆர். ஆச்சாரியாரும் கங்காதரராவ் தேஷ் பாண்டேயும் ஆமதாபாத்துக்கு வந்திருந்தார்கள். தாங்கள் நேரில் பர்டோலியைப் பார்வையிடவேண்டு மென்று ஆசைப் பட்டார்கள். வேண்டாம் என்று தடுத்து விட்டார் காந்திஜி. இவ்வாறு தடுத்தது உசிதம்தான் என்பது ஸர்தாரின் கருத்து.

காந்திஜீயின் தோழராகிய மகன்லால் காந்தி பரமபத மடைந்த செய்தி கேட்டு, வல்லபாய் ஆமதபாத்துக்குப் போகத் துடித்துக் கொண்டிருந்தார். வரவேண்டாம் என்று காந்திஜி தடுத்து விட்டார். "தாங்க முடியாத நஷ்டம் தான் என்றாலும் இது, போராட்டத்துக்குக் குறுக்கே வரப்படாது. தற்போது, நீங்கள், பர்டோலியை விட்டு, அசையவே கூடாது. நான் ஏதாவது ஒத்தாசை செய்ய வேண்டுமா யிருந் தால், அதை எனக்குத் தெரிவிக்கத் தயங்க வேண்டாம். உங் கள் உத்தரவுக்குக் காத்துக்கொண் டிருக்கிறேன். நீங்கள் விரும்புகிற எந்த நிமிஷத்திலும் புறப்பட்டு அங்கு வ்ரத் தயா ராயிருக்கிறேன்" என்று காந்திஜி ஸர்தாருக்கு எழுதினார்.

காந்திஜியைத் தமது பக்கத்திலே பர்டோலியில் வைத் துக்கொள்ளுவதில், ஸர்தாருக்கு ஆசைதான். காந்தி பர்டோ லிக்கு வந்தால், "இந்தியா முழுதும் அங்கு வந்து குவிந்து

கொள்ளும்." எனவே, காந்திஜியை, ஸர்தார் தற்போது அழைத்துக்கொள்ள வில்லை.

பர்டோலி வாசிகளை வைத்துக்கொண்டு பிழைக்கும் "கிளர்ச்சிக்காரர்களின் கூண்டு" என்று ஸர்தாரும் அவரது தோழர்களும் கமிஷனர் அவர்களால் வர்ணிக்கப்பட்டார்களே, அந்த அவமானச் சொற்களை ஏற்றுக்கொள்ள, தேசம் விரும்பவில்லை. அகில இந்தியக் காங்கிரஸ் காரியக் கமிட்டி பம்பாயில் கூடிய பொழுது கீழ்க்கண்ட தீர்மானத்தைச் செய்தது:—

"பர்டோலி சத்தியாக்கிரகிகள் பம்பாய் அரசாங்கத்தின் அநீதமான வரிவசூல் திட்டத்தை எதிர்த்துப் போராடுவதைக் கண்டு, அவர்களைப் பாராட்டுகிறது. பம்பாய் ஸர்க்காரின் எதேச் சாதிகாரத்தைக் கண்டித்து, தங்கள் ஸ்தானங்களைக் காலி செய்த சட்ட சபை மெம்பர்களைப் பாராட்டுகிறது. அரிய தியாகத்தை மேற்கொண்டு, பர்டோலிக்காக உழைக்கும் வல்லபாய் படேலுக்கும் அவரது சகாக்களுக்கும் இந்தக் காரியக் கமிட்டி வந்தன மளிக்கிறது.

"சந்தர்ப்பத்துக்குத் தேவையில்லாத, சட்ட வரம்புக்கு மீறிய முறைகளை ஸர்க்கார் கைக்கொண் டிருப்பதை, இந்தக் கமிட்டி அழுத்தமாக ஆட்சேபிக்கிறது.

"ஸ்ரீ வல்லபாய், அபாஸ் தியாப்ஜி, டாக்டர் சுமந்த் மேதா முதலியவர்களை, 'கிளர்ச்சிக்காரர்களின் கூட்டம்' என்று வர்ணித்து எழுதிய வடபிரிவுக் கமிஷனர் கடிதத்தை இந்தக் கமிட்டி படித்துப் பார்த்ததில், அதில், பொய்க்குச் சமமான பல கூற்றுகள் இருக்கின்றன வென்றும் கடிதத்தின் தொனி ஆத்திர மூட்டக்கூடிய தென்றும் பெரிய அதிகாரிக்குத் தகாதது என்றும் அதற்காக அவர் அந்தக் கடிதத்தை வாபஸ் வாங்கிக் கொள்ளவோ அல்லது பகிரங்கமாக மன்னிப்புக் கேட்கும்படியாகவோ, அவரை ஸர்க்கார் தூண்ட வேண்டு மென்றும் அப்படி அவர் செய்ய மறுத்தால், அவரை வேலையினின்றும் விலக்க வேண்டு மென்றும் இந்தக் கமிட்டி அபிப்பிராயப்படுகிறது.

"பர்டோலி சத்தியாக்கிரகிகள் வேண்டிக்கொள்ளு மாறு, நடு நிலைமை தாங்கிய கமிட்டி ஒன்றை நியமனம் செய் யும்படி, இந்தக் கமிட்டி அரசாங்கத்தை வேண்டிக்கொள்ளு கிறது; இந்த இயக்கம் தேசத்தின் பொது இயக்கமாக மாறி விட்ட படியால், தேசத்தார் அனைவரும் தங்களால் இயன்ற பிரகாரம் இந்த இயக்கத்துக்கு உதவிசெய்ய வேண்டும் என்று இந்தக் கமிட்டி வேண்டிக்கொள்ளுகிறது."

இந்தத் தீர்மானங்களிலிருந்து, சட்டசபை மெம்பர்கள் பலர் தங்கள் ஸ்தாபனங்களை ராஜிநாமாச் செய்துவிட்டார்கள் என்று தெரிகிறதல்லவா? ராவ் பகதூர் பீம்பாய் நாயக் உள் ளிட்ட நாலைந்து பேர்கள், ஸர்க்காரின் கிஸ்தி வசூல் மனப் பான்மையைக் கண்டித்து, தாங்கள் ஸ்தானங்களை ராஜிநாமாச் செய்துவிட்டார்கள். பீம்பாய் நாயக், ஸர்க்காரோடு, இது சம்பந்தமாகக் கடிதப் போக்குவரவு வைத்துக்கொண் டிருந் தார். ரிவினியூ மெம்பரைப் போய்ப் பார்த்தார். அவர் கமி ஷனர் ஸ்மார்ட்டைப் போய்ப் பாருங்கள் என்று சொன் னதின்பேரில், கமிஷனரைப் போய் பார்த்தார் நாயக். கமிஷனர் திருப்தியாக ஒன்றும் சொல்லவில்லை. அதன் பின்னர், பம்பாய் அரசாங்கத்தாரோடு கடிதப் போக்கு வரத்துச் செய்தார். ஸர்க்காரின் மழுப்புப் பதில்கள் இவருக் குப் பிடிக்கவில்லை.

"ஒரு அரசாங்கம் தனது பொறுப்புகளை மறந்து சட் டத்தின் வரம்பு மீறி நடந்து, பெருந்தன்மையும் சட்ட பக்தி யும் வாய்ந்த ஜனங்களை, கருணையில்லாமல் நசுக்க முயற்சி செய்தால், அந்தத் தாலூக்காவில் நடைபெறும் அரசியல் எதேச் சாதிகாரத்தைக் கண்டித்து எங்களுடைய சட்டசபைப் பதவிகளை ராஜிநாமாச் செய்வது எங்களுக்கு நேர்மையான தாகும், கடமையுமாகும்" என்று கடிதம் எழுதி, பீம்பாய் நாயக் உள்ளிட்ட ஆறுபேர்கள் முதலில் ராஜிநாமாச் செய்தார் கள். பின்னர் அமிருதலால் ஸேட், ஹரிபாய் அமீன்— இருவரும் சேர்ந்துகொண்டார்கள்.

ஸர்தார் பம்பாய்க்குப் போக நேர்ந்தது. அங்கே பண்

டிட் மோதிலால்ஜியையும் ஏனைய காரியக் கமிட்டி அங்கத்தினர்களையும் சந்தித்தார். இன்ஷூரன்ஸ் வேலை செய்துகொண்டிருந்த லாலா கிர்தரிலாலைப் பார்த்து, "வல்லபாய் அவர்களைச் சிறையினின்றும் இன்னும் எவ்வளவுகாலம் இன்ஷூர்செய்ய, தாங்கள் தயாரா யிருப்பீர்கள்" என்று மோதிலால்ஜீ கேலி செய்தார். "ஸர்தாரைக் கைது செய்துவிடப் போகிறார்கள்; அது இப்பவோ, அடுத்த நிமிஷமோ" என்று எங்கும் ஒரே பேச்சாக விருந்தது. அப்படியிருந்தும், மரியாதைக்குக் கூட, பர்டோலிக்கு பண்டித மோதிலாலை அழைக்கவில்லை ஸர்தார். பர்டோலி முஸ்லீம் சத்தியாக்கிரகிகள், டாக்டர் அன்சாரி, மௌலானா ஷவுகத் அலி, மௌல்வி மகமது பலோக் முதலிய தலைவர்கள் வரவேண்டு மென்று வேண்டிக்கொண்ட தன்பேரில், மேற்சொன்ன மூவரும்பர்டோலிக்குப் போவதாகத் தீர்மானித்தார்கள். டாக்டர் அன்சாரி பர்டோலிக்குப் போகாமல், ஒருநாள் முழுதும் சூரட் நகரத்திலேயே தங்கி அங்குள்ள முஸ்லீம்களோடு கலந்துபேசி, நியாயமான இந்தப் போராட்டத்திலே, முஸ்லீம்கள் அனைவரும் பர்டோலி வாசிகளை ஆதரிக்கிறார்கள் என்று, பிரம்மாண்டமாய்க் கூடியிருந்த கூட்டத்தில் பகிரங்கமாய்த் தெரிவித்தார். ஷவுகத் அலியும் மகமது பலோக்கும் பர்டோலிக்குப் போய்ப் பார்த்து, அதன் ஒற்றுமையைக் கண்டு, ஆச்சரிய மடைந்தார்கள்.

நரிமன், பருச்சா இரண்டு பேரும் பார்ஸிகளுக்குப் பிரதிநிதிகளாக, பர்டோலியில் பல கிராமங்களைச் சுற்றிப் பார்த்து, பார்ஸிக்காரர் துணிந்து போராடுவதைக் கண்டு, ஆனந்தமடைந்து, கிராமவாசிகளை அலசி அலசிக் கேள்விகள் கேட்டார்கள். விவசாயிகள் பதில் சொன்ன வகையைக் கண்டு, அவர்கள் திருப்தியடைந்து, போராட்டத்தில் பர்டோலி வெற்றியுடன் வெளிவரும் என்ற தீர்மானத்துக்கு வந்தார்கள். பர்டோலியில் நரிமன் பேசின பிரசங்கத்தில் ஒரு துக்கடா:—

" பிரிட்டிஷ் ஆட்சியினால், அமைதியும் ஒழுங்கும் ஏற்பட்டதென்றும் பிண்டாரிகளும் கொள்ளைக்காரர்களும் ஒழிந்

தார்க ளென்றும் சொல்லப்பட்டு வருகிறது. வேறு இடத்தில் எவ்வாறு இருந்தபோதிலும், இன்றைக்கு பர்டோலியில், பட்டாணியும் பம்பாய் சோதாவும்தான் ராஜ்யம் நடத்துகிறார்கள். உங்கள்பேரில் 'போடப்பட்டிருக்கும்' பட்டாணிகள் யார் தெரியுமா? அவர்கள் 'காலி'க் கூட்டத்திலிருந்து பொறுக்கி எடுக்கப்பட்டவர்கள். பம்பாயில் நாள் முழுதும் போலீசார் கண்காணித்து வரும் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் அவர்கள். இந்தப் பட்டாணிகளைக் கூலிக்கு அமர்த்தியதைக் காட்டிலும் பெரிய அவமானம் ஸர்க்காருக்கு ஏற்பட முடியாது".

பரூச்சா பம்பாய்க்குப் போய், தமது சகோதரப் பார்ஸிகளுக்கு உபதேசம் செய்தார். பர்டோலியில் அரசாங்கத்தார் கையாளும் முறைகளை எவ்வகையிலேனும் பார்ஸிகள் ஆதரிக்கப்படாது என்று வேண்டிக் கொண்டார். பெஸானியா சகோதரிகள் (பார்ஸிகள்) யுவதி சங்க மெம்பர்கள் என்ற முறையில், பர்டோலிக்குப் போய், பல கிராமங்களைச் சுற்றிப் பார்த்தார்கள். அவர்கள் கண்ட காட்சிகளை, பம்பாய் யுவர்களின் முன்னால் எடுத்துரைக்கையில், யுவர்களனைவரும் மயிர்க்குச்செறிந்து போனார்கள். யுவர்கள் ஊர்வலம் போனார்கள்; பணம் திரட்டினார்கள். இவை யாவும் நடைபெற்றது, பெஸானியா சகோதரிகள் பர்டோலியைப் பார்வை யிட்டதனாலேதான்.

ஸிந்துச் சட்டசபை மெம்பர் ஜயராம்தாஸ்டௌலட்ராம் அவர்களை சூரட்டு ஜில்லா மகாநாட்டில் தலைமை வகிக்கும்படி வேண்டிக்கொள்ளப் பட்டது. தாம் நேரே பர்டோலியைப் பார்வையிடாமல், தலைமைவகிக்க முடியாது என்று தெரிவித்து, பர்டோலியைச் சுற்றிப் பார்த்து, தாம் கண்டதை விஸ்தாரமாக வர்ணித்தார் தமது பிரசங்கத்தில். இந்தப் போராட்டத்தைச் சிரத்தையுடன் கவனித்துக் கொண்டிருந்த சீக்கியர்கள், "தொண்டர்களை அனுப்புகிறோம்" என்று இரண்டொரு தடவை ஸர்தாருக்குத் தந்தி கொடுத்தார்கள். அதை ஸர்தார், வந்தனத்துடன் மறுத்துவிட்டார். ஸர்தார், மங்கள்

சிங் (சீக்கியத்தலைவர்) பர்டோலியைப் பார்த்துப் பூரித்துப் போனார். பர்டோலிப் போராட்டத்தை உடனிருந்து "படித்துக்கொண்டு வரும்படிக்கு", டாக்டர் சத்யபால், பாஞ்சாலக் காங்கிரஸ் கமிட்டியால் அனுப்பப்பட்டார். பல நாட்கள் அவர் பர்டோலியில் தங்கியிருந்து, தாலூகா முழு தும் சுற்றிப்பார்த்து, அவர்களுடைய தீரப் போராட்டத்துக் காக, ஜனங்களை மிகுதியும் வாழ்த்திப் பேசினார்.

பர்டோலியில் க்ஷேத்திராடனம் (புனித ஸ்தலயாத்திரை) செய்த பக்தர்களில் ஸேட் ஜம்னுலால் பஜாஜ் ஒருவர். "உங்க ளுடைய பரிசுத்த யாகத்தின் அக்கினி ஜ்வாலையின் வாடை பட்டு, என்னைத் தூய்மைப்படுத்திக்கொள்ள வந்திருக் கிறேன்" என்று பல பிரசங்கங்களில் அவர் உள்ள நெகிழ்ச்சி யுடன் சொன்னார்.

மகாராஷ்டிர சட்ட சபை மெம்பர்கள் ஜோஷியும் படாஸ்கரும் பர்டோலிக்கு வந்தார்கள். அவர்கள் காந்தியை யாவது அவரது ஒத்துழையாமையையாவது ஏற்றுக்கொண்ட வர்களல்ல. இது நில சம்பந்தமான இயக்கமானதால், இதிலே சத்தியாகிரகம் எவ்வாறு நடைபெறுகிறது என் பதைப் பார்ப்பதற்காக வந்தவர்கள். பர்டோலியைப் பார்த்துவிட்டு, வெளியே வருகையில், அவர்களில் ஒருவர், "நாங்கள் பரிகசிக்க வந்தோம்; பரவச பக்தியுடன் திரும்பு கிறோம்" என்றார்.

இந்த நண்பர்கள் யாவரும் என்ன பார்த்தார்கள்? அவர்களை ப்ரமை தட்டும்படியாகச் செய்த தென்ன? தனி மையும் தூய்மையும் தீரமும் கொண்டது இந்த இயக்கம் என்று ஒரு முகமாக அவர்கள் சொல்லும்படியாகச் செய்தது எது? பல காரணங்கள் உண்டு.

(1) தாலூகாவின் வியக்கத் தக்க கட்டுபாட்டைக் கண்டு, அவர்கள் ஆச்சரியத்துடன் திகைத்துப் போனார்கள். ஒரு சிலர், போராட்டத்திலிருந்து நழுவிக் கீழே விழுந் திருக்கலாம். ஆனால் பல கிராமங்கள் 'கல் கோட்டை'

களுக்கு ஒப்பாக இருந்தன. இஸ்ரோலி என்று ஒரு கிராமம்; இந்தக் கிராமத்துக்குப் புதிதாக ஒன்றும் வரி உயர்வு ஏற்படவில்லை. இருந்தாலும், இந்தக் கிராமம் போராட்டத்தில் கலந்து கொண்டது. 'இது காரணம் பற்றி', ஸர்க்கார் கிராம முழுதுக்கும் பறி முதல் நோட்டீஸ் விட்டார்கள். ஒருவராவது அசையவில்லை. கரட், குவாடியா, சித்ரா— இந்த மூன்று கிராமங்களுக்கும் வரி உயர்வு இல்லை. சின்னக் கிராமங்கள். அதிகாரிகள் அதட்டி உருட்டிப் பார்த்தார்கள் 'தாலூகாவோடு நாங்களும்' என்று இந்தக் கிராமத்தார்கள் திடமாக நின்று போராடினார்கள். தாலூகாவின் மானத்தைக் காப்பாற்றவேண்டும் என்று ஸர்தார் அடிக்கடி சொன்னதை, அவர்கள் மறக்க முடியுமா? தனியாகவும் சேர்ந்தும் தாலூகாவின் மானத்தைக் காக்க வேண்டியது அவர்களுடைய கடமை என்ற உணர்ச்சி தாலூகா முழுதும் ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் குடிகொண் டிருந்தது.

(2) ஸர்தாரின் "யுத்த முஸ்திப்புகளை"க் கண்டு, பார்க்க வந்தவர்கள் பிரமித்துப் போனார்கள். ரிவினியூ சட்டத்தின் ஷரத்துகள் சர்வ வல்லமை பொருந்தியவைகள். இந்த ஷரத்துகளை அமுலுக்குக் கொண்டு வரும் அதிகாரிகளோ, 'வெள்ளம்'. இவர்கள் தங்கள் யுக்திக்குத் தக்கவாறு, இந்த ஷரத்துகளை அமுலுக்குக் கொண்டு வந்தால், அரசாங்கத்தின் கீர்த்தி கட்டாயமாய் குலைந்து தானே போகும்? இந்த ஸர்க்கார் சிப்பந்திகளின் திருவிளையாடல்களை எப்படிப் போராடுவது? பெரிய அதிகாரிகள், தவருக நடப்பார்கள் என்று ஜனங்கள் நினைத்ததே யில்லை. இந்த அதிகாரிகளின் குயுக்திகளனைத்தையும் 'பேதாமாத்து செய்து' பயனில்லாமற் செய்வதற்கு, ஸர்தார் 'போர் வ்யூகம்' எப்படி வகுத்தார், அதைச் சொல்ல வேண்டாமா? ஸர்போனே டாக்டர் சுமந்த் மேதாவும் அவரது மனைவியாரும் பார்த்துக் கொள்ள வேண்டியது. வலோடை, டாக்டர் சண்டுலாலும் அவரது சகாக்களும். மோஹன்லால் பாண்டியாவும் தர்பார் சாகேபும், நமது நண்பர் டெபுடி கலெக்டரைக் கவனித்

துக்கொள்ள வேண்டியது. முஸ்லீம் தாசில்தாரின் சேஷ்டைகளுக்குப் பரிகாரம் தேட வேண்டிய பொறுப்பு அபாஸ் தியாப்ஜியையும் இமாம் சாகேபையும் சேர்ந்தது.

மேற் கூறியவர்கள் தளகர்த்தர்கள். அவர்களுக்குக் கீழ் தொண்டர்கள்; 'இரவிலோ, பகலிலோ, மத்தியானத்திலோ, எந்தெந்த நேரமதிலோ' அயராமல் தொண்டு செய்யும் வீரர்கள். எந்த வேலையும் அவர்களுக்கு உயர்ந்தது மில்லை; எதுவும் தாழ்ந்தது மில்லை. 250 பேர்கள்.

தாலூகாவில் இருந்த பதினாறு சத்தியாக்கிரக ஆசிரமங்களிலும், இந்த 250 பேர்களும் பிரிந்து நின்று வேலை செய்தார்கள். நாள் வேலை விடியற்காலமே, மூன்று மணிக்குத் துவக்கிவிடும். கிராமம் கிராமமாய்த் 'தினசரி' யைக் கொடுத்து வருவது; கிராமத்தின் நுழை வழிகளில் காவல் இருந்து, 'ஜப்திப் பட்டாளம்' வருவதை அறிவிப்பது; ஸர்க்கார் அதிகாரிகளின் போக்கு வரவுகளைக் கருத்தாய்க் கவனித்து, அவர்கள் என்ன செய்யப் போகிறார்களென்று கிராம வாசிகளுக்கு எச்சரிக்கை செய்வது; கிராமங்களில் நடப்பதை யெல்லாம் தலைமை ஆபீசுக்கு அப்போதைக் கப்போது தெரிவிப்பது; குடியானவர்களுடன் கூடப் பழகி, அவர்களுடைய தேவைகளையும் கஷ்டங்களையும் தெரிந்து கொள்ளுவது; ஸர்தாரின் உத்தரவுகளை அவர்களுக்கு விளக்கிச் சொல்லுவது. இவ்வளவு வேலைகளும் தொண்டர்களைச் சேர்ந்தது. ராத்திரி, தங்கள் இருப்பிடங்களுக்குத் திரும்புவார்கள். தங்கள் சோர்ந்து போன 'கட்டைகளை'ப் பனை ஓலைப்பாயிலே போட்டுப் புரட்டி, உறங்குவார்கள்.

எல்லாருக்கும் மேலே ஸர்தார். எல்லாவற்றிலும் மேல் பார்வை. இவருக்கு 'ஓய்வு ஒழிவு' கிடையாது. அவசரமே படுவதில்லை. எதையும் நிதானத்துடன் செய்வார். எதிலும் சர்வ ஜாக்கிரதை! மற்றவர்கள் யாரும் பேசப் படாது என்று ஸர்தார் உத்தரவு போட்டா ரல்லவா? அந்த உத்தரவின் பயனை அவர் அனுபவிக்க வேண்டாமா? நாளொன்றுக்கு மூன்று நான்கு இடங்களில் பிரசங்கங்கள்;

அனேகமாய் நடுராத்திரிகளில் சொற் பொழிவுகள். இத்தனை வேலைகளோடு, கேள்வி கேட்கிறவர்களுக்குத் தக்க பதில் சொல்லியாக வேண்டும்.

ஒருவர்:—அவர்கள் நமது மோட்டார்க் கார்களின் லைஸென்சுகளைப் பிடுங்கிக் கொண்டால், நாம் என்ன செய்கிறது?

ஸர்தார் (கட்டிடம் இடியச் சிரித்துக்கொண்டு):—நம்ம கால்கள் எங்கே போச்சு? நம்ம கால்களை நாம் ஒத்தி வைத்து விடவில்லையே! சேனைக்கு காந்திஜி ஆள் திரட்டுகிற சமயத்தில், நாம் எல்லோரும் நாளொன்றுக்கு 25 மைல் நடந்தவர்கள் தானே! மேலும், இனிமேல் மழை காலம். கார் எதற்கு? ரோட்டுகளிலே புதைவதற்கா? அதிகாரிகள் யாராவது காரில் போனல் என்று சந்தேகமா? அந்த சந்தேகம் வேண்டியதே யில்லை.

(3) மூன்ருவதாக, பார்க்க வந்தவர்களைத் திகைக்கச் செய்தது, பர்டோலி ஸ்திரீகளின் கண் விழிப்பு; அவர்கள் போராட்டத்தில் கலந்து கொண்ட வகை; போராட்டத்துக்கு அர்த்தம் செய்து கொண்ட விதம். வீட்டை விட்டு, இது வரையிலும் வெளிவராத இந்த ஸ்திரீகள், இப்பொழுது, கூட்டம் கூட்டமாக, ஸர்தாரின் பேச்சைக் கேட்க வந்து விடுகிருர்கள். அன்னியர்கள் கேள்விகள் கேட்டால், பளிச் சென்று பதில் சொல்லுகிருர்கள். 'சூது வாது' ஒன்றும் அறியாதவர்கள்! இவர்கள் இயக்கத்தை ஆதரிப்பதனல், இயக்கத்துக்கு மூல பலம் எங்கிருக்கிறது என்று அன்னியர்கள் தெரிந்து கொள்ளுவது கஷ்டமா? பர்டோலிக்குள்ளே, வலோட் ஸ்திரீகள் தான் ரொம்பவும் முன்னுக்கு வந்தவர்கள். பழைய பக்திப் பாட்டுகள் பாடுவார்கள். போராட்டத்துக்கு ஒத்ததாக புதுப் பாட்டுகளும் இட்டுக் கட்டினர்கள். இவைகளை அவர்கள் அற்புதமாய்ப் பாடினர்கள். ஒரு பாட்டின் அடிகள் பின் வருமாறு:—

“போராடுவோம், போராடுவோம், ஞானியைப் போலப்

போராடுவோம். வருவது உணர்ந்து போராடுவோம். தைரியம் நமது கேடயம். தூய்மையும் திருப்தியும் நமது ஆயுதங்கள். தீரர்கள் போர்க்களத்தில், முன்னே ஓடுவார்கள். கோழைகள் அடி வாங்கிக்கொண்டு, பின்னே ஓடுவார்கள். தெரிந்தே போராடுவோம்.

"போரின் பாதையிலே, ரோஜா மலர்கள் குவிந்து கிடக்க மாட்டா. பாதை, கத்தியின் முனையைப் போல கூரா யிருக்கும்; ஏன்? அது உண்மைக்காகப் போரான தால். ஞானியைப் போல, சர்வ ஜாக்கிரதையுட னிருப் போம்.

"கொடுங்கோலன் வெறிபிடித் தாடுகிறன்; அவன் காலிலே மிதிப்பட்டுக் கிடக்கிறார்கள் விவசாயிகள். இவ் வளவு காலமாகத் தூங்கினேம்; ஆனல் இப்பொழுது நமது குருவைக் கண்டோம்; புத்தியும் கொண்டோம்.

"சத்திய நெறியையும் உண்மையையும் கொண்டு அடக்கு முறையும் அநீதியையும் எதிர்க்குமாறு அவர் நமக்குக் கற்றுக் கொடுத்திருக்கிறார். நல்லவற்றைக் காக்க வும் அல்லவற்றை ஒழிக்கவும் கடவுள் விரைந்து வருவது நிச்சயம்.

"வல்லபாய் நமது தலைவர். வெற்றி நமதே என்று அவர் சொல்லுகிறார். நமது வார்த்தையை நாம் காப்பாற்று வோம்.போராடுவோம், போராடுவோம், ஞானியைப் போலப் போராடுவோம். வருவது தெரிந்தே போராடுவோம்."

கிராமத்து மெட்டில் அமைக்கப் பெற்ற பாட்டுகள், எப் பொழுதுமே பாடுவதற்கு உருக்கமா யிருக்கும். பெண்கள் பாடினல் சொல்லத் தேவையில்லை. பெண்கள் ஒன்று சேர்ந்து பாடினல், கந்தர்வ கானந்தான்; தங்களை மறந்து, ஆண்டவனை நினைந்து, குருபாதம் பணிந்து, தங்கக் குரலில் எல்லோரும் சேர்ந்து பாடினல், தேவா மிருதமே.

(4) ஸர்தாரின் உபதேசத்தை பர்டோலி வாசிகள் பின் பற்றிய விதத்தைக் கண்டு, பார்க்க வந்தவர்கள் திகைத்துப்

போனார்கள். ஜப்திப் பட்டாளத்தார் ஒரு கிராமத்தையே முற்றுகை போட்டு விட்டார்கள். ஒரே வீடு தான்; ஆனு லும் ஒரு கோடிக்கு ஒரு கோடி அது இருந்தது. எந்தக் கதவு திறந்தாலும் உள்ளே நுழைகிறது என்று தயாராய்க் காத்துக்கொண்டிருந்தார்கள் பட்டாணிகளும் போலி சாரும். விடியற் காலமே, 2-30 மணிக்கு முற்றுகை போட்ட இவர்கள் மறு நாள் சாயங்காலம் 6 மணி வரையில் காத்திருந்து பார்த்தார்கள். யாராவது எந்தக் கதவையாவது திறந்தால் தானே? வீடு ஒரு பென்ஷன்தாருடையது. அவருக்கு 75 வயதிருக்கும். அவர் கையெழுத்துப் போட் டவர்களில் ஒருவரல்ல. அவர் வீட்டைச் சுற்றிக் காவல் போட்டால், அவரும் வீட்டாரும் பயந்து விடுவார்கள் என் பது அதிகாரிகளின் யோசனை. கிழவருடைய மனைவி, ஜன் னல் பக்கம் உட்கார்ந்து கொண்டு, ஜபமாலையில் ராம நாமம் ஜபித்துக்கொண் டிருந்தாள். அந்த சமயம் ஸர்தார் போய்ச் சேர்ந்தார் அங்கே.

ஸர்தார் (வெளியில் நின்ற படிக்கு):—என், பெரியம்மா! நீங்கள் பயந்து போகவில்லை?

கிழவி அம்மாள்:—காப்பாற்றுவதற்கு நீங்கள் இருக் கும்பொழுது, நான் ஏன் பயப்பட வேண்டும்?

ஸர்தார்:—நான் அல்ல, ராமன்!

கிழவி:—ஆமாம்! கிருபா மூர்த்தி ராமன் இருக்கிற பொழுது, கவலை என்ன?

ஒருவர்:—உங்கள் கதவின் பக்கத்திலே இந்தப் பட் டாணிகளும் போலீசார்களும் நிற்கிறார்களே!

கிழவி:—அவர்கள் தாராளமாய் நிற்கட்டும். அவர்கள் இங்கே நிற்கா விட்டால், ஸர்தார் எங்கள் வீடு தேடி, வந் திருப்பாரா?

நேற்று வரையில், நகக் கண் வரையில் பயந்து கிடந்த வர்கள் இப்படியும் துணிவுகொள்ள முடியுமா? அதிகாரி களின் அடாத செயல்களைக் கண்டு, மனம் பதறாமல்

அமைதியுடனும் இவர்கள், இருக்க முடியுமா? முரட்டுத் தனத்துக்கு எதிரே, சாத்வீகம் தவழ்ந்து விளையாடுகின் றதே? இதைக் கண்டு தான், பார்க்க வந்தவர்கள் திகைத்து, திக்குமுக்கலாடிப் போனார்கள். 'பகை நடுவினில் அன்புரு வான நம் பரமன் வாழ்கின்றான்' என்பதை உணர்ந்த பர் டோலி வாசிகளைக் கண்டு, ஏன் பார்க்க வந்தவர்கள் திகைத் துப் போகமாட்டார்கள்?

## அத்தியாயம் 22.

பர்டோலி சத்தியாகிரகத்தின் வெற்றி, அற்புதத்தால் விளைந்த தல்ல. அயராமல், நிற்காமல், ஓயாமல் பொறுமை யுடன் உழைத்த உழைப்பின் பயன் தான் அது. இரவும் பகலும், எந்த நேரத்திலும் சலிக்காமல், தமது உடல் மெலிந்து தேய்ந்து போகும்படியாக, ஸர்தார் செய்த உப தேசத்தின் தவிர்க்க முடியாத பலனாகும் அது. போராட் டத் துவக்கத்தில், வாரத்துக்கு மூன்று நாள், பர்டோலிக் காக உழைத்தார். பிறகு பூரா நேரமும். அவருடைய வேலை சாயந்திரம் 5 மணிக்கு ஆரம்பித்து, ராத்திரி 2 மணிக்கு முடியும். என்ன பொறுமையோடு, ஸர்தார், சத்தியாகிரகத்தின் ஒவ்வொரு பகுதியையும் போதிப்பார்! ஆத்திரத்துடன் யார் கேள்வி கேட்டால் என்ன? ஸர்தார் பதறப் போகிறாரா?

பயம் தொலைய வேண்டும் என்று ஸர்தார் முதன் முத லாக உபதேசம் செய்தார். அதுவும் ஸர்க்காரிடம் இருக் கும் அர்த்தமில்லாத அச்சம் ஒழிய வேண்டும். "இந்தக் கொள்ளிவாய்ப் பிசாசை கண்டு பயப்படுகிறீர்களே? அர சாங்கம் என்பது தான் என்ன? அதை யாரேனும் பார்த் திருக்கிறீர்களா? நான் பார்த்ததே யில்லை. ஸர்க்கார் என்றால் தாசில்தாரா, கணக்கரா, மணியக்காரரா அல்லது இவர்களெல் லாரும் சேர்ந்த ஒன்றா? ஸர்க்கார் என்று தனிப் பேர்வழி கிடையாது. தனிப் பேர் வழிகளைப் பெரிதுபடுத்தி, அவர் களை ஏன் 'அரசாங்கமாக'ச் செய்ய வேண்டும்? ஆபத்துக்

காலத்தில், ரயத்துக்குப் பக்க பலமாக நிற்பவர் தான் அதிகாரி. மற்றவர்கள் யாவரும் வெறும் வேலையாட்கள்" என்றார் ஸர்தார் ஒரு சமயம்.

கிராமங்களிலே இன்னொரு கஷ்டமுண்டு. நிலங்கள் சிலருக்கு மட்டும் சொந்தமா யிருக்கும். அவைகளைக் குத்தகைக்கோ, வாரத்துக்கோ, பயிர் செய்பவர்கள் பலரா யிருப்பார்கள். மிராசுதார்கள் சாகுபடி செய்பவர்களுக்குச் சாதகமா யிருந்தாலொழிய, போராட்டம் "ஊதிப் போய் விடும்.'

நேரே, தாமே சாகுபடி செய்யாத மிராசுதார்கள் வலோட், வங்கனேர், பர்டோலி—இந்த மூன்று இடங்களிலும் தான் அதிகம். முதலிலே, இந்த மூன்று இடத்து மிராசுதார்களையும் சரிப்படுத்திக் கொண்டார் ஸர்தார். சாகுபடி செய்யாத வெறும் மிராசுதார்களைப் பார்த்து ஸர்தார் சொல்லுவார்:—"உங்களுடைய குத்தகைச் சீட்டில், நீங்கள் உங்கள் குத்தகை வருமானத்தை உயர்த்தியிருப்பதைப் பார்த்துத் தான் ஸர்க்காரும் வரியை உயர்த்தியிருக்கிறார்கள். உங்கள் சீட்டில் உயர்த்தியிருப்பது உண்மையோ பொய்யோ, அதற்கு நீங்கள் தான் ஜவாப்தாரிகள். உங்களுடைய பாபங்களுக்காகவே, தாலூகா முழுவதும் இப்பொழுது கஷ்டப்படுகிறது. எனவே, குறைந்த பிராயச்சித்தமாகவேனும் நீங்கள் செய்ய வேண்டிய தென்ன? அவர்களைக் காட்டிக் கொடுக்காமல், அவர்களுக்குத் துணை நிற்க வேண்டும். உங்களுடைய விசுவாசம் யாரிட மிருக்கும்? ஸர்க்காரிடமா? அல்லது நிலத்திலே பாடுபடும் விவசாயிகளிடமா? உங்களுக்கும் ஸர்க்காருக்கும் என்ன பந்தம்? வரி செலுத்துவது தான் சம்பந்தம். ஆனால் உங்களையும் சாகுபடி செய்யும் விவசாயிகளையும் கட்டிப் பிணைப்பது உயிருள்ள பந்தமாகும். அவர்களுடைய உழைப்பினால், நீங்கள் ஜீவனம் செய்கிறீர்கள், தொழில் நடத்துகிறீர்கள். அவர்கள் கெட்டுப் போனால், நீங்கள் மட்டும் வாழ முடியுமா? உங்

களுக்கு ஆதாரமா யிருப்பவர்களுக்குத் துரோகம் செய்யா தீர்கள்.''

இன்னொரு இடத்தில் சொல்லுவார்:—“நீர் பாலிலே கலந்திருப்பதைப் போல, மிராசுதார் குடியானவரிடம் கலந் திருக்கிறார். அவர்களைப் பிரிக்கவே முடியாது. பாலை அடுப்பிலே வைத்தால் என்ன ஆகிறதென்று உங்களுக்குத் தெரியும். பாலைக் காப்பதற்காக, தண்ணீர், பாத்திரத்துக்கு அடியே ஓடிப்போய், பாலை மேலே தூக்கி விடுகிறது. ஆனால் பால் என்ன செய்கிறது? தீயை அணைப்பதற்காக, வெளியே வழிந்து விடுகிறது, தண்ணீரைக் காக்க. அதைப்போல், நீங்க ளிருவரும் இணைபிரியாம லிருக்கவேண்டும்.''

எத்தனை பிரசங்கங்கள்! எத்தனை வகை உபதேசங்கள்! நூற்றுக் கணக்கான தொண்டர்களின் பிரசாரம்! போதாக் குறைக்கு, ஸத்தியாக்கிரக வாக்குறுதிப் பத்திரத்தில் கை யெழுத்து! என்றாலும் ஒரு சிலர், பயந்து போய் நழுவ ஆரம்பித்தார்கள். இவர்களைக் கட்டுப்பாட்டுக்குள் வைத்துக் கொள்ளுவதற்கு என்ன செய்கிறது? இந்த சந்தர்ப்பங்களிலே தான், ஜாதி விலக்கு ஆயுதப் பிரயோகம் செய்யலாம் என்று ஸர்தார் உத்தரவு கொடுத்தது. இந்த ஆயுதத்தைக் கண்டு, அதிகாரிகள் மனம் பொங்கினார்கள். ‘பொங்கல்' தான் மிச்சம். ஜாதி விலக்குச் செய்வது, சட்டப்படி குற்ற மல்லவே!

ஸர்தார் அரசாங்கத்தைப் பார்த்துக் கேட்கிறார்:— “ஜனங்களுக்குக் கடைசி ஆயுதமாக இருப்பது இதுதான். இதைக்கூட அவர்கள் பிரயோகம் செய்யப்படாது என்று முணு முணுக்கிறீர்களே! நீங்கள் மட்டும் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்? நீங்களும் ஜாதிக் கட்டுப்பாட்டுடன் வேலை செய்கிறீர்கள். அதிலே, யாரையும் அன்னியரை உள்ளே விடுவதில்லை. அந்தக் கட்டுப்பாட்டை ஆயுத பலங் கொண்டு காக்கிறீர்கள். எதற்காக? பூரா இந்து தேசத்தை யும் அடிமைத்தனத்தில் வைத்திருக்க. நாங்களோ, தற்

காப்பின் பொருட்டு, இதைப் பிரயோகம் செய்யத் துணிந்தோம்."

ஜாதி விலக்குச் செய்வதில் ரொம்ப ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்பதையும் ஸர்தார் வற்புறுத்துவார். ஆத்திரத்துடன், கண்டபடிக்கெல்லாம் அதைப் பிரயோகம் செய்யப்படாது என்பார். அதற்கும் ஒரு எல்லை உண்டு என்று எல்லைகளையும் வகுப்பார்:—"ஜாதி விலக்குச் செய்யப்பட்டவனோடு, உறவு கொண்டாடப்படாது. ஆனால் அவன் நோய் வாய்ப்பட்டால், அவனுக்கு எந்த வித ஒத்தாசையையும் மறுக்கக்கூடாது. ஜீவகாருண்யம் காண்பிக்க வேண்டிய சந்தர்ப்பங்களில், ஜாதி விலக்குக்கு இடமில்லை. தாலூகாவுக்கு வெளியிலிருந்து, உங்கள் பறி முதலான நிலங்களை விலைக்கு வாங்க (நாக்கை நொட்டை விட்டுக்கொண்டு) வருபவர்களோடு நீங்கள் பூரண ஒத்துழையாமையைக் கைக்கொள்ள வேண்டும். அவர்கள் ஏலத்தில் எடுக்கும் நிலங்களை, உங்களில் ஒருவரும் சாகுபடி செய்யலாகாது. தாலூகா வாசிகளுக்கும் ஸர்க்காருக்கும் போராட்டம். இந்தப் போராட்டத்திலே, வெளியூர்க்காரர்கள் 'நெளுவு சுளுவாக' நிலங்களை அடித்துக்கொண்டு போகப் பார்த்தால், அப்படிச் செய்ய விடலாகுமா?"

பார்ஸிக்கார்களைப் போன்ற சிறுபான்மை வகுப்பார்களிடம், தீவிரமான ஒத்துழையாமையைக் காண்பிக்க வேண்டாம் என்பார் ஸர்தார். மானெக்பூரில், கிராமக் கட்டுப்பாட்டுப் பிரயோகம் ஒரு பார்ஸியின் பேரில் கடுமையாகச் செய்யப்பட்டு வருகிறது என்று கேள்விப்பட்டதும், ஸர்தார் அங்கே போனார். கூட்டம் கூட்டி, கூட்டத்துக்குப் பார்ஸியையும் வரவழைத்தார். 'எனக்கு வைத்திய ஒத்தாசை மறுக்கப்பட்டது என்ற வதந்தி பொய். ஆனால் என் கடையில் குடிக்க வந்தவர்களை இன்னொரு கடைக்கு அழைத்துக் கொண்டு போய் விட்டார்கள். க்ஷவரத்துக்கு நாவிதன் கிடைக்காமல் செய்து விட்டார்கள். சாகுபடிக்குப் பண்ணையாள் கிடைக்க மாட்டேன் என்கிறான்" என்று பார்ஸி

உள்ளதைச் சொன்னர். இதைக் கேட்டதும், ஸர்தார் விக்கிரமாதித்தனைப் போலத் தீர்ப்புச் செய்தார். "கிராம மகா ஜனங்களே! இந்தப் பார்ஸியின் கடையில் தான் குடிக்க வேண்டும் என்று யாரையும் பலாத்காரப்படுத்த உங்களால் முடியாது. இந்தக் கடையில் குடிக்க வேண்டாம், இன்னொரு கடைக்குப் போங்கள் என்று யாரிடமும் நீங்கள் சொல்லப்படாது. நாவிதன் க்ஷவரம் செய்ய வேண்டியது தான். பண்ணைக்கு ஆளும் பார்த்துக் கொடுக்க வேண்டியது தான். அவரை நீங்கள் பார்க்க வில்லையா? தாம் செய்தது தவறு என்று ஒப்புக்கொள்ளுகிருரே! உங்கள் ஒத்தாசையை நாடும்பொழுது, அதை மறுப்பது உங்கள் பேரில் பிசகு" என்று அழகுத் தீர்ப்புச் செய்தார் ஸர்தார்.

ஜப்தி நடவடிக்கைகள் ஆரம்பத்தில் எடுத்துக் கொள்ளப்பட்ட காலத்தில், நுணுக்கமான யோசனைகளை யெல்லாம் ஸர்தார் சொல்லுவார். யார் "பேரில் ஜப்தி நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்படுகிறதோ, அவர்கள் மட்டும், ஜப்திக்காரர்கள் வருகையில், கதவுகளை மூடிக்கொண்டு, உள்ளே யிருக்கட்டும்" என்பார். பின்னர், கிராமம் முழுவதும் என்ருர். எவ்வளவு முன் ஜாக்கிரதையுட னிருந்தாலும், பட்டாணிகள் சுவர் ஏறிக் குதிக்கவும் பூட்டின கதவைத் திறக்கவும் வண்டிகளைக் கொண்டு போகவும் ஆரம்பித்தவுடனே, "உங்கள் வண்டிகளை 'அலக்கு அலக்காய்'ப் பிரித்துப் போட்டு விடுங்கள். வண்டிப் பாரை ஒரு இடத்தில் வையுங்கள்; சக்கரங்களை இன்னொரு இடத்தில்; முளைக் குச்சிகளை, மூக்கணையை மற்றொரு இடத்தில். முள் முதலியவைகளை வைத்து, வேலிகளைப் பலப்படுத்துங்கள். கோடரி கொண்டு உடைத்தா லொழிய, கதவு திறக்காம லிருக்கும்படி, கதவைப் பந்தோபஸ்துச் செய்து விடுங்கள். அவர்கள் சளைத்துப் போகும்படியாகச் செய்யவேண்டும்" என்பார்.

நிலங்கள் பறிமுதல் செய்யப்பட்டன என்று அறிவிக்கப்பட்டதும், "நீங்கள் ஏன் கவலைப்படுகிறீர்கள்? அவர்களால், இந்த நிலங்களைச் சீமைக்கு (இங்கிலாந்துக்கு) தூக்கிக்

கொண்டு போய்விட முடியுமா? பட்டாளமும் போலீசும் வந்து சாகுபடி செய்யப் போகிறார்களா? நிலத்தை வைத்துக் கொண்டு, அவர்கள் என்ன செய்கிறது?" என்றார். ஜனங்களுக்குள் சரியான கட்டுப்பாடு ஏற்பட்டு விட்டது என்று கண்டு கொண்டதும், "பறி முதல் நோட்டீஸ்களைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம். நீங்கள் விதை விதைத்து, சாகுபடி செய்ய ஆரம்பிக்கலாம். உங்களுடைய பூமியிலே ஒரு அங்குல நிலத்தையேனும் அரசாங்கத்தார் உங்களிடமிருந்து எடுத்துக் கொள்ள முடிகிறதா, பார்க்கிறேன்" என்றார்.

தாலூக்காவிலே 'தீயும் கலகமும்' உண்டாகும் என்று கலெக்டர் புரளியைப் பரப்பியதும், "இந்த இயக்கத்தில் பலாத்காரம் பலிக்கும் என்று ஒரு நிமிஷம் கூட, மனப்பால் குடிக்க வேண்டாம். ஆயுத பலத்திலே பிரிட்டிஷ் அரசாங்கத்தை ஜயிப்பதற்கு, உலகத்திலே யாருமே இல்லை. அவர்களுக்கு மட்டும் இஷ்டமிருந்தால் போதும்; அவர்களால் இந்தத் தாலூகாவை (தரையோடு தரையாய்) அழித்து விட முடியும். எவ்வளவு ஆத்திரம் ஏற்பட்டாலும், சிறு விரலைக் கூடத் தூக்கப்படாது. தன்னைக் காத்துக் கொள்ளுவது என்பது உயர்ந்த தருமந்தான். என்றாலும் உங்களைத் திட்டினாலும் சரி, அடித்தாலும் சரி, திரும்ப ஒன்றும் நீங்கள் செய்யப்படாது. சின்னச் சாக்கை வைத்துக் கொண்டு, ஸர்க்கார் என்ன வேண்டுமானாலும் செய்வார்கள். இதுவரையிலும் நாம் பாடுபட்டுக் கட்டியதெல்லாம் வீணாய்ப் போய் விடும்" என்று அமைதியைப்பற்றி, ரொம்பவும் வற்புறுத்துவார்.

"யுத்த களத்தை ஊன்றிக் கவனிக்க வேண்டும். எதிரியின் வியூகங்களைத் தெரிந்து கொள்ள வேண்டும். நமது சக்தியாதாரங்களை அளவிட்டுக் கொள்ள வேண்டும். நம்ம சக்தியைக் கரணை கரணையாகக் கோத்து, அதை அறுக்க முடியாத சங்கிலியாகச் செய்துவிட வேண்டும்" என்பார் ஸர்தார்.

## அத்தியாயம் 23.

தன் பலம் தெரிந்து அமைதியுடன் போராடும் பர்டோலியைப் பார்க்கப் பார்க்க, அரசாங்கத்துக்கு ஆத்திரம். கமிஷனர் ஸ்மார்ட் பர்டோலிக்கு வருகிற தொந்திரவு கூட இதுவரையில் எடுத்துக் கொள்ளவில்லை. அவர் மனக் கோட்டை கட்டிக்கொண்டிருக்கிறார். "போராட்டம், இப்பவோ, அடுத்த நிமிஷமோ, சாகக் கிடந்து, மூச்சு வாங்கிக்கொண்டிருக்கிறது" என்று கீழ் அதிகாரிகள் லாகவமாகச் சொல்லுவதைக் கேட்டுக்கொண்டு, ஆகாயக் கோட்டையில் அமர்ந்து, பர்டோலியைப் போய்ப் பார்க்காமலே காலம் தள்ளுகிறார் ஸ்மார்ட். மே மாதத்தோடு போராட்டம் ஒழிந்து போச்சு என்று அதிகாரிகளுக்குள் பேச்சு. அவர்களுடைய ஆருடங்கள் யாவும் பலிக்காமற் போனது கண்டு, இன்னும் கடுமையான, பலன் தரக்கூடிய முறைகளைப்பற்றி யோசிக்க, அவர்கள் மந்திராலோசனை சபை கூடினார்கள்.

திவான் பகதூர் ஹரிலால் தேசாய் என்று ஒரு பிரமுகர். எப்படியாவது, இருதிரத்தாருக்கும் ராஜி செய்துவிட வேண்டும் என்று ரொம்பவும் ஆசைப்பட்டார். திட்டமாகச் சில யோசனைகள் சொன்னாராம். அவைகளை கவனிப்பதாகவும் ஸர்க்கார் சொன்னார்களாம். தேசாய் அவர்கள் வல்லபாய்க்கு எழுதிய கடிதங்களிலிருந்து, அவருடைய ஆவல் தெளிவாகத் தெரிகிறது.

ஸர்தாருக்கு நல்லது செய்யவேண்டும் என்பதுதான் ஹரிலால் தேசாய்க்கு ஆசை. என்ன நேர்த்தியான நன்னோக்கம் இருந்தாலும், சில சமயங்களில் ஒருவர் செய்ய எண்ணிய ஒத்தாசை, அபகாரமாய் முடிந்தாலும் முடியும். இந்த மாதிரி தான், தேசாயின் நன் முயற்சியும் முடிந்தது. "முதலிலே கிஸ்தியைக் கொடுத்துவிடுங்கள். பிறகு எல்லாவற்றையும் கவனித்துக் கொள்ளலாம்" என்ற கமிஷனர் ஸ்மார்ட்டின் அபத்தக் கொள்கையை தேசாய் ஏற்றுக்கொண்டது, அவர் செய்த முதல் தவறாகும். அதிகாரிகள் இந்தக்

கட்சியைச் சொல்லிக்கொண்டு வந்திருக்கிறார்களே யொழிய, ஜனங்கள் அதை அபத்தமாக எண்ணி வந்தார்கள். 'அந்த ரங்கம்' என்று குறிப்பிட்டிருந்த போதிலும், ஹரிலால் ஸர்தாருக்கு எழுதிய கடிதத்தைப் பிரசுரிக்கவேண்டி யிருக்கிறது. பிரசுரிப்பதற்கு ஸர்தாரின் அனுமதி உண்டு.

"மகாபலேசுவர்
'வால்வியூ' 25—5—28.

"எனது அருமை வல்லபாய் !"

"என்னால் ஆக வேண்டியதைச் செய்து விட்டேன். பலன் இருக்கும் போலிருக்கிறது. திங்கட்கிழமை என் தந்தி கிடைத்தால், நீங்கள் இங்கேவரத் தயாரா யிருக்க வேண்டும். முதலிலே ஜனங்கள் கிஸ்தியைச் செலுத்தி விட்டால், ஸெட்டில் மெண்டைப்பற்றி விசாரிக்க, நடு நிலைமை கொண்ட ஒருவர் நியமிக்கப்படுவார் என்று அரசாங்கத்தார் சொல்லுவதா யிருப்பின், ஜனங்கள் தங்கள் ஆட்சேபத்தைத் தெரிவித்துக் கொண்டு, தங்கள் கிஸ்தியைச் செலுத்தி விடுவார்களா ?

"இதுதான் குறைந்த நிபந்தனை. பறி முதலானதும் விற்பனையானதுமான நிலங்களை மிராசுதார்களுக்குத் திருப்பிக் கொடுக்கும்படி ஏற்பாடு செய்துகொண் டிருக்கிறேன். முயலுகிறேன். சரி என்றால் தந்தி கொடுக்கவும். கடிதமும் எழுதவும். கடுமையான நிபந்தனைகளைச் சொல்ல வேண்டாம்.

உங்கள் உள்ளன்புள்ள,
"ஹரிலால் தேசாய்."

முதலிலே கிஸ்தியைச் செலுத்திவிட்டு, பிற்கு பரிகாரத்தை நாட வேண்டும் என்ற கட்சி, தமது போல், தேசாய் அவர்கள் பாவித்துக் கொண்டதுதான் வேடிக்கை. தாம் ஏதோ கடுமையாக யோசித்து, இந்த நேர்மையான முடிவுக்கு வந்தது மாதிரி அவர் எப்படியோ எண்ணி ஏமாந்து

போனார். நல்லவர்களுடைய சித்த விருத்தி, அவர்கள் பல வீனர்களாயிருப்பின், இப்படித்தான் ஏமாந்த பாதையில் சென்று, பிறருக்குத் துன்பம் உண்டாக்கும். இவரை யார் மத்தியஸ்தம் பேசச் சொன்னது? 'குடு குடு' வென்று ஓடினார். ஸர்க்கார் கட்சியை, தமது சொந்தக் கட்சியாகச் செய்து கொண்டு தப்பட்டை அடித்தால், இவரோடு என்ன செய்கிறது? இவர் சொல்லி, ஏதோ இந்தக் கட்சியை ஸர்க்கார் ஏற்றுக்கொண்டது போல, ஆகிவிட வேண்டுமாம்! வல்லபாயின் நண்பரே இப்படிச் சொல்லுகையில்—என்று வார்த்தை வளர வேண்டு மல்லவா? அதற்காகத் தான் ஸர்க்கார் காத்துக்கொண்டிருந்தார்கள். இந்த அவமான கரமான நிபந்தனையை ஸர்தார் ஏற்றுக்கொள்ள மறுத்து விட்டார். ஒரு தந்தி கொடுத்துவிட்டு, கடிதமும் எழுதினார். தந்தி பின்வருமாறு:—

"கடிதம் கிடைத்தது. விசாரணைக்குமுன், உயர்த்தப் பட்ட வரியைக் கொடுக்க, சாத்தியப்படாது. பகிரங்க விசாரணை ஏற்பட்டு, சாட்சி விடவும், ஸர்க்கார் சாட்சிகளைக் குறுக்கு விசாரணை செய்யவும் அதிகாரம் கிடைத்து, பறிமுதலான நிலங்கள் திரும்பக் கொடுக்கப்பட்டு, சத்தியாக்கிரகக் கைதிகள் விடுதலை பெறுவார்களானால், பழைய ரேட்டுப்படி கிஸ்தி கொடுக்க முடியும். பஞ்சாயத்து (விசாரணை) கோர்ட்டின் தீர்ப்பை ஜனங்கள் ஒப்புக்கொள்ளுவார்கள். பதில் தந்தி பர்டோலிக்குக் கொடுக்கவும்".

தந்திக்குப்பின், விபரமாக, வல்லபாய், ஹரிலால் தேசாய்க்குக் கடிதம் எழுதினார்.

"பர்டோலி"

28-5-1928.

"எனது அருமை ஹரிலால்,

"பூராத்தந்தியொன்று உங்களுக்கு நவ்சாரியிலிருந்து கொடுக்கப்பட்டது. அதன் நகலும் இத்துடன் அனுப்பப் பட்டிருக்கிறது; விபரம் அதுவே பேசும்.

"நம்மிருவருடைய ஊழியமும் காரிய முறைகளும் மாறுபட்ட வகைகளாயிருக்குமாதலால், திருப்திகரமாக, குறைந்தது இதுதான் என்று நான் கருதுவது, உங்கள் மதிப்பில் பிரம்மாண்டமாகத் தோன்றக்கூடும். புதிய ஸெட்டில்மெண்டில் கண்ட வரியைக் கொடுத்துவிட்டால், விசாரணையினுல் என்ன பயன் உண்டாகும்? ஜனங்களுக்குப் பாதகமான தீர்ப்பினுல், அவர்கள் புதிய வரியை விரைவில் செலுத்தாவிட்டால், ஸர்க்காருக்கு, வேண்டுமென்கிற ஜாமீன் இருக்கிறது.

"விசாரிக்கவேண்டியது இன்னின்னது என்பதைத் தெளிவாகத் தெரிந்துகொள்ளவேண்டும். பொதுவாக விசாரணை என்றுல் போதாது.

"சட்டத்துக்கு மீறி, தண்டிக்கப்பட்ட சத்தியாக்கிரகிகளையும், பறிமுதல் செய்யப்பட்ட நிலங்களையும் உடனே விடுதலை செய்யவேண்டும் என்று கேட்பது, ஜனங்களின் சுயமரியாதை கொண்ட எந்தப் பிரதிநிதிக்கும் கடமையாகும்.

"பர்டோலியின் சத்தியாக்கிரக சக்தியை உணர்ந்து, அதற்கு ஏற்றுற்போல, வல்லமையுடன் காரியம் செய்ய உங்களால் முடியாவிட்டால், நீங்கள் ஒன்றுமேசெய்யாமலிருந்தால் நல்லது. கௌரவமான ராஜிக்கு நான் தயார்; ஆனுல் கௌரமான ராஜியைக் காணுமல், இந்தப் போராட்டத்தை முடிக்க நான் அவசரப்படவில்லை. எவ்வளவுதூரம் ஜனங்கள் கஷ்டங்களைப் பொறுக்கமுடியுமோ, அதுவரையில் விட்டுத்தான் பார்ப்பேன். அபத்தமான ராஜியைக் காட்டிலும் கீர்த்தி வாய்ந்த தோல்வியை நான் கொள்ளுவேன்.

"மகாபலேசுவரத்துக்கோ, பூனுவுக்கோ, ஓடிவர, நான் ஏன் கவலைப்படவில்லை என்றதன் காரணம் இப்பொழுது உங்களுக்குத் தெரிந்திருக்கும். தவிர்க்க முடியாது என்று நினைத்தாலொழிய, என்னை எங்கேயும் வரக் கூப்பிடவேண்டாம்.

"உங்கள் வல்லபாய்"

இந்தக் கடிதம் ஸர்க்காருக்குக் காண்பிக்கப்பட்டதோ, என்னவோ தெரியாது. ராஜிப் பேச்சு ஒழிந்துபோயிற்று, ரிவினியூ மெம்பர் ஹாட்ச் (பலவான் என்று கருதப்படுபவர்). ரிவினியூக் காரியதரிசி ஸ்மித், ரிவினியூக் கமிஷனர் ஸ்மார்ட், ஸெட்டில்மெண்டுக் கமிஷனர் ஆண்டர்ஸன் இவர்கள் ஒன்று கூடி வேலை பார்க்கும் இந்த சந்தர்ப்பத்தில், ஸர்க்கார் தாங்கள் செய்யும் காரியத்தை யோசித்துப் பார்ப்பார்களோ? அவர்கள் புனராலோசனை செய்ய, இதுவா காலம்?

மேமீ 31உ அரசாங்கத்தார் ஒரு குறிப்பு வெளியிட்டார்கள்:—" இதனுல் பர்டோலித் தாலூகா, வலோட் மகால் பட்டாதார்களுக்கு ஸர்க்கார் அறிவிப்பதாவது:—பட்டாதார்கள் கட்டுப்பாடாக வரி கொடுக்க மழுப்புகிருர்கள். வீடுகளைப் பூட்டிக்கொள்ளுகிருர்கள். மணியக்காரர்களையும் வெட்டியார்களையும் ஜாதிவிலக்குச் செய்வதாகப் பயமுறுத்துகிருர்கள். ஆகையால் ஜப்தி செய்ய முடியவில்லை. ஆகையால், மனது சம்மதமில்லாமல், நிலங்களைப் பறிமுதல் செய்வதென்றும் ஜங்கம சொத்துக்களையும் மாடுகளையும் ஜப்தி செய்வதென்றும் தீர்மானித்து, இதற்கென்று பட்டாணிகளை ஸர்க்கார் தருவித்தார்கள். பட்டாணிகளின் நடத்தையைப் பற்றி, எந்த வகையிலும் குறை சொல்லுவதற் கில்லை. பட்டாதார்களின் நிலம், இனிமேல் ஸர்க்கார் புறம்போக்காக எழுதப்படும். ஏற்கனவே, பறிமுதலாகி விற்கப்பட்ட நிலங்கள் அவர்களுக்குத் திரும்பவும் கிடைக்காது. இதுவரையிலும் 1400 ஏகர் விற்பனையாகிவிட்டது. கூடிய சீக்கிரத்தில், 5000 ஏகரா விற்கப்பட்டுப்போகும். இவைகளை வாங்குவதற்காக சூரட்டு ஜில்லாவிலே பெரும்பாலும் வாசம் செய்யும் ஹிந்து, முஸ்லீம், பர்ஸிகள் தயாராகக் காத்துக்கொண்டிருக்கிருர்கள். இதுவரையில், தாலூகாவின் முழுக் கிஸ்தியில், ஒரு லட்ச ரூ. வசூலாயிருக்கிறது. கிஸ்தியைக் கொடுத்துவிட வேண்டுமென்று, வெகு பேர்கள் ஆத்திரப்படுகிருர்கள். ஆனல் அவர்கள் கிராமக் கட்டுப்பாடு, ஜாதி விலக்கு, அபராதம்—இவைகளுக்குரொம்பவும் பயப்பட்டுக் கொண்டு, கிஸ்தி

கொடுக்காம லிருக்கிறார்கள். ஜூன்மீ 19உக்கு முன்னே அல்லது அன்றைக்கோ, கிஸ்தி செலுத்து பவர்களுக்கு, மாமூல் நாலிலொருபங்கு அபராதம் விதிக்கப்படமாட்டாது.''

இந்த அறிவிப்பைப் பார்த்ததும், ஜனங்கள், "தோத்த கட்சியடோ" என்று வாய்விட்டுச் சொல்ல ஆரம்பித்துவிட்டார்கள். இதுவரையில் அரசாங்கத்தார் கையாண்ட முறைகள் யாவும் பயனற்றுப் போய்விட்டன என்று அந்த அறிவிப்பு, பகிரங்கமாக அரங்கேற்றிவிட வில்லையா? ஒரு அங்குல நிலங்கூடத் தங்கள் கையைவிட்டுப் போகாது என்று மிராசுதார்களும் விவசாயிகளும் நன்றாகத் தெரிந்துகொண்டார்கள்; உண்மை எப்படியோ, அதைப்பற்றிக் கவலை இல்லை. அவர்கள் போகாது என்று திடமாக எண்ணிக்கொண்டார்கள்.

இந்த அறிவிப்பு சம்பந்தமாக, ஒரு சிறிய கதை சரித்திரத்தில் உண்டு. அது போயர் யுத்தத்தில் நடைபெற்றதாகும். 1901ஸூத்தில் இங்கிலீஷ்காரர்களுக்கும் தென்னாப்பிரிக்கா போயர்களுக்கும் நடந்த போரில் நிகழ்ந்த சம்பவம். இங்கிலீஷ் சேனைகளுக்கு அதிபதி கிச்சினர் பிரபு. அவர் இந்திய சேனைகளுக்குக்கூட ஐந்து வருஷம் சேனாதிபதியாக விருந்தவர். போயர் யுத்தம் நடைபெறுங் காலத்தில், வாராவாரம் "புல்லெட்டின்கள்" (அறிவிப்புகள்) விளம்பர சபையால் வெளிவரும். "இந்த வாரம் 1200 போயர்கள் கைதியானார்கள்; 2000 துப்பாக்கிகள் போயர்களிடமிருந்து எடுத்துக்கொள்ளப்பட்டன" என்று வாராவாரம் இப்படியே, புல்லெட்டின்கள் வெளிவந்துகொண்டிருந்தன. இந்தப் புரளியை லாய்ட் ஜ்யார்ஜ் அவர்களால் பொறுக்க முடியவில்லை. யுத்த மந்திரியை, "போரில் அமர்ந்திருக்கும் போயர்கள் எத்தனை பேர்கள்" என்று லாய்ட் ஜ்யார்ஜ் மேபீ ஒரு கேள்வி கேட்டார். 15,000-த்திலிருந்து 20,000 என்று யுத்த மந்திரி பதில் சொன்னார். அக்டோபர்மீ பார்லிமெண்டு மகாசபை திடுக்கிடும்படியாக லாய்ட் ஜ்யார்ஜ் ஒரு பிரேரணை கொண்டுவந்தார். "வாராவாரம்வெளிவரும்புல்லெட்டின்களைக் கணக்குப்போட்டுப் பார்த்ததிலிருந்து, போயர்களின் பூண்டே அற்றுப்போ

யிருக்கவேண்டும். ஆகையால் சமாதானம் ஏற்பட்டுவிட்டது. கல்பனை எதிரிகளோடு, வாரம் இருபது லட்சம் பவுன் செலவு செய்துகொண்டு, கிச்சினர் பிரபு சண்டை செய்ய வேண்டியதில்லை” என்று லாய்ட் ஜ்யார்ஜ் சொன்னார். இதைக் கேட்டதும், பார்லிமெண்டு சபையில் ஒரே பரபரப்பும், துடிப்பும், சிரிப்பும்.

இந்தக் கதையை ஆதாரமாக வைத்துக்கொண்டு, வல்லபாய் சொன்னதாவது:—“1400 ஏகர் நிலத்தை விற்றுவிட்டதாகவும் 5000 ஏகர் பூமியை விற்கப்போவதாகவும் லட்ச ரூ. கிஸ்தி வசூல் செய்துவிட்டதாகவும் அரசாங்கத்தார் சொல்லுகிறார்கள் கிஸ்திக்கு 123 மடங்கு கொண்டது நிலத்தின் கிரயம் என்று ஸெட்டில்மெண்டுக் கமிஷனர் சொல்லுகிறார். ஆகையினால், கிஸ்தியைக் காட்டிலும் எத்தனையோ பங்கு பணம், இந்தப் பறிமுதல் விற்பனை மூலமாய் ஸர்க்கார் அடைந்திருக்கவேண்டும். அல்லது சொற்பத் தொகைக்கு, இந்த நிலங்களை அவர்கள் விற்றிருக்கவேண்டும். முதலில் சொன்னது உண்மையானால், ஸர்க்கார்தான் அதிகப்படியான பணம் ஜனங்களுக்குக் கொடுக்கவேண்டி யிருக்கும். சொற்பத் தொகைக்கு விற்றிருந்தால், அந்தக் கிரயத்துக்குத் தக்கபடி, கிஸ்தியை ஸெட்டில்மெண்டில் நிர்மாணிக்கவேண்டும்.”

இந்தத் தர்க்க முடிவை யார்தான் அசைக்கமுடியும்? “பட்டாணிகளைப்போல நடந்துகொண்ட அரசாங்கம், அவர்களைப் புகழாமல் என்ன செய்யும்” என்று ஸர்தார் கேலி செய்தார்.

யாரோ நிலங்களை வாங்கிவிட்டதாக, அரசாங்கத்தார் அறிவித்தார்களே, அவர்களைப் பார்த்துச் சில வார்த்தைகள் ஸர்தார் சொன்னார்:—

“இந்த நிலங்கள் உங்களுக்கு, கெட்டி மாமிசம்போல, ஒரு நாளும் ஜரிக்காது. பார்ஸி சகோதரர்கள் ஏமாந்து, இந்த நிலங்களை விலைக்கு வாங்கவேண்டாம். ஒரு குழி நிலத்தை அவர்கள் சாகுபடி செய்வதற்கு, பல பார்ஸி சத்தி

யாக்கிரக சகோதர சகோதரிகளை, உடம்புகளில் குண்டுக ளால் துளைத்து, அவர்களுடைய எலும்புகளை எருவாக ஆக் கிய பின்னர்த்தான், அவர்களின் சாகுபடி எண்ணம் நிறை வேறலாம். ஹிந்து முஸ்லீம் விலைகாரர்களும் அப்படியேதான் செய்யவேண்டி வரும் என்று நான் எச்சரிக்கை செய்கிறேன்.

"ஸர்க்கார் ஏன் வீணாக பலப் பரீட்சைப் பூச்சாண்டி காண்பிக்கிறார்கள்? வெறும் பூச்சாண்டி காண்பித்து, ஜனங் களின் உள்ளத்தை ஒடிக்க முடியாது. அவர்கள் பட்டா ளத்தைக் கொண்டுவந்து, ஒரே மூச்சில் காரியத்தைச் சாதித் துக் கொள்ளட்டும். சேனைக்காக எத்தனையோ கோடிப் பணம் கொடுக்கிறோம். அந்தச் சேனையையாவது கண்ணால் ஜனங்கள் பார்க்கட்டுமே! பீரங்கியின் கர்ச்சனையையும் துப் பாக்கியின் சங்கீதத்தையும் ஒருதடவையாவது ஜனங்கள் கேட்கட்டுமே! என்றைக்கு, விவசாயிகள் தங்கள் காதுப் பக்கம் குண்டு பாய்ந்து ஓடுவதைக் கேட்கிறார்களோ, அன் றைக்கே அவர்கள் ஆண் பிள்ளைகள் ஆகிவிடுவார்கள்; அவர் களுக்கு நல்ல சந்ததியும் உண்டாகும்."

அதிகாரிகளின் ரகஸியச் சூழ்ச்சிகளைத் தடுப்பதற்காக, கிராமக் கட்டுப்பாட்டை, ஜாதிக்கட்டுப்பாட்டை, பிரயோகம் செய்யாதபடிக்கு, வேறு வழியில்லையே என்று ஸர்தார் தம் தாபத்தைத் தெரிவித்துக்கொண்டார். மீட்டிங் தவறாமல், ஸர்க்கார் பட்டாணிகளை உபயோகப்படுத்திக்கொண்டதற் காக, அரசாங்கத்தாரை ஸர்தார் கண்டித்தார். ஸ்திரீகள், பெண்கள்—இவர்களிடமிருந்து வாக்குமூலங்கள் வாங்கி, பட்டாணிகள் செய்த அட்டூழியங்களைப் பகிரங்கப்படுத் தினார். நிலத்தை வாங்க விலைகாரர்கள் வரட்டுமே என்று ஸர்தார் உறுமினார்.

எந்தெந்த நிலங்கள் விற்கப்படப்போகின்றன என்று அறிவிக்கப்பட்டதோ, அந்த நிலங்களில் குடிசைகளைக் கட் டிக்கொண்டு, மாது மிது பென் பெடிட், ஸ்ரீ பக்தி லட்சுமி பாய் (தர்பார் சாகேபின் மனைவி), தமது பெண் மணிபென், இவர்கள் மூவரும் குடியிருக்கும்படியாக, ஸர்தார் ஏற்பாடு

செய்தார். ஸர்க்காரின் பயமுறுத்தல்களுக்குப் பதில் சொல்லும் முகமாக என்ன செய்யவேண்டுமோ, அவைகளைப் பொதுஜனங்கள் பலவகைகளிலும் செய்தார்கள்.

அரசாங்கத்தாரின் அறிவிப்பின் மூலமாய், பர்டோலி ப்ரசனை அகில இந்திய ப்ரசனையாகி விட்டது. அஸெம்பிளிக்கு (இந்திய சட்டசபைக்கு)த் தலைவராயிருந்த ஸ்ரீ விட்டல் பாய் படேல் அவர்கள் (ஸர்தாரின் அண்ணன்) பர்டோலிப் போராட்டத்தை, கூர்ந்து கவனித்து வந்தார். இந்தக் கட்டத்திலே (சமயத்திலே), தமது அனுதாபத்தை உருவாகக் காண்பிக்கவேண்டும் என்று ஆவல்கொண்டு, தமக்குத் தெரிந்த விஷயங்களை வைஸிராய் இர்வின் பிரபுவுக்குத் தெரிவித்து, நிலைமையில் சீர்திருத்தம் ஏற்படாவிடில் தாம் இன்னது செய்யப்போவதாகவும் வைஸிராயிடம் தெளிவாகச் சொல்லிவிட்டார்.

பம்பாய் கவர்ன்மெண்டு அறிவிப்பைப் பார்த்தவுடனே, விட்டல்பாய், காந்திஜிக்கு, பர்டோலி நிதிக்காக ரூ. 1,000 அனுப்பிவிட்டு, போராட்டம் முடிகிறவரையில் மாதம் ரூ. 1,000 அனுப்புவதாகவும் தெரிவித்துக் கொண்டார். காந்திஜி, நிதிக்காக, தேசமுழுதும் மனுப்பண்ணிக் கொண்டாரல்லவா ?

ஸ்ரீ விட்டல்பாய் காந்திஜிக்கு எழுதிய கடிதம் சரித்திரத்தில் வரவேண்டிய முதல்தர தஸ்தாவேஜி யாகும். சட்டசபைத்தலைவர் இம்மாதிரி செய்திருக்கக்கூடாது என்று அதிகாரிகளில் சிலர் குறைகூறினார்கள். அரசாங்கத்தின் அதிகாரத்துக்குப் பங்கம் விளைக்கக் கூடிய ஒரு இயக்கத்தில், சட்டசபைத் தலைவருக்கு எவ்வாறு அனுதாபம் உண்டாகலாம் என்பது அவர்களுடைய கட்சி. ஆனால் தேசமுழுதும், இந்தக் கடிதத்தைக் கண்டு, ஆனந்தக் கூத்தாடி, பரவசமடைந்து, விட்டல்பாய்க்கு வாழ்த்துக்கூறி, அவரைப் போல ஏனைய அதிகாரிகளும் நடந்து கொள்ள வேண்டும் என்று இதம் கூறிற்று. கடிதத்தின் சாரமான பகுதி :—

" நான் போராட்டத்தைக் கவனித்து வருகிறேன். நடு

நிலைமை கொண்ட கமிட்டியின் விசாரணை வேண்டுமென்று பர்டோலி ஜனங்கள் கேட்பது ரொம்பவும் நியாயம் என்று என் மனதில் பட்டுவிட்டது. தங்கள் குறைகளுக்கு பரிகாரம் தேடிக் கொள்ளுவதற்காக, சட்டவரம்புக் குட்பட்ட எல்லா உபாயங்களையும் அவர்கள் உபயோகப் படுத்திப் பார்த்து விட்டார்கள் என்பதையும் நான் நம்புகிறேன். இஸ்தியைப் பற்றித்தான் ஜனங்களுக்கும் ஸர்க்காருக்கும் தகராறு. இதை வசூலிப்பதில், ஸர்க்கார் சில கடுமையான அடக்கு முறைகளைக் கையாண்டதைக் கண்டு எனக்கு ஆத்திரமும் வருத்தமும். அவைகள், சட்டத்துக்கும், ஒழுங்குக்கும் நாகரிகத்துக்கும் மீறியவை என்று நான் கருதுகிறேன். வடபிரிவுக் கமிஷனர், அதிகாரச் செருக்கோடு எழுதிய கடிதம் புண்ணில் கோல்கொண்டு குத்தியது போலாகிவிட்டது.

"நிலைமை இவ்வாறிருக்கையில், நான் சும்மா யிருக்க முடியாது; மௌனமா யிருக்க முடியாது. தாலூகா வாசிகளிடம் எனக்கு இருக்கும் ஆழ்ந்த அனுதாபத்தையும், அடக்குமுறை, கமிஷனரின் கடிதம் இவைகளில் எனக்கு இருக்கும் வெறுப்பையும், இந்த நிமிஷத்தில் வேறு வகையில் காண்பிக்க என்னால் முடியவில்லை. எனவே, பர்டோலிப் போராட்டத்துக்காகத் திரட்டப்படும் நிதிக்கு ரூ. 1000 அனுப்பி யிருக்கிறேன்; போராட்டம் முடியும் வரையில் மாதா மாதம் இதே தொகையை அனுப்பி வருவதாகவும் என் உத்தேசம்.

"இந்த ஸ்தானத்துக்கு என்னை அனுப்பி வைத்தவர்களிடம் கடிதப் போக்குவரத்து வைத்துக்கொண்டு, இப்பொழுது நான் செய்ததைவிட, பலன் தரக்கூடிய வேறு நடவடிக்கையை நான் எடுத்துக் கொள்ளவேண்டும் என்று எனக்குத் தோன்றினால், அதைச் செய்யவும் நான் பின்வாங்க மாட்டேன் என்பதையும் தாங்கள் அறிவீர்களாக!"

காந்திஜிக்கு விட்டல்பாய் எழுதிய கடிதத்தின் இந்தப் பகுதியைப் படித்தவர்களும் கேட்டவர்களும் உள்ளம் பூரிப்படையாமலும் இருப்பார்களா, இருக்க முடியுமா? இந்தக்

டிதத்தின் மூலமாக, "ஆரோக்கிய மற்ற, அடிமைப் ரம்பரையை (அலெய்ப்ளித் தலைவர்) துணைத்து எறிந்து ிட்டார்" என்று காந்திஜி விட்டல்பாய் படேலை வெகு ாகப் புகழ்ந்தார்.

இதுவரையிலும் அதிகாரிகளின் பழக்கம் என்ன? னங்கள் அரசாங்கத்தோடு போராடுகிற காலத்தில், அவர் ளுடைய கட்சி சரியாக இருந்தபோதிலும், அதிகாரிகள் நுதாபம் காட்டாமல் மௌனமாய் இருப்பதுதான் வழக் ம். அந்த "அடிமைப் பரம்பரை"யை விட்டல்பாய் ணைத்து எறிந்துவிட்டார். அவரால் அப்படி என்னமாய்ச் செய்யமுடிந்தது? தமது உத்தியோகத்தை, அதன் சம்பளத் க்காக, அதன் பெருமைக்காக, மதிக்கவில்லை. அதை ஒரு தர்ம உடைமையாக" அவர் கருதின படியாலே தான், அவ ால், பகிரங்கமாக, ஜனங்களிடம் அனுதாபம் காண்பிக்க முடிந்தது. விட்டல்பாய் இவ்வாறு செய்ததால், இவர் நிலை மயிலிருந்த ஏனையோருக்கு, ரொம்ப அசௌகரியம் உண் ாயிற்று. அதற்காக விட்டல்பாய் என்ன செய்கிறது?

விட்டல்பாய் எழுதிய இந்தக் கடிதத்தினுல், ஸ்ரீ நாரி ான், புலாபாய் தேசாய், நாரண்தாஸ் பேச்சார், ஜயராம் ாஸ் டௌலட்ராம்—இந்த நால்வரும் தங்கள் பம்பாய்ச் ட்டசபைப் பதவிகளை ராஜிநாமாச் செய்தார்கள். ஆனல் றிய பதவிகளில் இருந்தவர்கள் தங்கள் கடமையைக் கண்டு ண்விழித்துக் கொண்ட காட்சி தேவர்கள் பார்க்கத் தகுந்த ாகும். 63 கிராம மணியக்காரர்களும் 11 கணக்கர்களும் தாலூகாவில்) தங்கள் வேலையை ராஜிநாமாச் செய்தார்கள். இவர்களுடைய தியாகத்தை அளவிட்டுச் சொல்ல முடியாது. 921-ம் வருஷத்தில், சுயராஜ்யம் ஒரு வருஷத்துக்குள் வரப் ாகிறது என்ற ஆசையும் பிரமையும் இருந்த சமயத்தில் ட, ஒரு கணக்குப் பிள்ளையேனும் தன் வேலையை ராஜி ாமாச் செய்ய முன் வரவில்லை. பெரிய அதிகாரிகள் தங்கள் வேலையை விட்டுவிடலாம். ஆனல் இவர்களால் முடியாது. துவும் 20, 25 வருஷமாகப் பார்த்துவந்த இந்தக் கணக்கு

வேலையை அவர்கள் விட்டுவிடுவதென்றால், ஜனங்கள் எவ்வளவு கஷ்டம் அனுபவித்து வருவதை இவர்கள் பார்த்து, தூய்மை பெற்றிருக்கவேண்டும்!

தாலூகாவுக்கு வெளியே உண்டான உற்சாகத்தைச் சொல்லிமுடியாது. குஜராத் முழுதும் ஜில்லா மகாநாடுகள்! அவைகளில் தலைமை வகிக்க, வேண்டுமென்றே, "வெளியூர்ப் பேர்வழிகளை" வரவழைத்தார்கள்! கேடா மகாநாட்டுக்குத் தலைவர் ஸ்ரீ காடில்கார்; ப்ரோச்சுக்கு ஸ்ரீ நாரிமன்; ஆமதாபாத்தில் ஸ்ரீ என். ஸி. கேல்கார். இந்த ஒவ்வொரு மகாநாட்டிலும் பேச, வல்லபாய்க்கு அழைப்பு. சர்க்காரின் சட்ட மீறிய தன்மையை அவர் கருணையில்லாமல் எடுத்துக் காண்பித்துவிட்டு, "காலா காலத்தில் நியாயம் வழங்கப்படாவிடில், இந்தக் கிளர்ச்சி குஜராத் முழுதும் பரவும்" என்று உறுதியாகச் சொல்லிவிட்டார். மகாநாடுகளில் ஏராளக் கூட்டம். ஒவ்வொரு மகாநாட்டிலும் பர்டோலி நிதிக்காக, ஆயிரக்கணக்கில் ரூ. வசூல்.

ஜுன்மீ 12உயை, பர்டோலி தினமாக, தேசமுழுதும் கொண்டாடவேண்டும் என்று ஜயராம் தாஸ், சூரட் மகாநாட்டில் சொன்ன யோசனையை, காந்திஜி ஆதரித்தார். காங்கிரஸ் தலைவரும் ஆதரிக்கவே, தேசத்திலே முக்கியமான இடங்களிலும், குஜராத்திலே கிராமங்கள் உள்பட எல்லா இடங்களிலும், ஜுன்மீ 12உ ஊர்வலம், கடையடைப்பு, வசூல், மகாநாடு முதலிய விமரிசைகளுடன் கொண்டாடப்பட்டது. லாலா லஜபதி ராய்—அவர் கீர்த்தி நீடூழி இருக்குமாக!—தமக்காக ரூ. 500-ம், தமது நண்பர்களுக்காக ரூ. 1500-ம் தந்தி மூலமாக, பர்டோலி தினத்தன்று அனுப்பி, "நான் அங்கேவந்து தொண்டு செய்யக்கூடாதா? பர்டோலிக் குள்ளாகவே இயக்கத்தை அடைத்து வைத்துக் கொள்ள வேண்டுமா" என்று தந்திமூலம் கேட்டார்.

பம்பாய் நகர் யுவர்கள் செய்த தொண்டு அபாரம். அவர்கள் வீடுவீடாய்ப் போய்ப் பணவசூல் செய்தார்கள். கொட்டுகிற மழையிலே, வெற்றிகரமாக ஊர்வலம் நடத்தி

னார்கள். இந்தக் கூட்டத்தின் வழியாக, ஸர்தாரின் மோட்டார்க்கார் போய்க் கொண்டிருக்கையில், காரில், பணம் வந்து விழுந்துகொண்டே யிருந்தது. எம்பயர் நாடகக் கொட்டகையில் மீட்டிங். அங்கே ஸர்தாருக்கு, பல முடிப்புகளாக ரூ. 14,000 கொடுத்தார்கள். மாணவர்களைப் பார்த்து ஸர்தார் சொல்லுகிறார்:—"நீங்கள் இங்கே என்னைக் கௌரவித்ததற்கு வந்தனம்; ஆனால் பர்டோலிக்குப் போய், பர்டோலி ஸர்வகலாசாலையில், உங்களுடைய ஆரம்பப் பாடங்களை கற்றுக் கொள்ளுங்கள்". மாணவர்கள் பரவசமடைந்துபோனார்கள்.

சத்தியாக்கிரக நிதிக்குப் பணம் சேர்ந்ததைப்போல, நம் நாட்டுச் சரித்திரத்தில், வேறு எதற்கும் சேர்ந்ததாகச் சொல்லமுடியாது. "நவ ஜீவன்," "யங் இந்தியா" ஆபீசுகளிலும் பர்டோலி சத்தியாக்கிரக ஆசிரமத்திலும் செக்குகளும் மணியார்டர்களும் தினம் தினம் ஏராளமாய் வந்துகொண்டிருந்தன. நாட்டின் மூலைமுடுக்குகளி லிருந்தும் பணம் வந்தது. ப்ரான்ஸ், பெல்ஜியம், ஜப்பான், சீனா, நியூஸீலந்து, மலேயா, பிஜி முதலிய அந்நிய நாடுகளிலிருந்தும் பணம் வந்தது.

ஆமதாபாத் தொழிற்சங்கத்தார் ரூ. 1300 கொடுத்தார்கள். குருகுலங்களில் படிக்கும் மாணவர்களும் மாணவிகளும் பட்டினிகிடந்தோ, நெய் பால் சர்க்கரை இவைகளைச் சிறிதுகாலம் தள்ளிவைத்தோ அல்லது கையால் உழைத்தோ பணம் மிச்சப்படுத்தி, சேர்ந்த தொகையை பர்டோலி நிதிக்கு அனுப்பி வைத்தார்கள். ஸ்திரீகள் தனிக்கூட்டம் போட்டுப் பண வசூல் செய்தார்கள். எந்த இயக்கத்திலும் கலந்துகொள்ளாத படுதா முஸ்லீம் ஸ்திரீகளின் உற்சாகத்தைப் பார்க்கவேண்டுமே!

இந்தியாவிலே மூன்று பேர்கள் தான் உயர்ந்த ரேட்டுப் பிச்சைக்காரர்கள். காந்திஜி, மாளவியாஜி, மணிலால் கொத்தாரி. மணிலால் கொத்தாரி கேட்டதை யாருமே மறுக்க முடியாது. யார் எதைக் கொடுத்தாலும் கொத்தாரி வாங்கிக் கொள்ளுவார். எந்த இயக்கத்துக்கும் பணம் கொடுத்து

வழக்கமில்லாத பாரிஸ்டர்கள், வக்கீல்களிடமிருந்து எப்படியோ கொத்தாரி பணம் பறித்து விடுவார். "உங்களால் கணிசமான தொகை கொடுக்க முடியவில்லையா? நல்லது. உங்கள் காரைக் கொடுத்தால் போகிறது' என்று கொத்தாரி குழைந்து குழைந்து பேசுவார். புயலை யொத்த இந்தப் போராட்டத்துக்கு, கொத்தாரி மூலமாக, நான்குமோட்டார்க் கார்கள் கிடைத்தன. மே மாதத்தில் நிதிக்காக மனுச் செய்து கொள்ளப்பட்டது. அந்த மாதத்தில் வசூல் ரூ. 10000; ஜுன் மாதத்தில் இரண்டு லட்சம் ரூபா; ஜுலை மாத மத்தியில் ரூ. மூன்று லட்சம்.

ஜுன் மாதம் முடியும்போது, பறிமுதல் நோட்டீஸ்கள் 5000 எல்லைக் கோடிக்கு வந்து விட்டன. ஆனால் இந்த நோட்டீஸ்களால் பயன் ஏற்படும் என்ற நம்பிக்கையை அரசாங்கத்தார் இழந்து வந்தார்கள். அவர்களுக்கு நம்பிக்கையிருந்த வேறு உபாயங்கள் நாடினார்கள். பர்டோலியில் இஸ்மெயில் காபா என்று ஒரு முஸ்லீம் சத்தியாக்கிரகி. அவர் ரூ. 1200 கிஸ்தி செலுத்த வேண்டும். 1200 ரூ. கிஸ்தி செலுத்த வேண்டிய நிலங்களும் ரூ. 50,000 பெறுமானவை. இந்த நிலங்களும் 26000 ரூ. பெறுமான வேறு நிலங்களும் விற்பனைக்கு வரும் என்று அரசாங்கத்தார் நோட்டீஸ் போட்டார்கள். எதற்காக இந்த வேலை! காபாவின் நெஞ்சுத் திடத்தை முறித்துவிட வேண்டும்; காபா உடைந்து போவாராகில், சில்லறை முஸ்லீம் மிராசுதார்கள் சங்கதி "ஓடுகிற ஓட்டம்", அதைப்பற்றி அதிகமாகக் கவலை கொள்ள வேண்டியதில்லை. ஆனால், ஸர்காரின் இந்த உபாயமும் வீணாய்ப் போயிற்று.

ஸேட் டொராப்ஜி என்ற பார்ஸி சாராயக் கடைக்காரர் சங்கதிதான் ஏற்கனவே தெரிந்தது. அவருடைய ரூ. 2000 சாராயத்தை ஜப்தி செய்து, அதை 96 ரூபாய்க்கு விற்றார்கள். அவருடைய ரூ. 30000 பெறுமான நிலத்துக்குப் பறிமுதல் நோட்டீஸ். என்றாலும் ஸேட்ஜியின் "பிடிவாதம் ஒடியவில்லை". அந்தப் பிடிவாதத்தை ஒடிப்பதற்கு,

கலால் இலாகாவின் மூலமாக யுக்தி செய்தார்கள். "ஏப்ரல்மீ 25உக்குப் பின், சாராயம் விற்காமல், நீர் கடையை மூடி வைத்திருப்பதற்காக, உம்மை ஏன் 'பிராஸிகூஷன்' செய்யக்கூடாது" என்று அவர்பேரில், கலால் இலாகா சூபிரண்டு நோட்டீஸ் பிறப்பித்தார். இதற்கும், ஸேட்ஜி அசையவில்லை. 'கடையை நடத்துவதற்கு என்னிடம் முதல் கிடையாது. கடையை மூடினதற்கு நான் காரணம் காட்டுவதைவிட, என்னை அநியாயமாய்த் தொந்திரை செய்யும் அரசாங்கத்தின் பேரில் நான் ஏன் தொடரக்கூடாது என்பதற்குத் தாங்கள் காரணம் காண்பிக்க முடியுமா" என்று ஸேட்ஜி, கலால் சூப்பிரண்டுக்குக் கடிதம் எழுதியனுப்பினர்.

சத்தியாக்கிரகக் கேஸ்களை விசாரிக்க, புதிய மாஜிஸ்டிரேட், பர்டோலியில் நியமித்தார்களே, அவர் உல்லாசமாய்க் கேஸ்களை விசாரித்து, தொண்டர்களுக்குத் தண்டனை கொடுத்துவந்தார். வேடிக்கை கேஸ் ஒன்று. ஜூன் மாத ஆரம்பத்திலே, கலெக்டர் பர்டோலிக்கு வந்தார். ஸர்க்கார் பங்களாவில் அல்ல, அதன் பக்கத்திலே கூட அல்ல, பங்களா கேட்டுக்கு எதிரே பொதுஜன ரஸ்தாவில் ஒரு வாலண்டியர் உட்கார்ந்து கொண்டிருந்ததை, கலெக்டர் பார்த்தார். தொண்டர் உட்கார்ந்துகொண் டிருந்தது, கலெக்டருக்குப் பிடிக்கவில்லை. வருகிற போகிற உத்தியோகஸ்தர்களின் நடவடிக்கைகளைக் கவனிப்பது அந்த வாலண்டியரின் வேலை. "இங்கே உட்காராதே. எழுந்திரு. போ" என்றான் ஒரு போலீஸ் கான்ஸ்டேபிள். உத்தரவு எழுத்துமூலம் வேண்டும் என்றான் தொண்டன். இந்தத் தகவல் கலெக்டர் காதுக்குப் போய்ச் சேர்ந்தது. தம்முடைய சன்னிதானத்துக்குக் கொண்டுவரச் சொன்னார் கலெக்டர் அந்த வாலண்டியரை. "நடவடிக்கை எடுக்க வேண்டும்" என்று, ஸப் இன்ஸ்பெக்டரிடம் தொண்டரை ஒப்படைத்தார். எச்சரிக்கை செய்து, அந்த வாலண்டியர் விடப்பட்டார்.

வாலண்டியரைக் கலெக்டர் சன்னிதானத்துக்கு இட்டுக் கொண்டுபோன காலத்தில், அவனுடைய இடம் காலியாக

வில்லை. அந்த இடத்தில் இன்னொரு வாலண்டியர் வந்து உட்கார்ந்து கொண்டான். இன்னொரு வாலண்டியர் பக்கத்தில் நின்றுகொண் டிருந்தான். இவர்களிருவரையும் கைது செய்தார்கள். எச்சரிக்கையுடன் வெளிவந்த தொண்டன் சகன்லால், மீண்டும் அந்த இடத்தில்போய் உட்காரவே, அவனும் அரெஸ்ட் செய்யப்பட்டான். இவர்கள் கைது செய்யப்பட்ட போலீஸ் ஆக்ட் பிரிவு, கச்சேரிகளிலே இப்படித் திரிந்து கொண்டு சேஷ்டைகள் செய்ய என்னும் காலிகளுக்காக, சோதாக்களுக்காக, ஏற்பட்ட பிரிவாகும். கலெக்டரைத் தலைநிமிர்ந்து பார்க்கக்கூடிய தைரியம் இந்த இளைஞர்களிடம் இருந்த குற்றத்துக்காக, இவர்களைச் சோதாக்களுடன் சேர்த்தார்கள் போலும்!

விசாரணை வெறும் "பார்ஸ்". ராத்திரிக் கச்சேரி. ராத்திரிக் கச்சேரி, போலீஸ் ஸப் இன்ஸ்பெக்டருக்கு வழக்கமில்லை. நிர்ப்பந்தத்துக்கு என்ன செய்வது? எப்படியோ சாட்சிகளைத் தேடிப்பிடித்தார். சாட்சிகளில் ஒருவர் "முழுக் குடி"; பக்கத்திலே கூட உட்கார முடியாது. அவ்வளவு வாசனை! அவருடைய சாட்சியம் எப்படி இருந்திருக்கும் என்று எவரும் கற்பனை செய்து கொள்ளலாம்.

"கலெக்டர் காம்ப் செய்து கொண்டிருக்கையில், அவரைக் காரியமாகப் போய்ப் பார்க்கிறவர்களை இந்த வாலண்டியர்கள் தடுத்தார்கள்" என்று மாஜிஸ்டிரேட்டின் குற்றச் சாட்டு. தொண்டர்களுக்கு ரூபா 50 அபராதம் அல்லது இரண்டு மாதம் வெறுங்காவல். காக்காய் விரும்புவது வேப்பம்பழம்; குரங்கு ஆசைப்படுவது வாழைப்பழம்; குழந்தைகள் வேண்டுவது கல்கண்டு; தொண்டர்கள் காதலிப்பது சிறைவாசம். அடுத்தநாள், அந்தப் பழைய இடத்துக்கு தொண்டர் ஸ்தானத்துக்கு, பையன்கள் கூட்டமாக வந்து விட்டார்கள். ஆனால் அவர்களின் பேரில், யாதொரு நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளப் படவில்லை.

அடுத்தநாள் வங்கனேர் கேஸ் தீர்ப்பு. 19 பிரமுகர்கள் பேரில், கலகம் முதலியன செய்ததாகக் குற்றச் சாட்டு

டபுடி கலெக்டர் சாமான்களை ஏற்றிக் கொண்டுபோன ன்று வண்டிகளை இவர்கள் வழியிலே மறித்து, கலகம் செய்து, வண்டிக்காரர்களை மேலே வண்டிகளை ஓட்டாமல் டுத்ததாக, இந்த 19 பேர்களின் பேரிலும் கேஸ். இருட்டு ாத்திரியில் குருட்டு வெளிச்ச லாந்தரைக் கொண்டு, இவர் ளைப் பார்த்ததாகச் சாட்சியம். மாஜிஸ்டிரேட், எட்டுபேர்கள் பரில் கேஸ் இல்லை என்று தள்ளிவிட்டார். மற்ற 11 பேர் ளுக்கும் ஒரு பிரிவுப்படி 6 மாதக் கடுங்காவல், இன்னொரு ரிவுப்படி 1 மாதம் வெறுங்காவல். இரண்டையும் ஒன்ருகச் சர்த்து அனுபவிக்கிறது என்று தீர்ப்பு. அவமானமும் பய மம் உண்டாக்க, இவர்களை ஜோடி ஜோடியாக விலங்கு பாட்டு, இரண்டு இரண்டு பேராய்க் கட்டி பர்டோலி ஸ்டே ஷனுக்கு நடத்தி அழைத்துச் சென்ருர்கள்.

ஆனல் ஜனங்கள் இவைகளைக் கண்டு நடுங்காமல், நகைக்க ஆரம்பித்துவிட்டார்கள். விலங்கு போட்ட கைதிகள் கேலி செய்தும் சிரித்துக் கொண்டும் நடந்தார்கள். "பாதகமில்லை; இந்த விலங்குகள் கைக்கடியாரத்தைக்காட்டிலும் உயர்த்தியா ல்லை!" என்று கேலி செய்தார்கள். உடனே ஜனங்களுக்கு ற்சாகம். ரயில் பிளாட்பாரத்தைவிட்டுப் போகிற வரை லும், ஒரே வந்தே மாதர கோஷந்தான்! "ஜே" கூப்பாடு. ாந்த வேதனையையும் சிரித்து ஜரித்துக்கொள்ள வேண்டும் என்ற பாடத்தை, நாள் தவருமல், ஸர்தார் போதித்து வந்தார். ஒரு இடத்திலே, ஸர்தார், மிகவும் உருக்கமாக, ஒரு மணி நேரத்துக்கு மேல் பேசிக்கொண்டிருக்கையில், ஒரு வர் எழுந்திருந்து, "மணியக்காரர் இன்னர், தாசில்தாருக்கும் அவரைச் சேர்ந்தவர்களுக்கும் 'டீ' கொடுக்கும்படியாயிற்று" என்று சொன்னர். அதெப்படி என்று கேட்டார் ஸர்தார். வயோதிகரான மணியக்காரர், முன்வந்து, "அவர்கள் என் ஜன்னல் பக்கம் வந்து, கதவைத் திறக்கும்படி கெஞ்சினர்கள். நான் உங்களை நம்பமுடியாது என்றேன். நாங்கள் ஒன்றை யும் ஜப்தி செய்யவில்லை என்று திரும்பத்திரும்ப உறுதி சொல்லி, எங்களுக்கு வேண்டியதெல்லாம் ஒரு கோப்பை டீ

தான் என்றார்கள். ஆகையினால், நான் கதவைத் திறந்து அவர்களுக்கு டீ கொடுத்துவிட்டு, அனுப்பி விட்டேன்" என்றார்.

பெரியவர் கதையை முடித்ததும், இன்னொரு குடியானவர் படபடத்து எழுந்திருந்து, "வல்லபாய் சாகேப்! இந்தச் சங்கதிகளுக்கு நாம் இடங்கொடுக்கக்கூடாது, அவர்கள் உறுதி சொன்னதற்காக இவர் அவர்களுக்கு டீ கொடுக்கவில்லை. இவருக்குத் தாசில்தாரிடம் பயம். நாம் கற்றுக் கொள்ளவேண்டிய தெல்லாம் என்ன? பயத்தைத் தொலைக்கத்தான்" என்றார். வல்லபாய் விழுந்து விழுந்து சிரித்தார். மறுபடியும் விக்கிரமாதித்தன் தீர்ப்பு.

"நல்லது! அவர்கள், உங்களை டீ வேண்டு மென்று கெஞ்சினால். அந்த அற்பத்தைக் கூடத் தரமாட்டேன் என்று சொல்லுவது அழகாயிராது. ஆனால், இவர்கள் எல்லோரும் ஆபத்தான பேர்வழிகள்! உங்கள் பாலிலே ஈயோ, புழுவோ கிடந்தது. என்று வைத்துக்கொள்ளுங்கள், உங்களுக்குத் தெரியாமலே, அந்தப் பாலிலே டீயைக் கலந்துகொடுக்க, அதனாலே ஏதேனும் விபரீதம் நேர்ந்தால், என்ன ஆகும் என்று உங்களுக்குத் தெரியுமா? நீங்கள் தான் ஜவாப்தாரி யாவீர்கள். ஆகையினால், எவ்வளவு வரையில், அவர்களிடம் கிட்ட நெருங்காம லிருக்கிறீர்களோ, அவ்வளவுவரையில் உங்களுக்கு க்ஷேமம்" என்று வல்லபாய் பேசியதைக் கேட்டு, எல்லோரும் குலுங்கச் சிரித்தார்கள். 'டீ' சம்பவம், எல்லாருக்கும் மறந்துபோய்விட்டது.

ஸர்தாரைக் கைது செய்யப் போகிறார்கள் என்று பலமான வதந்தி. "தங்களை அரெஸ்டு செய்வார்களா" என்று கூட்டத்தில் ஒருவர் அவரைக் கேட்டார். "என்னை எதற்காகக் கைது செய்கிறது? அதற்கு சந்தர்ப்பமே யில்லை. எருமை மாட்டை ஜப்தி செய்து விற்றாலாவது, கொஞ்சம ரூபாய் கிடைக்கும், என்னை ஜப்தி செய்து, விற்றால், என்ன கிடைக்கும்? ஒன்றுமே கிடைக்காதே" என்று ஸர்தார் கேலி செய்தார்.

கடைசியாக வந்த ஸர்க்கார் அறிவிப்புக்குப் பின்னர் மகாதேவ தேசாய், கிராமவாசி ஒருவரைச் சந்தித்தார்.

தேசாய்:—சமீபத்தில் வெளிவந்த ஸர்க்கார் அறிவிப்பை, நீங்கள் பார்த்தீர்களோ?

அவர்:—ஆம், பார்த்தேன். அதனல் என்ன தெரிகிற தென்றல், இப்பொழுதிருப்பதைவிடப் போராட்டம் கடுமையாய் நடக்கும் என்று தெரிகிறது.

தேசாய்:—எவ்வளவு காலம் உங்களால் "தாக்குப் பிடிக்க" முடியும்?

அவர்:—வேண்டுமென்கிற வரையில். எங்கள் கிராமக் கட்டுப்பாடு பூர்த்தியாகி விட்டது. எங்கள் ஊரிலே, மருந்துக்குக் கூட, எருமைமாடு கிடையாது. ஸர்க்கார் கை வைக்கும்படியாக எதுவும் இல்லாதபடி, கூடிய சீக்கிரத்தில் நாங்கள் பார்த்துக் கொள்ளுகிறோம். போராட்டம் முற்ற முற்ற, பித்தளைப் பாத்திரங்களை எங்கள் வீட்டிலிருந்து விலக்கிவிட்டோம். இப்பொழுது நாங்கள் மண் பாண்டங்களில் சமைக்கிறோம். மண் வாணய்களில் சாப்பிடுகிறோம். வேண்டுமானல், அவர்கள் அவைகளை ஜப்தி செய்யட்டும். வெளியிலே, பாயில் படுத்து உறங்குகிறோம். படுக்கையைக்கூட அல்லவா இப்பொழுது ஜப்தி செய்கிறார்கள்! எனக்கு இன்னொரு யோசனை தோன்றுகிறது. நாங்கள் ஏன் வீட்டுக்குள் அடைந்துகொண்டு கிடக்கவேண்டும்? ஒரு வீட்டை தர்ம சாலையாக ஆக்கிவிடுகிறது. யாருக்கு நிலமில்லையோ, அவர் இந்த சத்திரத்தை, எல்லாருக்கும் பொதுவாக நடத்துகிறது. தேவையானல், ஒரே சமையலாகச் செய்து விடுகிறோம்.

தேசாய்:—உங்கள் வீடுகளையும்விட்டு வெளியேற வேண்டும் என்று ஸர்தார் உங்களுக்குச் சொன்னல்?

அவர்:—ரொம்ப சந்தோஷம். எங்கள் குழந்தைகளை, எங்கள் உறவினர்களிடம் அனுப்பி விட்டோம். மாடுகளை ஓட்டிக்கொண்டு, பெண்பிள்ளைகளில் பலர்வெளியூர்களுக்குப் போய்விட்டார்கள். நாங்கள்கூட, படுத்துத் தூங்கத்தானே

கிராமத்துக்கு வருகிறோம்? இந்தப் போராட்டம் கடவுள் அனுப்பியதாக்கும்! எங்களுக்கு டீ (தேயிலைப்பானம்) இல்லாமற்போனால் முடியாது. மாடுகள் போனபிறகு, பால் ஏது? ஆகவே பலவந்தமாக டீ வழக்கத்தை நாங்கள் நிறுத்த வேண்டியதாயிற்று. ஒன்றிரண்டு பேர், ஆட்டுப்பாலை வைத்துக்கொண்டு, காலந்தள்ளுகிறார்கள். ஒன்று இரண்டுபேர்களிடம் பசுமாடுகள் இருக்கின்றன. ஆனால், நாக்கை, தேகத்தை, கட்டுப்பாட்டில் கொண்டுவருகிற பழக்கம் எங்களுக்கு உண்டாகி வருகிறது. ஆகவே, இந்தப் போராட்டம் தோற்றுப்போனால் என்ன? அடுத்த போராட்டத்திலே, முன் ஜாக்கிரதையுடனும் யுக்தியுடனும் போராடுகிறோம். இப்பொழுது படிக்கிற பாடம் வீணாய்ப் போய்விடுமா?

இந்த நம்பிக்கை, ரத்தத்திலும் எலும்பிலும் ஊறிப் போயிருக்கிற ஜனங்களுக்குத் தோல்வி ஏது? அவர்களுடைய நெஞ்சு அழுத்தத்துக்குக் குறைவு ஏது? அதனாலேதான், ஸர்க்கார் உத்தரவுகளை யெல்லாம் மீறி, அவர்கள் பறிமுதலான நிலங்களை கூட சாகுபடி செய்யவும் துணிந்துவிட்டார்கள். இந்தத் துணிவைக் கொண்டுதான், இந்தப் போராட்டத்தை சட்டமறுப்பு இயக்கமாகவும், அரசாங்கத்தை ஸ்தம்பிக்கச் செய்ய நோக்கங் கொண்டதாகவும், அரசாங்கத்தார் எண்ணத் துணிந்தார்கள். மணியக்காரர்களின் ராஜிநாமாவும், அரசாங்கத்தின் இந்த முடிவுக்குச் சிறிது சாயம் தடவினது போல ஆகிவிட்டது. "கூட்டச் சட்ட மறுப்பைப் பரீட்சை செய்துப் பார்ப்பதற்காக, பர்டோலி தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறது" என்று அரசாங்கத்தார், இந்தப் போராட்டத்தை மதிப்பிட்டார்கள்.

## அத்தியாயம் 24.

கேடா சத்தியாக்கிரக காலத்தில், அரசாங்கத்தின் சார்பாக, யாதொரு விளம்பர சபையும் இல்லை. போர்ஸாத் சத்தியாக்கிரகத்தின்போது! போராட்டம் முடிகிற சமயத்தில், விளம்பர சபைத் தலைவர் அரசாங்கத்தின் கட்சியை ஆதரித்து

நீண்டதொரு பிரசுரம் வெளியிட்டார். அதற்குத் தக்க பதில், போர்சாத் சத்தியாக்கிரகிகளால் உடனே கொடுக்கப்பட்டது. பம்பாய் கவர்னர் சத்தியாக்கிரகிகளின் கட்சி நியாயத்தை உணர்ந்து, இரண்டு லட்சத்து நாற்பதினுயிரம் ரூபா தண்ட வரியையும் வஜா செய்து கொடுத்தார்.

இப்பொழுதோ, சத்தியாக்கிரகிகளின் விளம்பர சபை, ஐந்து மாதகாலமாய் வேலை செய்துவந்து, ஸர்க்காரின் கொள்கையையும் வழிகளையும் அலசிப் பார்த்து, சல்லி சல்லியாய்ப் பிய்த்து எடுத்துக்கொண்டு வருகிறது. என்றாலும், ஸர்க்கார் தரப்பிலே, வாயே திறக்கவில்லை; ஒரு எழுத்து வெளிவரவில்லை. கடைசிக்காலத்தில், ஸர்க்காரின் சார்பாகத் துண்டுப் பிரசுரங்கள் வெளிவரத் துவக்கின. "சுபவசனங்கள்" என்ற பெயர்கொண்ட துண்டுப் பிரசுரங்கள் இரண்டொன்றை, கலெக்டர் துரை வெளியிட்டார். "பிறருக்கு ஹிம்சை யுண்டாக்கப் பிறந்த இந்தப் பெரியார்கள் (வல்லபாய் முதலியவர்கள்) போர் என்றும், ரத்த வெள்ளமென்றும், சுடுகிறதென்றும், எருவுக்கு எலும்புகள் என்றும் பேசுகிறுர்கள்" என்பது சுபவசனங்களில் ஒரு ஒளிக்கல்லாகும்.

ஆனுல், ஸர்க்கார் "செய்தி இலாகாத் தலைவர்," அரசாங்கத்தின் சார்பாக, சத்தியாக்கிரகிகளுக்கு மறுப்பு எழுதத் துவக்கினுர். மிராசுதார்கள் நிலங்களைக் குத்தகை சாகுபடிக்கு விடுகிறுர்களே, அந்தக் குத்தகைச் சீட்டைக்கொண்டு கிஸ்தி நிர்ணயம் செய்வதுதான் சரியான வழி என்றும் இந்தக் கொள்கையை, வரி விசாரணைக் கமிட்டியார் தமது யாதாஸ்தில் ஆதரித்திருக்கிறுர்கள் என்றும் வேண்டுமென்றே திரித்துக்கூறிப் புரட்(டு)டி எழுதிவிட்டார். வரி விசாரணைக் கமிட்டியார் இப்படி அபிப்பிராயப்படவே இல்லை. அவர்களுடைய கருத்து என்னவென்றுல், "வருஷ வருமானத்தைக்கொண்டு கிஸ்தியை நிர்மாணம் செய்யவேண்டும். வருஷ வருமானமென்றுல் மொத்த வருமானம். அதிலே சாகுபடிச் செலவு, குடியானவனுடைய குடும்பத்தார் எல்லோரும் சேர்ந்து உழைத்த உழைப்புக்கு மதிப்பு, சாகுபடி முயற்சிக்கேற்ற

ஈடு—இவைகளைக் கழித்துப் பார்க்க வேண்டும்" என்பது அவர்களுடைய சிபார்சு. "வருஷ வருமானத்திலே நாலி லொரு பங்குக்கு அதிகப்படப் படாது கிஸ்தி" என்று கமிட் டியார் சிபார்சு செய்தார்களே, அதை வேண்டுமென்றே 'செய்தித் தலைவர்' மறைத்துவைத்து, அதைக் கண்ணிலேயே காண்பிக்க வில்லை. சாகுபடியின் வருமானத்தில் நாலிலொரு பங்கில் கிஸ்தியை வைக்கவேண்டும், வாடகை ரீதியில் கிஸ்தி நிர்மாணம் செய்யப்படாது என்று நிலவரிக் கமிட்டியார் சிபார்சு செய்தார்களே, அதைப்பற்றிச் 'செய்தித் தலைவர்' அடியோடு மௌனம் சாதித்து விட்டார்.

மணியக்காரர்களும் கணக்கர்களும் பலவந்தத்தாலும், பயமுறுத்துதலாலும் தங்கள் வேலைகளை ராஜிநாமாச் செய்தார் கள் என்று 'செய்தித் தலைவர்' எழுதினர். அது பொய் என்று ராஜிநாமாச் செய்த மணியக்காரர்கள், கணக்கர்கள் எல் லாரும் சேர்ந்து, பத்திரிகைகளுக்கு மறுப்பு எழுதினர்கள். "என்னுடைய ராஜிநாமாவை வாபஸ் வாங்கிக் கொள்ளும் படிக்கும் அப்படிச் செய்தால் உயர்ந்த சம்பளத்தில் நல்ல வட்டத்துக்கு என்னை மாற்றுவதாயும் டெபுடி கலெக்டர் ரொம்பவும் சொல்லிப் பார்த்தார்" என்று ஒரு கணக்கர், டெபுடி கலெக்டர் பலவந்தப்படுத்தியதை வெளிப்படுத்தினர். பட்டாணியர்கள் யாதொரு அட்டூழியமும் செய்யவேயில்லை என்று சாதிக்கப் பார்த்தார். ஆனல், அவர் காட்டிய நொண் டிச் சமாதானங்கள் யாவும் தவறு என்று ருசுப்படுத்தப்பட் டன. பாவம்! 'செய்தித் தலைவர்' எது எழுதினலும் பாதக மில்லை; அவர் கேட்டதை எழுத முடியுமேயொழிய, அல் லது அவருக்குக் கொடுத்த ரிப்போர்ட்டில் படித்ததை எழுத முடியுமே யொழிய, அவர் நேரே எதையேனும் பார்த்த துண்டா?

ஆனல் பம்பாய் கவர்னர்—சீமையிலிருந்து வந்த சில மாத காலம் மிகவும் நேர்மையுடனும் தாராள சிந்தையுடனும் சத்திய ஆவலுடனும் நடந்து கொண்ட—கவர்னர் ஸர் லெஸ்லி வில்ஸன் அவர்கள், அரசாங்கத்தின் முறையைத்

தாங்கி, சில கனவான்களுக்குக் கடிதம் எழுதினரே, அது தான் வருந்தத்தக்க சங்கதி.

பர்டோலி ப்ரச்னையில் மிகுந்த சிரத்தை காட்டி, விவசாயிகளுக்குக் கூடுமான வரையில் ஒத்தாசை செய்ய முயற்சி செய்த பொதுஜனத் தலைவர்களில், ஸ்ரீ கே. எம். முன்ஷி அவர்களின் பெயரைச் சிறப்பாகக் குறிப்பிட வேண்டும். மே மாதக் கடைசியில், முன்ஷி அவர்கள் தொடர்ச்சியாக, பம்பாய் கவர்னருக்குச் சில கடிதங்கள் எழுதினர். "நான் சட்ட வரம்புக்குட்பட்டு கிளர்ச்சி செய்பவன். வரி கொடாமை பயம் காண்பிக்கிற ஒத்துழையாமைக்காரன் அல்ல" என்று தமது நிலைமையை விளக்கி வற்புறுத்திக் காண்பித்து, அக் கடிதங்களை எழுதினர் முன்ஷி. தம்முடைய நிலைமையை விளக்கிக் காண்பித்ததனாலேதான், கவர்னர் அவர்கள் முன்ஷிக்குப் பதில் எழுதினர். பர்டோலி ப்ரச்னையை தவறாகப் பொருள் செய்து கொள்ளக்கூடாது என்பது முன்ஷியின் வாதம். இந்தக் கட்சியைச் சிறிதும் ஏற்றுக்கொள்ளாமல், "சட்ட மறுப்பு ஆயுதத்தின் மூலமாய், அரசாங்கத்தைப் பல வந்தப்படுத்த, பர்டோலியில், திட்டமான முயற்சி நடந்து வருகிறது. நீங்கள் நடுநிலைமை கொண்ட விசாரணை வேண்டுமென்கிறீர்கள். என்ன விசாரித்த போதிலும், புதிதாக ஒன்றும் வெளிப்படப் போவதில்லை என்று நம்புகிறேன். தவிர, புதிதாகவும் விசாரித்தாகி விட்டது. ரிவினியூ மெம்பர் ரியூ அவர்கள் ரஜாவில் போயிருந்தபொழுது, அனுபவம் வாய்ந்த ரிவினியூ உத்தியோகஸ்தரான ஹாட்ச் அவர்கள் அந்த ஸ்தானத்துக்கு வந்து, பட்சபாதமில்லாத மனப்பான்மையுடன், எல்லாத் தஸ்தாவேஜிகளையும் பார்த்தார். ஸர்க்கார் சிபார்சு செய்திருக்கும் வரி உயர்வு ரொம்பவும் குறைவு என்று அவர் அபிப்பிராயப்படுகிறார். ஸர்க்காரின் செயலின் நியாயத்தைக் கண்டு—ஸர்க்காரின் தாராள சிந்தையைக் கண்டு என்று நான் பதப்பிரயோகம் செய்திருக்க வேண்டும்—திருப்தியும் சந்தோஷமும் அடையாத அரசாங்க நிர்வாகியே இல்லை என்று உங்களுக்கு நான் உறுதி கூற முடியும்" என்று கவர்

னர் ஸர் லெஸ்லி வில்ஸன் அவர்கள் முன்ஷிக்குப் பதில் எழுதினுர். ஜனங்கள், ஸர்க்காரிடமிருந்து பெரிய மனதை வேண்டவில்லை. ஜனங்கள்வேண்டி நின்றதுநியாயமொன்றே. அதை கவர்னர் துரை மறந்து விட்டாரோ, என்னவோ!

கடைசியாக முன்ஷி கவர்னருக்கு எழுதியதும், அதற்கு கவர்னர் பதில் எழுதியதும், கவர்னரின் ஜவாப்பை காந்திஜி விமர்சனம் செய்ததும், இந்த நூலின் ஆரம்பத்திலேயே, குறிப்பிட்டு ஆகிவிட்டது. முன்ஷி அவர்கள், பர்டோலி சம்பந்தமாக மேற்கொண்டு, செய்த தொண்டைப்பற்றி, பல இடங்களில், இனிச் சொல்லவேண்டி வரும். ஒரு கமிட்டி கூட்டி, பர்டோலித் தாலூகாவில் சுற்றுப் பிரயாணம் செய்து, விவசாயிகளின் நிலைமையைப்பற்றி, அவரும் அவரது கமிட்டியும் விசாரணை செய்தார்கள்.

## அத்தியாயம் 25.

பர்டோலி சத்தியாக்கிரகப் போராட்டத்தில் விளைந்த கேஸ்களை விசாரிப்பதற்காக, பர்டோலியில் ஒரு மாஜிஸ்டிரேட் நியமனம் செய்யப்பட்டார் என்றேம். அவர் நீதி வழங்கிய முறையையும் கேஸ்களை விசாரணை செய்த தோரணையையும் பற்றிச் சிறிது விவரமாகச் சொல்லவேண்டும். இவர் செய்த தீர்ப்பும், இவர் கையாண்ட முறையும், அவைகளின் நேர்மைக் குறைவினுல், அரசாங்கத்தின் பெயர் கெடுவதற்கு முக்கியக் காரணங்களா யிருந்தன.

பர்டோலிக்குற்றவாளிகளின்முக்கியமானகுற்றமென்ன? வரிகொடாமையும் வரிகொடுக்கக் கூடாது என்று பிரசாரம் செய்ததும் தான். இவைகளை விசாரிப்பதற்குத் தனியாக என்ன லட்சணங்கள் இவரிடம் இருந்தன என்று சொல்லு வதற்கில்லை. ரிவினியூ இலாகாவில், சாதாரண உத்தியோ கத்தில் இருந்தவர் இவர். எனவே, ரிவினியூ சம்பந்தமான வழக்குகளை விசாரிக்கச் சிறிதும் லாயக்கில்லாதவர். ராணுவ அமுல் காலத்தில் (1919-இல்) பெரிய பெரிய ஹைக் கோர்ட்டு நீதிபதிகள் கூட, நியாயம் செய்ய முடியாமல் நடு

நிலைமை தவறிப் போகும்படி நேர்ந்து திணறிப் போய், குற்ற வாளிகளுக்குக் கடுமையான தண்டனைகளை விதித்ததும், பின்னர் அவைகள் ரத்துச் செய்யப்பட்டதும் அல்லது மிகவும் குறைக்கப்பட்டதும் சரித்திரம் அறிந்த விஷயம். எனவே, ஆத்திரமும் சந்தேகமும் மலிந்த நிலைமையின் மத்தியில், பர்டோலி ரெஸிடெண்ட் மாஜிஸ்டிரேட், சரியானபடி நீதி வழங்க வில்லை என்றால், அது ஆச்சரியமே யில்லை.

அவர் செய்த தீர்ப்புகளில் அநேகமாய் இந்த வாக்கியங்களைக் காணலாம். "வாதி தன் கதையைத் தெளிவாயும் நாணயமாயும் சொல்லுகிறார். அதை நம்பாமலிருக்கக் காரணம் கிடையாது. வாதிக்கோ (சர்க்கார் சிப்பந்திகளில் ஒருவர் தான் வாதி) அல்லது அவரது சாட்சிகளுக்கோ எதிரியிடம் பகைமை என்பது துளிக்கூடக் கிடையாது. எனவே, பிராஸிகூஷன் சாட்சிகளை நம்பாமலிருக்கக் காரணமே இல்லை." இந்தப் பல்லவியை அநேகமாய் அவருடைய தீர்ப்புகளிலெல்லாம் காணலாம். எதிரிகள் யாதொரு டிபன்ஸும் சத்தியாக்கிரகக் கொள்கைப்படி செய்யாமல் போனால், வாதியும் அவரது சாட்சிகளும் சொல்லுவதை, மாஜிஸ்டிரேட் நம்பாமலிருக்க முடியுமா?

ரவிசங்கர் உத்தமர், சாது என்று எல்லாராலும் புகழப் பெற்றவர். தாசில்தாரைப் பயமுறுத்தவோ அல்லது அவருக்குத் தொந்திரவு கொடுக்கவோ, சிறிதும் எண்ணமில்லாமல், கச்சேரிக்குள் புகுந்தார். செக்ஷன் 186-படி அவர் தண்டிக்கப்பட்டார். இந்த செக்ஷன் பிரகாரம் யாரையாவது தண்டிக்க வேண்டுமானால், எதிரி பயமுறுத்துகிறாப்போல எதேனும் காரியம் செய்திருக்க வேண்டும் என்று சட்டம் சொல்லுகிறது. இந்த மாதிரி செய்தார் ரவிசங்கர் என்பதற்குச் சாட்சியும் இல்லை; ருசுவும் கிடையாது. இருந்தாலும் ரவிசங்கருக்குத் தண்டனை; சினய்க்குத் தண்டனை; ஷண்முகலாலுக்குத் தண்டனை. சினய் கேஸில், சினய் செய்ததெல்லாம் இதுதான். தாசில்தாரின் முன்னிலையில், கிஸ்தி கொடுக்க வேண்டாம் என்று குஷால் நாதாவை, சினய் கேட்டுக்கொண்

டார். இந்த வழக்கில், குஷால் நாதாவைச் சாட்சியாக விசாரிக்க வேண்டுமா, வேண்டாமா? குஷால் நாதாவை விசாரிக்கவே யில்லை. சிறுய்க்குத் தண்டனை! ஷண்முகலால் அவர்களின் பேரில் என்ன கேஸ்? பிராண் ஜீவன் தாஸ் வீட்டிலிருந்து மூன்று மூட்டை ஜுவாரி ஜப்தி செய்தபொழுது, இந்த மூட்டைகளைத் தூக்கிக்கொண்டு போனால், கணக்குப் பிள்ளையையும் வெட்டிகளையும் கவனித்துக்கொள்ளப்படும் என்று ஷண்முகலால் பயமுறுத்தியதாகக் குற்றச் சாட்டு. இதிலே கணக்குப் பிள்ளை வாதி. வெட்டிகள் சாட்சிகள். நியாயமாய்ப் பார்த்தால், ஜப்தி செய்த ஆபீசரை, சாட்சியாகக் கொண்டுவந்திருக்க வேண்டும். அவரைச்சாட்சியாகக் கூப்பிடவேயில்லை. சாட்சிகளோ தடுமாறிப் போனார்கள். சரியாக ஒன்றும் சொல்லவில்லை. "இன்றைக்கு ஜப்தி செய்கிறீர்கள். இதன் பயன் நாளைக்குத் தெரியும்" என்று காந்திவாலாக்கள் சொன்னார்கள் என்று வெட்டிகள் சொன்னார்கள். காந்தி வாலாக்கள் என்றால் யார் என்று கேட்டால், அவர்களுக்குச் சொல்லத் தெரியவில்லை. காந்தி வாலா, ஷண்முகலால் என்று அவரைச் சாட்சிகள் காண்பிக்கவேண்டும் என்று பிராஸிகூஷன் தரப்பில், ரொம்பவும் பாடுபட்டுப் பார்த்தார்கள். சூட்சுமம் அறிய முடியாத சாட்சி! தாம் நிரபராதி யென்றும் தம் பேரில் கொண்டுவரப் பட்டிருக்கிற கேஸ் பொய் என்றும் ஷண்முகலால் சொன்னார்.

சாட்சியத்தைச் சீர்தூக்கிப் பார்க்கச் சிறிதளவு கூடச் சிரமம் எடுத்துக்கொள்ளாமல், எதிரி குற்றவாளி என்றும் ஆறு மாதம் கடுங்காவல் என்றும் மாஜிஸ்டிரேட் தீர்ப்புச் சொல்லி விட்டார். ஜாதி விலக்குச் செய்வதாக, ஷண்முகலால் பயமுறுத்தியதாகவே வைத்துக்கொண்டாலும் அது 189 ஸெக்ஷன் கீழ்க் குற்றமாகுமா என்பதுதான் கேள்வி. ஜாதி விலக்குச் செய்வது என்பது எந்தப் பிரிவின் கீழும் குற்றமாகப் பாவிக்கப்படவேயில்லை. ஜாதி விலக்கு எப்படிச் செய்யப்படும் என்பதற்குச் சாட்சியமும் விடப்படவில்லை. எனவே, ஷண்முகலால் சட்டப்படி குற்றவாளி என்று

சொல்லுவதற்கில்லை. கடுமையான தண்டனை விதிப்பதற்குக் கொஞ்சங்கூட இடமே கிடையாது.

சிவானந்த், அமிருதலால், இருவருடைய கேஸ்களை எடுத்துக்கொண்டால் தான் என்ன? வாதி ஒரு முஸ்லீம் கான்ஸ்டேபிள். நல்ல "மோட்டாப் பேர்வழி". சாட்சிகள் ஒரு மோட்டார் ட்ரைவரும் க்ளீனரும். "ஏண்டா, கீழ் ஜாதித் தோட்டி வேலை செய்கிறாய்" என்றும் இரண்டாவது எதிரி கையைத் தூக்கிக்கொண்டு வந்து, வாதியை அடிக்க வந்தார் என்றும் ஒன்ருவது எதிரி வாதியை பிடித்துத் தள்ளின தாயும் கேஸ். இந்த முழுக்கதையும் பொய் என்று போட்டோப் படங்கள் மூலமாய் முதல் எதிரி ருசுப்படுத்தப் பார்த்தார். இரண்டாவது எதிரி சம்பவம் நடந்த இடத்திலேயே இல்லை. ஐப்தி ஆபீஸர் அங்கே இல்லவே இல்லை என்று வாதி சொன்னது பொய். இதையெல்லாம், மாஜிஸ்டிரேட் கவனிக்க வில்லை. போட்டோப்படம் உண்மையாக சம்பவத்தைக் குறிப் பதா என்று விசாரித்திருக்கலாம். "எதிரிகள் துர்ப்பாஷை யாக வைத்து அடிக்கக் கையைத்தூக்கினதுபோதும்" என்று, ருசுவானதாக மனதிலே தீர்த்துக்கொண்டு, தண்டனை கொடு த்துவிட்டார். மோட்டாப் பேர்வழி கான்ஸ்டேபிள். அவர் ஒரு குத்துவிட்டால் எதிரிகள் இருவரும் பொடிப் பொடியாய் நொறுங்கிப்போயிருப்பார்கள். அந்தக் கான்ஸ்டேபிளை இரண் டாவது எதிரி அடிக்கக் கையைத் தூக்கினராம்! நல்ல கதை!

கலெக்டர் பங்களாக் 'கம்பவுண்டு'க்கு எதிரே, பொது ஜன ரஸ்தாவில் உட்கார்ந்திருந்ததற்காக, மூன்று சின்னப் பையன்கள் இரண்டுமாத வெறுங்காவல் தண்டனை விதிக்கப் பெற்ருர்கள் என்பது ஏற்கனவே குறிப்பிடப்பட்டது. அதே குற்றத்தையே, வேறு பிள்ளைகளும் செய்தார்கள். அவர்களைத் தண்டிக்கவில்லை. அந்த மூன்று பேர் செய்தது குற்றம்; மற்றவர்கள் அதையே திருப்பிச் செய்தது வெறும் கிழ்ச்சி!

வங்கனேர் கிராமத்தில் 19 பேர்கள் பேரில், கலகம் செய்ததாகக் கேஸ். போலீசார் காவல் காத்துக்கொண்டு,

ரிவினியூ ப்யூன்கள் ஓட்டிச் சென்ற வண்டிகளை, வங்கனேர் கிராமத்தில், இரவு எட்டு மணிக்கு, சுமார் 150 பேர்கள் வழி மறித்து, கொள்ளை யடித்தார்களாம்! வெட்டிகளைக் கையைப் பிடித்துக் 'கர கர' வென்று கூட்டத்துக்கு இழுத்துக் கொண்டு போனார்களாம். இந்தச் சமயத்தில் கணக்கர் அந்த இடத்துக்கு வந்தாராம்; போலீசாரிடம் துப்பாக்கிகள் இல்லை. "உன் துப்பாக்கியைத் தூக்கு" என்று வாதி, தன் சகோதரக் கான்ஸ்டேபிளிடம் சொன்னார். துப்பாக்கி ப்ரஸ்தா பத்தைக் கேட்டதும், எதிரிகளும் மற்றவர்களும் சரேலென்று கலைந்து, ஓட்டம் எடுத்தார்கள். விளக்கோடு, வெட்டியையும் கொண்டுபோய் விட்டார்கள். ப்யூனும் கான்ஸ்டேபிளும் கிராம மணியக்காரரிடம் போய்ச் சொன்னார்கள். ஆனால் அவர் சம்பவம் நடந்த இடத்துக்குப் போகாமல், இன்னொரு விளக்குக் கொடுத்தார். பிறகு வண்டிகள் சென்றன. இவ்வாறு தீர்ப்பில் எழுதப்பட்டிருக்கிறது.

வண்டியை மறித்துக் கலகம் செய்தது யார் யார் என்று அடையாளம் கண்டுபிடிக்க வேண்டுமே! அதற்காக, எதிரிகளோடு, மற்றும் சிலரையும் கலந்து நிறுத்தி வைத்தார்கள். ஸர்தாரின் மோட்டார் க்ளீனர், குஜராத் வித்யாபீட மாணவர் ஒருவர், மற்றும் சிலரைக் கலந்து நிறுத்தினார்கள். சாட்சிகள் யாவரும், 'சகுட்டு மேனிக்கு' கதர் உடுத்தின க்ளீனர், மாணவன் முதலியவர்களைச் சேர்த்துக் கலகம் செய்தவர்களாகக் காண்பித்தார்கள். அடையாளம் கண்டுபிடிக்க முடியாமையால், முதலிலேயே 19 பேர்களில் 5 பேர்கள் விடுதலை செய்யப்பட்டார்கள். விசாரணைக்குப் பின் மூன்று பேர் விடுதலை. பாக்கிப் பதினோரு பேர்களுக்குத் தண்டனை. இதிலே, ஐந்து பேர் அப்பீல் செய்து கொண்டார்கள். அவர்களில் நான்கு பேர் விடுதலை!

இன்னொரு வேடிக்கையான கேஸ். ஒரு வீட்டுக்குள்ளே, ஜப்தி ஆபீஸர் நுழையப்பார்த்தார் அவர் 'மூஞ்சியிலே' அடிக்கிறது மாதிரி, கதவைப் படீர் என்று சாத்தி விட்டாள் வீட்டுக்காரி. இதற்காக, அவள் புருஷன்

பேரில் குற்றச் சாட்டு. "என் புருஷன் அப்பொழுது இல்லவே இல்லை. நான் தான் கதவைச் சாத்தினேன். அது குற்றமானால், என்னைக் கொண்டு போங்கள். என் புருஷனுக்கு ஒன்றுமே தெரியாது. அவர் அப்பொழுது வீட்டில் இல்லவே இல்லை" என்று மனைவி மன்றாடிப் பார்த்தாள். அதைக் கேட்கவுமில்லை. அவளைச் சாட்சியாகக் கூப்பிட்டு விசாரிக்கவுமில்லை. கதவைச் சாத்தினது குற்றம் தான்; ஆனால் செய்த ஆஸாமி ஒருத்தர்; தண்டனை அடைந்தவர், நிரபராதி.

சுவரிலே ஒட்டியிருந்த பறிமுதல் நோட்டீஸை எடுத்தெறிந்ததாக கோபால்ஜி என்ற தொண்டர் பேரில் கேஸ். "நோட்டீஸ், முள்ளைச் சொருகி, சுவரில் ஒட்டப்பட்டிருந்தது. அதைக் காற்று அடித்துக்கொண்டு போய் விடுமோ என்று பயந்து, அந்த வீட்டுக்குடையவரிடம் கொடுக்கலாம் என்று எடுத்தேன் நோட்டீஸை" என்று தொண்டர் ஒப்புக் கொண்டார். இதைக் குற்றமாகப் பாவித்து, தொண்டருக்கு ஒருமாத வெறுங்காவல் தண்டனை கொடுத்தார் மாஜிஸ்டிரேட்.

என்ன ஆத்திரத்தோடு கேஸ்கள்! என்ன ஆதரவோடு, மாஜிஸ்டிரேட்டின் தண்டனைகள்! இந்த மாஜிஸ்டிரேட்டுக்குப் பின்னால், இன்னொருவர் குறைச்சல் அதிகாரத்தோடு மாஜிஸ்டிரேட்டாக வந்தார். அவர் தன் மனச்சாட்சி தாங்க மாட்டாமல், போலீசார் கொண்டு வந்த கேஸ்களில் ஒன்றைத் தள்ளி விட்டார்.

இந்த வழக்கிலே எதிரி, ராயம் கிராமத்துக் குடியானவர். அதிகாரியின் உத்தரவுக்குக் கீழ்ப்படிய மறுத்து விட்டதாக அவர் பேரில் குற்றம். ஒரு ஜப்தியில், அவர் பஞ்சாயத்தாகக் கையெழுத்துப் போடமாட்டேன் என்று மறுத்ததாகக் குற்றம். குடியானவருக்கு ஆத்திரம். என்ன புரட்டு என்று மனம் புழுங்குகிறார். "கோர்ட்டிலே காலடி வைக்கிறது இதுதான் என் ஆயுசிலேயே முதல் தடவை. சென்ற ஐம்பது வருஷங்களாக, எங்களூரிலிருந்து ஒருவரும் கோர்ட்டுக்

குப் போனதே கிடையாதே! எங்களுக்குள் சச்சரவு உண்டு. ஆனால் அதை, நாங்களே தீர்த்துக் கொள்ளுவோம்" என்று உள்ளம் கொதித்தார். வாதி, ஒரு போலீஸ் ஸப் இன்ஸ் பெக்டர். "பஞ்சாயத்தாக இருக்க, எழுத்து மூலமாக அவரை, நீர் கேட்டுக் கொண்டீரா" என்று மாஜிஸ்டிரேட் ஸப் இன்ஸ்பெக்டரைக் கேட்டார். ஆம் என்று தமது வாக்கு மூலத்தைக் கொடுத்தார். போலீஸ் ஸப் இன்ஸ்பெக் டரின் வாக்கு மூலத்தைப் படிக்கக் கேட்ட அந்த மிராசுதார், "கடவுள் சாட்சியாக, இதை யெல்லாம் நீர் சொல்லுகிறீரா? கடவுள் சாட்சியாக! எழுத்துமூலம் என்னைக் கேட்டேன் என்கிறீரே, அது உண்மையா" என்று இடி இடிக்கிறாப் போல, இன்ஸ்பெக்டரைப் பார்த்துக் கேட்டார். கோர்ட் டிலே, அசத்தியம் மலிந்துபோ யிருக்கலாம்; ஆனால், கடவுள் பெயரால் பொய் சொல்லுவது, இந்தக் குடியானவருக்குப் பிடிக்கவேயில்லை. எழுத்து மூலம் அவரைக் கேட்கவில்லை என்று குடியானவர், இரண்டு மூன்று சாட்சி விட்டார். மாஜிஸ்டிரேட் திகைத்துப் போனார். குடியானவரைத் தண் டிக்க முடியாது. விடுதலை செய்தால், பொய் வாக்குமூலம் கொடுத்ததற்காக, ஸப் இன்ஸ்பெக்டர் பேரில், கேஸ் போட வேண்டும். எனவே, கடைசியில், கேஸ் வாபஸ் வாங்கப் பட்டது.

இந்தக் கேஸ்களெல்லாம் எதற்காக! பர்டோலி வாசி களின் மனத்திடத்தை முறிப்பதற்காக! ஆனால், இந்த உபா யம் பயன் படாமல் போய்விட்டது. கேஸ் அதிகமாக அதிக மாக, ஜனங்கள் தங்கள் மனதை இன்னும் அதிகமாகக் கெட் டிப்படுத்திக் கொண்டார்கள். உற்சாகத்துடன் தோழர் களை, சிறைக்கு அனுப்பி வாழ்த்துக் கூறினார்கள். 'சிறை உபாயம்' விபரீதமாக முடிந்தது.

## அத்தியாயம் 26.

பர்டோலிப் போராட்டத்தின் வெற்றிக்கு மூல காரண மாயுள்ளவைகள் (1) பர்டோலித் தாலூகா வாசிகளின் கட்டுப் பாடு (2) போராட்டத்தை நடத்திய தலைவர் வல்லபாயின்

அரிய குண விசேஷங்கள் (3) பர்டோலித் தாலூகாப் பெண் மணிகளின் கண் விழிப்பும் எழிச்சியும். பர்டோலிப் பிராந்தியத்தில், ஸ்திரீகள் உற்சாகத்துடன், இந்தப் போராட்டத்தில் கலந்து கொண்டதற்கு முக்கியக் காரணம் ஸர்தார் தான். ஸர்தார், பிறவியிலே, ஒரு குடியானவர். அவருக்குக் குடியானவர்களின் ஆசாபாசமும் பாஷையும் நன்றாகத் தெரியும். பர்டோலி சகோதரிகளைத் தட்டி எழுப்பி, அவர்களை இந்தப் போராட்டத்தில் கலந்து கொள்ளும்படியாகச் செய்தது ஸர்தாரின் அற்புதச் செயலாகும்.

பர்டோலி மீட்டிங்குகளில், முதலில், பெண்மணிகள் அவ்வளவாக வருவதில்லை. ஆனால் ஏப்ரல் மாதம் பிறந்த பின்னர், கூட்டத்துக்கு ஆண்களைக் காட்டிலும் பெண்கள் அதிகமாக வர, ஆரம்பித்தார்கள். அனேக இடங்களில், பெண்கள் தங்களுக்கென்று தனிக் கூட்டங்கள் கூட்டினார்கள். பெண்களின் ஒத்துழைப்பை ஸர்தார் அதிகமாக வேண்டினதற்குக் காரணம் என்னவெனில், ஸராசரியில், ஆண்களைக் காட்டிலும், பெண்கள், வாழ்க்கை எளிமையிலும் தூய்மையிலும் செயல் உறுதியிலும் உயர்ந்தவர்கள் என்ற உண்மையான காரணம் ஒன்றுதான். ஆண்களோடு பெண்களும் சமபங்கு எடுத்துக் கொள்ளவேண்டும் என்ற சாதாரணக் காரணமல்ல. போராட்டம் வெற்றியுடன்முடிந்து, விசாரணைக் கமிட்டி, பர்டோலித் தாலூகாவில் சுற்றுப் பிரயாணம் செய்கையில், முன்னடியே சில தொண்டர்கள் கிராமங்களுக்குச் சென்று, தேவையான விவரங்களைத் திரட்டினார்கள். அப்படிச் செல்லுகையில், குடியானவர் ஒருவரை, " உங்கள் பண்ணையாளுக்குப் படியரிசியும்நெல்லும் சரியாகக் கொடுக்கிறீர்களா " என்று தொண்டர் கேட்டார். ஆமாம் என்றார்கள் ஆண் பிள்ளைகள். உள்ளேயிருந்து கேட்டுக் கொண்டிருந்த பெண் பிள்ளைகளில் ஒருவர், " எதற்காக, இந்த சினேகிதர்களிடம் பொய் சொல்லவேண்டும்; சரியாகக் கூலி கொடுப்பதில்லை என்று ஒப்புக் கொள்ளுகிறதற்கென்ன? பண்ணையாட்கள் நம்மை ரொம்பவும் தொந்திரவு

செய்கிறார்கள். நாமும் அவர்களைச் சரியாய் நடத்துகிற தில்லை. அதனாலேதான், நாம் எல்லோரும் நிர்க்கதியிலிருக் கிறோம்" என்றார். "உமக்குக் கடன் எவ்வளவு இருக் கிறது" என்று இன்னொரு குடியானவரைத் தொண்டர் கேட்டார். கடனே இல்லை என்றார் அவர். அவர் பெண் சாதி சொல்லுகிறாள்:— "உண்மையைச் சொல்லுகிறதற்கு வெட்கப்படலாமா? இந்தப் பாழாய்ப் போன வெட்கந் தானே, நம்ம சீரழிவுக்குக் காரணம்!"

பெண்கள் பஜனை, பாட்டு! ஜப்தி நடக்கட்டுமே, மனச் சஞ்சல மில்லாமல், பெண்கள் பார்த்துக் கொண்டிருக்கக் கற்றுக் கொண்டு விட்டார்கள். ஆண்களை ஜெயிலுக்குக் கொண்டு போய்விட்டால், பெண்கள் என்ன செய்வார்களோ என்று சிலருக்கு யோசனை யிருந்தது. "தகப்பனார் சிறைக் குப் போனாலும் தானும் தனது சகோதரியும் உழுது சாகுபடி செய்து வருவோம்" என்று அந்த 14 வயதுப் பெண் சொல்லவில்லையா? வங்கனேரில் கலகம் செய்ததாக, சிலர் கையில் விலங்கிட்டுக்கொண்டு போகப்பட்டபொழுது, பெண்கள் கூடச்சென்று, வாழ்த்தி, அவர்களை வழியனுப்பி விட்டு வந்தார்கள்.

'ஜப்தி ஆபீசருடைய முகத்தில் படீரென்று கதவைச் சாத்தினாளே', அவள் கொஞ்சங்கூட அஞ்சாதவள். நான் தான் அந்தக் குற்றத்தைச் செய்தது என்று போலீசாரிடம் ரொம்பவும் சொல்லிப் பார்த்தாள். அவர்கள் கேட்கிற வழியா யில்லை. போலீசார் புருஷனைக் கைது செய்தார்கள். அந்த அம்மாள் புருஷனை அழைத்துக்கொண்டு, ஸர்தாரிடம் அவ ருடைய ஆசீர்வாதத்தைப்பெற, வந்தாள். ஸர்தார் ஸன்னி தானத்தில், புருஷனைப் பார்த்துச் சொல்லுகிறாள்:—"இதோ! இங்கேபாரு! கோர்ட்டிலே, 'கச்சாபிச்சா' என்று ஒரு வார்த்தை வரக்கூடாது. அவருக்கு இஷ்டப்பட்ட தண்டனை யைக் கொடுக்கும்படியாகக் கேளு. என்னையும் குழந்தைகளை யும் பற்றி நினைத்துக் கொள்ள வேண்டியதில்லை. சந்தோஷமா யிரு. கேட்ட கேள்விகளுக்கு 'ஆம்பிளை மாதிரி' கணீர்

கணீர் என்று பதில் சொல்லு." பிறகு ஸர்தாரைப் பார்த்துச் சொல்லுகிருள்:—"பாவம்! என்பேரிலே கேஸ் போட்டிருக்கப்படாது! பொம்மனுட்டிக்குளென்னவெல்லாம்முடியும் என்று காண்பித்திருப்பேனே! ஜெயிலுக்குப் போகிறதில் என்ன இருக்கிறது? எவ்வளவு வேலை செய்யவேண்டுமென்ருலும் செய்வேனே ஜெயிலில்? ஒரு மணு மா அரைக்கிறது ஓடுகிற ஓட்டம். ஒன்றரை மணு அரைத்து விடுவேன். அவுங்களுக்கு (புருஷனுக்கு) தைரியம் 'பத்தவில்லே'. அவுங்களுக்குப் பதிலாக நான் இருந்தால். 'போலீசு கீலீசு' எல்லாரும் மறக்க முடியாதபடி பதில் சொல்லுவேன்". புருஷனை உற்சாகப்படுத்தி ஜெயிலுக்கு அனுப்பி வைத்துவிட்டு, தன் புருஷன் ஜெயிலுக்குப் போனதற்காக, மற்றவர்கள் தனக்கும் அவருக்கும் சன்மானமாகக் கொடுத்த ரூ. 11-யும் பாத காணிக்கையாக, ஸர்தார்முன் கொண்டு வைத்துவிட்டாள்.

போராட்டம் முடிகிற சமயத்தில், காந்திஜி பர்டோலிக்குப் போயிருந்தார். ராயம் என்ற கிராமத்தில் கூட்டம், நூற்கிறகாட்சி,இன்னும் என்னவெல்லாமோ நடைபெற்றன. அந்த ஊரில் ஒரு கிழவி. சாகக் கிடக்கிருள். காந்தியைப் பார்த்து விட்டுத் தான் சாவேன் என்கிருள். காந்திஜி அந்த வீட்டுக்குப் போனுர். அவள் எலும்பும் தோலும், அவ்வளவுதான். ஆனுல், காந்திஜியைப் பார்த்தவுடன், முகத்திலே புந்நகை. நூல்மாலே யிருந்தது. ஆனுல் எழுந்து நின்று அதைப்போட முடியவில்லே அவளால். காந்திஜி தலேயைக் குனிந்து கொண்டார். மாலேயைப் போட்டாள். நெற்றியிலே குங்குமமிட்டாள்; ஐந்து ரூ. பணத்தைக் கொடுத்து, தன்னை ஆசிர்வதிக்கும்படி காந்திஜியைக் கேட்டுக் கொண்டாள். "நிம்மதியுட னிருங்கள்" என்ருர் காந்தி. அடுத்த நாள், "நான் போகிறேன். என் மனது ரொம்பவும் நிம்மதியாயிருக்கிறது. நான் போகிற பொழுது, என்னை சுத்தமான வெளுப்புக் கதரினுல் மூடுங்கள்" என்று சொன்ன ஒரு மணி நேரத்துக்கெல்லாம், அவள் பிராணன் போய்விட்டது.

இப்பொழுது சொல்லப்போகிறது ரொம்ப அற்புதம்.

ஒரு பெண். வயது இருபது இருக்கும். பார்த்தால், உடம்புக்கு ஒன்றுமேயில்லை என்று தோன்றிற்று.

அவளுடைய தகப்பனார், வங்கனேர் "கலகக்காரர்களில்" ஒருவர். ராஜியான பிறகு, சத்தியாக்கிரகக் கைதிகளை விட்டுவிடுவது என்ற ஷரத்துப் படிக்கு, அவருடைய தகப்பனாருக்கும் விடுதலை. அவர் விடுதலை யடைந்து, அடுத்த நாள் பர்டோலிக்கு வரப்போகிறார். அவரை ஊருக்கு அழைத்துக் கொண்டுபோக, பர்டோலிக்கு வந்தாள் அந்தப் பெண். வங்கனேரிலிருந்து, பர்டோலிக்கு நடந்து வந்தாள். பர்டோலிக்கு வந்ததும், குடலிலே ஏதோ கோளாறு. புழுவாகத் துடிக்கிறாள். என்னென்ன மருந்து கிடைக்கக் கூடுமோ, அதெல்லாம் கொடுத்தாகி விட்டது. ஆனால் துளிக் கூட, குணம் ஏற்படவில்லை. நிலைமை கெடுபிடியாகிவிட்டது. விடிய, ஜாமப் பொழுதிருக்கும். "என்கிட்ட, மகாத்மாஜியைக் கொண்டுவாருங்கள். கடைசியாக, அவரை, நான் தரிசனம் பண்ண வேண்டும்" என்றாள்.

காந்திஜி உடனே போனார். அவளுக்குக் கண் தெரியவில்லை. காந்தி கூப்பிட்டார். "மகாத்மாஜி! உங்களை நான் பார்க்க முடியவில்லை. ஆனால் உங்கள் குரல் தெரிகிறது. யாராவது என் கை யிரண்டையும் சேர்த்துப் பிடிப்பார்களா? நான் கடைசியாக மகாத்மாஜிக்கு நமஸ்காரம் செய்யவேண்டும்" என்றாள். பிறகு, வல்லபாயைப்பற்றிக் கேட்டாள். பொழுது விடியுமுன், உயிர்போய் விட்டது. அவள் தாயார் பக்கத்தில் இல்லை. மறுநாள் காலையிலே தகப்பனார் வரப்போகிறார். ஆனால் அவளுடைய கடைசி நினைப்பு, அவர்களிடம் இல்லை. காந்தி, வல்லபாய்—இவர்களைப்பற்றி நினைப்பு. இவர்கள் தான் பிறருக்கு ஹிம்சை செய்யப் பிறந்திருக்கிறவர்களோ! கலெக்டரின் சுபவசனத் துக்கடா ஞாபகம் வருகிறதா?

பர்டோலிப் பெண்களுக்கு வாழவும் தெரியும், சாகவும் தெரியும். இப்பேர்ப்பட்ட ரத்தினங்களின் குணாதிசயங்கள் ஸர்தாருக்கு நன்றாய்த் தெரியும். பர்டோலிப் போராட்டத்

தின் வெற்றிக்கு முக்கியக் காரணம் பர்டோலிப்பெண்மணி கள் என்று சொல்லலாமா, கூடாதா?

## அத்தியாயம் 27.

"நல்லெண்ணங் கொண்ட சில நண்பர்கள், ராஜிசெய்ய முயலுவதாக வதந்தி. அவ்வாறு முயன்று. ராஜிசெய்து வைப்பதற்கு அவர்களுக்குப் பாத்தியமுண்டு; பார்க்கப் போனால், அவர்களுடைய கடமையாகக் கூட இருக்கலாம். ஆனால், இந்த நண்பர்கள், இயக்கத்தின் பொருளை உணர வேண்டும். பலவீனக் கட்சிக்குப் பரிந்து பேசுவதாக, பல வீனர்களுக்காகச் சிபார்சு செய்வதாக, இவர்கள் தலையிடக் கூடாது. முற்றிலும் நியாயமான கட்சிக்காக, பர்டோலி மகாஜனங்கள் போராடுகிறார்கள். அவர்களுக்குத் 'தயை தாட்சிண்யம்' வேண்டியதில்லை. அவர்கள் கேட்பது 'நியா யம்' ஒன்றே. இந்தப் போராட்டத்தை லேசிலே விட்டுவிட முடியாது; லேசிலே ராஜிசெய்து கொள்ளவும் முடியாது. என்வே, இந்தப் போராட்டத்தின் நுணுக்கங்களை உணர முடியாதவர்கள், ராஜிசெய்ய முயன்றால், அவர்களால் மகா ஜனங்களுக்கும் அவர்களுடைய கட்சிக்கும் கேடுதான் உண் டாகும்" என்று காந்திஜி எச்சரிக்கையாக எழுதினார்.

திவான் பகதூர் ஹரிலால் தேசாய் செய்த முயற்சி தெரி யும். சத்தியாக்கிரகப் போராட்டத்தின் தத்துவம் நோக்கமும் அவருக்குத் தெரியவில்லை. ஜனங்கள், பாவம், கஷ்டப் படுகிறார்களே என்று அவர் வருந்தினார். ஏதோ ராஜிக்காகச் சிரமப்பட்டார். அவர் ஒதுங்கிப் போய்விட்டார். இப்பொ ழுது, அவர் வேலையை வேறு சிலர் செய்யத் துவக்கினார்கள். இந்த ராஜிக்காரர்களுக்கு, ஜனங்கள் எதற்காகப் போராடுகி றார்கள் என்று, நன்றாகத் தெரியும். ஜனங்களுடைய கட் சியை எடுத்துச் சொல்லி ராஜி பேசினார்கள். அவர்கள் எல்லோரும் பர்டோலியை வந்து பார்த்து, தாங்கள் கேட்டது கண்டது, இவைகளை வைத்துக் கொண்டு, ராஜிசெய்ய முயன்றிருந்தால், நன்றாயிருந்திருக்கும்.

ஆனால் இவர்களில் ஒருவர் மாத்திரம், பர்டோலியைப் போய்ப் பார்த்துவிட்டு, தாம் செய்த விசாரணைகளை யெல்லாம் திரட்டி, தேசத்தாருக்குத் தெரிவித்தார். இவர்தான். பம்பாய் சர்வகலாசாலையின் சட்டசபை மெம்பரான ஸ்ரீ கே. எம். முன்ஷி அவர்கள். இவர், கவர்னரோடு கடிதப்போக்கு வரத்துச் செய்தது, ஏற்கனவே தெரிந்த விஷயம். கவர்னருடைய பதில், "சட்டவரம்புக் கிளர்ச்சிக்காரரான" முன்ஷிக்குக்கூடத் திருப்தி அளிக்கவில்லை. அவர் கவர்னரைப் பேட்டி கண்டார். பேட்டி கண்டும், முன்ஷிக்குச் சமாதானம் உண்டாகவில்லை. பர்டோலியை நேரிலே போய்ப் பார்த்து, தாம் இன்னது செய்யவேண்டும் என்று தீர்மானிக்க, முடிவு செய்துகொண்டார். முன்ஷி ஒரு பிரபல, ஹைகோர்ட்டு வக்கீல்.

பர்டோலிக்குப் போனர். பல கிராமங்களைச் சுற்றிப் பார்த்தார். கிராமத்தார்களோடு கலந்து பேசினர்; அவர்களிடம் கேட்கவேண்டிய கேள்விகளை யெல்லாம் கேட்டார். ஆண், பெண், இருபாலாரையும் கேட்டார். கூட்டங்களில் பிரஸன்னமா யிருந்தார். இதன் பயனாக, "தமது ஆட்சேபத்தை (ஸர்க்கார் கையாளும் முறையைக் கண்டித்து) அழுத்தமாகத் தெரிவிக்க வேண்டும் என்ற துக்ககரமான முடிவுக்கு" வந்துவிட்டார்.

ஜூன்மீ 17௳ முன்ஷி அவர்கள் கவர்னருக்கு ஒரு 'ஆண் பிள்ளைத்தனமான' கடிதம் எழுதினர். பர்டோலி ஜனங்களின் நிலைமையையும், அவர்களுடைய கட்டுப் பாட்டினுலும் மௌனத் தியாகத்தினுலும் ஸர்க்கார் அதிகாரிகள் வந்துள்ள திக்கற்ற நிலைமையையும் அவர் விவரமாக, கடிதத்தில் கண்டிருந்தார். ஒன்று மட்டும் ஞாபகம் இருக்க வேண்டும். ஸர்தாரோ அல்லது மகா ஜனங்களோ கூப்பிட்டு, முன்ஷி பர்டோலிக்குப் போகவில்லை. அவர் நினைத்த மாத்திரத்தில், திடீரென்றும் போகவில்லை. அரசாங்கத்தாருக்குப் பல கடிதங்கள் எழுதி, அவர்கள் தங்கள் கடமையை உணரச் செய்ய என்ன வெல்லாம் முடியுமோ, அதை யெல்

லாம் செய்து பார்த்த பிறகு தான், முன்ஷி பர்டோலிக்குப் புறப்பட்டுப் போனார்.

அவரை, ஜனங்களிடம் அநுதாபம் கொண்டவராக யாரும் கருதவில்லை. தமது சட்ட சபைப் பதவியை ராஜி நாமாச் செய்வார் என்றும் யாரும் எதிர் பார்க்கவில்லை. முன் கூட்டியே, மனதிலே, யாதொரு முடிவையும் செய்து கொண்டு, அவர் பர்டோலிக்குப் போகவுமில்லை. ஆனால் நேரே போய்ப் பார்த்ததில், உள்ள நிலைமை அவருக்கு நன்றாய்த் தெரிந்தது. உள்ள நிலைமையைத் தெரிவித்து, ஸர்க்காரைக் கண் விழிக்கச் செய்வதற்காகவே, பத்திரிகைகளுக்கு ஒரு நிருபம் எழுதினார் முன்ஷி. இதைப் பிரசுரிக்காத பத்திரிகை இந்தியாவில் எதுவுமேயில்லை எனலாம். அந்தக் கடிதத்தின் சில பகுதிகள்:—

"80000 ஜனங்கள் (ஆண், பெண், குழந்தை) கட்டுப்பாடாக நின்று, எதிர்த்துப் போராட வேண்டுமென்று ஆவேசத் தீர்மானம் கொண்டிருக்கிறார்கள். உங்களுடைய (ஸர்க்காருடைய) ஜப்தி ஆபீசர் க்ஷவரம் செய்து கொள்ள வேண்டுமானால், (பர்டோலிக்கு வெளியே போனால் தான்) பல மைல்கள் பிரயாணம் செய்தால் தான், க்ஷவரம் பண்ணிக் கொள்ள முடியும். உங்களுடைய உத்தியோகஸ்தரின் மோட்டார்க்கார் உளையில் மாட்டிக்கொண்டால், 'பர்டோலியாலே பிழைப்பதாகக் கூறும் கிளர்ச்சிக்காரர்' வல்லபாய் இருக்கிறாரே, அவர் தயவு இல்லாவிட்டால், கார் மாட்டிக் கொண்ட இடத்திலேயே கிடக்க நேரிடும்.

"ஆயிரக் கணக்கில் பெறுமான நிலங்களை, சொற்பத் தொகைக்கு நீங்கள் (ஸர்க்கார்) கார்டாவுக்கு விற்றிருக்கிறீர்களே, அவருக்கு வீடு கூட்டக்கூட ஒரு ஆள் அகப்படவில்லை. வல்லபாயின் அனுமதியின் பேரில் கிடைத்தாலொழிய, உங்கள் கலெக்டருக்கு ரயில் ஸ்டேஷனில் போக்கு வண்டி கிடைப்பதில்லை. நான் பார்த்த கிராமங்களிலும், ஆண் பெண் குழந்தை அடங்கலும் எல்லாரும் தங்கள் நடத்

தைக்கு வருந்துவதாகவாவது, தாங்கள் கொண்ட உறுதியில் ஆடிப் போனதாகவோ, தளர்ந்ததாகவோ தெரியவில்லை.

"கிராமம் கிராமமாய், வல்லபாய் போய்க் கொண்டிருக்கையில், தாங்களே, யாதொரு தூண்டுதலுமின்றி, ஜனங்கள் எல்லோரும் அவரைத் தரிசனம் செய்து வணங்குகிறார்கள். பெண்கள், கிழவிகள் (படிக்காதவர்கள்)—கந்தல் துணிகளைக் கட்டிக் கொண்டிருப்பதையும் கவனிக்காமல்—வல்லபாய் முன் வந்து, ஜயக் குறியாக, அவருடைய நெற்றியில் குங்கும திலகமிட்டு, தாங்கள் பாடுபட்டு உழைத்துச் சம்பாதித்த ஒன்றிரண்டு ரூபாய்களை, இயக்கத்துக்காக, அவர் காலில் வைத்து வணங்குகிறார்கள். இந்த நெறியில்லாத ஸர்க்காரின் தவறான செயல்களை, பாட்டாக அமைத்து, கிராமத்து மெட்டில் பாடுகிறார்கள்.

"விரும்பாத ஜனங்களுக்கிடையே அயலூர்ப் பேர்வழிகள் வந்து பலவந்தமானதொரு கிளர்ச்சியைச் செய்து வருகிறார்கள் என்று ஸர்க்கார் ரிப்போர்ட்டுகள் கூறி வருகின்றனவே, அது ரொம்பவும் குறைத்துப் பேசினாலும், முற்றிலும் தவறு என்று என் மனதுக்கேனும் நான் ஒப்புக்கொள்ள வேண்டும். ஸர்க்கார் பயங்கர ஆட்சியமுல் நடத்த முயலுவதைக் கண்டு, ஜனங்கள் சிரிக்கிறார்கள். அவர்கள் இது வரையிலும் பொறுத்து விட்டார்கள். இனியும் பொறுக்கத் தயாரா யிருக்கிறார்கள்.

"ரொம்ப மரியாதையாக 'ஸ்மார்ட்' துரையைப் பற்றி அவர்கள் பேசினல், அவரை 'எருமை மாடுகளுக்காக ஆறாப் பசி கொண்ட புலி' என்கிறார்கள். ஜப்தி ஆபீசரைக் 'குட்டிக் கமிஷனர்' என்கிறார்கள். உங்களுடைய, துரு துருவென்று அலைகிற டெபுடிகலெக்டர் ஆல் மூலா இருக்கிறாரே, அவரைப் பற்றி நாகரிகமாகச் சொல்லுவதைக்கூட, நான் எழுத்தில் எழுத முடியாது. வேலையிலே அவர் எவ்வளவு சூரனே, அதற்குத் தகுந்தாற் போல, அவருக்குக் கொஞ்சம் நிதானம் இருந்தால் நல்லது என்று என் கருத்து! ஸர்க்கார் நலத்தைக் கருதிச் சொல்லப்பட்டதாகும் இது.

" தங்கள் ஆடு மாடுகளைக் காப்பாற்றும் பொருட்டாக' 80000 ஜனங்கள், தங்கள் கால் நடைகளையும் உள்ளே வைத்துப் பூட்டிக்கொண்டு, ஆரோக்கியமில்லாத சிறு வீடுகளுக்குள்ளாகவே இருந்து கொண்டு, மூன்று மாதத்துக்கு அதிகமாக, காலந் தள்ளி வருகிறார்கள். கிராமங்கள் காலி; சத்தமேயில்லை. வெகு பேர்கள் ஊரைவிட்டுப் போய்விட்டார்கள். ஊருக்கு எவரேனும் வந்தால், வந்தது ஜப்தி உத்தியோகஸ்தரா அல்லவா என்று பார்த்துச் சொல்லமட்டும் காவல் தொண்டர்கள் இருந்தார்கள். ஜப்திக்கு வரவில்லை என்று தெரிந்ததும், வீட்டுப் பெண் பிள்ளைகள் கதவுகளைத் திறந்து, என்னை உள்ளே விட்டார்கள். என்ன இருட்டு! என்ன துர்நாற்றம்! என்ன குப்பை! மாடுகள் வெளுத்து விட்டன; தோலிலே புண். எல்லாம் எலும்புக் கூடுகள்.

"ஜப்தி ஆபீசர் கையில் மட்டும் ஒப்புவிக்க மாட்டோம்; எவ்வளவு காலம் வேண்டுமானாலும் வீட்டுக் குள்ளாகவே இருக்கத் தயார் என்று அவர்கள் உறுதியாய்ச் சொல்லுவதைக் கேட்கும்பொழுது, தற்போதைய ஜப்தி நடவடிக்கைகளைக் கற்பனை செய்த மூளை, அவைகளை அமுலுக்குக் கொண்டு வரும் கடுமை, இவைகளுக்கு அனுமதி தந்த அரசியல் நிர்வாக முறை—இவைகள் பண்டைக் காலத்துப் 'பழைய பஞ்சாங்கங்களில்' தான் காண முடியும் என்று எண்ணாமல் என்னால் இருக்க முடியவில்லை.

" உங்கள் அதிகாரிகள், போரில் ஜயித்தவர்கள் கையாளும் பழி வாங்கும் முறைகளைக் கையாளுகிறார்கள். கேஸ்களில், நீதி சரியாக வழங்கப்படவில்லை. அதிகாரிகள் ஜனங்களை உதாஸீனமாகப் பேசுவதும், சின்னக் குற்றங்களுக்கும் பெரிய தண்டனைகளைக் கொடுப்பதும், செருக்குக் கொண்ட அறிவிப்புகளின் இடி முழக்கமும், அதிகாரிகள் பயங் காண்பிப்பதும்—இவைகளைக் கண்டு, ஜனங்கள் நகைக்கிறார்கள்.

" இவைகள் யாவையும் பார்த்த பின், நான் என்ன முடிவுக்கு வந்தேன் என்றால், நான் ஸர்க்காரிடம் பக்தி

கொண்டவனுயினும், அரசாங்கத்தை ஆதரிக்க முடியாது என்பதுதான். ஸர்க்கார் இழைத்து வரும் கொடுமைக்கு, ஒரே வழியில் தான், என்னுல் பதில் கொடுக்க முடியும். அதாவது எனது சட்ட சபைப் பதவியை நான் ராஜிநாமாச் செய்து விடுகின்றேன். எனது சர்வ கலாசாலை வாக்காளர்களுக்கு மனுச் செய்து கொள்ளுகிறேன்."

சகோதர வாஞ்சையும் உடனுணர்ச்சியும் உள்ள மனிதர்களை, தேசமெங்கும் மயிர்க்குச் செறியும்படியாக, இந்தக் கடிதம் செய்து விட்டது. பொது ஜனப் பார்வைக்கு முன்னுல், ஆணி அறைந்தது போல, பர்டோலி ப்ரச்னை வந்து நின்று கொண்டது. தாம் ராஜிநாமாச் செய்ததோடு நின்று விடவில்லை முன்ஷி. பயங்கர ஆட்சியை நுணுக்கமாக விசாரித்து விடவேண்டும் என்றும் தீர்மானம் கொண்டார். நீதி மனப்பான்மை கொண்ட கமிட்டி யொன்றை நிர்மாணம் செய்தார். அதன் அங்கத்தினர்கள் (1) முன்ஷி, (2) ஹுஸேன் பாய் லால்ஜி, (3) டாக்டர் கில்டர், எம். டி., எப். ஆர். ஸி. எஸ்., எம். எல். ஸி., (4) ராவ் பகதூர் பீம் பாய் நாயக், (5) சிவதாஸனி (6) சந்திர சூடர் எம். எல். ஸி., (7) பி. ஜி. கெர், வக்கீல் (காரியதரிசி).

இந்தக்கமிட்டியார், தாங்கள் தொண்டு செய்யமுன்வந்த பம்பாய், சூரட்டு வக்கீல்களின் மூலமாக, 126 சாட்சிகளை பர்டோலியில் விசாரித்தார்கள். இந்த விசாரணையில் ஒத்துழைக்க வேண்டும் என்று அரசாங்கத்தாரை வேண்டிக் கொண்டார்கள். ஸர்க்கார் ஒத்துழைக்க மறுத்து விட்டார்கள். ஆஜராகாத, 'எக்ஸ்பார்ட்டி' தீர்ப்புச் சொல்லும் கேஸ்களில் விசாரணை பூரணமாக நடந்தது என்று மரியாதைக்கு எவ்வாறு சொல்ல முடியாதோ, அதைப் போல, இந்த விசாரணையில் சிறிது 'மூளி' இருந்ததாக, பெயருக்குச் சொல்லலாம். ஆனுல் தாங்கள் வந்த முடிவுக்குப் போதுமான ஆதாரவும் சாட்சியமும் உண்டா என்பதைப் பற்றிப் பூரணமான ஜாக்கிரதை எடுத்துக் கொண்டார்கள் இவர்கள்.

முன்ஷி எழுதிய கடிதத்தின் மூலமாக, விஷயங்களை

நேரே பார்த்து விசாரிக்க வேண்டுமென்ற ஆவல் கவர்னருக்காவது, ரிவினியூ மெம்பருக்காவது உண்டாக வில்லை. ஆனால், போராட்டக் காலத்தில், முதல் தடவையாக வேனும், ஸ்மார்ட் அவர்களை பர்டோலிக்குப் போகத் தூண்டியது இந்தக் கடிதம் என்று சொல்லலாம்.

பம்பாய் "இந்திய வர்த்தகச் சங்கத்தார்", ராஜி செய்ய முயன்றார்கள். அவர்களுள் சிறப்பாக, ஸர் புருஷோத்தம தாஸ் தாகூர் தாஸ், ரொம்பவும் முயன்றார். கலெக்டர் சொன்னதன் பேரில், ஜூன் மாத ஆரம்பத்தில், புருஷோத்தம தாஸ், கமிஷனரை சூரட்டில் பார்த்தார். கமிஷனரோடு கலந்து பேசலாம் என்று புருஷோத்தம தாஸ், வல்லபாயையும் கூப்பிட்டார். ஸர்தாருக்கு முக்கியமான வேறு அலுவல்கள் இருந்தபடியால், அவர், புருஷேத்தம தாஸிடம் மகாதேவ தேசாயை அனுப்பினார்.

"நான் கமிஷனர் ஸ்மார்ட் அவர்களிடம் நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தேன். இந்த இயக்கத்தை நசுக்குவதற்காக எவ்வளவு தூரம் போக வேண்டுமானாலும் அவ்வளவு தூரம் போகத் தயாரென்றும் இந்த மாதத்துக்குள் சத்தியாகிரகிகளில் பெரும் பான்மையோர் சரணகதி செய்து விடுவார்களென்றும் கமிஷனர் நம்பிக்கையோடிருக்கிறார்" என்று புருஷோத்தம தாஸ் சொன்னார். சத்தியாக்கிரகிகளின் பொறுமை சக்தி யின்னதென்றும் பட்டாணிகளும் ஜப்தி ஆபிசர்களும் செய்த அட்டூழியங்களால், சர்க்காரின் பெயர் எவ்வாறு கெட்டுப் போய் விட்டது என்றும் மகாதேவ தேசாய் புருஷோத்தம தாஸுக்கு விளக்கிக் காண்பித்தார். இதைத் தெளிவுபடுத்தினார் தாகூர்தாஸ் கமிஷனரிடம்.

வர்த்தகச் சங்கத்தின் பிரதிநிதியான லால்ஜி நாரன்ஜி தமது சட்டசபை மெம்பர் பதவியை ராஜிநாமாச் செய்வதா என்பதைப்பற்றி வர்த்தக சங்கத்தார் யோசித்தார்கள். சங்கத் தலைவர் மோடி அவர்கள் கவர்னருக்கு லிகிதம் எழுதினார். ஆனால் கவர்னரிடமிருந்து மோடிக்கு வந்த பதில், முன்ஷிக்கு வந்த ஜவாப்பைக் காட்டிலும் கடுமையாக விருந்தது.

புருஷோத்தமதாஸ், காந்திஜியை, சபர்மதியில் போய்ப் பார்த்தார். அந்த சமயம் வல்லபாயும் அங்கே இருக்க வேண்டுமென்று வேண்டிக்கொண்டார், "வர்த்தக சங்கத்திலிருந்து கவர்னர் அவர்களிடம் ஒரு தூதுக் கோஷ்டி அனுப்புவதாக உத்தேசம். அதற்குமுன், "ஸத்தியாக்கிரகிகளின் 'குறைந்த' நிபந்தனைகளைத் தெரிந்துகொண்டு, ராஜி செய்ய ஆசை" என்று ஸர்தாருக்கு அறிவித்திருந்தார்.

காந்திஜியைப் பார்த்த பின்னர், புருஷோத்தமதாஸ், மோடி, லால்ஜி நாரான்ஜி மூவரும், பூனாவில், கவர்னரிடம் தூதுபோய்ப் பேட்டி கண்டார்கள். "பேட்டி சாரமில்லாமற் போய்விட்டது. மகாநாடு கூட்டி, அதற்கு வல்லபாயை அழைக்கவேண்டும், அப்படிச் செய்தால், தகராறுகள் யாவும் தீர்ந்துபோய், ராஜி உடனே ஏற்பட்டுவிடும் என்றோம். இதைச் சொன்னவுடனே, நிர்வாக மெம்பர்களுக்கு ஆத்திரம் வந்ததைப் பார்க்கவேண்டுமே! புரட்சிக்கார வல்லபாயை, மேன்மை தங்கிய கவர்னர் அவர்கள் அழைக்கவாவது! பேட்டி சாரமில்லை. மகாநாடு கூட்டிப் பயனில்லை என்று கலைந்தோம். பிறகு தனியாக, கவர்னரை நான் பேட்டி கண்டேன். கவர்னர் அவர்கள் ரொம்பவும் அனுதாபம் காண்பித்தார். எப்படியாவது, இந்தப் பிரச்னையை தீர்ப்பதற்கு அவருக்கு ஆவல்தான்! ஆனால், பூராத் தோல்வியையும் ஒப்புக்கொள்ள, அவர் விரும்பவில்லை. வரியை முன்னாலே செலுத்திவிடவேண்டும்; மூன்றுவது மனிதனிடம் ஒப்படைத்தாலும் போதும். அவ்வாறு செய்தால் விசாரணைக் கமிட்டி நியமிக்கப்படும். வரியை முந்திக் கட்டிவிடவேண்டும்—இது கவர்னரின் குறைந்த நிபந்தனை" என்று புருஷோத்தம தாஸ் பின்னர், மகாதேவ தேசாயிடம் சொன்னார். ராஜி செய்து முடித்துவிடலாம்போலத் தோன்றிற்று, தூது கோஷ்டியாருக்கு.

பம்பாய்க்கு வந்ததும், புருஷோத்தமதாஸ் வல்லபாயைச் சந்தித்து. பேட்டியில் நடந்ததைப் பூராவும் அவரிடம் சொன்னார். "ஸத்தியாக்கிரகிகளுக்கும் ஸர்க்காருக்கும் இடையே,

சந்திப்புக்கு இடம் கிடையாது” என்று இருவரும் முடிவுக்கு வந்தார்கள். “நடுநிலைமைகொண்ட கமிட்டி நியமிக்கவேண்டும் என்ற வேண்டுகோளை ஒப்புக்கொள்ளாமல், அதற்கு முன் புதிய வரியைக் கொடுத்துவிட வேண்டும் என்று வற்புறுத்துவது அபத்தம்” என்று காரணங் காட்டிக் கடிதம் எழுதி, வர்த்தகச் சங்கப் பிரதிநிதி லால்ஜி நாரான்ஜி தமது சட்டசபைப் பதவியை ராஜிநாமாச் செய்துவிட்டார்.

இந்த மத்தியஸ்தர்களால், அரசாங்கத்தாரின் மனம் எவ்வளவுதூரம் மாறிற்று என்று சொல்லமுடியாது. ஜனங்களின் மனதில் ஒன்றுமே ஏறவில்லை. ஸர்தார் சொன்னார்:

“கனிந்துவராத ராஜியைப்பற்றிக் கவலைப்படாதேயுங்கள். பழுக்குமுன், மாங்காயைப் பறித்துத் தின்றால் என்ன நேருகிறது என்று உங்களுக்குத் தெரியும். (புளிப்பு) பல்லைக் கொட்டிவிடும். ஆனால், பழுக்க விட்டுவிட்டாலோ, தானாகக் கனிந்து, கீழே விழும். அதன் நறுமணமும் தித்திக்கும் சாறும் உங்கள் பொறுமைக்குச் சன்மானங்களாக ஆகும். ராஜிக்குக் காலம் பக்குவமாகி விட்டால், அதை யாரும் சொல்லாமலே, நாம் தெரிந்துகொள்ளலாம். அரசாங்கத்தின் மனம் மாறியதாக, யாதொரு அடையாளமும் என் கண்ணில் படவில்லை. யாரோ சில பெண் பிள்ளைகள், ஜப்தி ஆபீசர் மூஞ்சியில் கதவைச் சாத்தினதற்காக, நிரபராதியான ஒரு குடியானவரை நேற்றுத்தான், மாஜிஸ்டிரேட் ஆறு மாதக் கடுங்காவல் சிட்சை செய்தார். செய்வது தவறு என்று எண்ணி, அடக்குமுறையை அரசாங்கத்தார் நிறுத்தாதவரையில், ராஜிப்பேச்சுச் சாத்திய மில்லை.”

மத்தியஸ்தர்களின் ராஜி முயற்சி எப்படிப்போனாலும் பாதகமில்லை. ஒரு நல்ல பலன் ஏற்பட்டதுதான் மகத்தான லாபம். துடுக்கான அதிகாரிகள் “புரட்சிக்காரன்” என்று வர்ணித்த வல்லபாய் நடத்தும் இயக்கத்தில், அது ரொம்பவும் அரசியல் சம்பந்தம் கொண்டது என்று ஸர்க்கார் சொன்னபோதிலும், அந்த இயக்கத்தில், தொழில் நடத்தும் பிரமுகர்களும் கோடீசுரர்களும் பரிவு காட்டி, கலந்துகொள்

ளுவது என்பது லாபமல்லவா? நாட்டின் 'அரசியல் உயிர்' வளர்ந்து வருகிறது என்பதை, இந்த சம்பவம் தெளிவாகக் காண்பிக்க வில்லையா?

## அத்தியாயம் 28.

வியாபாரிகளும் 'தொழில்' பிரமுகர்களும், பர்டோலிப் போராட்டத்தில் அனுதாபம் காட்டியது, ஒருபுறமிருக்க, வேறு மாகாணப் பொதுஜன ஊழியர்கள், முக்கியமாக, மித வாதிகள், இந்த இயக்கத்தில் அனுதாபம் காண்பித்ததுதான், சிறப்பாகக்குறிப்பிடத்தக்கதாகும். மற்றவர்கள் ஜீவகாருண்ய மேலிட்டால், மத்தியஸ்தம் செய்ய முன்வந்தார்கள் என்றால், மிதவாதிகளின் சிரத்தை என்னவெனில், நியாயம் கிடைக்க வேண்டியது என்பதிலே அவர்களுக்குத் திருஷ்டி (நோக்கம்). எனவே, மிதவாதிகள் போராட்டத்தை நேரிலே பார்வை யிட்டு, நன்றாக சம்பவங்களையும் சட்டத்தையும் அலசிப் பார்த்து, போராட்டத்தின் நியாயத்தை எடுத்துக் காண் பித்து, அந்த அளவில் இயக்கத்துக்கு ஆதரவு அளித்தார்கள். அதற்கு அடுத்தபடியாக, அவர்கள் இயக்கத்தில் கலந்து கொள்ளவில்லை. எல்லாக் கட்சிக்காரர்களும் சேர்ந்து, ஆத ரவு காண்பித்த இயக்கம், பர்டோலி சத்தியாக்கிரகப் போராட்டம் ஒன்றுதான் என்று சொல்லலாம்.

1928ஞு ஜுன்மீ மூன்றாவது வாரம், 'இந்திய ஊழி யர் சங்க'த்து மெம்பர்களான பண்டிட் ஹிருதயநாத குன் ஸுரு, ஸ்ரீ வேஸ் (ஸர்வெண்ட் ஆப் இந்தியா பத்திரிகையின் ஆசிரியர்) ஸ்ரீ அமிருதலால் தாக்கர், மூன்றுபேரும், போராட் டத்தை நேரே பார்வையிட்டு முடிவுக்கு வர, பர்டோலிக்குப் போனார்கள். ஸெட்டில்மெண்டு ரிபோர்ட்டுகளை நன்றாய்ப் படித்துவிட்டு, கிராமங்களுக்குள் சென்று, ஸத்தியாக்கிரகி களின் கட்சி, வேண்டுகோள், இவைகளைச் சோதிக்க ஏற்பாடு செய்தார்கள். ஜனங்கள் கஷ்டப்படுகிறதைப்பற்றி, முன்ஷி விரிவாக எடுத்துக் காண்பித்துவிட்டார். அது சம்பந்தமாக வேறு எவரும் எவ்வித வேலையும் செய்யவேண்டியதில்லை.

புதிய ஸெட்டில்மெண்டு நியாயமா, அல்லவா என்பதைப் பற்றி விசாரணை செய்வதுதான், மேற்கூறிய மூவர்களின் நோக்கம். இந்த நண்பர்களை இட்டுச் சென்ற ஒருவர், "பர்டோலியில் எவ்வளவு விரைவில், எவ்வளவு விஸ்தாரமாக, கதர் விருத்தியடைந்திருக்கிறது? கதரினால் ஜனங்களுக்கு எவ்வளவு லாபம் உண்டாயிருக்கிறது, பாருங்கள்; இரண்டொரு கதர் உற்பத்தி இலாகாவுக்குப் போகலாம்" என்று கூப்பிட்டுப் பார்த்தார். முடியாது என்று சொல்லிவிட்டார்கள் மூவரும். எனவே, இவர்கள் ரிவினியூ சம்பந்தமாகச் சொல்லக்கூடிய முடிவுகள் பட்சபாத முள்ளவைகளாயிருக்க முடியாது என்று சொல்லவும் வேண்டுமா?

அவர்கள் வெளியிட்ட ரிப்போர்ட்டின் வசன நடையைப் பார்த்தால், விநோதமாயிருக்கும். சொல் அலங்காரம், அடைமொழி, ஒன்றையும் காணமுடியாது. விஷயங்கள், யோசனை, முடிவு, இவைகளைத்தான் காண முடியும். அவர்கள் நான்கு ப்ரசனைகளில் தங்கள் கவனத்தைச் செலுத்தினார்கள். (1) மிராசுதார்களின் குத்தகைச் சீட்டிலிருந்து, சாகுபடி செய்பவர்கள் கொடுக்கும் குத்தகை வருமானத்திலிருந்து, கிஸ்தி நிர்ணயம் செய்யப்படுவதால், சாகுபடி செய்தவர்கள் கொடுத்த நெல், பணம் எல்லாம் சரியாக வரவு வைத்து, வரிசைப்படுத்தப்பட்டிருக்கிறதா என்பதை ஊன்றிக் கவனிக்க வேண்டும். இதிலே தவறு இருந்ததோ, ஸெட்டில்மெண்டு முழுதும் தவறு. (2) ரொக்கக் குத்தகைக்காகப் பயிர் செய்பவர்களின் வசம் சாகுபடி நிலம் எவ்வளவு பகுதி இருக்கிறது என்பதைக் கணக்கெடுக்க வேண்டும் (3) பழைய ஸெட்டில்மெண்டு நடைபெறுகிற காலத்தில், 'ராஜீயம் தெய்விகம்' முதலியன நேர்ந்த வருஷங்கள் நீக்கப்பட்டனவா? (4) குத்தகை நெல், பணம் வாங்குகிறார்களே மிராசுதார்கள், அதையே முழுதும் ஆதாரமாகக்கொண்டு, ஸெட்டில்மெண்டு செய்யலாமா என்று கவனிக்கவேண்டும். இது சம்பந்தமாக 'நிலவரி கோட்', 'ஸெட்டில்மெண்டு மானுவல்' நூல்களைப் படித்தல் நலம் என்று அவர்கள் மேற்சொன்ன புஸ்தகங்களைப்

படித்தார்கள். கிராம மகா ஜனங்களை, நேரிலே போய், விசாரித்தார்கள். குத்தகைச் சீட்டுகளை, குடித்தனக் கணக்குப் புஸ்தகங்களைப் புரட்டிப் பார்த்தார்கள். இவ்வளவும் செய்து, அவர்கள் வந்த முடிவுகள் கீழ்க்கண்டவாறு:—

(1) குத்தகை வருமானங்களை (ஸெட்டில்மெண்டு ஆபீசர்) வரிசைப்படுத்தி, சரியாக எழுதவில்லை. இது பெரிய குறை. அதாவது, பந்தகப் பத்திரங்கள், ஒத்திப் பத்திரங்கள், பூராக் குத்தகை நெல்லோ பணமோ வசூலாகாத பகுதிகள், நிபந்தனைக் குட்பட்ட கிரய சாஸனங்கள், இவைகளை ஒதுக்கி வைத்திருக்கவேண்டும். இவைகளை, ஸெட்டில்மெண்டை நிர்மாணம் செய்வதில் சேர்த்திருக்கப்படாது. இவைகளைச் சேர்த்துப் பார்த்திருக்கிறார் ஆபீசர். மிராசுதார் கைமுதல் போட்டு, நிலத்தை வளம் செய்ததன் மூலமாய் ஏற்பட்ட குத்தகை உயர்வுக்கு, ஒன்றுமே கழிக்கப்படவில்லை. இப்படிக் கழிக்கவேண்டு மென்று நிலவரி கோட், 107-வது பிரிவு சொல்லுகிறது.

(2) 1895-இல், நிலத்தைத் தாமே சாகுபடி செய்த மிராசுதார்கள் 100-க்கு 94 என்று சொல்லப்படுகிறது. எனவே 1926-இல், 100-க்கு இருபது பேர்கள்வரைக்கும் நிலத்தைக் குத்தகை சாகுபடிக்கு விடுகிற மிராசுதார்கள் இருப்பார்கள் என்று கொள்ளலாமே யொழிய, 100-க்கு முப்பது என்று சொல்லுவது ஆச்சரியமா யிருக்கிறது.

(3) உலக ராஜீயத்தால், விலைவாசி தூக்கிவிற்ற 1918-1919-யும் 1924-1925-யும்—இந்த இரண்டு வருஷங்களையும் தள்ளி, மற்றவருஷங்களைக் கணக்குப் பார்த்திருக்கவேண்டும்.

(4) குறை கொண்டதும், ஒத்துப் பார்க்கப்படாததுமான வாடகைப் புள்ளி விவரங்களை, கமிஷனர் நம்பி ஸெட்டில்மெண்டு செய்துவிட்டார்.

“மேற்கண்ட முடிவுகளுக்கு நாங்கள் வந்திருப்பதால், புதிதாக விசாரணை செய்யவேண்டும் என்று பர்டோலி மகா ஜனங்கள் கேட்பது முற்றிலும் நியாயம் என்றும் வீரம்காம்

தாலூகாவின் புதிய ஸெட்டில்மெண்டு மீண்டும் புனராலோசனை செய்யப்படும் என்று ஸர்க்கார் அறிவித்திருப்பதிலிருந்து, பர்டோலிக் கேஸையும் மறுபடியும் விசாரணை செய்ய வேண்டும் என்று கோருவது அசைக்க முடியாதது என்றும் நாங்கள் கருதுகிறோம்" என்று மூவரும் அறிக்கை விடுத்து விட்டார்கள்.

ஸ்ரீ வேல்ஸ் அவர்கள், இன்னும் கொஞ்சம் கூடவே சொன்னதாவது:—"தற்போதைய பர்டோலிப் போராட்டம் முற்றிலும் பொருளாதார சம்பந்தம் கொண்டது. அரசியல் கிளர்ச்சியான கூட்டச் சட்ட மறுப்புக்கும் இதற்கும் சம்பந்தமே யில்லை. பர்டோலி விவசாயிகளுக்கு இழைக்கப்பட்டிருக்கும் தீமையைத் தீர்த்து வைப்பதற்காகவே, இதை நடத்தும் தலைவர்கள் தங்கள் முழுக் கவனத்தையும் செலவிடுகிறார்கள் என்றும், நான் பார்த்ததிலிருந்தும், உறுதியாக நம்புகிறேன். துளிக்கூட உண்மை இல்லாத அரசியல் போர்வையை இந்த இயக்கத்தின்பேரில் அரசாங்கத்தார் போடப் பார்ப்பது யுக்தமுமல்ல, நியாயமுமல்ல."

அப்படி இப்படி இருந்தவர்களின் மனதைக்கூட, இவர்களுடைய யாதாஸ்து திருப்பி, பர்டோலிப் போராட்டத்திலே அனுதாபம் உண்டாகும்படியாகச் செய்தது. வழவழ வென்று எழுதிவந்த இந்தியப் பத்திரிகைகள்கூட, சிறிது உறுதியாக எழுதத் துவக்கின. பர்டோலி விஷயத்தில் எல்லாக் கட்சியார்களையும் ஒன்று சேரும்படி செய்தது இவர்களுடைய ரிப்போர்ட்டு.

மணிலால் கொத்தாரி—அந்த அபூர்வமான மனிதரைப் பற்றி என்ன எழுதுவது? அயர்வு இல்லை; சோர்வு கிடையாது. எந்தக் காரியம் செய்யணும்! தயார். பணம் வசூல் பண்ணவேண்டுமா? சரி. தலைவர்களைப் பேட்டி காணவேண்டுமா? நல்லது. பர்டோலி சம்பவங்களை உலகத்துக்கு, பத்திரிகைகளின் மூலமாய் விளம்பரப்படுத்த வேண்டுமா? ரொம்ப சந்தோஷம். இந்தப் போராட்டத்தைப்பற்றி தேசத் தலைவர்களிட மிருந்து, அபிப்பிராயம் வாங்கிவர வேண்டுமா?

உடனே தயார். கொத்தாரி "அசுர வேலை" செய்தார். இவருடைய அரிய முயற்சியால், தலைவர்கள் தங்கள் அபிப்பிராயங்களை வெளியிட்டார்கள்.

பண்டித மோதிலால் நேரு:—"ஸெட்டில்மெண்டைப் பற்றி மீண்டும் விசாரணை செய்யத் தாங்கள் தயாரா யிருப்பதாயும் ஆனால் ஸெட்டில்மெண்டுப் படிக்கு முதலிலே கிஸ்தியைப் பட்டாதார்கள் கட்டிவிட வேண்டும் என்றும் அரசாங்கத்தார் சொல்லுவதாக எனக்குத் தெரிகிறது. இவ்வாறு அரசாங்கத்தார் வாதம் செய்வது தவறு. ஸெட்டில்மெண்டு தவறு, நியாயமற்றது, ஆகையால் அதை மறு விசாரணை செய்ய வேண்டுமென்று சொல்லும்பொழுது, அந்த ஸெட்டில்மெண்டுப் படிக்கு வரி செலுத்தவேண்டுமென்று அரசாங்கத்தார் கேட்பது அபத்தமாகும், தர்க்கத்துக்கு ஒவ்வாததாகும்."

ஸர் அலி இமாம்:—"இரு கட்சிக்காரர்களின் பிரதிநிதிகள் கொண்ட கமிட்டியை (விசாரணை செய்வதற்காக) அரசாங்கத்தார் நியமனம் செய்தால், இந்த ப்ரச்னையைத் தீர்த்துவிட முடியும்."

ஸி. ஒய். சிந்தாமணி, "லீடர்" பத்திரிகையின் ஆசிரியர்:—"இதுவோ சர்வ வல்லமையுள்ள ராஜாங்கம்! அவர்களுடைய இச்சைதான் சட்டம். அவர்களுடைய தவறே, அனேகமாக சட்டமாக உருவெடுக்கிறது.—லாபம் அடைவதற்கு ஒன்றுமேயில்லை; நஷ்டப்படவோ எல்லாம் இருக்கிறது—இந்த நிலைமையில் ஏழைகள் வேண்டுமென்று போராடவேண்டும் என்று தூண்டக்கூடிய அபத்தமான தன்மை, மனித ஸ்பாவத்தில் இருக்கமுடியுமா? தங்கள் கட்சி நியாயத்தை முழுதும் உணர்ந்தவர்களாய், உயர்த்தப்பட்ட வரியை ரத்துசெய்துவிட வேண்டும் என்று கேட்க, பர்டோலி மகாஜனங்களுக்கு பாத்தியம் உண்டு. அவ்வாறு கேட்காமல், விசாரணைக் கமிட்டி நியமனம் செய்தால்போதும் என்று அவர்கள் போராடுவது அவர்களுடைய சக்தியையும் நிதானத்தையும் காண்பிக்கின்றது. இதற்குக்கூட இணங்கமாட்டோம் என்று அரசாங்கத்தார் தயங்குவது அவர்களுடைய கட்சி

நிலைநாட்டத் தக்கதல்ல என்பதைத் தெளிவாகக் காண்பிக்கிறது. வரியைக் கொடுத்துவிடுங்கள், பிறகு பார்ப்போம் என்று பட்டாதார்களுக்கு அரசாங்கத்தார் பதில் சொல்லுவது விநோதமே. பர்டோலிப் போராட்டம் சட்ட வரம்புக்குட்பட்ட கிளர்ச்சியாகும். அது மிதவாதக் கொள்கைகளுக்கு முரண் கொண்டதல்ல".

ஸர் தேஜ்பகதூர் ஸாப்ரூ:—"அரசாங்கத்தாரின் நற்பெயரை உத்தேசித்துச் சொல்லுகிறேன்; புதிய வரியைப் பற்றி பர்டோலி மகாஜனங்கள் சொல்லிக்கொள்ளும் குறைபாடுகளைப்பற்றி மட்டுமல்ல, பலவந்தமாக கிஸ்தி வசூல் செய்ய, கையாளப்பட்ட முறைகளைப்பற்றியும் விசாரணை செய்ய, நடுநிலைமை வாய்ந்த கமிட்டியை அரசாங்கத்தார் நியமனம் செய்யவேண்டியது அவசியம் என எனக்குத் தோன்றுகிறது."

ஸெட்டில்மெண்டு ஆபீசர் கொடுத்த புள்ளி விவரங்கள் அபத்தமென்றும் அவைகளை வைத்துக்கொண்டு, அவர் வந்த முடிவுகள் இன்னும் அபத்த மென்றும், புள்ளி விவரங்களில் நிபுணரான ஸ்ரீ பி. எப். மதன் என்பவர் தெளிவாய் எடுத்துக் காண்பித்தது குறிப்பிடத் தக்கது. பின்னர், பர்டோலி விசாரணை நடைபெறுகையில் கூட, விசாரணை உத்தியோகஸ்தர்கள்முன் சாட்சியம் சொல்லத் தயார் என்றும் அவர் சம்மதித்தார்.

இந்தியப் பத்திரிகைகள் யாவும் போராட்டத்தை ஆதரித்தன. பம்பாய் "டைம்ஸ் ஆப் இந்தியா" பத்திரிகை மட்டும் ஆதரிக்காமல், அரசாங்கக் கட்சியை ஆதரித்து வந்தது, "ஸ்டேட்ஸ்மன்", "பயோனீர்," இரண்டு பத்திரிகைகளும் எப்பொழுதும் ஸர்க்காரை ஆதரித்து எழுதுவதுதான் வழக்கம். ஆனால் அவைகள் கூட சத்தியாக்கிரகத்தை ஆதரித்தன. பயோனீர் எழுதியதாவது:—"முக்கியமான ஒரு விஷயத்தை, தவக்கமன்னியில் சொல்லிவிட வேண்டியதுதான். பர்டோலித் தகராரைக் கவனித்து, விஷயங்களைத் தெரிந்து கொண்டவர்களுக்கு, பர்டோலி மகா ஜனங்களின் பக்கத்தில்

நியாயம் இருக்கிற தென்றும் அவர்கள் கேட்கும் விசாரணை நியாயம். நேர்மை, புத்திக்கு ஒவ்வினது என்றும் தான் படும்."

ஸத்தியாக்கிரகத்துக்குச் சாதகமாக, இத்தனை அபிப்பிராயங்கள் வெளிவந்த பின்னர், எந்த அரசாங்கமும், அலட்சியமாக இருக்க முடியாது. என்றாலும் பம்பாய் அரசாங்கத்தார் காலம் கடத்திக்கொண்டே வந்தார்கள்.

## அத்தியாயம் 29.

பர்டோலியில், இப்பொழுது, இரண்டுவித சக்திகள் வேலை செய்துவந்தன. ஒன்று சத்தியாக்கிரக சக்தி, மற்றொன்று ஸர்க்கார் சக்தி. இவையிரண்டும் ஒன்றோடொன்று உறைய உறைய, விநோத விளைவுகள் நேர்ந்தன.

பட்டாணிகள் அட்டூழியம் செய்கிறார்கள் என்று தேசமறிய விளம்பரமானவுடன், அவர்களை பர்டோலியில் வைத்துக் கொள்ள வேண்டாம் என்று பம்பாய் ஸர்க்கார் உத்தரவு போட்டார்கள். உத்தரவு போட்டும், பத்துநாள் சென்றது, பட்டாணிகள் பர்டோலியிலிருந்து வெளியேற. சில்லறை அதிகாரி தெய்வங்களின் சேஷ்டை! ஜப்தி ஆபீஸர்கள் "குறுக்கே நெடுக்கே" போய்க்கொண்டிருந்த போதிலும், ஜப்தி நடவடிக்கைகள் அதிகமாக எடுத்துக் கொள்ளப்படவில்லை. அவைகள் குறைந்துகொண்டு வந்தன.

அவர்கள் ஜப்தி செய்த எருமைமாடுகள், ஸர்க்கார் தாஸர்களுக்கும், ப்யூன்களுக்கும், போலீசாருக்கும் "சிமிட்டா பொடி" விலைக்கு விற்கப்பட்டன! இப்படி விற்ற பணத்தையோ, மாடுகளைக் காப்பாற்ற வேண்டிய செலவுக் கணக்கில், நியாயம் சிக்கனம் இவைகளைக் கவனிக்காமல், தாராளமாய் எழுதினார்கள் அதிகாரிகள். இதற்கும் மிஞ்சிய தொகையை, கிஸ்திக்கு வரவு வைத்துக்கொண்டு, மாட்டுக்குடையவர்களுக்கு ரசீது அனுப்பினார் தாசில்தார். இந்த மாதிரி ரசீது தொகை ரூபா 4-8-0 க்குமேல் எந்தச் சமயத்திலும் அதிகப்பட்டதில்லை. ரூ. 150 ரூ. 200 பெறும்படியான

மாடுகளை விற்று, பவுண்டுத் தீனிச் செலவைக் கழித்து, ரூ. 4-8-0 மிச்சப்படுத்துகிறது! ஒழுங்கு முறைதானே? இதை மிராசுதார்கள் பொறுப்பார்களா? அவமானமாகக் கருதினார்கள்; ரசீதுகளைப் பெற்றுக்கொள்ள மறுத்துவிட்டார்கள்.

கடைசியாக, பெரியதுரை, கமிஷனர் ஸ்மார்ட் அவர்கள் ஜூன்மீ 19வ பர்டோலிக்கு வந்து சேர்ந்தார். 19வ தானே, பறிமுதல் நோட்டீஸ்களுக்கு, கடைசி கெடு போடப்பட்டிருந்தது? 20வ பிறந்தால், நோட்டீஸில் கண்ட நிலங்கள் சர்க்காரைச் சேர்ந்துவிட வேண்டுமல்லவா? எனவே, 19வ கமிஷனர் அவர்கள் பர்டோலியில் முகாம் போட்டது பொருத்தம்தான். அவர்கூட ஸ்ரீ ஹீலி என்பவர் வந்தார். ஸ்ரீ ஹீலி அவர்கள் பர்டோலிப் போராட்டத்துக்கென்று சிறப்பாக நியமிக்கப்பட்ட போலீஸ் சூபிரண்டு. இவர்கள் இருவரும், இந்த சமயம் பார்த்து பர்டோலிக்கு வர, வேறு காரணமும் உண்டு.

“ஸர்க்கார் கிஸ்தி சங்கதி எப்படியானாலும் சரி, நிலத்தை சாகுபடி செய்வதை மட்டும் நிறுத்த வேண்டியதில்லை” என்று வல்லபாய் தாக்கீது அனுப்பிவிட்டாரே, பிறகு குடியானவர்கள் சும்மாக் கைகட்டிக்கொண்டு, சாகுபடி செய்யாம லிருப்பார்களா? பறிமுதலான நிலங்களை, குடியானவர்கள் பயிர் செய்ய எத்தனித்தால், ஸர்க்கார் கொடி, எங்கே, எப்படிப் பறக்கும்? நியாயமாய் அரசாங்கத்தாருக்கு ஆத்திரம் வர வேண்டியதுதானே? சாகுபடியைத் தடுப்பதற்கும், எந்தவித நடவடிக்கைகள் எடுத்துக்கொண்டால், குடியானவர்கள் தளர்ந்துபோய்க் கீழ்ப்படிவார்கள் என்பதைக் கலந்து யோசித்து வழி தேடுவதற்குமாக, இரண்டு அதிகாரிகளும் பர்டோலிக்கு 19வ வந்து சேர்ந்தார்கள்.

பறிமுதல் நோடீசுக்கு மீறி சாகுபடி செய்யவாவது? ஸர்போன் கிராமத்தில் பலர் சாகுபடி செய்ய ஆரம்பித்துவிட்டார்கள். ஸர்க்கார் பார்த்தார்கள். பெயர் கெட்டுப் போகப்படாதே! உடனே ஒரு துக்கடா அறிவிப்பு. “நவசாரி,

கொட்டையடிக்கும் பாக்டரி சொந்தக்காரர் கேலாபாய் பாரக்ஜி அவர்கள் மூலமாய், அவரிடம் வைக்கப்பட்டிருந்த, பஞ்சை ஜப்திசெய்து விற்றவகையில், கிஸ்தி வசூலுக்காக உளவடைத்துக்கொண்ட ரூ. 3236-3-1யும், ஸர்போன் பஞ்சுச் சங்க மெம்பர்கள்பேரால் வரவு வைத்துக்கொண்டபடியால், அவர்கள் தங்கள் நிலங்களைத் தாராளமாகச் சாகுபடி செய்யலாம்" என்று ஸர்க்காரால் அறிவிப்புச் செய்யப்பட்டது.

ஸர்போன் மிராசுதார்களுக்கு, இதைக்கண்டதும் ஆச்சரியம். தங்கள் பஞ்சுக்காக, அவர்கள் ஏற்கனவே, பாக்டரியிலிருந்து பணம் வாங்கிக் கொண்டாகி விட்டது. எங்கேயிருந்து, ஸர்க்கார் கிஸ்திக்கு, எந்தப் பணத்தை உளவடைத்துக் கொண்டார்கள் என்று அவர்கள், ஆச்சரியப்பட்டார்கள். பர்டோலி ஜின்னின் பாக்டரி சொந்தக்காரர் நாரன்ஜீ துலாப் அவர்கள், வங்கனேர் சுற்றுப்புறத்திலுள்ள மிராசுதார்கள் சிலரின் பஞ்சை பஞ்சு சூபிரண்டு மூலமாய், சூரட்டு வியாபாரிகள் இரண்டுபேர்களிடம் ரூபா 73000-க்கு விற்றார். இந்தப் பணத்தை, ஸர்க்கார் கிஸ்தி பாக்கிக்காக எடுத்துக் கொண்டு விட்டார்கள். தனி நபர் இப்படிச் செய்திருந்தால் கையாடல் குற்றத்துக்கு ஜவாப்புச் சொல்லவேண்டி யிருக்கும். விற்றது யார், யாருடைய பஞ்சு, எவ்வளவு பஞ்சு என்று கூட ஸர்க்கார், கணக்கு எடுத்து வைக்க, சிரத்தை கொள்ளாதது வருந்தத்தக்கது.

இப்படி யெல்லாம் செய்து பார்த்தும், தங்கள் உபாயங்கள் பலிக்கவில்லை என்று கண்டும், இன்னும் அதிகமான அதிகாரங்கள் தங்களுக்குக் கொடுக்கவேண்டு மென்று கமிஷனரும் அவரது சிப்பந்திகளும், அரசாங்கத்தாரை வேண்டிக் கொண்டார்கள். அடக்கு முறை நம்பிக்கையில், அதிகாரிகள் இன்னும் அலுத்துப் போகவில்லை. இது ஒருபுறம்.

மற்றொரு புறத்தில், நாடுமுழுவதும் ஒரே எழுச்சி. பத்திரிகைகள் போராட்டத்தை ஆதரித்து எழுதுவதும் பொதுஜனங்கள் திரள்திரளாகக் கூடி, பர்டோலிக்கு அனுதா

பங் காட்டித் தீர்மானம் செய்வதும் பணம் வசூலிப்பதும் ஜில்லா மகாநாடுகள் கூட்டி, பர்டோலி செய்வது சரி என்று ஒப்பம் வைப்பதும், ஊர்வலங்கள்விட்டு பர்டோலியை உற்சாகப்படுத்துவதும், நாட்டில் எங்கும் தினசரிச் சம்பவங்களாகிவிட்டன.

பம்பாய் யுவர்களும் யுவதிகளும் பர்டோலி நிதிக்காக ரூ. 25000 வசூல் செய்தது ஏற்கனவே சொல்லப்பட்டது. பணம் வசூலித்தது பெரிதல்ல. பர்டோலி இயக்கம் என்ன, எதற்காக ஏற்பட்டது என்பதை வெளியார் தெளிவாகத் தெரிந்துகொண்டு, சிரத்தை கொள்ளுமாறு இவர்கள் செய்தார்கள், துண்டுப்பிரசுரம் வழங்குவதாலும் மீட்டிங் கூட்டுவதாலும்.

சூரட், ஆமதாபாத் யுவர் சங்கங்கள், பம்பாயைப் பின்பற்றி வேலை செய்யத் துவக்கின. தங்களுக்குள்ளாகவே ரூ. 1000 வசூல். கிராமத்தில் போய், பிரசாரம் செய்தார்கள். கடுமையான வைதிகப்பித்துக்கொண்ட புரோகிதக் கூட்டத்தார்கள் கூட இந்த இயக்கத்துக்குப் பண உதவி செய்ய ஆரம்பித்தார்கள். ராஜிநாமா செய்த கணக்குப் பிள்ளைகளில் பெரும்பான்மையோர் இந்த இனத்தைச் சேர்ந்தவர்கள். பர்டோலி சத்தியாக்கிரகம் வெற்றிபெறுவதற்காக, ஜலால்பூர் பிராமணர்கள் மகா ருத்ரயக்ஞம் செய்தார்கள். கடைசி நாள் யக்ஞத்துக்கு, வல்லபாயை வரவழைத்து, மரியாதை செய்தார்கள்.

போகிற வழியில், சிசோத்ரா என்ற கிராமத்தில் ஸர்தார் ஒரு பிராமண வீட்டு விருந்தாளியானார். அந்த வீட்டுக்கார பிராமணனுடைய தாயார் காலை முழுதும் நூல் நூற்று, ஸர்தார் வந்ததும், நூலை மாலையாக அவர் கழுத்தில் போட்டாள். தான் நூற்ற நூலால் நெய்த கைக் குட்டையொன்றை ஸர்தாருக்கு அளித்தாள். யக்ஞத்துக்காக வந்த பணத்தையெல்லாம், பிராமணர்கள், பர்டோலி சத்தியாக்கிரக நிதிக்காகக் கொடுத்துவிட்டார்கள். வல்லபாய் எல்லோருடைய ஆசீர்வாதத்தையும் பெற்றார். வல்லபாய் தீண்டாமையை ஒழிக்கக் கங்கணம் கட்டிக்கொண்டிருப்பவர் என்று

இந்த யக்ஞம் செய்த பிராமணர்களுக்கு நன்ருகத் தெரியும். தாங்கள் கொடுத்தபணம் அதற்கும் செலவாகும் என்றும் அவர்களுக்குத் தெரியும். இருந்தாலும், இவர்கள் செய்தது பொதுஜன எழுச்சிக்கு அறிகுறியாகும்.

சூரட், ப்ரோச்சு, நடியாட், ஆமதாபாத், நகரங்களில், ஜில்லா மகாநாடுகள் கூடின. ஆயிரக் கணக்கில் மிராசுதார்கள் கூடி, சத்தியாக்கிரகத்தை ஆதரித்தார்கள். ப்ரோச்சு மகாநாட்டுத் தலைவரைத் தவிர, மற்ற மகாநாட்டுத் தலைவர்கள் யாவரும் "வெளியூர்ப் பேர்வழிகள்". சூரட்டிலே, ஜயராம் தாஸ்; நடியாடிலே, கடில்கார்; ஆமதாபாத்தில், கேல்கார். பர்டோலி சத்தியாக்கிரகச் செய்தியை தங்கள் தங்கள் பிராந்தியங்களில் பரப்புவதாக, அவர்கள் வாக்குக் கொடுத்தார்கள். "பர்டோலிக் கலகம் வேறென்றுமே யில்லை; கடன் வாங்கினவன் கடன் கொடுக்க நிர்வாக மில்லாமல் போய், கடன் கொடுத்தவனை எதிர்ப்பதற்கொத்த மனப்பான்மையாகும். அரசாங்கத்தாரே, பூமிக்குடையவர்களாயும் கடன் கொடுத்தவர்களாகவும் ஆகி விட்டார்களானல், நடுவிலே யார் குறுக்கிட முடியும்" என்று கேல்கார், போராட்டத்தை ரொம்பவும் ஸ்வாரஸ்யமாக வர்ணித்தார்.

ஸர்தாரோ ஒவ்வொரு மகாநாட்டிலும் பிரசன்னமாயிருந்து கம்பீரத்தில் வளர்ந்து கொண்டே போனர். நடியாட் மகாநாட்டில் பேசும்பொழுது, "சும்மாயிருங்கள்; போராட்டத்தை சிரத்தையாக கவனித்து வாருங்கள். உங்கள் முறை வருகிறபொழுது, 'பாவட்டா விசுறுகிறேன்' இன்றைக்கு, பர்டோலியின் தியாக யாகம் போதுமானது. அதின் 'ஆஹுதி' சாம்பலிலிருந்து, பல பர்டோலிகள் தோன்றும்" என்றார். ப்ரோச்சிலே சொன்னர்:-"அரசாங்கத்தார் நிலத்தை விழுங்கிவிட வேண்டும் என்று எண்ணங் கொண்டால், போராட்டத் தீ குஜராத் முழுதும் பரவும்; அடுத்த வருஷம் ஒரு தம்பிடி கூட, கிஸ்தி வசூல் செய்ய முடியாது என்று அவர்களுக்கு முன் எச்சரிக்கை செய்கிறேன்" ஆமதாபாத்தில் பின்வருமாறு சொன்னர்:—"நாம் எதிர்த்துப் போராடுவது

மிகவும் வல்லமை பொருந்திய அரசாங்கம்; ராவணனைக் காட்டிலும் வலிமை பொருந்தியதாக இருக்கலாம். கூட்டம் கூட்டமாய் ராட்சதர்களைத் துணைக்கு வைத்துக்கொண்டிருந்தும் சர்வ வல்லமையுள்ள ராவணன், ஒரு சீதையை, ஒரு ஸ்திரீயை தன் வயப்படுத்த முடியவில்லை. முடிவில் எல்லோரும் மாளவேண்டி நேர்ந்தது என்பது மறக்கத் தக்கதல்ல. இந்த ஸர்க்கார் இப்பொழுது நசுக்கவேண்டியது ஒரு சீதையல்ல, எண்பதினுயிரம் சுத்த மனத்தர்களான குடியானவர்கள் என்பதை இந்த அரசாங்கம் ஞாபகம் வைத்துக்கொள்ளட்டும்."

டாக்டர் சுமந்த் மேதாவின் மேதாவியும் குணவதியுமான மனைவியார் ஸ்ரீமதி சாரதா மேதா, ஸர்தாரைப்பற்றிச் சொல்லுகிறார்:—"பர்டோலி மகாஜனங்களின் பேரில் ஸர்தார் மோகனுஸ்திரப் பிரயோகம் செய்வதை எவ்வாறு வர்ணிப்பது? அவர், ஆவேசம் கொண்டவரைப்போலப் பேசுகிறார். அவர் பேசும் ஒவ்வொரு வார்த்தையும் அவர் இதயத்தின் உள் புறத்திலிருந்து வெடித்து வெடித்து வருகின்றது. பர்டோலியின் நிலைமையைப் பார்க்கப் பார்க்க, அதற்கேற்ற சொற்களும் கருத்துகளும் அவருடைய உள்ளத்தில் வந்து குவிந்து கொள்ளுகின்றன. அவருடைய சிரத்தை, அவருடைய இணையற்ற ஆர்வம், ஜனங்களை அப்படியே உயரத் தூக்கிக்கொண்டு போய்விடுகிறது."

இப்பேர்ப்பட்ட மனிதனை இனியும் அலட்சியம் செய்ய முடியாது என்று அரசாங்கத்தார் தெளிவாகக் கண்டுகொண்டார்கள்.

பம்பாய் கவர்னர் அவர்களுக்கு, முன்ஷி எழுதிய கடிதமும் தேசத்தின் சமுதாய எழுச்சியும், குறட்டைவிட்டுத் தூங்கிக்கொண்டிருந்த பலன்ஸ்ரத் தட்டி எழுப்பிவிட்டன. இவ்வாறு எழுந்ததில், "டைம்ஸ் ஆப் இந்தியா" பத்திரிகை ஒன்று. முன்ஷி எடுத்துக் காண்பித்த உண்மை அதற்கு அவ்வளவாக ருசிக்கவில்லை. ருசிக்கும்படியாகச் செய்ய முடியுமா என்று பார்க்க, சிறப்பாக ஒரு நிருபரை பர்டோலிக்கு அந்தப்

பத்திரிகை அனுப்பி வைத்தது. அந்த நிருபர் பர்டோலியில் ஒரு நாள் தங்கியிருந்தார். முன்ஷி சொன்னது மொத்தத்தில் உண்மைதான் என்பதை நேரிலே அவர் கண்டார். ஆனல் விஷயத்தையும் போராட்டத்தின் நோக்கத்தையும் திரித்துக் கூறத் துவக்கிவிட்டது அந்தப் பத்திரிகை. "பர்டோலியில் விவசாயிகளின் கலகம்", "பர்டோலியில் போல்ஷிவிக்க அரசாட்சி" என்று பயமுறுத்தும் தலைப்புகளுக்குக் கீழ், "கன்ஞப் பின்ஞ"வென்று எழுதிற்று.

விஷயத்தையும் நோக்கத்தையும் எவ்வளவோ திருத்திக் கூறினலும், அடிப்படையாக அந்தப் பத்திரிகை ஒப்புக் கொண்டது என்னவென்ருல், "தாலூகாவின் ரிவினியூ நிர்வாகத்தை, வல்லபாய், நடைபெருமல் ஸ்தம்பிக்கும்படி செய்துவிட்டார். எண்பது மணியக்காரர்களும் அதற்குப் பேர் பாதிக்குக் கொஞ்சம் குறைவாக, கணக்குப் பிள்ளைகளும் ராஜிநாமாச் செய்துவிட்டார்கள். ராஜிநாமாச் செய்யாதவர்களும்கூட, அரசாங்கத்தினிடம் பக்தி கொண்டவர்கள் என்று சொல்லுவதற்கில்லை. ஆசிரமங்களாலும் தொண்டர்களின் கூட்டத்தாலும் தூண்டப்பெற்று நடந்துவரும் மகாஜனங்களின் கட்டுப்பாடு கொஞ்சங்கூடக் குலையவில்லை. வல்லபாய் இல்லாத காலத்திலும், பர்டோலி ஆசிரமத்தில், எந்த வேலையும் பாக்கியில்லாமல் சுறுசுறுப்புடன் நடந்துவருகிறது. 250 தொண்டர்களில் பலருக்கு, முந்தியே சிறைப் பழக்கமுண்டு. அவர்கள் கடுமையான கட்டுப்பாட்டின் கீழ் வாழ்ந்து வருகிருர்கள். அவர்களுடைய சாப்பாடோ, ரொம்பவும் சாதாரண உணவு. புதிய ஸெட்டில் மெண்டை மாற்ருமல் ஸர்க்காரால் வைத்துக்கொண்டிருக்க முடியாது என்ற நம்பிக்கையை, ஸர்தாரின் பிரசார மூலமாய், மகா ஜனங்கள் பிடிவாதமாகக் கொண்டிருக்கிருர்கள். ஆனல், ஸர்க்காருக்கு நியாயமாக எது சேர வேண்டுமோ, அதைக் கொடுத்துவிட, பட்டாதார்கள் தயாரா யிருக்கிருர்கள். ஸர்தாரை, பர்டோலி ஸ்திரீகள் 'தெய்வமாக'க் கொண்டாடுகிருர்கள். பர்டோலி ஜனங்கள், எத்தனையோ கஷ்டங்களுக்கு

ஆளாகியும், எல்லாவற்றையும் பொறுத்துக் கொண்டிருக்கிறார்கள்."

"டைம்ஸ் ஆப் இந்தியா" நிருபர், இந்த மாதிரி யெல்லாம் எழுதினர். பர்டோலி ஜனங்களும் கால் நடைகளும் இத்தனை கஷ்ட நிஷ்டூரங்களுக்கு உள்ளானது காந்திஜியாலே, வல்லபாயாலே என்று அவர் சொல்லி விட்டு, ஜனங்களின் பொருட்டு மாலமாலக் கண்ணீர் சொரிந்திருக்கிறார் எழுத்திலே! அவர் எந்த முடிவுக்கு வந்தபோதிலும், பர்டோலியின் நிலைமையை உள்ளபடிக்கு எழுதாமல் அவரால் இருக்க முடியவில்லை.

"பர்டோலியில் போல்ஷிவிக்க அரசியலை ஸ்தாபிக்கத் தீர்மானித்திருக்கிறார் வல்லபாய்; அவருக்கு பர்டோலி மகா ஜனங்களின்பேரில் இருக்கும் செல்வாக்கு நீடித்திருக்கும் வரையில், அந்தத் தாலூகாவில் அமைதியே இருக்காது" என்று அந்த நிருபர் முடித்துக் கட்டிக் கூறிவிட்டார். இதை, ஒழுங்குபடுத்தி, "ராய்ட்டர்" சீமைக்குத் தந்தி கொடுத்து விட்டார்கள். தந்தி பறந்ததும், பிரிட்டிஷ் சிங்கம், தூக்கத்திலிருந்து விழித்தெழுந்தது. "பர்டோலியில், எவ்வளவோ, வல்லபாய்க்கு வெற்றி கிடைத்திருப்பது உண்மைதான். ஆனல் சட்டமும் அமைதியும் குலையவில்லை. வரி கொடுக்கத் தவறிய விவசாயிகளின்பேரில் நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப் பட்டு வருகின்றன" என்று, உதவி இந்தியா மந்திரி விண்டர்ட்டன் பிரபு, காமன்ஸ் சபையில் தெரிவித்தார். ஸர் மைக்கல் ஓட்வயரைப்போன்ற மாஜி கவர்னர்கள், (இந்தியாவில் வேலை பார்த்து, பென்ஷன் வாங்குபவர்கள்) மிகுதியும் ஆத்திரப்பட்டார்கள். "சதியாலோசனைச் சட்டத்தை" பர்டோலியின் பேரில் பிரயோகம் செய்யவேண்டும் என்று வற்புறுத்தினார்கள். . . .

லண்டன், சிம்லா, பம்பாய் இந்த ஸ்தலங்களுக்கு இடையே, என்ன தந்திகள் பறந்தன, எப்படி யெல்லாம் சேனையை உபயோகப்படுத்துகிறது என்று யோசனை செய்தார்கள் என்ற விபரங்கள் ஒன்றும் நமக்குத் தெரியாது. எதிர்

காலத்திலே, சரித்திராசிரியர் ஒருவர் தோன்றி, இக்காலத்திய ஸர்க்கார் தஸ்தாவேஜிகளைத் தோண்டிப் பார்த்துச் சரித்திரம் எழுத முடியுமானால், உண்மை வெளிவரக்கூடும். ஆனால், அரசாங்கத்தார் அனாவசியமாக எவ்வளவு கிலி பிடித்துப் போயிருந்தனர் என்பது அவர்கள் செய்ததிலிருந்து தெளிவாகத் தெரிந்தது. புதிதாக, ஆயுதம் தாங்கிய போலீசார், தாலூகாவுக்குள் கொண்டு வரப்பட்டனர். புதிதாக வந்த போலீஸ் சூபிரண்டு, கிலி பிடித்து எதையும் செய்ய மறுத்துவிட்டதால், அவரை மாற்றிவிட்டபோதிலும், ஸர்க்கார் இன்னதுதான் செய்யப் போகிறார்கள் என்ற அவர்களின் நோக்கத்தைப் பற்றி, சந்தேகமே கிடையாது. பர்டோலியிலே, சேனையைக் கொண்டுவந்து நிரப்பப்போகிறார்கள் என்று தினசரி வதந்தி.

கூடுமான வரையில், நெருக்கடி உண்டாக்காமல், இந்த ப்ரச்னையைத் தீர்த்துவிட வேண்டுமென்று ஸர்க்கார் கவலை கொண்டிருந்தார்கள் எனத் தெரிந்தது. ரிவினியூ மெம்பர் ஸ்ரீ ரியூ அவர்கள் ஆமதாபாத்துக்குப் போய் விசாரித்து விட்டுத் திரும்பி வந்தவுடனே, பம்பாயில், நிர்வாக சபைக் கூட்டமொன்று கூடிற்று. ஜூலை 13வ பம்பாய் கவர்னர், வைஸிராய் அவர்களுடன் கலந்து பேசுவதற்காக, சிம்லாவுக்குப் பிரயாணமானார். இப்பொழுது ஐ. ஸி. எஸ். நிர்வாகிகளின் வலையில் அகப்பட்டுக் கொண்டார் பம்பாய் கவர்னர் ஸர் லெஸ்லி வில்ஸன்! ஆனால் சீமையிலிருந்து, புதிதாக பம்பாய்க்கு கவர்னராக வந்த காலத்தில், அவர் தமக்குத் தாமே யோசித்து, செய்ய வேண்டிய காரியங்களை, உசிதமான வகைகளில் செய்து வந்தார். போர்ஸாத் சத்தியாக்கிரகம் நடக்கையில், அதை நேரில் விசாரித்து வர வேண்டு மென்று உள்நாட்டு மெம்பர் ஸர் மாரிஸ் ஹேவர்ட் அவர்களை, கால தாமதம் செய்யாமல், கவர்னர் அனுப்பி வைத்தார். அவர் போய் நேரிலே விசாரித்ததன் பயனாக விரைவிலே, போர்ஸாதுக்கு நியாயம் கிடைத்தது. ஆனால் பர்டோலி சத்தியாக்கிரகக் காலத்தில், ஸர் லெஸ்லி வில்ஸன் அடியோடு மாறிப் போய் விட்டார்; புதுப் பேர்வழியானார்.

ஐ. ஸி. எஸ். நிர்வாகக் கூட்டத்தார் சொல்லுவதை யெல்லாம் அப்படியே செய்யலானார்.

டாக்டர் எடலாபெராம் அவர்களுக்கு ஸ்மார்ட் எழுதிய கடிதத்தைக் கவனிக்க வேண்டும் என்று கவர்னருக்கு அஸெம்பிளித் தலைவர் விட்டல்பாய் படேல் குறிப்பிட்ட பொழுது, அந்த மாதிரி ஒரு கடிதம் இருப்பதாகவே தமக்குத் தெரியாது என்று சொல்லி விட்டார் கவர்னர். பட்டாணிகளை எடுத்து விடவேண்டும் என்று கவர்னர் உத்தரவு போட்டார். தேவையில்லாததனால், பட்டாணிகளை உபயோகிக்காமல் வெளியே அனுப்புகிறோம் என்று கீழ் சிப்பந்திகள் வியாக்கியானம் செய்தார்கள். பர்டோலியிலே, எப்படியாவது சமரஸம் உண்டாக்கி விட வேண்டும் என்பது கவர்னரின் கருத்து. அதற்காக அவர் ஸிம்லாவுக்குப் போய் வைஸிராய் அவர்களைக் கலக்க உத்தேசம் செய்ததை, வேறு விதமாக வியாக்கியானம் செய்தார்கள் ஸர்க்கார் நிர்வாக சிப்பந்திகள். பர்டோலி இயக்கத்தை ஹத்து மீறாமல் ஒடுக்க வேண்டிய ஏற்பாடுகளைப்பற்றிக் கலந்து யோசிப்பதற்காக, பம்பாய் கவர்னர் ஸிம்லாவுக்குப் போயிருக்கிறார் என்று அறிவிப்புச் செய்யப்பட்டது.

## அத்தியாயம் 30.

மேதகு கவர்னர் அவர்கள், ஸிம்லாவை விட்டு ஜுலை மாதம் 16-ந் தேதி புறப்பட்டு, சூரட்டுக்கு 18வ காலையில் விஜயம் செய்தார். எழுத்து மூலமாகத் தெரிவித்துக்கொண்டால், பர்டோலி விவசாயிகளின் பிரதிநிதிகள் பன்னிரண்டு பேர்கள் கவர்னர் அவர்களைப் பேட்டி காணலாம் என்று சூரட்டு ஜில்லாக் கலெக்டரால், ஏற்கனவே, பொதுஜன அறிவிப்புச் செய்யப்பட்டது. ஆனால் 18-ந் தேதி வரையிலும், யாரும் எழுத்து மூலமாக மனுச்செய்து கொள்ளவில்லை. பம்பாய் கவர்னர் வைஸிராய் அவர்களோடு ஸிம்லாவில் கலந்து பேசிக்கொண்டிருந்த காலத்தில், ஆமதாபாத்தில் நடந்த ஜில்லா மகாநாட்டில் ஸர்தார் சொற்பொழிவு நிகழ்த்தினார்.

பர்டோலி சத்தியாக்கிரகிகளில் 12 பேர்களை அழைத்துக் கொண்டு, ஸர்தார் கவர்னரை சூரட்டில் பேட்டி காணலாம் என்ற அழைப்பு, இந்த மகாநாடு நடக்கையில், கமிஷனரிட மிருந்து ஸர்தாருக்கு வந்தது. கவர்னரைப் பேட்டிகாண, ஸர்தார் எப்பொழுதும் தயாராயிருந்தார் என்பது யாவரும் அறிந்த விஷயம். ஸ்ரீ அப்பாஸ் தியாப்ஜி, ஸ்ரீமதி சாரதா மேதா, ஸ்ரீமதி பக்திலட்சுமி தேசாய், மிது பென் பெடிட் மாது, ஸ்ரீ கலியான்ஜீ மேதா—இவர்களையும்—மற்றும் பிரதி நிதிகளையும் அழைத்துக் கொண்டு, 18ந் தேதி காலையில், சூரட்டில், ஸர்தார், கவர்னர் அவர்களைப் பேட்டி கண்டார்.

காலையில் மூன்றுமணி நேரத்துக்கு அதிகமாகப் பேச்சும் வாதமும் நடைபெற்றன. கவர்னர் அவர்கள் வல்லபாய் அவர்களோடு, தனித்தும் சிறிதுநேரம் பேசினர். பர்டோலி ப்ரச்னையைத் தீர்த்துவிட வேண்டுமென்று வைஸிராய் அவர் களும் கவலையுடனிருக்கிறர் என்று கவர்னர் ஸர்தாரிடம் தெரிவித்தார். சில்லறைச் சங்கதிகளான கைதிகளின் விடுதலை பறிமுதலான நிலங்களை திருப்பக் கொடுத்தல் முதலிய விவ ரங்களைப்பற்றி, அபிப்பிராய பேதம் இருக்கவில்லை. விசா ரணைக் கமிட்டியை நியமிக்குமுன், ஸெட்டில் மெண்டில் கண்ட கிஸ்தியைக் கொடுத்துவிட வேண்டும் என்று அழுத்த மாகக் கூறினர் கவர்னர்.

ஆனல், ராவ் பகதூர் பீம்பாய் நாயக் மத்தியானம் கவர் னரைப் பேட்டிகண்டு பேசுகையில், சில்லறைச் சங்கதிகளைப் பற்றியும் தகராறு ஏற்பட்டுவிட்டதாகக் கண்டுகொண்டார். காலையில் கவர்னர் ஸர்தாரோடு பேசுகையில், இவைகளைப் பற்றித் தகராறு ஏற்படவே யில்லை. மத்தியானம் கசகல். இதுதான் விநோதம். இதற்குள், ஐ. ஸி. எஸ். வர்க்கத்தில் பலிஷ்டர்களாயுள்ளவர்கள் கவர்னருடன் கலந்து பேசி, "பறி முதலான நிலங்களைத் திரும்பக் கொடுத்துவிடலாம்; ஆனல் பறிமுதலாகி, பிறருக்கு (ஸர்க்காரால்) விற்கப்பட்ட நிலங் களைத் திரும்பக் கொடுக்க முடியாது" என்று யோசனை சொல்லிவிட்டார்கள். மீண்டு மொருமுறை, வல்லபாய்

கவர்னரைப் பார்க்கவேண்டும் என்று பீம்பாய் கேட்டுக் கொண்டார். பிற்பகலில், மறுபடியும் வல்லபாய் கவர்ன ரைப் பார்த்தார். மாலையில் நெடுநேரம் வரையில் பேச்சு நீண்டுகொண்டே போயிற்று. "ஸர்க்காரிடம் இந்தக் கிஸ் தியைச் செலுத்தவேண்டாம். பூராத் தொகையையும் மூன்ரு வது மனிதர்களிடம் கட்டினாலும்போதும்" என்ருர் கவர்னர். இதிலே, கவர்னர் கண்டிப்பான பிடிவாதம் காண்பித்தார். வேறு சில தகராறுகளும் ஏற்பட்டன. ராஜி ஏற்படாது என்று கண்டுகொண்டு, ஸர்தார் பணிவுடன் கவர்னரிடம் விடை பெற்றுக்கொண்டு வந்துவிட்டார். ஸர்க்கார் ஒப்புக் கொள்ளக்கூடிய ஷரத்துகளையும் நிபந்தனைகளையும் குறிப் பிட்டு அனுப்பினல், தம்முடைய சகாக்களைக் கலந்து யோசித்து, ஜனங்களின் சார்பாகப் பதில் அனுப்புவதாகச் சொல்லி விட்டு, ஸர்தார் திரும்பிவிட்டார்.

ராஜி செய்வதற்காகக் கீழ்க்கண்ட நிபந்தனைகளுக்குக் கட்டுப்படவேண்டும் என்று அரசாங்கத்தார் கூறினர்கள். (1) புதிய ஸெட்டில்மெண்டுப் பிரகாரம், பூராக் கிஸ்தியையும் செலுத்திவிட வேண்டும் அல்லது பழைய கிஸ்திக்கும் புதிய கிஸ்திக்கும் உள்ள வித்தியாசத்தைச் செலுத்திவிடவேண்டும். பட்டாதார்கள் செலுத்தவேண்டு மென்பதில்லை. அவர்க ளுக்காக, யாராவது செலுத்தினுற் போதுமானது. (2) நில வரி கொடுக்கவேண்டாம் என்று சொல்லுகிற இயக்கத்தை நிறுத்திவிடவேண்டும். இந்த இரண்டு நிபந்தனைகளுக்கும் கட்டுப்பட்டால், ப்ரஸ்தாப ப்ரச்னைக்கு சம்பந்தமில்லாத ஒரு ரிவினியூ உத்தியோகஸ்தரைக் கொண்டோ, அல்லது ரிவினியூ உத்தியோகஸ்தருடன் ஒரு நீதி இலாகா உத்தியோகஸ்தரை யும் சேர்த்துக்கொண்டோ, ஸெட்டில்மெண்டு சம்பந்தமாக ஸர்க்கார் கணக்குப் புள்ளி விவரங்களிலிருக்கும் தவறுகளைப் பற்றி, பகிரங்கமாக விசாரிக்க ஏற்பாடு செய்யப்படும் என்று அறிவிக்கப்பட்டது.

இந்த ஷரத்துக்களைக் கண்டு காந்திஜி முதலானேர் திகைத் துப் போனர்கள். ராஜிக்கு மனமில்லை வல்லபாய்க்கு என்ற

பொய்யான வதந்தி பரப்பப்பட்டது. உள்ளபடியே ஸர்தாருக்கு ராஜியிலே மனமில்லாமற் போனால், மேற்கூறிய ஸர்க்காரின் கடிதத்துக்குப் பதில் எழுதுவதில், அவர் முரட்டுத்தனமாக எழுதியிருக்கக்கூடும். எப்படியாவது, கௌரவத்துடன் ராஜி ஏற்பட்டு விடவேண்டும் என்பதுதான் ஸர்தாரின் மனப்பான்மையாகும். எவ்வளவு வினயத்துடனும் அடக்கத்துடனும் கடிதம் எழுதலாமோ, அவ்வாறு பதில் எழுதினார் ஸர்தார் ஸர்க்காருக்கு. ஸர்தார் எழுதிய கடிதத்திலுள்ள சில குறிப்புகள்:—

“உயர்த்தப்பட்ட வரி(ப் பகுதி)யைச் செலுத்தவேண்டும் என்று ஸர்க்கார் வற்புறுத்துவது, ஜனங்களுடைய யோக்கியப் பொறுப்பையும் அவர்களுடைய தலைவரின் கௌரவத்தையும் நம்ப முடியாது என்று சொல்லுவதுபோல இருக்கிறது. பழைய நிலவரி (கோட்) நூலையே மாற்றி அமைக்க வேண்டும் என்று கேட்க, ஜனங்களுக்கு உரிமை உண்டு. அப்படிச்செய்யாமல், அந்தக் கோடுக்குக் கட்டுப்பட்டமுறையிலேதான் பரிகாரம் கேட்கிறார்கள், நியாயம் வேண்டுகிறார்கள். விசாரணை செய்வது என்பதை ஸர்க்கார் ஏற்றுக்கொண்டார்களானால், கீழே குறிப்பிடப்படும் சங்கதிகளை (தானே) செய்ய வேண்டியதுதானே? (1) சத்தியாக்கிரகிக் கைதிகளை விடுதலை செய்யவேண்டும். (2) பறிமுதலான நிலங்கள்—விற்கப்பட்டாலும் சரி, விற்கப்படா விட்டாலும் சரி—திருப்பிக் கொடுக்கப்பட வேண்டும். (3) ரொம்பவும் ஈனக் கிரயங்களுக்கு விற்கப்பட்ட மாடுகளுக்குச் சந்தை விலை போட்டு, பணத்தைச் சொந்தக்காரர்களுக்குக் கொடுக்கவேண்டும். (4) போராட்டக் காலத்தில், வேலையிலிருந்து தள்ளியிருந்தாலும் அல்லது வேறு தண்டனை கொடுத்திருந்தாலும், (அந்த சிப்பந்தி சம்பந்தமாக) அதை ரத்து செய்யவேண்டும். எந்த மாதிரி, ஸர்க்கார் விசாரணை செய்ய உத்தேசித்தாலும்—பகிரங்கமாகச் சாட்சியம்விட ஏது இருக்கிறவரையில்—அதை ஜனங்கள் ஏற்றுக்கொள்ளத் தயாராயிருக்கிறார்கள். அரசாங்கத்தைத் திக்குமுக்கலாட வைக்கவோ, அல்லது தாழ்வு

படுத்தவோ எனக்குத் துளிக்கூட இஷ்டமில்லை. இருதிறத்தாருக்கும் கௌரவமான ராஜியே எனது நோக்கமாகும்."

ஸர்தாரின் கடிதத்தை இந்தியப் பொது ஜனங்களும் இந்தியப் பத்திரிகைகளும்—'டைம்ஸ் ஆப் இந்தியா' தவிர—ஏகமனதாய் ஆதரித்தார்கள். தங்கமான இந்தத் தருணத்தைக் கைநழுவ விடப்படாது அரசாங்கத்தார் என்று எல்லாப் பத்திரிகைகளும் எழுதின. சட்டத்தையும் அமைதியையும் காக்கும் பொறுப்பைக் கொண்டிருக்கும் அரசாங்கம், ஜனங்களின் வேண்டுகோளை லேசிலே, காதில் வாங்கிக் கொள்ளுமா? 1928 வருஷம் ஜூலை மாதம் 23ந் தேதி ஸர் லெஸ்லி வில்ஸன் (கவர்னர்) பம்பாய்ச் சட்டசபையைத் திறந்துவைத்தார். அப்பொழுது கவர்னர் பேசியதில் சில துணுக்குகள்:—

"இன்றையிலிருந்து பதினைந்து நாட்களுக்குள், தாம் சொன்ன நிபந்தனைகளை, சூரட் ஜில்லாச் சட்ட சபைப் பிரதிநிதிகள் நிறைவேற்றி வைக்காவிட்டால், ரொம்பவும் கெடுதி நேரிடும். பர்டோலியிலே மன்னர்பிரான் ஆட்சி நடைபெற வேண்டுமா, வேண்டாமா என்பதுதான் கேள்வி. இந்தப் ப்ரச்னைக்காக, ஸர்க்கார் தங்கள் முழுப்பலத்தையும் உபயோகிக்கத் தயாராயிருக்கிறார்கள். தற்போதைய கிளர்ச்சியை அடியோடு நிறுத்தி விட்டு, புதிய ஸெட்டில்மெண்டுப் படிக்குக் கிஸ்தியைச் செலுத்திவிட்டால், ஸெட்டில்மெண்டு சம்பந்தமாக விசாரணை செய்ய, ஒரு கமிட்டியை நியமிப்பதற்கு, ஸர்க்கார் தயாராயிருக்கிறார்கள்.

"இன்னொரு விஷயத்தையும் தெளிவாகச் சொல்லி விடுவது எனது கடமையாகும். இந்த நிபந்தனைகளை ஏற்றுக் கொண்டு, ஒரு முடிவு ஏற்படாவிட்டால், சட்டத்தின் ஆணையை நிலை நிறுத்துவதற்காக, எந்தக் காரியம் செய்வது உசிதம் அல்லது தேவை என்று தோன்றுகிறதோ, அதையெல்லாம் செய்ய, ஸர்க்கார் தயாரா யிருக்கிறார்கள். அரசாங்கத்தின் அதிகாரத்துக்கு யாதொரு பங்கமும் நேராமல் அது நிலை நாட்டப்படும். சத்தியாகிரகம் சட்டத்துக்கு மீறிய இயக்கமாகும்".

சத்தியாக்கிரகிகளின் தலைவரான வல்லபாய் அவர்களைப் பயமுறுத்திக் கீழ்ப்படியச் செய்ய முடியாது என்பது கவர்னர் அவர்களுக்கு நன்றாகத் தெரியும். ஆகையால், மேற் கூறிய வார்த்தைகளை ஸர்தாரைப் பார்த்துச் சொல்லவில்லை. சூரட்டு ஜில்லாப் பிரதிநிதிகளான பம்பாய்ச் சட்டசபை மெம்பர்களைப் பார்த்துச் சொன்னதாகும். சத்தியாக்கிரகம் சட்ட மீறியதல்ல என்பதை நடை முதல் சம்பவங்களையும் சரித்திரத்தையும் கொண்டு, ஏற்கனவே, காந்திஜி ருசுப்படுத்தி விட்டார். போர்சாத் சத்தியாக்கிரகத்தை, இதே கவர்னர் ஸர் லெஸ்லி வில்ஸன் அவர்கள் ஒப்புக்கொண்டு, 2½ லட்ச ரூபாயைத் தள்ளிக் கொடுக்கவில்லையா! கவர்னர் சொன்னதைக் கேட்டு நடக்காவிட்டால், அவர் எடுத்துக் கொள்ளும் ஒவ்வொரு நடவடிக்கையையும் இந்திய அரசாங்கத்தார் ஆதரிப்பார்கள் என்று உதவி இந்திய மந்திரி, காமன்ஸ் மகா சபையில், வில்ஸன் பேசிய அதே நாளில் அறிவித்தார். பர்டோலி சத்தியாக்கிரகப் போராட்டத்தின் வெற்றியே, இவ்வளவு ஆத்திரத்துக்கும் காரணமாகும்.

பலாத்கார வாடை வீசும்படியாகக் கூட எந்தக் காரியத்தையும் செய்யாமல், உள்ளதை மனதை விட்டுச் சொல்லும்படியாக அரசாங்கத்தாரைச் செய்தது பெரிய விந்தை யல்லவா? மிக்க அடக்கத்துடன்—ஏனென்றால் ஸர்தாருக்கு தமது சக்தியும் பர்டோலி சத்தியாக்கிரகிகளின் சக்தியும் நன்றாகத் தெரியும்—வல்லபாய், கவர்னர் பேசியதற்கு, ஜவாப்புக் கொடுத்தார். கவர்னரின் கடுமையான சொற்களைக் கேட்டு, பயமடையவோ அல்லது தப்பர்த்தம் செய்து கொள்ளவோ, வேண்டியதில்லை என்று பர்டோலி வாசிகளுக்கு ஸர்தார் எச்சரிக்கை செய்தார். ஸர்தாரின் ஜவாப்புப் பின் வருமாறு:—

“கவர்னரின் பயமுறுத்துப் பிரசங்கத்தை, நான் எதிர்பார்க்க வில்லை என்பதை நான் ஒப்புக் கொள்ளுகிறேன். ஆனால், பயமுறுத்துதல்கள் ஒரு புறமிருக்க, அந்தப் பிரசங்கத்தினால் ஏற்படக்கூடிய குழப்பத்தை நீக்க விரும்புகிறேன். தற்போதைய ப்ரச்னை சட்ட மறுப்பு என்றால், ஸர்க்காருக்கு

இருக்கும் பூரண சக்தியையும் உபயோகித்து அதை நசுக்கத் தயாரா யிருப்பதாயும், பர்டோலி ஸெட்டில்மெண்டு நியாயமா அநியாயமா என்பது ப்ரச்னையாயின், இந்தக் கிளர்ச்சியையும் நிறுத்திவிட்டு, பூராக் கிஸ்தியையும் செலுத்திவிட்டால், விசாரணைக் கமிட்டி நியமனம் செய்வதாயும் கவர்னர் சொல்லுகிறார்.

"சட்ட மறுப்பு எப்போதுமே ப்ரச்னையாக இருக்கவில்லை என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். சட்ட மறுப்பின் உசிதம் அல்லது தேவையைப் பற்றி, ஏக மனதான அபிப்பிராயம் பர்டோலியிலுள்ள எல்லாக் கட்சியார்களிடமும் இல்லை என்பது எனக்குத் தெரியும். சட்ட மறுப்பைப் பற்றி எனக்குச் சொந்த அபிப்பிராயமுண்டு. ஆனால், சட்ட மறுப்பு என்ற பாத்தியத்தை ஸ்தாபித்துக் கொள்ளுவதற்காக, இப்பொழுது பர்டோலி வாசிகள் போராடிக் கொண்டிருக்கவில்லை. ஸெட்டில்மெண்டின் அநியாயத்தை ஒழித்து, பரிகாரம் தேடிக் கொள்ளுவதற்காக, இந்த முறையை—இதற்குச் சட்ட மறுப்பு என்றோ வேறு எந்தப் பெயர் வேண்டுமானாலும் கொடுப்பதைப் பற்றி எனக்கு ஆட்சேப மில்லை—அவர்கள் கைக் கொண்டார்கள். (நியாயம் வழங்கும்படி ஸர்க்காரைத் தூண்ட; ஸர்க்காரைக் கவிழ்ப்பதற்கல்ல). ஸெட்டில்மெண்டு நியாயமா அல்லது அநியாயமா என்பது தான் ப்ரச்னை. இது தான் ப்ரச்னை என்று அரசாங்கத்தார் ஏற்றுக் கொண்டால், விசாரணைக் கமிட்டி ஏற்படுத்து முன்னர், 'பழைய கிஸ்தியைக் கட்டிவிட வேண்டும்' என்று ஜனங்களை வற்புறுத்துவது, தர்க்கத்துக்குப் பொருந்தியதா! போராட்டத்துக்கு முன்னிருந்த நிலைமையிலேயே ஜனங்கள் இருக்க வேண்டுமென்று கூறுவது தவறாகும்.

"ஸெட்டில்மெண்டைப் பற்றி, பகிரங்கமாக, பூரண விசாரணை வேண்டும் என்பது ஜனங்களின் கட்சி. ஸெட்டில்மெண்டு ஆபீசரின் புள்ளி விபரங்களில் ஏற்பட்டிருக்கும் தவறுகளை விசாரிக்கிறோம் என்கிறார்கள் அரசாங்கத்தார்.

எனவே, ஜனங்கள் கேட்டது இந்த விசாரணை அல்ல. ஆகையால், இதைப் பற்றி ஜனங்களுக்கு எச்சரிக்கை செய்வது என் கடமையாகும். கவர்னரின் பயமுறுத்துப் பிரசங்கத்தைப் பற்றிக் கவலைப்படாமல், பூரணமான, பகிரங்க விசாரணை வேண்டும் என்பதில் பொது ஜனங்கள் ஏகோபித்து, கவலைகொண்டு, கவனத்தைச் செலுத்த வேண்டும்."

ஆத்திரத்தோடு எதிரி நடந்து கொண்டாலும், நிலை தவறாமல் நிதானத்துடனே இருப்பது தான் ஸத்தியாக்கிரகியின் தர்மமாகும். ஸர்தாரின் பதில், ஒரு ஸத்தியாக்கிரகியின் பதிலாகும். சூடாக ஒரு வார்த்தை அதில் உண்டா? மரியாதைக் குறைவான பதப் பிரயோகம் காணப் படுகிறதா? கவர்னரின் பிரசங்கத்துக்கு, காந்திஜி, "யங் இந்தியா" வில் ஒரு பதில் எழுதினர்.

"வல்லபாய் கூறும் நிபந்தனைகள், அவரால் எப்போதுமே, சொல்லி வரப்பட்டவை யாகும். அவைகளை அவர் ஸர்க்காருக்கும் தெரிவித்திருக்கிறார். எனவே ஸர்க்காரின் சூட் அறிவிப்பு 'குறைச்சலாகும்'. கௌரவமான ராஜிக்குத் தேவையில்லாத எதையும் அவர் ஒருபொழுதும் கேட்டதே கிடையாது. சில்லறைத் தவறுகளை விசாரிப்பதற்காக, கமிட்டி நியமிப்பதாக ஸர்க்கார்கள் சொல்லுகிறாப் போலப்படுகிறது. இந்த முடிவுக்காக, பர்டோலி, வலாட் மகா ஜனங்கள் இவ்வளவு மகத்தான கஷ்டங்களை அனுபவிக்கவில்லை. ஒரு கொள்கைக்காகவே, அவர்கள் இவ்வளவு தியாகமும் செய்து வருகிறார்கள். தவருகப் பறிமுதல் செய்யப்பட்டதாக, ஜனங்கள் எண்ணிக் கொண்டிருக்கிற, நிலங்களை அவர்கள் இழக்க முடியாது.

"வரி கொடுக்காமல் நிறுத்திக் கொண்ட வகையில், ஜனங்கள் தவறு செய்திருந்த போதிலும், அவர்கள் புதிய வரியைக் கொடுத்து விட்டால்—இதுதான் தகராறு விஷயமாகும்—தனி நபர்களின் கேஸ்கள் கருணையுடன் விசாரிக்கப்படும் என்பது ஸர்க்கார் கூறும் நிபந்தனைகளுக்கு அர்த்தமாகும். ஜனங்கள் தவறு செய்யவில்லை யென்றும் பூராத்

தவறும் ஸர்க்கார் தான் செய்திருக்கிறார்கள் என்றும் பிடிவாதமாக எண்ணிக்கொண்டிருக்கும் தலைவர், ஸர்க்கார் நிபந்தனைகளை, கௌரவத்துடன் ஒப்புக்கொள்ள முடியாது.

"ஸர்க்காரைப் போல, ஸாத்தியமில்லாத எதையுமே, ஸர்தார் சொல்லி விடவேயில்லை. தாங்கள் செய்தது தவறு என்று ஒப்புக்கொள்ள வேண்டுமென்று ஸர்க்காரை அவர் கேட்கவில்லை. ஸெட்டில்மெண்டு நியாயமா, தவறா என்பதை பகிரங்கமாக விசாரிக்க, ஒரு கமிட்டி வேண்டும் என்பது தான் அவருடைய நிபந்தனை என்று ஒரே வாக்கியத்தில் சொல்லி விடலாம். இதைக் காட்டிலும் குறைந்ததாக எதையும் அவர் ஒப்புக்கொண்டால், அவர் நம்பிக்கை மோசக் குற்றத்துக்கு ஆளாவார் என்று நான் துணிந்து கூறுவேன். அரசாங்கத்தைத் தாழ்வுபடுத்த வேண்டும் என்பதாக வல்லாபாயின் யோசனையில் குறிப்பாகவோ, வெளிப்படையாகவோ, எதுவுமில்லை. எப்படியாவது, கௌரவமான ராஜிக்கு வந்து விடவேண்டும் என்ற ஆவலினால், அவர் குறைத்தே கேட்கிறார். ரிவினியூ கோடையே திருத்தி அமைக்கவேண்டும் என்று அவர் கேட்கலாம். தங்கள் தவறு ஒன்றுமே யில்லாமல் சென்ற நான்கு மாத காலமாக மகா ஜனங்கள் பட்ட நஷ்டத்துக்கு, ஸர்க்காரிடமிருந்து அவர் பரிகாரம் கேட்கலாம். அப்படி யொன்றையும் அவர் கேட்கவில்லை.

"இந்தியப் பொது ஜன அபிப்பிராயத்தை மதித்து, வல்லபாயின் ஷரத்துகளை ஸர்க்கார் ஏற்றுக் கொள்ளலாம்; அல்லது பொய் கௌரவத்தை ஸ்தாபித்துக் கொள்ள, அவர்கள் பயங்கர ஆட்சி அமுலை அழுத்தமாகக் கையாளலாம். காலப் பிற்பாடாகப் போகாவிட்டால், உண்மை வழியைக் கடைப் பிடிக்குமாறு, நான் பம்பாய் அரசாங்கத்தாரை வேண்டிக் கொள்ளுகிறேன்."

பொய் கௌரவம் ஒன்று தான், தனி நபருக்கும் சரி, ஜன சமூகத்துக்கும் சரி; அரசாங்கத்துக்கும் சரி, மகத்தான கேட்டை உண்டாக்குகின்றது; மதியீனத்தை அபாரமாகத்

தோற்றுவிக்கின்றது; முரட்டுப் பாதையில், மூர்க்கத்தன மாகக் கொண்டுபோய் விடுகிறது. நிதானமாக யோசிப் பதற்கு, சாவகாசமும் வசதியும் கொடுக்கிறதா? இல்லை.

## அத்தியாயம் 31.

"கத்தியை ஆட்டிக்கொண்டு", கவர்னர் அவர்கள் பேசினாரே. அதற்குப் பிறகு, பர்டோலியில் "ஏகப்பட்ட அமைதி." பர்டோலிக்கு வெளியே, சில இடங்களில், திகி லும் பயமும். கவர்னர் இறுதி நிபந்தனை அனுப்பினாரே, அதைக் கண்டு, அந்தச் சட்ட சபை மெம்பர்கள் (சூரட்டு ஜில்லாப் பிரதிநிதிகள்) "சும்மா, அப்படியே" திகைத்துப் போனார்கள். இவர்கள் ராஜிநாமாச் செய்தபின், பர்டோலி ப்ரச்னையை ஆதரித்தே, இவர்களை மீண்டும் சட்ட சபைக்கு, ஜனங்கள் தேர்தலில் தெரிந்தெடுத்து விட்டார்கள். எனவே, கவர்னரின் நிபந்தனைகளை நிறைவேற்றி வைக்க, தங்களால் முடியாது என்று சொல்லியிருக்க வேண்டியது தான் அவர் கள் செய்ய வேண்டிய நியாயமான வேலையாகும். இந்த மாதிரி நேர்முகமான பதிலை அனுப்பாமல், 50 பேர்கள் சட்ட சபை அங்கத்தினர்கள் சேர்ந்து ஒரு அறிவிப்பு வெளியிட்டார்கள்.

"அமைதியுள்ள, சட்ட வரம்புக்குட்பட்ட, பர்டோலி சத்தியாக்கிரகத்தைச் சட்டத்துக்கு மீறியது என்று கவர்னர் கூறியதை, நாங்கள் ஆட்சேபிக்கிறோம். சூரட்டுப் பிரதிநிதி கள், ஆரம்பத்தில், ராஜிக்காக எவ்வளவோ பாடுபட்டுப் பார்த்தார்கள். அந்த முயற்சியை அப்பொழுது ஸர்க்கார் மதிக்காமல், இப்பொழுது ராஜிப் பொறுப்பை, சூரட்டுப் பிரதிநிதிகளின் தலையிலே சுமத்தப்பார்ப்பது வருந்தத் தக்கது. அதிகார வர்க்கத்தாருக்கும் ஜனங்களுக்கு மிடையே போராட்டம் வலுக்குமாகில், அந்தப் பொறுப்பு முழுமையும் அதிகாரவர்க்கத்தையே சாரும்."

தங்களிடம் ராஜி பேசாமல், ஸர்தாரோடேயே ராஜி பேசுவது தான் முறை என்று இந்தச் சட்ட சபை மெம்பர்

கள் கூறியிருப்பார்களானுல், அதுதான் உசிதமாயும் உண்மையாகவும் இருந்திருக்கும். சர்தார் உத்தரவு கொடுத்துத்தானே சத்தியாக்கிரகப் போராட்டம் நிற்க முடியும்? இதை உணர்ந்து, இவர்கள் பதில் சொல்லி யிருக்கலாம்.

கவர்னரின் "மெரட்டு" இந்தியாவின் சில பகுதிகளில், அளவு கடந்த உற்சாகத்தை உண்டாக்கிற்று. "சத்தியாக்கிரகத்தை நன்ருகச் சோதனை செய்து பார்க்க, தக்க சந்தர்ப்பம் ஏற்பட்டு விட்டது. இதன் மூலமாக, சுயராஜ்யப் போராட்டத்தையும் துவக்கி விடலாம்" என்று பலர் துடித்தார்கள். பஞ்சாப் சீக்கியத் தலைவர், ஸர்தார் ஸர்துல் சிங் காவஷீர், காந்திஜிக்கு, ஒரு பகிரங்கக் கடிதம் எழுதினுர். "பர்டோலிக் குள்ளாகவே, சத்தியாக்கிரகப் போராட்டத்தைக் கட்டுப்படுத்தி வைக்கவேண்டும் என்று வல்லபாய் நினைப்பது உசித மற்றதாகும்; பர்டோலிக்கு அனுதாபம் காண்பிக்கும் முறையில், சட்ட மறுப்புச் செய்ய, தேசத்தாரை காந்திஜி அழைக்க வேண்டும்" என்பது சீக்கியத் தலைவர் எழுதிய கடிதத்தின் சாரம்.

கவர்னரின் மெரட்டலைக் கண்டு நடுங்கிப் போன பயங் கொள்ளிகள் எத்தனை பேர்கள்! என்ன ஆபத்து வரக் காத்துக் கொண்டிருக்கிறதோ என்று அவர்கள் மனம் ஏங்கினுர்கள். "ஜனங்கள் சொல்லுவது நியாயம்தான். ஆனுல் கவர்னர் பேசுகிறதை பார்த்தால், பயங்கரமா யிருக்கிறதே! என்ன செய்கிறது" என்பது அவர்களுடைய மனப்பான்மை. இத்தகைய நண்பர்கள், வல்லபாய்க்கு புத்தி சொல்லவும் சத்தியாக்கிரக சாஸ்திரத்துக்குத் தங்களுடைய சொந்த வியாக்கியானம் என்னவென்று கூறவும் ஆரம்பித்து விட்டார்கள். "கவர்னர் சொல்லுவதைக் கேட்டால், குடி கெட்டுப் போகாது" என்ருர்கள்.

யார்பேரிலே, கடுமையாக "பாணப் பிரயோகம்" செய்யப்போவதாக கவர்னர் சொன்னுரோ, அந்த பர்டோலி விவசாயிகள் ஒன்றையுமே கவனிக்கவில்லை. அவர்கள் நிலங்களை உழுது, சாகுபடி செய்ய ஆரம்பித்துவிட்டார்கள். அவசரப்

பட்டு எதையும் செய்யவேண்டாம் என்று, யோசனை சொல்ல வந்தவர்களுக்கு, காந்திஜி "யங் இந்தியா" மூலமாய், புத்தி சொன்னார். "பர்டோலி மகா ஜனங்கள், ஆண்டவன் கையில் பத்திரமாக இருக்கிறார்கள்" என்பது காந்திஜியின் கருத்து. காந்திஜி பின்வருமாறு எழுதினார்:—

"சீக்கியத் தலைவர் கூறிய யோசனைக்கு, வல்லபாய் படேல் என்ன சொல்லுவாரோ, அது எனக்குத் தெரியாது. ஆனால், 'இப்பொழுது வேண்டாம்' என்று நான் சொல்லுவேன். குறுகிய எல்லையில், அனுதாபத்தைக் காண்பிக்கும் சத்தியாகிரகத்துக்குக்கூட, இன்னும் காலம் வரவில்லை. ஆத்ம சோதனைப் பரீட்சையில், இன்னும் சரியாகத் தேறவேண்டும் பர்டோலி. கடைசிச் சூட்டையும் அது தாங்கி, ஸர்க்காரும் கடைசிக் கோடிக்கும் போய்விட்டால், தேசமெங்கும் சத்தியாக்கிரகப் போராட்டம் பரவுவதை நானும் தடுக்க முடியாது வல்லபாயும் தடுக்கமுடியாது. இப்பொழுது கேட்கிற விசாரணைக் கமிட்டியோடு ஜனங்களின் விருப்பம் நிற்கவும் நிற்காது. ஆத்மத் தியாகத்தையும் பொறுமையும் பொறுத்து, தேசமகா ஜனங்கள், சத்தியாக்கிரகத்துக்கு இன்னதுதான் லட்சியம், எல்லை என்று அப்பொழுது குறிப்பிடுவார்கள். அந்த ஜனவெழுச்சி வருமாகில், அது இயற்கையாக வந்ததாகும். அதை யாரும் தடுத்து நிறுத்திவைக்க முடியாது. ஸர்க்கார் இப்பொழுது பதட்டமாகப் பேசுவதைப் பார்த்தால், முதலில் வகுத்துக்கொண்ட எல்லையைத் தாண்ட, தூண்டுதல் இருந்த போதிலும், பழைய கோட்டுக்குள்ளாகவே, பர்டோலிப் போராட்டத்தை நிறுத்திக்கொண்டு போராடுவதுதான் எங்களுடைய கடமையாகும்.

"சத்தியாக்கிரகம் என்றால், அதைக் கடவுள் நடத்துகிறார் என்று அர்த்தம். தலைவன் தன் சொந்த சக்தியை நம்பவில்லை. அவன் கடவுளின் சக்தியை நம்பியிருக்கிறான். அவனது 'உள் ஒளி' (பொலிவுகொண்ட மனச்சாட்சி) எவ்வாறு சொல்லுகிறதோ, அவன் அவ்வாறு நடக்கிறான். அவன் செய்வது, அனுபவத்துக்கு ஒத்ததல்லவென்று பார்

வைக்குத் தோன்றினாலும், முடிவிலே, அவனுடைய கிளர்ச்சி தான் அனுபவத்துக்கு ஒத்தது என்று சொல்லும்படியாக இருக்கிறது. பர்டோலி இப்பொழுது போராடவேண்டி வரும் பயங்கரப் போராட்டத்தை உத்தேசித்துப் பார்த்தால், நான் மேலே சொல்லியது யாவும் முட்டாள்தனமாகப் பலருக்குத் தோன்றலாம். எது அந்தரங்கமான உண்மை என்று எனக்குத் தோன்றுகிறதோ, அதைத் தெரிவிக்காவிடில், நான் எனக்கும் எனது நாட்டாருக்கும் துரோகம் செய்தவனாவேன். வல்லபாய் நம்புகிறமாதிரி, பர்டோலி மகா ஜனங்கள் இருப்பார்களாகில், ஸர்க்கார் வசம் எத்தனை பாணங்கள் இருந்தபோதிலும், பாதகமில்லை, கவலையுமில்லை. ராஜியில் ஆர்வம் கொண்டிருக்கும் சட்டசபை அங்கத்தினர்களும் ஏனையோர்களும், ஜனங்களைக் காப்பாற்றுகிறமாதிரி மனதில் தியானம் செய்துகொண்டு, யாதொரு பலவீனமான அடியும் எடுத்துவைக்க வேண்டாம். பர்டோலி மகா ஜனங்கள் கடவுளின் கையில் பத்திரமாய் இருக்கிறார்கள்."

கொஞ்சம் பொறுமையுடனும் மனத்திடத்துடனும், சட்டசபை மெம்பர்கள், 'என்ன நடக்கிறது பார்ப்போம்' என்று இருந்திருக்கலாம். நாம் குறிப்பிட்டது மாதிரி, கவர்னருக்கு, இவர்கள் பதில் எழுதியிருந்தால், வானம் இடிந்து தலையிலே விழுந்திருக்காது. ராஜிக்கு ஸர்க்காரே தரையைத் தயார் செய்துகொண்டிருந்தார்கள். மோட்டா கிராமவாசியான ராமச்சந்திர பட்டா என்பவர் பம்பாயில் தொழில் நடத்தி வருகிறார். கவர்னர் பேச்சுக்குப் பிறகு, பழைய கிஸ்திக்கும் புதிதுக்கும் உள்ள வித்தியாசத்தைத் தாமே பர்டோலிக்காகக் கட்டிவிடுவதாக, பட்டா ஸர்க்காருக்குத் தெரிவித்தார். "நீர் யார்? அது சூரட்டுப் பிரதிநிதிகள் செய்யவேண்டிய வேலை" என்று சொல்லுவதுபோல, முதலிலே அவருக்கு ஸர்க்காரிடமிருந்து பதில் வந்தது. பிறகு "நீரே கொடும், பாதகமில்லை" என்று ஸர்க்காரால் ஒப்புக்கொள்ளப்பட்டது. ராமச்சந்திராவின் உபாயம் ஸர்க்காரின் தூண்டுதல் என்று நன்றாக விளங்கிற்று.

இதை யொன்றையும் கவனிக்காமல், சட்டசபை மெம்பர்கள் பெரும் கவலையுடனிருந்தார்கள். "தலைப் பொறுப்பாய்", அவர்கள் கவர்னரையும் நிர்வாக சபை அங்கத்தினர்களையும் பேட்டி கண்டார்கள். அவர்கள் "பழைய பாடத்தைத்தான் இப்பொழுதும் படித்தார்கள்". நிதி மந்திரியான ஸர் சுனிலால் மேதாவோடு கலந்து யோசித்துக்கொண்டிருந்த முன்ஷி அவர்கள், குறைந்தது என்ன என்பதை காந்திஜி, வல்லபாயிடமிருந்து தெரிந்துகொள்ளுவதுதான் சரியானது என்று எண்ணினார். அவர், இவ்விருவரையும் பேட்டி கண்டார். அவர்கள் பின்வரும் நிபந்தனைகளைச் சொன்னார்கள்.

(1) விசாரணைவரைக்கும், பழைய ஸெட்டில்மெண்டை ஒப்புக்கொள்ளுவது.

(2) விசாரணை கமிட்டி நியமனம் அறிவிக்கப்பட்டவுடன், ஸத்தியாக்கிரகிகள் பழைய கிஸ்தியைக் கொடுத்துவிட்டு, போராட்டத்தை நிறுத்திக் கொள்ளுகிறது.

(3) விசாரணை பகிரங்கமாய் நடைபெறல் வேண்டும். விசாரணைத் தலைவர் நீதி இலாகாவைச் சேர்ந்தவராக இருக்கும் உத்தியோகஸ்தர் வேண்டும். அவருக்கு ஒத்தாசைக்காக, ரிவினியூ இலாகா ஒருவரையும் நியமித்துக் கொள்ளலாம். வக்கீல் வைத்து, சாட்சி விடும் பாத்தியம் ஜனங்களுக்கு இருக்கவேண்டும். விசாரணைக் கமிட்டி விசாரணை செய்ய வேண்டிய விஷயங்கள்:—

(க) நிலவரிக்கோடுக்குக் கட்டுப்படாத முறையில், புதிய ஸெட்டில்மெண்டு செய்யப்பட்டிருப்பதாயும் ஜனங்களுக்குக் கைக்கெட்டிய தஸ்தாவேஜிகளைப் பார்த்தால், வரி உயர்வுக்குக் காரணமேயில்லையென்றும் ஜனங்கள்சொல்லுகிற குறைபாடுகளைப்பற்றி விசாரிப்பது; ஜனங்கள் சொல்லுவது சரியென்று ருசுவானல், பழைய கிஸ்தியில் எவ்வளவு கூட்டுவது அல்லது குறைப்பது என்பதைப்பற்றித் தீர்ப்புச் சொல்லுவது.

(ங) புதிய கிஸ்தியை வசூல் செய்வதற்காக, ஸர்க்கார் கையாண்ட அடக்கு முறைகளைப்பற்றி, ஜனங்கள் குறை சொல்லிக் கொண்டதை, விசாரிப்பது.

(4) பறி முதலான எல்லா நிலங்களையும் திருப்பிக் கொடுப்பது.

(5) சத்தியாக்கிரகிக் கைதிகள் எல்லோரையும் விடுதலை செய்வது.

(6) ராஜிநாமா செய்த கர்ணம் மணியக்காரர்களுக்கு மீண்டும் வேலை கொடுப்பது.

(7) வலோட் சாராயக்கடைக்காரருக்கு நஷ்ட ஈடு கொடுப்பது.

அடக்கு முறைகளைப்பற்றி விசாரிப்பது என்பது பற்றி, ராஜிக்குத் தகராறு ஏற்படுமானால், அதை சத்தியாக்கிரகிகள் வற்புறுத்தாமல் விட்டுக் கொடுத்து விடுவார்கள் என்று காந்திஜி, முன்ஷியிடம் தெரிவித்துக் கொண்டார்.

இவைகளை யெல்லாம் "மூட்டையாகக் கட்டித் தூக்கிக் கொண்டு" முன்ஷி கவர்னரைப் போய், பேட்டி கண்டார். கவர்னர் சரியாக முகம் கொடுத்துப் பேசவில்லை. பிறகு, ஹரிபாய் அமீன், நரிமன்—இரண்டு சட்டசபை மெம்பர்களும், காந்திஜியை சபர்மதியில் பேட்டி கண்டார்கள். முன்ஷிக்குச் சொன்னது தான் இவர்களுக்கும். இந்த நிபந்தனைகளின் பேரில், நண்பர்கள் ராஜிப் பிரயத்தனம் செய்தால், பூனாவுக்கு வல்லபாய் வரத் தயங்கமாட்டார் என்று காந்திஜி இவர்களிடம் சொன்னார். (கோடைக்காக, கவர்னர், நிர்வாக சபையார் பூனாவில் அப்பொழுது இருந்தார்கள்).

பர்டோலியிலோ, பரபரப்பே கிடையாது; ஒரே அமைதிதான். ஸர்தார் அரெஸ்டு ஆவது நிச்சயம் என்று எல்லோரும் முடிவு கட்டிக் கொண்டார்கள். ஸர்தார் கைதியான பிறகு, பர்டோலிக்குப் போய், போராட்டத்தை நடத்துவதைப் பார்க்கிலும், அவர் இருக்கும்பொழுதே, பர்டோலிக்குப் போய், ஸர்தார் சொல்லுகிறபடி செய்யத் தயாராயிருப்பதைத் தெரிவித்துக்கொள்ளுவது உசிதம் என்று காந்திஜி தீர்மானம் கொண்டார். எனவே, ஆகஸ்ட்மீ 2உ காந்திஜி பர்டோலிக்குப் போய்ச் சேர்ந்தார்.

தேசமெங்கும் பரபரப்பு இருக்க, ஒன்றும் நேராதது போல பர்டோலி அமைதியுடனிருப்பதைக்காண, காந்திஜி ஆச்சரியப்பட்டுப் போனார். “அவர்கள் கடவுள் கையில் பத்திரமாக இருக்கிறார்கள்” என்பது உண்மை தான் என்று இரண்டு நாள் சுற்றுப் பிரயாணத்தில் தெரிந்து கொண்டார். சேறிலும் தண்ணீரிலும் நடந்து, வெகு தூரத்திலிருந்து குடியானவர்கள் காந்திஜியைத் தரிசனம் காண வந்தார்கள். ராஜிப் பேச்சு நடக்கிறது என்று அவர்களுக்குத் தெரியும். “நாங்கள் எங்கள் தலைகளை ஸர்தார் கையிலே ஒப்புவித்தோமேயொழிய, எங்கள் கௌரவத்தையும் ஒப்படைத்து விடவில்லை” என்று ஒருவர் காந்திஜியிடம் சொன்னார். “சரி, அப்படியானால், உங்கள் கௌரவம் பத்திரமாயிருக்கிறது. ஆனால், கடுமையான சோதனை நெருங்கி வருகிறது. அதற்கு நீங்கள் ஈடுகொடுத்து விட்டால், வெற்றி உங்களுடையது தான். ஒன்று சொல்லுங்கள்; வல்லபாய் கைதியாகிவிட்டால்—அவரோடு மற்றவர்களும் என்று வைத்துக் கொள்ளுவோம்.—நீங்கள் நடுநடுங்கி கட்டுவிட்டுப் போய்விடமாட்டீர்களா” என்று காந்திஜி கேட்டார். “அந்த ஆபத்து நேராது. எங்கள் எலும்பை எஃகாகச் செய்து விட்டார் வல்லபாய். வானம் இடிந்து விழுந்தாலும், எங்கள் வார்த்தையைக் காப்பாற்ற வேண்டும் என்ற ஒன்றுதான் எங்களுக்குத் தெரியும்” என்று ஒருவர் அழுத்தமாகச் சொன்னார்.

காந்திஜிக்குப் பெரு மகிழ்ச்சி. “கிராமங்களைச் சுற்றிப் பார்க்கலாமே” என்று காந்திஜியைக் கேட்டுக் கொண்டார்கள் சில நண்பர்கள். “வல்லபாய் உத்தரவு கொடுத்தாலொழிய, முடியாது” என்றார் காந்திஜி. ஸர்போன், ராயம் கிராமங்களுக்கு காந்திஜி போகும்படியாக வல்லபாய் வேண்டிக் கொண்டார். காந்திஜி அங்கு விஜயம் செய்தார். நூற்றுக் கணக்கான குடியானவர்கள் கூடிக்கொண்டார்கள். பர்டோலிக் குடியானவர்களைப்பற்றி, தேசமெங்கும் எவ்வளவு பெருமையாகப் பேசிக் கொள்ளுகிறார்கள் என்பது தெரியாமலே, இவர்கள் சாதுக்களாக, கூடியிருந்தார்கள்; கலகக்காரர்

களாக அல்ல. ராயத்தில் கூட்டம் ரொம்பவும் ஜாஸ்தி. நூல்நூற்கிற காட்சி. ஆனால் கடுமையான வெயில். பாத காணிக்கை கொண்டுவந்து செலுத்துகிறார்கள் நூற்றுக் கணக் கான ஸ்திரீகள். காந்திஜி ஏதாவது பேச வேண்டாமா? கட்டுப்பாட்டைப் பற்றிப் பேசினார்.

"ஸர்தாரின் உத்தரவு தெளிவாக இருப்பதால், நான் பேச முடியாது. அவர் இங்கேயிருந்து கொண்டு, என்னைப் பேசும்படி சொன்னால், நான் பேசியிருக்கவேண்டும். உங்கள் தைரியத்தையும் ஒற்றுமையையும் பாராட்டுவதைத் தவிர, நான் இன்றைக்கு வேறொன்றும் செய்ய முடியாது. நூற் கும் காட்சியை கண்டு, எனக்குப் பெருமகிழ்ச்சி. ஆனால், ராட்டினத்தைப்பற்றிக் கூட, நான் பேசக்கூடாது; நாம் யார் ஒருவரை நமது ஸர்தார் (தலைவர்) என்று கொள்ளுகிறோமோ, அவருடைய உத்தரவுக்கு ஆட்சேபிக்காமல் கீழ்ப்படிந்து நடக்கவேண்டும். இது நமது தர்மமாக இருக்கவேண்டும்.

"நான் வல்லபாயின் அண்ணன் என்பதை ஒப்புக் கொள்ளுகிறேன். ஆனால் பொது வேலையில், தகப்பனாயினும் அண்ணனாயினும் சரியே, தலைவனுடைய உத்தரவுகளுக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும். இது புதிய சட்டமேயல்ல, இது பண்டைக்காலத்துச் சட்டமும்கூட. பார்த்தனுக்கு சாரதியாக பகவான் கிருஷ்ணன் விளங்கவில்லையா? ராஜா யுதிஷ்டிரன் ராஜசூய யாகம் செய்கையில், மிகவும் அற்பமான வேலையையும் மேற்கொண்டு, கண்ணன் செய்யவில்லையா?

"உங்களைப் பாராட்டுவதற்கு அதிகமாக ஒன்றும் இன் றைக்கு நான் செய்ய முடியாது. தேசமெங்கும் உங்களைப் பிர சித்தப் படுத்தியவர் வல்லபாய். ஆனால், உலக முழுமையி லும் உங்களுக்குப் பிரசித்தி வரும்படி செய்தவர்கள் அரசாங் கத்தார். எதிர்காலத்தில், இன்னும் அதிகமான கீர்த்தி உங்களுக்கு வருவதாக!'

## அத்தியாயம் 32.

யாதொரு சந்தடியும் செய்யாமல், காந்திஜி பர்டோ

லிக்கு வந்து சேர்ந்து, தமது வேலையைக் கவனித்துக் கொண்டிருந்தார். இந்த சமயத்தில், பூனுவிலிருந்து, வல்லபாய்க்கு ஒரு தந்தி வந்தது. குஜராத் சட்டசபை மெம்பர்களின் சார்பாக, ராவ் சாகேப் தாதுபாய் தேசாய், ஸர்தார் பூனுவுக்கு வரும்படியாகத் தந்தி கொடுத்திருந்தார். பம்பாய் அரசாங்கத்தின் நிதி மெம்பர் ஸர் சூனிலால் மேதாவின் விருந்தினராக இருக்கலாம் என்று தந்தியில் கண்டிருந்ததால், ஸர்தாரை ஸர் சூனிலால் மேதா அழைத்திருக்க வேண்டும் என்பது தெளிவு. குஜராத் மெம்பர்களைத் திருப்தி செய்வதற்காகவேனும், வல்லபாய் பூனுவுக்குப் போக விரும்பினுர். ஆகஸ்டுமீ 3வ- பூனுவுக்குப் போய்ச் சேர்ந்தார்.

பூனுவில் 3வ., 4வ-களில் வல்லபாய்க்கும் ஸர் சூனிலாலுக்கும் இடையே நடந்த யாவற்றையும் வெளியிடுவது சாத்தியமல்ல; சாத்தியமானுலும் சரியல்ல. ஆனுல் முக்கியமான விஷயங்களையேனும் சொல்லியாக வேண்டும். இறுதி நிபந்தனைகளை சூரட்டு மெம்பர்களைப் பார்த்து, கவர்னர் சொன்னபோதிலும், வல்லபாயோடு நேருக்கு நேராகப் பேசினுல்தான், இதற்கு ஒரு முடிவு ஏற்பட முடியும் என்பதை அரசாங்கத்தார் நன்ருக உணர்ந்து கொண்டார்கள். தாங்கள் தனி ஹோதாவில் யாதொரு ஒப்பந்தமும் செய்து கொடுக்க, சூரட்டு மெம்பர்களும் சம்மதிக்கவில்லை. தாங்கள் ஏதேனும் சொல்லி, அதன் மூலமாக வல்லபாயைக் கட்டுப்படுத்தவும் அவர்கள் எண்ணவில்லை என்பதைக் குறிப்பிட வேண்டியது அவசியம்.

ஸர் சூனிலால் மேதாவின் பங்களாவில் பேச்சு நடக்கையில், எல்லோரும், அரசாங்கத்தார் உள்பட ராஜிக்குத் தயாராயிருக்கிருர்கள் என்பது தெளிவாகி விட்டது. ஆனுல், ஸர்க்காரின் கீர்த்தி குறையாமற்படிக்கு, எப்படி ராஜியைக் கொண்டு வருவது என்பதைப் பற்றித்தான் எல்லோரும் குழம்பிக்கொண்டிருந்தார்கள். ராஜி, ஒப்பந்தம் ஒன்று எழுதினுர்கள். அதை ஸர் சூனிலால் ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார். அவர் ஏனைய அரசாங்க நிர்வாகிகளுடன்

பேசிக்கொண் டிருந்து விட்டு, சாயங்காலம் கீழ்க்கண்ட ஒப் பந்தத்தோடு வந்து சேர்ந்தார்.

"கவர்னர் ஜூலை 23உ சட்ட சபைத் திறப்புப் பேச்சில் விதித்த நிபந்தனைகள் நிறைவேற்றி வைக்கப்படும் என்பதை ஸர்க்காருக்குத் தெரிவிக்கும்படியான நிலையில் இருக்கிறோம் என்பதை மகிழ்ச்சியுடன் அறிவித்துக் கொள்ளு கிறோம்" என்று சூரட்டு மெம்பர்கள், ரிவினியூ மந்திரிக்கு (மெம்பருக்கு) எழுதவேண்டுமாம். இதுதான் ஸர் சூனி லால் கொண்டு வந்த ஒப்பந்த வாக்கியம்.

"விசாரணைக்கு முந்தியே, நிபந்தனைகளை சூரட்டு மெம் பர்கள் நிறைவேற்றி வைக்கவாவது! என்ன அதிசயம்! இதற்கு என்ன அர்த்தம்! யாராவது நிபந்தனைகளை நிறை வேற்றி வைக்கக் கூடுமானால், அது நாங்கள். விசாரணை சங்கதி அறிவிக்கப்படும் வரையில், பழைய கிஸ்தியையே எங்களால் கொடுக்க முடியாது என்று நாங்கள் சொல்லு கிறோம்" என்றார் வல்லபாய்.

"இந்த மாதிரிக் கடிதத்தைத் தாங்கள் எழுதித் தர முடி யும் என்று சூரட்டு மெம்பர்கள் சொன்னால் போது மல்லவா? அதைப்பற்றி நீங்கள் ஏன் கவலைப்படுகின்றீர்கள்? இந்த நிபந்தனைகள், எவ்வாறு, எப்பொழுது, யாராலே நிறைவேற்றி வைக்கப்படும் என்பதைப் பற்றி நீங்கள் யாதொரு ஆயாச மும் பட வேண்டியதில்லை. விசாரணை அறிவிப்புச் செய் யப்பட்ட பிறகு, நீங்கள் பழைய கிஸ்தியைக் கொடுக்க லாம்" என்றார் ஸர் சூனிலால்.

உண்மையைச் சொன்னால், இந்த ராஜ தந்திரம் ஸர் தார் உள்ளிட்டவர்களுக்கு விளங்கவே யில்லை. இந்த நெருக்கடி காலத்தில், ஸர்தாரோடு, முன்ஷி யவர்களும் கூட இருந்தார். அவர் ஒரு ஒப்பந்தம் எழுதினார். அது ஏற்றுக் கொள்ளப் படவில்லை. சிவதாஸனி அவர்களும் ஒன்று எழுதி னார். அதையும் ஏற்றுக்கொள்ளவில்லை ஸர் சூனிலால். ஸர்க்காரின் வாக்கியத்தைத்தான் அவர் பிரமாணமாகக்

கொண்டிருந்தார். மீண்டும் முட்டுக் கட்டை ஏற்படப் போகிறது என்று பயந்து, ராஜியின் ஏனைய ஷரத்துக்களைப் பற்றிப் பேச ஆரம்பித்தார் முன்ஷி. நிலத்தைத் திரும்பக் கொடுத்தல், சத்தியாக்கிரகக் கைதிகளின் விடுதலை, கர்ணம் பட்டா மணியக்காரர்களுக்கு மீண்டும் உத்தியோகம் கொடுத்தல்—இவைகள் சம்பந்தமாக, நடு நிசிக்குப் பிறகு ஒற்றுமை ஏற்பட்டது. அடக்கு முறை அட்டூழியங்களைப் பற்றி விசாரிக்க வேண்டும் என்ற ஷரத்தை வல்லபாய் அதிகமாக வற்புறுத்தவில்லை.

ஆனால் முக்கியமான விஷயம் ஒப்பந்த வாக்கியமாகும். அதைப் பற்றித்தான் தகராறு. ஒற்றுமை ஏற்பட வில்லை. திருப்திகரமான வாக்கியம் எப்படியேனும் அமைந்து போகும் என்ற நம்பிக்கையுடன், முன்ஷி எழுந்து போய் விட்டார். சுவாமி ஆனந்தரும் மகாதேவ தேசாயும் ஸர்தாரோடு அப்பொழுது இருந்தார்கள். ராஜி சாத்தியமில்லை என்று மனதிலே ரொம்பவும் நொந்து போய், ஸர் சூனிலால் மேதா படுக்கப் போய்விட்டார். ராஜிப்பேச்சு ஏன் முறிந்து விட்டது என்பதன் காரணங்களை விளக்கி, கவர்னருக்கு ஒரு கடிதம் எழுதுவது என்று வல்லபாயும் கூட இருந்தவர்களும் முடிவுக்கு வந்து, கடிதத்தின் நகலையும் தயார் செய்து விட்டார்கள்.

ஆனால் மகாதேவ தேசாய்க்கு உறக்கம் வரவில்லை. அவர் சூனிலாலின் நகலைப்பற்றி யோசித்துக் கொண்டேயிருந்தார். என்ன தோன்றிற்றோ என்னவோ, அவர் வல்லபாயை "பளிச் சென்று" எழுப்பினார். "நான் யோசித்துப் பார்த்தேன். ஸர் சூனிலாலின் நகல் ரொம்பவும் சாது. அந்த வாக்கியத்துக்கு அர்த்தமே கிடையாது. நாமும் சரி, சூரட்டு மெம்பர்களும் சரி யாதொரு ஒப்பந்தமும் செய்து கொடுத்து விடவில்லை. அந்த அர்த்தமில்லாத சூத்திரத்தைக் கொண்டு, அரசாங்கத்தார் திருப்தி யடைவதாயிருந்தால், திருப்தி யடையட்டுமே" என்றார் மகாதேவ தேசாய்.

வல்லபாய்:— அப்படிச் செய்தால், சத்தியம் பின்னப் பட்டுப் போகாதா?

மகாதேவ்:—ஆம் என்று ஒப்புக்கொள்ளுகிறேன். அதற்கு ஜவாப்தாரி ஸர்க்கார்தானே?

ஸர்தார்:—நாமும் அதற்கு உடந்தையாக இருக்க நேரு கிறதல்லவா?

மகாதேவ்:—நாம் செய்கிறது இன்னதுதான் என்று ஸர்க்காரிடம் தெளிவாய்ச் சொல்லிவிட்டால், நாம் உடந்தை யாகமாட்டோம்.

ஸர்தார்:—ஸர்க்கார் தான், சத்தியத்துக்குப் பங்கம் உண் டாக்குகிறார்கள் என்று நீங்கள் ஸர் சூனிலாலிடம் போய்ச் சொல்லத் தயாரா யிருக்கிறீர்களா?

மகாதேவ்:—ஆகா! இதோ! போகிறேன்.

ஸர்தார்:—"இதோ பாருங்கோ! இந்த வித்தை எனக்கு விளங்கவே யில்லை என்பதை நான் தாராளமாய் ஒப்புக் கொள்ளுகிறேன். அவர்கள் ஏன் உண்மையை உள்ளபடியே தெரிவிக்கப்படாது? பாபு (காந்தி) என்ன சொல்லுவார் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்? ஸ்வாமிஜி நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?

மகாதேவ தேசாய் திகைத்துப்போனார். பாபு என்ன சொல்லுவார் என்று ஸர்தார் கேட்டது நியாயம்தான். சின்ன சகாக்களின் அபிப்பிராயத்தையும் ஸர்தார் கேட்டதுதான் ஆச்சரியமாக இருந்தது. ஸர்தாரின் உண்மையான பெருந் தன்மை அன்று ஜ்வலித்தது என்று சொல்லலாம். ஸத்தியாக் கிரக தத்துவத்துக்கு யாதொரு பங்கமும் நேரவில்லை என்ற முடிவுக்கு வந்ததும், "இந்த அர்த்தமில்லாத நகலில், சூரட்டு மெம்பர்கள் கையெழுத்துப் போடுவார்களா" என்று ஸர் தார் கேட்டார். "இந்த வித்தையில், அவர்களும் நுழைந்து பார்த்திருப்பார்கள் என்று எனக்கு நிச்சயமாய்த் தோன்று கிறது. அவர்கள் கையெழுத்திடுவார்கள் என்று ஸர் சூனி லால் நம்பிக்கையுடனிருக்கிறார்" என்றார் மகாதேவ தேசாய்.

"நல்லது! அவர்கள் கையெழுத்திட்டால், எனக்கு ஆட்சேபணையே கிடையாது. ஸர்க்கார் சத்தியத்துக்குப் பங்கம் விளைக்கிறார்கள் என்று மீண்டும் ஒருதரம் சூனிலாலிடம் சொல்லிவிட்டு, நம்முடைய நிலைமையைத் தெளிவு படுத்திக் கொள்ளவேண்டும்" என்றார் ஸர்தார்.

மகாதேவ தேசாய், ஸர் சூனிலால் அவர்களிடம் போய் விஷயம் பூராவையும் அவரிடம் விளக்கிச் சொன்னார். "உங்களுடைய நிலைமையை விளக்கிக் காண்பிப்பதில் எனக்குச் சந்தோஷம். இவையாவற்றையும் அரசாங்கத்தாரிடம் தெளிவாக எடுத்துக் காண்பிக்கிறேன்" என்றார் ஸர் சூனிலால்.

இந்த நகலை ஸர்க்கார் எப்படி ஒப்புக்கொள்ளமுடியும் என்று மீண்டும் ஸர்தாருக்குச் சந்தேகம். இந்த நகலினாலே, ஸர்க்கார் திருப்தியடைவதற்கு என்ன இருக்கிறது என்று ஸர்தார் எண்ணினார். நகல் போதுமானது என்பது ஸர்க்காரின் கருத்து. அரசாங்கங்களின் கருத்துக்களையும் வழிகளையும் யார் கண்டுகொள்ள முடியும்! சூரட்டு மெம்பர்கள் கையெழுத்துப் போட்டால், தமக்கு யாதொரு ஆட்சேபமுமில்லை என்று ஸர்தார் சொன்னதும், ராஜி முற்றுப்பெற்றுவிட்டதாகக் கொண்டுவிடலாம். இந்த சந்தர்ப்பத்தில், ஸர் சூனிலாலைப்பற்றி ஒரு வார்த்தை. ஸத்தியாக்கிரகிகளைக் காட்டிலும் அவருக்கு ஸர்க்காரின் நோக்கம் நன்றாகத் தெரியும். இந்த அரிய சந்தர்ப்பத்தில், அவருடைய மாசற்ற தேச பக்தி யொலியுடன் பிரகாசித்தது. இந்தக் காலங்களில் அவர் செய்த காரியங்கள் யாவும் தேசபக்தியின் தூண்டுதலாலே தான் என்று சொல்லவேண்டும். அரசியல் நிர்வாகி என்பதை அவர் அடியோடு மறந்துவிட்டார் எனலாம். கீர்த்தியின் நிழலை வேண்டி நிற்கிறார்கள் ஸர்க்கார் என்றும் கீர்த்தியின் சாரத்தை இழந்துவிட்டார்கள் என்றும் ஸர் சூனிலாலுக்கு நன்றாய்த் தெரியும். உலகமுழுதும், எல்லா அரசாங்கங்களும் இவ்வாறுதான் நடந்து கொள்ளுகின்றன. என்ன செய்வது?

அரசாங்கத்தார் சக்கையைக் கொண்டு திருப்தியடைய

லாம். ஆனால், ஸர்தார் சக்கையைக் கொண்டு, திருப்தி யடைய முடியுமோ? பகிரங்கமாக விசாரணை செய்வதற்கு ஒரு கமிட்டியை நியமனம் செய்ய வேண்டும் என்பதுதான் ஸத்தியாக்கிரகிகளின் போராட்டத்தின் நோக்கமாகும். இதை வல்லபாய் விட்டுக் கொடுத்துவிட முடியுமா? கமிட்டியை நியமனம் செய்ய, ஸர்க்கார் இசைந்தார்கள். சூரட்டு மெம்பர்கள் அந்த "ராஜதந்திர"க் கடிதத்தை ரிவினியூ மெம்பருக்கு எழுதியனுப்பியதும், கமிட்டி நியமனம் அறிவிக்கப்படும் என்றும் மற்றைய ஷரத்துக்கள் அமுலுக்குக் கொண்டுவரப்படும் என்றும் ஸர்க்கார் தெரிவித்துக் கொண்டார்கள். சூரட்டு மெம்பர்கள் கடிதம் எழுதியனுப்பிய பிறகு—இங்கேயும் ஸர்க்காரின் கீர்த்தி கெடாமலிருக்க வேண்டுமாம்! அடக்குமுறைதனை விசாரிப்பது என்பதைத் தவிர, எல்லா ஷரத்துகளையும் ஒப்புக்கொண்டார்கள் ஸர்க்கார். வலோட் சாராயக் கடைப் பார்ஸிக்கு நஷ்ட ஈடு செய்வது என்பதையும் ஒப்புக் கொண்டார்கள். இதற்கு மேலே, வல்லபாய்க்கு ஒன்றுமே தேவையில்லை. அவர் "சத்தை" விரும்பியவர்; அதை அடைந்தார். சக்கையை அவர் விரும்பவில்லை!

சூரட்டு மெம்பர்களும் இன்னும் மூன்று நான்கு பேர்களும் சேர்ந்து, அந்தக் கடிதத்தை எழுதியனுப்பினார்கள். சூரட்டு மெம்பர்களைத் தவிர, மற்றவர்கள் எதற்காகக் கையெழுத்திட்டார்கள் என்பது விளங்கவில்லை. ஸர் சூனிலாலின் வேண்டுகோளுக் கிணங்கி, ராவ் பகதூர் பீம்பாய் நாயக்கும் முன்ஷியும் சூரட்டுக் கலெக்டரிடம் போனார்கள். எதற்காக? கிரயமான நிலங்களை, சுவான்தார்களுக்குத் திருப்பிக் கொடுக்கும்படி, கலெக்டருடன் கலந்து ஏற்பாடு செய்ய. இந்த நிலங்களை வாங்கியவர்கள், எங்கெங்கேயோ பிரிந்து பிரிந்து கிடந்தார்கள். அவர்களை ஆகஸ்டு மீ 6-க்குள் தேடிப் பிடிக்க வேண்டுமே!

பறிமுதலாகி, கிரயம் செய்யப்பட்ட நிலங்கள் சுவான்தார்களுக்குத் திருப்பிக் கொடுக்கப்படமாட்டா என்று அடிக்கடி விருதுகூறிக்கொண்டிருந்த பழைய கலெக்டர் ஸ்ரீ ஹார்ட்

ஷார்ன் அவர்கள், இந்தச் சமயத்தில், சௌகரியமாக, சூரட்டு ஜில்லாவை விட்டு மாற்றப்பட்டார். புதிய கலெக்டர் காரெட். புதிதாய் வாங்கியவர்கள் நிலங்களை வாபஸ் கொடுக்கும்படி காரெட் செய்தார். அவர்களிடமிருந்து இந்த நிலங்களைத் திரும்ப வாங்குவதற்கு, கமிஷனரும் கலெக்டரும் எவ்வளவோ ஆசை காண்பிக்கவேண்டி யிருந்தது. இவர்களை எவ்வளவு சாமர்த்தியமாய், தம் வழிக்கு, கலெக்டர் திருப்பிக் கொண்டுவந்தார் என்று முன்ஷி, கலெக்டரை வெகுவாகப் புகழ்ந்து எழுதியிருக்கிறார்.

சூரட்டு மெம்பர்கள் எழுதிய கடிதம் ரிவினியூ மெம்பர் கைக்குப் போய்ச் சேர்ந்தவுடன், விசாரணைக் கமிட்டி நியமனம் செய்துவிட்டதாக அறிவிக்கப்பட்டது. சத்தியாக்கிரகிகள் குறிப்பிட்ட நிபந்தனைகளைத் தழுவியே விசாரணையை ஷரத்துக்களும் நிறைவேற்றி வைக்கப்படும் என்று ஸர்க்கார் அறிக்கை கூறிற்று.

ஸர்தாருக்குத் திருப்தி. இதில் கலந்து கொண்ட எல்லாருக்கும், ஸர்க்காருக்கு உள்பட, அவர் பகிரங்கமாக வந்தனமளித்து, வாழ்த்துக் கூறினர். "நாம் பழைய கிஸ்தியைக் கொடுக்க வேண்டும். புதிதல்ல. பழைய கிஸ்தியைக் கொடுப்பதற்கு நீங்கள் எல்லோரும் தயாரா யிருக்கவேண்டும்" என்று ஸர்தார், மிராசுதார்களுக்குத் தாக்கீது அனுப்பினர். சத்தியாக்கிரகக் கைதிகளையும் விடுதலை செய்து விடுவார்கள் என்று நம்பி, இந்தமாதிரி தாக்கீது அனுப்பினர் வல்லபாய். அவர்கள் விடுதலையாகாதது கண்டு, ஸர்தார் ஆச்சரியமடைந்தார். விடுதலை செய்யாததற்குக் காரணம் என்னவெனில் வல்லபாய் ராஜியை ஏற்றுக்கொண்டாரா இல்லையா என்பது ஸர்க்காருக்குத் தெரியவில்லை. வல்லபாயிடம் கலெக்டர் காரெட்டை அனுப்பினர்கள். தாம் ராஜியை ஒப்புக்கொண்டு விட்டதாக ஸர்தார் காரெட்டுக்குத் தெரிவித்ததும், காரெட் அரசாங்கத்துக்கு உடனே தந்தி கொடுத்தார். மறுநாட் காலையில், சத்தியாக்கிரகக் கைதிகள் எல்லோரும் விடுதலை!

வல்லபாய் கைப்பட எழுதிய கடிதம் போதும் என்று, கர்ணம் பட்டாமணியக்காரர்களை மறுபடியும் வேலையில், அமர்த்திக்கொண்டார்கள். இதுமுடிந்தது. ஜனங்கள் தங்கள் கடமையைச் செய்யவேண்டுமே! அவர்கள், பழைய ஸெட்டில்மெண்டுப் படிக்கு, கிஸ்தியை செலுத்த ஆரம்பித்தார்கள். ஒரு மாதத்துக்குள், பைசாக்கூடப் பாக்கியில்லை.

இவ்வாறு முடிந்தது பர்டோலிப் போராட்டம். போராட்டம் செய்தவர்கள் சாதுவான குடியானவர்கள். அவர்கள் கைக்கொண்ட ஆயுதங்கள் உண்மையும் சகிப்புத் தன்மையுமே. குடியானவர்களுக்கு எதிராயிருந்தவர்கள் அரசாங்கத்தார். நினைத்தால், அரசாங்கத்தார், ஒரு நிமிஷத்தில் குடியானவர்களைப் பொடியாக்கி யிருக்கமுடியும். ஆனால், சத்தியத்தையும் சாத்வீகத்தையும் யாராலும் அழிக்க முடியாது என்பதை பர்டோலிக் குடியானவர்கள் உலகத்துக்குப் பிரசித்தமாகக் காண்பித்து விட்டார்கள். பர்டோலி முடிவு, உண்மைக்கு வெற்றியாகும், சாத்வீகத்துக்கு வெற்றியாகும். ஸர்தாருக்கு இது மூன்றாவது ஜயம்; சர்க்காருக்கும் வெற்றியே.

ஸர்தாரின் முதல்வெற்றி, நாகபுரிக் கொடிப்போர் வெற்றி; இரண்டாவது வெற்றி போர்ஸாத் வெற்றி போர்ஸாதிலே, "சட் பொட்" என்று காரியம் முடிந்துவிட்டது. எனவே, தேசத்தின் கவனத்தைக் கவரவில்லை, கவர முடியவில்லை. பர்டோலிப் போராட்டத்தை, தேசமட்டுமல்ல, ஆங்கில சாம்ராஜ்யமே, கூர்ந்து கவனித்து வந்தது எனலாம். தேச முழுதும் பர்டோலியை ஆதரித்ததற்குக் காரணம் என்ன? பர்டோலியின் நிதானம்கொண்ட வேண்டுகோள்தான். போராட்டம் துவக்கின பதினைந்து நாட்களுக்குள்ளாகவே, அதை நசுக்கிவிட முடியும் என்று ஸர்க்கார் சிப்பந்திகள் பேசிக்கொண்டார்கள். அது வெறும் பேச்சாகி விட்டது.

ரிவினியூ இலாகாவோடு "சண்டைபோடுகிறது" என்பது மிகவும் சிரமமான வேலையாகும். ரிவினியூ அதிகாரி

களின் செயல்களைக் கேள்வி கேட்பதற்குக் கடவுளாலேகூட முடியாது என்ற எண்ணம் நடமாடிக் கொண்டிருக்கையில், இந்தப் போராட்டம் வெற்றியுடன் முடிந்தது, பாராட்டத் தக்க சங்கதியல்லவா?

இந்தப் போராட்டத்தை நடத்தியவரைப் பற்றிச் சொல்லவோ! தனக்கென்று தனிக்கீர்த்தி எதையும் துளிக்கூட விரும்பாதவர். ஸர்தாருக்கு எதிர் நின்று போராடிய கவர்னரைப்பற்றி என்ன சொல்லுகிறது? இந்தியா மந்திரியின் சொல்லை, ஒரு நிமிஷத்திற்குக் காது கொடுத்துக் கேட்ட போதிலும், கவர்னர் எப்பொழுதுமே, ராஜியில் நாட்டம் கொண்டு, அதற்காக அரும்பாடுபட்டார். சூரட்டு மெம்பர்களின் விந்தைக் கடிதத்துக்கு அவர் சம்மதித்தது கூட, ராஜிக்காகவேதான். அவருக்கு ஸத்தியத்தில் ஆர்வம் மிகுதியும் இருந்தபோதிலும் கூட. பர்டோலி வாசிகளை, போராட்டத்தின் முடிவுக்காகப் பாராட்டுவதோடுகூட, கவர்னர் அவர்களையும் பாராட்டவேண்டும் என்று காந்திஜியும் வல்லபாயும் அழுத்திக் கூறினார்கள். கவர்னரின் பெருந் தன்மையையும் பரந்த நோக்கத்தையும் பாராட்டாமலிருக்க முடியாது.

## அத்தியாயம் 33.

ராஜி ஏற்பட்டதும், தேச முழுதும் தந்தி பறந்தது. ஸர்தாருக்கு வாழ்த்துத் தந்திகள், வந்து குவிந்தன. பத்திரிகைகள் யாவும் நியாயமாகப் புகழ்ந்து எழுதின. வந்த தந்திகளையும் வாழ்த்துக் கட்டுரைகளையும்—எல்லாவற்றையும் அப்படியே கொடுப்பது சாத்தியமில்லாத சங்கதி. முக்கியமான சிலவற்றைத்தான் பொறுக்கிக் கொடுக்கமுடியும். முதலிலே, ஸ்ரீ சரோஜினிதேவி. அவர் காந்திஜிக்கு எழுதியதாவது:—

"இரவிலே கண்விழித்துக் காக்கும் உத்தமர்களை உலகம் அறியுமா? பர்டோலி மகா ஜனங்கள் எத்தனை நாட்கள் கண்விழித்துக் காத்தார்கள்! இவ்வளவு நீண்ட காலமாக, போரில் அலுக்காமல் சலிக்காமல் இருந்தவர்கள், இன்றை

இரவில் இன்பக்கனவு காண்பார்கள் என்பதை நினைத்து, நான் மகிழ்ச்சியடைகின்றேன். அவனுடைய வேலை முடிந்ததும், ஸத்தியாக்கிரகிக்கு வரும் உறக்கமானது, உண்மையிலேயே கடவுளின் அருள் பிரசாதமாகும். உன்னுடைய வேலை, போராயிருக்கட்டும், உன் சமாதானம் வெற்றியாயிருக்கட்டும் என்று ஜர்மன் தத்துவ சாஸ்திரி சொன்னது, தங்களுக்கு நினைவு இருக்கிறதா? அவ்வாறே நேர்ந்தது பர்டோலியில். முடிவான ராஜி, சமாதானத்துக்கும் அமைதி கொண்ட வழிகளுக்கும் வெற்றியாக முடிந்தது.

"உருக்கமும் வர்ணனையும் மிகுந்த தங்கள் 'தென்னுப்பிரிக்கா சத்தியாக்கிரகச் சரிதத்தை' நான் படித்துக்கொண்டிருக்கையில், பர்டோலி ராஜியைப் பற்றிய—இருதரப்புக்கும் கௌரவமான ராஜி—செய்தியைத் தாங்கிய பத்திரிகை உள்ளே நுழைந்தது. நான் ஒரு மாதத்துக்குமுன், ஸர்தார் வல்லபாய்க்கு எழுதியதுபோல, சத்தியாக்கிரகம் 'ஏழையின் அருந்தன மாகும். பர்டோலிப் போராட்டம், சத்தியாக்கிரகத்தின் பூரண உதாரணமாக விளங்கவேண்டும் என்பது தங்கள் கனவு. தங்கள் கனவை தனக்கு உகந்தவாறு வியாக்யானம் செய்து பக்குவப்படுத்தி பர்டோலி நிறைவேற்றி வைத்துவிட்டது."

காந்திஜி, "யங் இந்தியா"வில், பர்டோலி மகா ஜனங்களுக்கும், ஸர்க்காருக்கும், வல்லபாய் படேலுக்கும், வாழ்த்துக் கூறினர். "வல்லபாயின் உறுதியும் நளினமும் இல்லையானல், ராஜியே ஏற்பட்டிருக்க முடியாது" என்றூர் காந்திஜி. மேலும் அவர் எழுதியதாவது:—

"ஸத்தியாக்கிரகிகள் கோரின யாவும் அவர்களுக்குக் கிடைத்துவிட்டன. விசாரணைக் கமிட்டி விசாரிக்க வேண்டியதாகக் குறிக்கப்பட்டிருக்கும் விபரங்கள் போதுமானவை. கிஸ்தி வசூல் செய்ய, அரசாங்கத்தார் கையாண்ட அடக்குமுறை அட்டூழியங்களைப்பற்றி விசாரணை கிடையாது. உண்மைதான். மற்றைய ஷரத்துக்களை, அதாவது பறிமுத

லான நிலங்களைத் திருப்பிக் கொடுத்தல், சத்தியாக்கிரகக் கைதிகளின் விடுதலை, கர்ணம் மணியக்காரர்களை மீண்டும் வேலைக்கு எடுத்துக் கொள்ளுதல்—இவை போன்றவைகளை அரசாங்கத்தார் ஏற்றுக்கொண்ட பின்னர், அடக்குமுறை அட்டூழியங்களைப்பற்றி விசாரணை தேவையில்லை என்று விட்டுக் கொடுத்தது வல்லபாயின் தாராள குணத்தைக் காண்பிப்பதாகும்.”

லாகூர் “பீப்பிள்” என்ற பத்திரிகையில், லாலா லஜபதிராய் எழுதினார்:—

“பர்டோலிக் குடியானவர்கள் நடத்திய போராட்டம் வெற்றியுடன் முடிந்தது, பொதுஜன வெற்றியாகும். அதனாலே, ஸர்க்காருக்கும் கீர்த்தியே. பொதுஜன அபிப்பிராயத்தைத் தக்கவழியில் திருப்பி, வருகிற கொடிய பலன்களை அனுபவிப்பது என்று தீர்மானித்துக் கொண்டால், அதனால் ஸர்க்காரின் மனதை மாற்ற முடியும் என்பதைச் சந்தேகமில்லாமல், இந்தப் போராட்டம் ருசுப்படுத்துகிறது. திடநெஞ்சுடன், திட்டத்துடன் கிளர்ச்சி செய்தால்—எதையும் பொறுத்துக்கொள்ளத் தயாரா யிருக்கவேண்டும்—நிச்சயமாய்ப் பலன் உண்டு”

“பர்டோலி விவசாயிகள் நீடூழி வாழ்க” என்று பெஸண்டு அம்மையார், பலபல மேடைகளிலிருந்து வாழ்த்தினர்.

உங்களுடைய ‘கம்பீரமான வெற்றிக்கு’ வாழ்த்து என்று காந்திஜியையும் வல்லபாயையும், பண்டித மோதிலால் நேரு பாராட்டினர். “இது ஒரு ஆச்சரியமான வெற்றிதான்: அது முடிந்த வகையிலே எனக்குச் சந்தோஷம். காந்திஜி எழுதியது போல, இன்னும் ரொம்பவேலை பாக்கியிருக்கிறது. முடிவில், பர்டோலி விவசாயிகளுக்குப் பரிகாரம் கிடைக்கும் என்று நம்புகிறேன். தேசீயமும் தர்மமும் சம்பந்தப்பட்டவரையில், வெற்றி ஏற்கனவே கிடைத்துவிட்டது. இந்திய சரித்திரத்திலே, வல்லபாயின் தொண்டு மகத்தானது” என்று ஸி. ராஜகோபாலாச்சாரியார் எழுதினர்.

"சத்தியாக்கிரகத்தின், முதல் பூரண வெற்றி சம்பாரானில், இரண்டாவது பர்டோலியில்" என்று பாராட்டினார் பண்டித மதன் மோகன மாளவியா. மௌலானா ஷவுகத் அலி, ஷ்வேப் குரேஷி முதலியவர்கள் வாழ்த்துச் செய்தி அனுப்பினார்கள். முன்ஷி, சத்தியமூர்த்தி, சுபாஷ் சந்திர போஸ், பாராட்டுத் தந்தி கொடுத்தார்கள்.

ரிச்சர்ட் க்ரெக் காந்திஜிக்கு எழுதிய கடிதத்தில் குறிப்பிடுகிறார்:—"தங்களுக்கு, வல்லபாய் படேலுக்கு, பர்டோலி விவசாயிகளுக்கு எனது மனமார்ந்த வாழ்த்து. நேர்த்தியான போராட்டம். புதியமுறை, நயமான உபாயங்கள். வெற்றிக்குக் கொடுத்த விலை கிராக்கிதான். ஆனால் வெற்றி மகத்தானதல்லவா? கிராக்கியானாலும் பாதகமில்லை. இது—என் உபமானத்தைத் தாங்கள் ஆட்சேபிக்காவிட்டால்—சாராயத்தைப் போல, பர்டோலிக் குடியானவர்களின் நரம்புகளில் நுழைந்து அவர்களைப் பரவசப்படுத்தும்".

ஸர் லாலுபாய் ஸமால்தாஸ், "இண்டியன் நாஷனல் ஹெரால்ட்" பத்திரிகையில், பிரத்தியேகமான கட்டுரையில் பின்வருமாறு எழுதினார்:—

"பலாத்கார நிகழ்ச்சி யொன்றுமே யில்லாமல், (பர்டோலி) தாலூகா ஜனங்கள் பொறுமையுடன் கஷ்டங்களை அனுபவித்ததைப் பார்த்து, இந்த தேசத்தார் மட்டுமல்ல, வெளிநாட்டார் கூட, ரொம்பவும் ஆச்சரியப்பட்டுப் போனார்கள். பரபரத்துப் போய், பலாத்காரத்தில் இறங்காமல், எல்லாக் கஷ்டங்களையும் ஜனங்கள் பொறுத்துக் கொண்டிருப்பார்கள் என்று நம்பாதவர்களில் நான் ஒருவன். இந்த இயக்கத்தை நடத்திய பெரியார் சிலரிடம் என் சந்தேகத்தை நான் தெரிவித்துக்கொள்ளுகையில், 'வல்லபாய் போராட்டத்தை நடத்துகிறவரையில், ரயத்துகள் பலாத்காரத்தில் இறங்குவார்கள் என்ற பயமே வேண்டியதில்லை' என்று மகாதேவ தேசாய் எனக்கு உறுதி கூறினார். சாத்விக எதிர்ப்புப் போராட்டத்தை ஜனங்களும் வெற்றிகரமாக நடத்தமுடியும்

என்று நான் நம்பினதேயில்லை என்று ஒப்புக்கொள்ளுகிறேன். வல்லபாயைத் தவிர வேறு யாரும் இந்தப் போராட்டத்தில் வெற்றி பெற்றிருக்க முடியாது. ஜனங்களுக்கு அவரிடம் அவ்வளவு பக்தி. அத்தகைய பக்தியை பெற்றிருக்க முடியாது என்று எந்தத் தலைவரும். ரயத்துகளும் தலைவர் கீறின கோட்டைக் கடந்து நடக்கவில்லை.”

வாழ்த்துச் செய்திகளுக்கென்ன குறை? ஸர் லாலுபாய் ஸமால்தாஸைப்போல, சத்தியாக்கிரகத்தில் நம்பிக்கையில்லாதவர்களுக் கெல்லாம், பர்டோலிப் போராட்டம் கண் விழிப்பு உண்டாக்கிற்று என்று சொல்லத் தேவையில்லை. சத்தியாக்கிரகத்தை, கற்பனை செய்து பார்த்து, அதன் அழகையும் சக்தியையும் அறிவு மூலமாகக் கணக்கெடுத்துப் பார்ப்பதில் லாபமில்லை. சத்தியாக்கிரகத்தை நடைமுறையில் வாழ்வில் ஏற்றிக்கொண்டு, அதன் நயத்தை உள்ளத்தில், அனுபவமூலமாக, அனுபவித்துப் பார்க்கவேண்டும். நெருப்பு என்றால் வாய்வேகாது. சர்க்கரை என்றால் வாய்தித்திக்காது. வேம்பு என்றாலும் கசக்காது. புஸ்தகப்படிப்பு ஒருபடிப்பா? “பர்டோலிக்குப்போய்ப் பாடம் கற்றுக் கொள்ளுங்கள்.” என்று பம்பாய் மாணவர்களைப் பார்த்து ஸர்தார் சொன்னது முக்காலத்திலும் உண்மையாகும்.

# முடிவுரை

பர்டோலிப் போராட்டம் சத்தியாக்கிரகத்துக்கு வெற்றி என்றோம். ஆம், ஆரம்பத்தில் துளிக்கூட விட்டுக் கொடுக்க மனமில்லாத அரசாங்கத்தினிடமிருந்து, பலவந்தமாக இந்த வெற்றி வாங்கப்பட்டது என்று சொன்னாலும் பொருந்துமோ? ஜனங்கள் சொல்லுவது நியாயம் என்பதை உணர்ந்து, அரசாங்கத்தார் இணங்கவில்லை. அவர்கள் கையாண்ட முறைகள் யாவும் பயன்படாமல் போயின என்று கண்டுகொண்டதன்பேரில் இணங்கினார்கள் என்று தான் சொல்லவேண்டும். ஸிவில் ஸர்விஸ் கூட்டத்தாரின் மனம் மாறியதாகத் தெரியவில்லை. ஐ. ஸி. எஸ் காரர்கள் இந்த ராஜியை விரும்பவேயில்லை. அதிலே திருப்தி கொள்ளவுமில்லை. பதினெட்டு மாதங்களுக்குப் பிறகு, விசாரணைக்கமிட்டி தனது யாதாஸ்தைப் பிரசுரித்து, ஜனங்கள் குறைகூறினது நியாயம் என்ற முடிவைச் சொன்னதும், ரிவினியூ மெம்பர், "இந்த முடிவு சரியென்று கொண்டு நாங்கள் இதை ஏற்கவில்லை. இந்த ப்ரச்னையை வளர்த்துக்கொண்டே போகாமல், முடித்துவிடவேண்டும் என்ற எண்ணத்தினால், விசாரணைக் கமிட்டியின் தீர்ப்பை ஏற்றுக் கொள்ளுகிறோம்" என்றார். நன்றாயிருக்கிறதல்லவா?

ஸர்தாரைப்பற்றிக் கன்னாப்பின்னா வென்று பொய்யும் புளுகும் வெளிக்கிளம்பும்படி செய்தார்கள் ஸர்க்கார் சிப்பந்திகள். ராஜியிலே ஐ. ஸி. எஸ். கூட்டத்தாருக்கு இருந்த கோபத்தை இவை யாவும் காண்பிக்கின்றன. ஐ, ஸி. எஸ். கூட்டத்தார் "தீராத நோய் கொண்டவர்கள்" என்றார் காந்திஜி. வேறு எந்த நோயுமல்ல. அதிகார நோய். "டைம்ஸ் ஆப் இந்தியா"வின் நிருபர் வழக்கம்போல, மூட்டை அளந்தார். "பர்டோலி சத்தியாக்கிரக ஆசிரமம் கலைக்கப்படவில்லை. ஆசிரமத்தின் பழைய தொகை குறையவேயில்லை. ஸர்தா

ருக்கு ராஜியிலே நம்பிக்கையில்லை. அவருடைய சகாக்கள் கமிட்டிக்காகச் சாட்சியம் தயார் செய்துகொண்டிருக்கிறார்கள். கமிட்டிக்கு முன்னால், ரொம்பப்பேர்கள் சாட்சி சொல்லப் போனால், ஒருவருக்கு ஒருவர் உதைவாய்ச் சொல்லப் போகிறார்களோ என்ற பயத்தால், அவர்கள் குடியானவர்களைப் பொறுக்கி, சாட்சிகளாக விடுகிறார்கள்.'

இந்தமாதிரி, அந்த நிருபர் சாடுவிட்டார். அவர் பர்டோலிக்குப் போகவேயில்லை. ஸர்தார், நிருபர் குறிப்பிடும் காலத்தில், பர்டோலியிலே இருக்கவேயில்லை. இந்த நிருபர் கூற்றுக்கு, வல்லபாய் மறுப்பு எழுதினார். அதையும் அந்தப் பத்திரிகை பிரசுரித்தது, மன்னிப்புக் கேட்டுக்கொள்ளுவது போல, ஒரு வார்த்தை, பத்திரிகை எழுத வேண்டுமே! அது கிடையாது.

விசாரணையை நேராக நடக்கவிடக்கூடாது என்பது இந்தக் கூட்டத்தாரின் நோக்கம் என்பதை ஸர்தார் கண்டு கொண்டார். எனவே, விசாரணைக் கமிட்டி மெம்பர்கள் யார் யார் என்று விசாரித்து, ரிவினியூ மெம்பருக்குக் கடிதம் எழுதினார் வல்லபாய். நீதி இலாகாவைச் சேர்ந்த மிஸ்டர் டேவிஸ் என்பவர் நியமிக்கப்படுவார் என்று நம்பும்படியாக, ராஜிப்பேச்சு நடந்தகாலத்தில் ஊகிக்க இடமிருந்தது. மத்தியஸ்தம் செய்தவர்களும் அப்படித்தான் சொன்னார்கள். டேவிஸ் என்றால், வல்லபாய்க்கு அவரிடம் நம்பிக்கை உண்டு.

டேவிஸை நியமிப்பதாகத் தாங்கள் எப்பொழுதும் ஒப்புக் கொள்ளவில்லை என்று முழுப் போடாக அரசாங்கத்தார் சாதித்துவிட்டார்கள். ப்ரூம் பீல்ட், மாக்ஸ்வெல் இருவரையும் கமிட்டி மெம்பர்களாக நியமித்திருப்பதாக அறிவிக்கப்பட்டது. டேவிஸ் அவர்களை ஏன் நியமிக்க முடியவில்லை என்பதற்கு, தாங்கள் பூனாவுக்கு வந்தால், காரணங்களை நேரில் தெரிவிக்கிறேன் என்று ரிவினியூ மெம்பர் ஸர்தாருக்குத் தந்தி கொடுத்தார். வல்லபாய் பூனாவுக்குப் போனார், காரணங்களைத் தெரிந்து கொள்ளுவதற்கல்ல. ராஜிப்பேச்சு நடந்த காலத்தில்; சில சில்லறைத் தகராறுகளுக்குப் பரி

காரம் எழுத்தில் எழுதிக்கொள்ளவில்லை. ஜங்கம சொத்துக் களை ஜப்திசெய்து விற்றுர்களே, அவர்கள் பேரில், "பெனல்டி" அபராதம் விதித்தார்கள். அது திரும்பிக் கொடுக்கப்படவில்லை. அதைப்பற்றித் தகராறு. கிஸ்தியைக் கொடுத்தும், இந்த அபராதம் சிலர்பேரில் எதற்காக என்று ஸர்தாருக்கு ஆத்திரம். இதற்குப் பரிகாரம் தேடவே, முக்கிய மாக அவர் பூனுவுக்குப் புறப்பட்டுபோனது.

"இந்த அபராதப் பணத்தைத் திருப்பிக் கொடுக்கா விட்டால், ஸர்க்காரின் நல்ல எண்ணத்தில் ஸத்தியாக்கிரகி களுக்கு நம்பிக்கை இராது. எனவே, கமிட்டி விசாரணையை பகிஷ்கரிக்கவேண்டி வரும்" என்று வல்லபாய் அழுத்தமாகச் சொல்லிவிட்டார். என்ன நேர்ந்தாலும் நேரட்டும் என்று பிடிவாதம் காண்பித்தார் ரிவினியூ மெம்பர். ஸர்தாரின் வேண்டுகோளுக்கு, ரிவினியூ மெம்பர் இணங்கவில்லை. அப் படியே அவரை விட்டுவிட்டு, பூனுவிலிருந்து வல்லபாய் புறப் பட இருந்த சமயத்தில், ரிவினியூ மெம்பர் ஸர்தாரிடம் ஓடி வந்து, "நான் மேதகு கவர்னரிடம் இதைப்பற்றிப் பேசி னேன். அபராதத்தை வஜா செய்து, பணத்தைத் திருப்பிக் கொடுப்பது ரொம்பச் சில்லறை சங்கதியாயிற்றே, இதைப் பற்றி ஏன் தகராறு என்றுர். ஆனுல் வல்லபாய், கமிட்டி அங்கத்தினர்களின் நியமனத்தை ஒப்புக்கொள்ள வேண்டும் என்றுர்" என்று விஸ்தாரமாகச் சொன்னுர். கவர்ன ருடைய பெருந்தன்மை எங்கே? அவருடைய ராஜி மனப் பான்மை எங்கே? அவருடைய சகாக்களின் மனப்பான்மை எங்கே? சகாக்கள் போரை விரும்பினுர்கள். நியாயம் வழங்குவதில் கருமித்தனம் காண்பித்தார்கள்.

இவ்வளவு சில்லறைத் தகராறுகள் செய்கிற உத்தியோ கஸ்தர்களையும் நிர்வாகிகளையும் திடமாக இருக்க நம்ப முடி யாது என்று கண்டுகொண்டதன்பேரில், பர்டோலி வாசி களின் கட்சிக்கு எந்த வகையிலும், ஆபத்து வராமல் காக் கும் பொருட்டாக, வல்லபாய் ரிவினியூ மெம்பருக்கு ஒரு கடிதம் எழுதினுர்:—

"விசாரணை நடக்கிற காலத்தில், எப்பொழுதாவது, நியாயமாய் விசாரணை நடைபெறவில்லை யென்றுவது அல்லது விசாரணை முடிந்தபின், தீர்ப்பு உள்ளபடியே நியாயமில்லாதது, சாட்சியத்துக்குப் பொருத்தமில்லாதது என்றுவது என் புத்திக்குப்படுமாகில், போராட்டத்தை மீண்டும் துவக்கி நடத்தும் பாத்தியம் எனக்கு உண்டு (என்னிடம் பாத்தியத்தை ஒதுக்கி வைத்துக்கொண்டிருக்கிறேன்)."

எதற்கும் முன் எச்சரிக்கையுடன் இருப்பது உசிதமல்லவா?

விசாரணைக் கமிட்டி அங்கத்தினர்கள் ஆர். எஸ். ப்ரூபீல்ட், ஆர். எம். மாக்ஸ்வெல்—இருவரும், 1928 ௵ அக்டோபர் ௴ 1௳ விசாரணையைத் துவக்கினர்கள். முதல் 15 நாட்கள் விசாரணைக்கு அனுசரணையான வேலையில் செலவழிக்கப்பட்டன. உண்மையான விசாரணை நவம்பர் ௴ 14௳ ஆரம்பம். 1929 ௵ ஜனவரிமாதக் கடைசியில், விசாரணை முடிந்தது. பிறகு சொராஸித் தாலூகாவுக்கும் போனர்கள். பூவோடு சேர்ந்து நாரும் மணம்பெற்ற கதை! பர்டோலியாலே, சொராஸிக்கு உண்டான பாக்கியம்! மார்ச்சு ௴ 1௳ ஸ்ரீ புலாபாய் தேசாய், கமிட்டியின் முன்னர், பர்டோலி மிராசுதார்களின் சார்பாக "ஆர்குமெண்டு" செய்தார். பர்டோலியில் 49 கிராமங்களிலும் சொராஸியில் 21 கிராமங்களிலும் விசாரணை நடைபெற்றது.

சத்தியாக்கிரகிகள், இந்த விசாரணைக்காலத்தில் காண்பித்த ஒத்துழைப்பைப் பாராட்டி எழுதி யிருக்கிருர்கள் கமிட்டியார். ஜனங்களிடம் மனக்கசப்புக் காணப்படவில்லை என்றும் எழுதி யிருக்கிருர்கள். சத்தியாக்கிரகத்துக்கு இதுவும் ஒரு வெற்றியாகும். "வெளியூர்ப் பேர்வழிகள்" என்று அவதூருகப் பேசப்பட்டவர்கள் விசாரணை சம்பந்தமாக மிகுதியும் ஒத்தாசை செய்தார்கள் என்றும் கமிட்டியார் மனமார ஒப்புக்கொண்டிருக்கிருர்கள்.

பர்டோலி சத்தியாக்கிரகிகள் சொல்லிக் கொண்ட குறைபாடுகள் பெரும்பான்மையில் நியாயமானவை என்று கமிட்டியார் தீர்ப்புச் சொன்னார்கள். சில சில்லறைச் சங்கதிகளை அவர்கள் ஏற்க மறுத்துவிட்டார்கள். புதிய ஸெட்டில்மெண்டுப்படிக்கு, இரண்டு தாலூகாவுக்கும் சேர்ந்து (பர்டோலி, சொராஸி தாலூகாக்கள்) 1,87,492 ரூபா வரி உயர்த்தப்பட்டது. இதை 48,648 ரூபாய்க்குக் குறைத்தார்கள் கமிட்டியார். அதாவது ஒரு லட்சத்து நாற்பதினாயிரம் ரூபா குறைத்தார்கள். வருஷாவருஷம் இந்த இரண்டு தாலூகாக்களுக்கு இவ்வளவு ரூபாய் மிச்சம், லாபம். ஸெட்டில்மெண்டு ஆபீசர் சொன்னதுதான் சரி என்று அரசாங்கத்தார் சாதிக்கப் பார்த்தார்களே! பர்டோலிப் போராட்டத்தை ஒட்டி, பஞ்சாபில், லட்சக்கணக்கில் கிஸ்தி வஜா செய்தார்கள் அரசாங்கத்தார். மத்திய மாகாணத்திலும் அப்படியே. பர்டோலிப் போராட்டத்தினால், விவசாயிகள் கண்விழித்துக் கொண்டார்கள். அவர்களுடைய எதிர்காலம் கடவுளின் கையில் இருக்கிறது.

---

